# வண்ணப் பெருந்திரட்டு

## தொகுதி - 1



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம் மற்றும் ஆய்வு மையம்**

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 535

# வண்ணப் பெருந்திரட்டு

## தொகுதி I

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்

**புலவர் ப.வெ. நாகராஜன்**

சிரவை ஆதீனம், சரவணம்பட்டி.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

**மற்றும் ஆய்வுமையம்**

தஞ்சாவூர்.

2011

விலை : ரூ.250/-

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | வண்ணப்பெருந்திரட்டு, தொகுதி I |
| பதிப்பாசிரியர் | : | புலவர் ப. வெ. நாகராஜன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 535 |
| ISBN | : | 978 - 81 - 921829 - 0 - 2 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர் 2011 |
| தாள் | : | TNPL 11.6 kgs. |
| நூல் அளவு | : | 25 x 19 செமி |
| பக்கங்கள் | : | 328 |
| படிகள் | : | 250 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| அச்சிட்டோர் | : | மாணிக்கம் பிரிண்டர்ஸ் |
| புத்தகக் கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | சிற்றிலக்கியம் |
| விலை | : | ரூ. 250/- |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் அறிவுச் செல்வமாகப் பயன்பட்டுக்கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக் கருவூலமாகவும், பன்மொழி நூற்களஞ்சியமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது. சுவடிகள் மொழிவாரியாகப் பகுக்கப்பெற்று மொழி சார்ந்த வல்லுநர்களால் நூல் வடிவில் பதிப்பித்து அளித்து வருகிறது இந்நூலகம். அவ்வரிசையில் **'வண்ணப் பெருந்திரட்டு'** எனும் இந்நூல் நான்கு தொகுதிகளாக தொகுக்கப்பட்டு தற்போது முதல் தொகுதி வெளிவருகிறது.

வண்ணம் என்பது சந்த வேறுபாடு. இதனைத் தொல்காப்பியர் இருபது வகைப்படுத்துவார். அவிநயினார் நூறு வகைப்படுத்துவார். பிற்காலத்தில் அமைந்த முறை வேறெனலாம். அவை சந்தக் குழிப்புப்படியே ஒலி அமைந்து வரும். சந்தக் குறிப்புக்கள் தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய என எட்டு வகையாகும். இவற்றின் ஒலி நீட்சியானமைந்த தத்தா, தாத்தா, தந்தா, தாந்தா, தனா, தானா, தன்னா, தய்யா என்னும் எட்டுடன் கூடி பதினாறாகும். இவை ஒவ்வொன்றும் ஒரு முழுச் சந்தம். இவற்றின் மேல் ன, னா என்பவை தனித்து வரினும் த், ம் என்னும் மெய்கள் சேர்ந்து வரினும் அல்லது தனித்து வரினும் அவை அரைச் சந்தமாகும். ஆகையால் தந்தன என்பது ஒன்றரைச் சந்தம், தந்தம் என்பதும் ஒன்றரைச் சந்தம்.

சந்தங்கள் சில சேர்ந்தது துள்ளல், பல துள்ளல்கள் சேர்ந்தது ஒரு குழிப்பாகும். மூன்று குழிப்பும் ஒரு சிறு தொங்கல் துள்ளலும் சேர்ந்தது ஒரு கலை ஆகும். சில கலைகள் இரண்டு தொங்கல் துள்ளல்கள் கொண்டு வரும்.

வண்ணங்களுள் பல வகையுண்டு. 92 வண்ணங்கள் இப்பதிப்பில் குறிப்புரையோடு தரப்பெற்றுள்ளன. இந்த வண்ணப் பெருந்திரட்டுப் பதிப்பில் ஒவ்வொரு வண்ணமும் தனித்தனியாக அறிமுக உரை, மூலம், குறிப்புரை எனத் தரப்பட்டுள்ளது. பாடினோர், பாடப்பெற்றோர், தலங்களின் வரலாறு தனியே அகர வரிசையில் கொடுத்துள்ளார் இந்நூலின் பதிப்பாசிரியர்.

இப்பதிப்பாசிரியரால் இதுவரை அறியப்பெறுகின்ற வண்ணப் பிரபந்தங்களைப் பற்றிய செய்திகள் பட்டியலிடப்பட்டுள்ளது மிகவும் பயனுடையதாய் அமையும் என நம்புகிறேன். இந்நூலினை சிறந்த முறையில் பதிப்பித்துள்ள இந்நூலக சிறப்புக்கேண்மை பதிப்பாசிரியர் பெரும்புலவர் **ப.வெ. நாகராசன்** அவர்களுக்கு என் பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும், மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் (பொது) மற்றும் இந்நூலக நிருவாக அலுவலர் (பொறுப்பு) திரு. **அ. மெய்யழகன்** அவர்களுக்கும், இந்நூலக பாதுகாப்பாளர் மற்றும் நூலகர் நிலை I, முனைவர் **ப. பெருமாள்** அவர்களுக்கும், இந்நூலை நன்முறையில் அச்சிட்டளித்துள்ள **மாணிக்கம் அச்சகத்தாருக்கும்** எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

***ம.சு. சண்முகம்***, இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
*07.05.2011*

உ

குருவே துணை

**Thavathiru Kumaragurubara Swamigal**
HEAD OF THE MUTT
Siravanampuram
**KAUMARA MATALAYAM**
Chinnavedampatti (P.O),
Coimbatore - 641 006. Tamilnadu
Phone : 0422 - 2666370, 98421 - 66373



www.Kaumaramutt.org

**தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்**
மடாதிபதி
சிரவணபுரம்
**கௌமார மடாலயம்**
சின்னவேடம்பட்டி (அஞ்சல்)
கோயமுத்தூர் - 641 006. தமிழ்நாடு

---

## ஆசியுரை

வண்ணப்பா என்பது ஒரு தமிழ் யாப்பு வகை. அவ்வினத்தைச் சேர்ந்த எண்கலைச் செய்யுள் அகப்பொருள் துறை ஒன்றைப் பாடுபொருளாகக் கொண்டால் அது வண்ணப்பிரபந்தம் என்னும் சிற்றிலக்கியம் ஆகிறது. இத்தகைய அகப்பொருள் வண்ணங்கள் இருநூற்றுக்குமேல் இருக்கலாம் என வண்ணவியல் அறிஞர்கள் கருதுகின்றனர். என்றாலும் வண்ண யாப்பு வகைகளோ வண்ணப் பிரபந்தமோ தெளிவாகத் தமிழ் யாப்பறி புலவர்களிடையே பரவவில்லை. வண்ணப்பாக்களுக்காகவே தனியாக வண்ணத்தியல்பு என ஓர் இலக்கணத்தை இயற்றியுள்ள வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இச் செய்தியைத் தம் சுயசரிதையில்,

"தொல்காப் பியன்ஆ தியர் தாமும்
    சொற்றார் இலர் இச் சூட்சம்;இயல்
நல்கு ஆர்வத்தால் நூல் பகரும்
    அவரைக் காணேன் நானிலத்தில்;
வில் கால் வேலன் அருள்த்துணையால்
    யானே விதித்தேன்; வியன் சந்தம்
பல்கால் பழகும் வாய்ப்புலவோர்
    அறிவார்"

(குருபர தத்துவம்-புதுவைச்சருக்கம் 30)

எனச் சுட்டிக்காட்டியுள்ளார்.

இவ்வாறு தமிழ் ஆய்வறிஞர்களுக்கே மிக அரியதாக உள்ள வண்ணப்பிரபந்தங்களைத் திரட்டி நல்ல பதிப்பாக வெளியிடுவது தமிழ் வளர்ச்சிக்கான ஓர் அரும் பணி ஆகும். செயற்கரிய இப்பெரும் பணியில் ஈடுபட்டதற்காகத் தஞ்சாவூர் சரசுவதி மகால் நூல் நிலைய நிர்வாகிகள் மற்றும் ஆய்வறிஞர்களுக்கு முதற்கண் எம் பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

அடுத்து இந்தப்பெரும் பணியை,

இதனை இதனால் இவன்முடிக்கும் என்று ஆய்ந்து
அதனை அவண்கண் விடல்.

என்னும் பொதுமறைப்படி எம் ஆதீனக் கவிஞர் பெரும்புலவர் ப.வெ.நா. அவர்களிடம் ஒப்படைத்தது பொன்மலருக்கு நறுமணத்தை ஊட்டிவிட்டது. திரு. ப.வெ.நா. அவர்கள் ஆழ்ந்தகன்ற கல்வியை உடையவர். யாப்பியலிலும் சுவடியியலிலும் வல்லுநர். பல நூல்களைச் சிறப்பாக உரைகண்டு பதிப்பித்தவர். எம் ஆதீன குரு முதல்வர்களாகிய வண்ணச்சரபம் சுவாமிகள், தவத்திரு. கந்தசாமி சுவாமிகள், தவத்திரு. கஜபூசைச் சுந்தர சுவாமிகள் ஆகியோரின் நூல்களுக்கு உரை எழுதிப் பதிப்பித்தவர். வண்ணச்சரபம் சுவாமிகளின் பன்னிரண்டு வண்ணங்களையும் மூலம் மட்டுமாக வண்ணமஞ்சரி என்ற பெயரிலும், தவத்திரு.கஜபூசைச் சுந்தர சுவாமிகள் இயற்றிய தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் வாழ்க்கை வரலாற்று வண்ணத்தை உரையுடன் தனிநூலாகவும் உருவாக்கியவர்.

வண்ணச்சரபம் சுவாமிகள் தம் சுய சரிதையில் ஓர் இடத்தில்,

" முற்றுணர்ந்தேம் எனும் இறுமாப்பு எனக்கு இன்றே;
எனினும்வண்ண முறைமை மட்டில்
சற்றும் எனைச் சார்ந்தோர்க்கும் சந்தேகம்
இன்று; " ( குருபரதத்துவம் - சென்னைச்சருக்கம் 17 )

என அருளிச்செய்துள்ளார். திரு.ப.வெ.நா. அவர்கள் முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக வண்ணச்சரபம் சுவாமிகளின் நூல்களோடு தொடர்பு கொண்டிருப்பதால் அவருக்கு இயல்பாகவே வண்ணப்புலமை வந்துவிட்டது போலும். 92 வண்ணங்களைத் தொகுத்து, தெளிவாக உரை கண்டு, இன்றியமையாத ஆய்வுக் குறிப்புகளுடன் பதிப்பித்துக் கொடுத்துள்ள திரு. ப.வெ.நா. அவர்கள் தமிழார்வலர்கள் அனைவராலும் பாராட்டப்பட வேண்டியவர்.

தஞ்சாவூர் மன்னர் சரபோஜி சரசுவதி மகால் நூலகம் உலகப்புகழ்பெற்ற அறிவுக்கருவூலம். பலமொழிகளில், பல துறைகளில், பல இடங்களில், பலரால் எழுதப்பட்ட பனையோலை மற்றும் தாள்சுவடிகளைத் தொகுத்து, அவற்றைச் செப்பனிட்டு பாதுகாப்பதோடு தக்க அறிஞர்களைக் கொண்டு அழகிய நூல்களாகப் பதிப்பித்து வெளியிடுவது ஈடு இணை அற்ற கல்விப்பணி. இந்திய ஒருமைப்பாட்டிற்கும் ஆன்மநேய வளர்ச்சிக்கும் வழிவகுக்கும் சரசுவதி மகாலை எத்தனை பாராட்டினாலும் தகும். தஞ்சைச் சரசுவதி மகாலின் பணிகள் சிறக்கவும், இந்த அறிவுக் கோயிலோடு தொடர்புடைய அனைவரும் எல்லா நலங்களையும் நிறையப்பெற்று நீடினிது வாழவும் எம் குருநாதரின் வண்ணமலர்த் திருவடிகளை நீள நினைத்து வாழ்த்துகிறேன்.

வண்ணப் பெருந்திரட்டாம் வாகான செந்தமிழை
எண்ணி வியக்க இனிது அளித்த - கண்ணியம் ஆர்
தஞ்சைச் சரசுவதி மாலின் தகைமை என்றும்
நெஞ்சு இனிக்கச் செய்தல் நிசம்.

அன்புள்ள,

( குமரகுருபர சுவாமிகள் )

# பதிப்புரை

ஒரு குறிப்பிட்ட வாய்பாட்டில் அமைந்த ஓசையே மாறாமல் திரும்பத் திரும்பச் செய்யுளில் வருவது வண்ணம் ஆகும். வண்ணம் பற்றிய தொல்காப்பியக் கொள்கைகளும், அவிநயனார் உள்ளிட்ட பண்டைய யாப்பியலார் கருத்துக்களும் வேறு. இந்த யாப்பு இடைக் காலத்தில் தோன்றி வளர்ந்த ஒன்று. எனவே இப் பிற்கால வண்ணம் பற்றிய ஆய்வில் பழைய கருத்துக்களை இணைத்துக் குழம்ப வேண்டியதில்லை. இது முற்றிலும் வேறான யாப்பு வகை.

இந்த வண்ண யாப்பை இலக்கணச் சூடாமணி என்னும் யாப்புநூல்,

*வல்லினத்தின் மெல்லினத்தின் வாய்ந்த இடையினத்தின்*
*சொல்இனத்திற்கு ஏய்ந்தது ஒரு சொல் தொடுத்து - நல் இனத்தின்*
*எந்தப்பா வேனம் எழுத்தளவின் எய்துவது*
*சந்தப்பா என்னத் தகும். (நூற்பா 45)*

என விளங்குகிறது. வண்ணப்பாடலின் ஒவ்வொரு பகுதியிலும் - துள்ளல், குழிப்பு, கலை எதுவாயினும் - மெய்யெழுத்துக்களை நீக்கி எழுத்துக்களின் எண்ணிக்கை நான்கு அடிகளிலும் சமமாகவே இருக்கும். இதுதான் எழுத்தளவின் எய்துவது அதாவது கட்டளை அடிகளால் நடப்பது என விளக்கப்படுகிறது.

வண்ணப்பா தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய என்னும் எட்டு அடிப்படை அலகுகளாலும் அவற்றின் நீட்சியாலும் அமைத்த குழிப்புகள் ஒரே மாதிரி திரும்பத் திரும்ப வந்து, நான்கு அடிகளாக - அல்லது எட்டுக் கலைகளாக நிறைவேறுகிறது. அதனால் அது இயல்பாகவே கட்டளை அடிகளை உடைய பா ஆகிவிடுகிறது. குழிப்புத் தவறு இல்லாத எந்த வண்ணப்பாவிலும் எழுத்தெண்ணிக்கை நான்கு அடிகளிலும் சமமாகவே இருக்கும். இது இவ்வகைச் செய்யுளின் சிறப்பியல்பு ஆகும்.

வண்ணப்பாக்களைக் கலைவண்ணம், வகுப்பு, திருப்புகழ் (வண்ண விருத்தம், தாழிசை, துறை போன்றனவும் இதில் அடங்கும்) என்னும் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். எனினும் இவை யாவும் யாப்பருங்கல நெறியில் விருத்தங்களே ஆகும்.
இவற்றுள் கலை வண்ணத்தின் வடிவம்,

*எட்டுக் கலையாய் இடையிட்டு எதுகையாய்க்*
*கட்டுக் கலைக்குழுக் கண்ணியாய்த் - திட்டத்தில்*
*தொங்கலும் எட்டாய்த் தொடை மூன்று நான்கு ஆறாய்ப்*
*பங்குபெறும் வண்ணப் பரப்பு (நூற்பா 44)*

என இலக்கணச் சூடாமணியில் காட்டப்படுகிறது.

*"இல்வகைச் சந்தப் புணர்ப்புஓர் துள்ளலே" (நூற்பா 85)*
*"பல்வகைத் துள்ளற் புணர்ப்பு ஓர் குழிப்பே" (86)*

"குழிப்பு ஒரு மூன்று கூடிய பின்னர்
தொங்கல் தாழிசைத் தொங்கல் ஒன்று இசைக்கில்
கலைஒன்று ஆம் எனக் கழறுவர் புலவர்" (87)

"எண்கலைப் புணர்ப்பு ஓர் வண்ணப் பாவே" (88) என்பன வண்ணத்தியல்பு கூறும் இலக்கணம். இந்தக் கலை வண்ணமும் இரண்டு கலைகளை ஓர் அடியாகப் பெற்ற கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களே என்பதை மேற்படி வண்ணத்தியல்பு,

"இரு கலை அடிஒன்று என்பதும், அவற்றின்
மோனை ஒன்றா மொழிவதும், ஒருநால்
எதுகைத்து ஆவதும் இருபகுப்பு ஆதலும்
வண்ணப் பாவின் வழக்கு எனத் தகுமே" (90)

எனத் தெளிவாக்குகிறது.

இந்த எண்கலை வண்ணம் தன் பாடுபொருளால் அகப்பொருள் வண்ணம், தோத்திர வண்ணம், இதிகாச வண்ணம், புராண வண்ணம், வாழ்க்கை வரலாற்று வண்ணம் உடற்கூற்று வண்ணம், கள் அருந்தியவனின் கூற்றாக அமையும் கனியன் வண்ணம் எனப் பலவகைப்படும்.

அகப்பொருளில் அமைந்த கலை வண்ணம் வண்ணத்துறை, அகப்பொருள் வண்ணம், வண்ணப் பிரபந்தம் எனவும் வழங்கப்பட்டுச் சிற்றிலக்கிய வகைகளுள் நன்றாக எண்ணப்படும். இதனை,

"தலைவனுக்கு நாற்கலையும் பொருட்டு உரை நாற் கலையும்
சந்தம்இட்டு மும்மூன்று துள்ளலும் தொங் கலும் ஆம்
கலைகள் எட்டு ஆம் வண்ணம்" (நூற்பா 172)

என்றும் சுவாமி நாதம் கூறும் பாட்டியல் இலக்கணத்தால் அறியலாம். இலக்கணச் சூடாமணியும் வண்ணத்தைப் பிரபந்தவியலில்தான் அமைந்துள்ளது. உரையாசிரியரும், "இப்படிப் பாடுவது வண்ணம் என்னும் பிரபந்தம் என்றவாறு" எனத் தெளிவாகக் கூறுகிறார். இந்த அகப்பொருள் வண்ணம் மட்டுமே இனி இப்பதிப்புரையில் சுருக்கமாக வண்ணம் என ஆளப்படும்.

வண்ணத்தின் முதல் நான்கு கலைகள் ஆண்கலை என்றும், பின் நான்கு கலைகள் பெண்கலை என்றும் பெயர் பெறும்.

"துறைபகர் வண்ணப் பாவின்முற் பகுதியை
ஆண்கலை என்றும் மற்று ஏனையைப் பெண்கலை
என்றும் உலகோர் இயம்பிடல் மிகையே"

என்பது அறுவகை இலக்கண நூற்பா 474.

ஆண் கலையின் முதல் மூன்று கலைகளில் பாட்டுடைத் தலைவனின் புகழும், நான்காம் கலையில் அவனுடைய ஊர்ச் சிறப்பும் இடம் பெறும். இவை புறப்பொருள் பற்றியன என்பது வெளிப்படை, ஏறக்குறைய எல்லா வண்ணப் பிரபந்தங்களிலும் - மிகச் சிறவற்றைத் தவிர - முதல் கலையில் தெய்வப்புகழே பேசப்பட்டு இவ்வகைச் சிற்றிலக்கியத்தின் கடவுள் வாழ்த்தாக அமைந்து விடுகிறது.

பெண் கலையில் நாற்றாயிரங்கல், தலைவன் வேண்டல், தலைவி இரங்கல், மடல் விலக்கு, கலவி மகிழ்தல் - என்பன போன்ற ஏதாவது ஒரு அகப்பொருள் துறை விரிவாக இடம் பெறும். எனினும் இப்பதிப்பாசிரியர் அறிந்த வரையில் கலவி மகிழ்தல் துறையே மிகுதியாகப் பாடப்பட்டுள்ளது. (இதுவரை என்னால் தொகுக்கப் பெற்றுள்ள 133 வண்ணங்களுள் 76 கலவி மகிழ்தல் துறையின ஆகும். இப்பெண்கலை தமிழ் அகப்பொருள் மரபு பற்றியே நடக்கும். இதில் இடம் பெறுபவர் கிளவித் தலைவன், தலைவி, தோழி போன்ற உலகியல் மக்கள் அல்லர். ஐந்திணைக் கோவை, அகத்துறைத் தனிப்பாடல் போன்றவற்றுள் முறையே கட்டளைக் கலித்துறையும் அகவல் முதலிய ஏனைய பாவகைகளும் கையாளப்பெற இங்கு எண்கலை வண்ண யாப்பு பயன்படுத்தப்படுகிறது. யாப்பினாலன்றி மற்று அகப்பொருள் மரபில் சற்றும் வேறுபாடு இல்லை. சில வண்ணங்கள் புறப்பொருளில் மானிடப்பெண்டிர் கடவுளை நயந்த பக்கமாக இருக்கும். வண்ணத்தின் பெண்கலையில் பாட்டுடைத் தலைவன் பற்றிய செய்தியே இடம் பெறலாகாது.

அகத்துறை வண்ணத்தின் பாடுபொருள் அமைப்பு,*
"முதற்கலைக்கு இடுவது தெய்வச் செயலே"*
"இரண்டற்கு இடுவது கிளை, கொடை, விருது"*
"மூன்றற்கு இடுவது புகழும் வாகையும்"*
"நான்கற்கு இடுவது நாடும் நகரமும்"*
"மற்றைப் பாதி நற்றாய் இரங்கல்
கலவியின் மகிழ்தலும் கழறுவர் வண்ணமே"*
"வேறு துறைகளும் விளம்புவர் புலவர்"*

எனவும்,

"முந்தைய பகுப்பின் கலை ஓர் நான்கில்
தலைவன் றன்புகழ் மூன்றில் கூறிமற்று
ஒன்றில் அன்னவன் வரை நாட்டு அணி சொற்று
ஏனைய கலை நான் கிடந்தும் பல்வகைத்
துறையில் ஒன்றைத் துகள்அறக் கூறல்
வண்ணப் பாவின் வழக்கு எனத் தகுமே."
(வண்ணத்தியல்பு நூற்பா 91)

எனவும் இலக்கணங்கள் வரையறை செய்கின்றன.

ஒரு வண்ணத்தின் எட்டுக் தொங்கல்களையும் எடுத்து வரிசையாக இணைத்தால் அவை எதுகை மோனையுடனும் பொருள் தொடர்புடனும் கூடிய ஒரு பாவாக அமைய வேண்டும். அந்த பா தொங்கல்களின் தொகுப்பாதலின் தொங்கல் தாழிசை எனப்படும். சில வண்ணங்களில் இத்தாழிசை அமையாமலும் இருக்கலாம். எனினும் அவையும் வண்ணப் பிரபந்தமாகவே ஏற்கப்படும்.

"தொங்கல் தாழிசைத் துள்ளல் ஓர் எட்டும்

துறையொடு பாவாத் துலங்கா தாயினும்

தண்டமிழ்ப் புலவர் தள்ளார் அன்றே" (நூ. 92)

என்பது வண்ணத்தியல்பு.

இந்த இலக்கணக் கட்டுக் கோப்புடன் அமைந்த 92 வண்ணங்கள் இந்தப் பதிப்பில் குறிப்புரையோடு தரப்பெற்றுள்ளன. இவற்றுள் 29 வண்ணங்கள் சிவபெருமானையும், 23 முருகக் கடவுளையும், எட்டுத் திருமாலையும், ஒரு வண்ணம் விநாயகரையும் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டவை. மூன்று வண்ணங்கள் அடியாரைப் போற்றுபவை. ஏனைய 28 வண்ணங்களும் பல வள்ளல்களைச் சிறப்பிப்பன ஆகும்.

இப்பெருந்திரட்டில் பாடினோராக 22 புலவர்களைச் சற்றும் ஐயமின்றி அறிகிறோம். ஐவரைச் சிலவற்றைப் பாடியவராக இருக்கலாமோ என யூகிக்க இடம் உள்ளது. 45 வண்ணங்களின் ஆசிரியர் இன்னார் என அறியக்கூடவில்லை.

இந்த வண்ணப் பெருந்திரட்டுப் பதிப்பில் ஒவ்வொரு வண்ணமும் தனித்தனியாக அறிமுக உரை, மூலம், குறிப்புரை எனக் கொடுக்கப்பட்டுள்ளது. இதனால் குறிப்பிட்ட எந்த ஒரு வண்ணத்தையும் தனியே படித்துச் சுவைக்கலாம். பாடினோர், பாடப்பெற்றோர், தலங்களின் வரலாறுகள் தனியாக அகர வரிசையில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு வண்ணத்தையும் தெளிவாகக் குறிப்பிட்டு வழங்குவதற்கு வாய்ப்பாக 92 வண்ணங்களுக்கும் தனித்தனியாக ஒரு பெயர் சுட்டப்பட்டுள்ளது. இந்தப் பெயர் அகர நிரலுடன் வண்ணச் செய்யுள் முதற்குறிப்பகராதியும் கொடுக்கப்பட்டுள்ளது. இதனால் எந்த வண்ணத்தை வேண்டுமென்றாலும் எளிதில் எடுத்துப் படித்துச் சுவைக்கலாம்.

இப்பெருந்திரட்டில் முதலாக வைக்கப் பெற்றுள்ளது விநாயகரைப் போற்றுவது ஆகும். இந்த ஒரு காரணத்திற்காகவே இது முதலிடம் பெறுகிறது. அடுத்ததிலிருந்து ஏனைய தொண்ணூற்றொன்றும் ஐந்திணைக் கோவையின் வைப்பு முறைக் கேற்ப வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. இவ்வரிசை முறை ஆங்காங்கு அறிமுக உரைகளில் விளக்கப்பட்டுள்ளதால் ஈண்டு விரிக்கப் பெறவில்லை.

இப் பதிப்பாசிரியரால் இதுவரை அறியப் பெறுகின்ற வண்ணப் பிரபந்தங்களைப் பற்றிய செய்திகள் பிற்சேர்க்கையாகப் பட்டியலிடப்பட்டுள்ளது. இது தமிழாய்வாளர்களுக்கும், வரலாற்று ஆய்வாளர்கட்கும், ஆர்வலர்களுக்கும் மிக உதவியாக இருக்கும் என நம்புகிறேன். இவற்றில் பல பார்வைக்கு எட்டுவதில்லை என்பதோடு இப்பட்டியலில் அடங்காத வேறு சிலபல வண்ணங்களும் இருக்கக் கூடும்.

நம் நல்லூழின்மை காரணமாக வண்ண யாப்பு மற்றும் பிரபந்தம் பற்றிய தெளிவான செய்திகள் தமிழுலகில் பரவவில்லை. அதனால்தான் இவை யாப்பறி புலவர்களையும் ஆய்வாளர்களையும் பெரிதும் குழம்ப வைத்துள்ளன. இந்த வண்ணப் பெருந்திரட்டுப் பதிப்பு இந்த இடைவெளியை நிரப்பி ஆய்வாளர்கட்கு உறுதுணையாக அமையும்.

இதுவரை வெளியாகியுள்ள வண்ணத் திரட்டு நூல்களுள் இதுதான் மிகப்பெரியது. அது பற்றியே இந்நூல் நான்கு பகுதிகளாக வெளியிடப்படுகிறது. மொத்தம் 92 வண்ணங்களுள் இந்த முதற்பகுதி 25 வண்ணங்களைக் கொண்டது. ஏனைய வண்ணங்களும் பிற்சேர்க்கைகளும் விரைவில் வெளிவரும்.

பெரு மதிப்பிற்குரிய அறிஞர் பெருந்தகை நூற்கடல் **தி.வே. கோபால ஐயர்** தாம் முன்னர் தஞ்சைச் சரசுவதி மகால் வழிப் பதிப்பித்த **"வண்ணத்திரட்டு"** என்றும் நூல் வண்ண இலக்கணக் குறிப்புகளோடும் உரையோடும் என்னால் பதிப்பிக்கப்படவேண்டும் என விரும்பினார். இக்கருத்தை அந்நாள் இயக்குநர் பன்மொழிப்புலவர் மு. சதாசிவம் அவர்களிடம் தெரிவித்தார். திருமிகு. சதாசிவம் அவர்கள் ஏற்கெனவே நான் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின் வண்ணங்கள் அனைத்தையும் தொகுத்து வண்ண மஞ்சரி என்னும் பெயரில் வெளியிட்டுள்ளதை அறிவார். மேலும் நான் பல வண்ணங்களைச் சொந்த முறையில் தொகுத்து வைத்திருந்ததையும் அறிவார். என்வே பழைய வண்ணத் திரட்டின் திருத்தப் பதிப்பாக மட்டுமன்றி அதில் எத்தனை வண்ணங்களைச் சேர்க்க முடியுமோ அத்தனையையும் இணைத்து உரையுடன் பெருந்திரட்டாகப் பதிப்பித்துக் கொடுக்க அன்புடன் கேட்டுக் கொண்டார். இதுதான் இந்த வண்ணப் பெருந்திரட்டுப் பதிப்புத் தோன்ற முதற்காரணமாக அமைந்தது. இதற்காக அமரர் கலைமாமணி **தி.வே. கோபால அய்யர்** அவர்களின் நினைவைப் போற்றுவதோடு முனைவர் **மு. சதாசிவம்** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஈரோடு பெரும்புலவர் **வே.ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர்** அவர்களால் தொகுக்கப்பெற்ற ஏட்டுச் சுவடிகளை முதன் முதலில் பட்டியலிட்டு அவர் காலத்திற்குப் பிறகு நன்கு பாதுகாக்கப்படுவதற்காகத் திருப்பேரூர் **தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்** திருமடத்தில் சேர்க்கும் நற்பேறு எனக்கு வாய்த்தது. அதனால் அச்சுவடிகளில் பல வண்ணங்கள் இருப்பதை நான் அறிவேன். முன்பே அச்சாகிவிட்டதோடு பதிப்பு வெளிச்சம் காணாதனவும் அவற்றுள் உள்ளன. பாட நிர்ணயம், விடுபாடுகளைக் கண்டறிந்து நிரப்புதல் போன்ற இன்றியமையாத சுவடிப் பதிப்புப் பணிகளுக்காகவும் அச்சாகாதனவற்றைப் பதிப்பிக்கவும் எல்லாச் சுவடிகளையும் பயன்படுத்திக்கொள்ள திருப்பேரூர் ஆதீனத்தில் விண்ணப்பித்துக் கொண்டேன். போற்றுதலுக்குரிய பேரூராதீனம் கயிலைக் குருமணி சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் உடனே சுவடிகளையும், அநுமதியையும் வழங்கி இவ் வண்ணத் தமிழ்த் திருப்பணி இனிதே நிறைவேற நல்லாசி வழங்கியருளினார். மேலும் இப்பதிப்புப் பணியின் முன்னேற்றம் பற்றி அவ்வப்போது உசாவி ஊக்குவித்துக் கொண்டே இருந்தார்கள். இப் பேரருளுக்காகத் திருப்பேரூராதீனம் தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் திருமுன்புக்கு என் உள்ளார்ந்த வணக்கத்தையும் நன்றியையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழகத்தின் பெருமைக்குரிய இலக்கியக் கருவூலங்களுள் ஒன்று சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம். அங்கும் அச்சானதும் ஆகாததுமாகப் பல வண்ணங்கள் உள்ளன. வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் அந்நூலகக் காப்பாளரின் அநுமதியுடன் அங்கிருந்த ஓலைச்

சுவடிகளிலிருந்து பல வண்ணங்களைப் படியெடுத்துக் கொண்டேன். இதற்கு அநுமதி வழங்கிய முன்னாள் அரசினர்க் கீழ்த்திசைச் சுவடி நூலகக் காப்பாளரும், சிறந்த ஆய்வறிஞரும், தமிழ் இலக்கியக் கோட்ப்பாட்டு வரிசை நூலாசிரியரும், மேலும் பல நூல்களை இயற்றியுள்ள உழைப்பாளியும் ஆகிய அன்பர் முனைவர். **எஸ். சௌந்தர பாண்டியன்** அவர்களுக்கும் அந்நூலகத்தில் பணிபுரியும் அனைவருக்கும் என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் மாத இதழ் ஆகிய செந்தமிழின் பழைய இதழ்களில் சில வண்ணங்கள் உள்ளன. அவற்றைத் தேடி நிலையின்படி (ஜெராக்ஸ்) எடுத்துக் கொள்ளத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் மேனாள் நூலின் இயக்குநர் முனைவர் **த. பத்மநாபன்** அவர்களும் சரசுவதி மகால் முனைவர் **ப. பெருமாள்** அவர்களும் உதவி புரிந்தனர். இவ்வறிஞர்கள் இருவருக்கும் என் அன்பான நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன். ஒவ்வொரு வண்ணத்தின் அறிமுக உரையிலும் அது எங்கிருந்து பெறப்பட்டது என்பதைத் தவறாமல் குறித்துள்ளதால் இப் பதிப்புரையில் அப்பட்டியல் விரிவஞ்சித் தவிர்க்கப்படுகிறது.

மிக அரிதின் முயன்று ஏறத்தாழ ஐந்து ஆண்டுகள் ஓய்வு நேரத்தை எல்லாம் செலவிட்டு உருவாக்கப்பெற்ற இந்த வண்ணப் பெருந்திரட்டின் முதல்பகுதி இப்பொழுது வெளியாகிறது. இதற்குத் தம் பற்பல தெய்வப் பணிகளுக்கிடையே ஆசியுரை ஒன்றை அளித்தருளியுள்ள சிரவையாதீனகர்த்தர் தவத்திரு. **குமரகுருபர சுவாமிகள்** அவர்கள் திருமுன்புக்கு என் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன்.

இந்த நூலைத் தட்டச்சு வடிவிலேயே படித்துப் பாராட்டி சில கட்டுரைகளிலும் பதிவு செய்துள்ள சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத் துறையின் துணைப் பேராசிரியர் முனைவர்.**ய. மணிகண்டன்** அவர்களுக்கு நன்றி.

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜி சரசுவதி மகால் நூலகம் மற்றும் ஆய்வு மையத்தின் இயக்குநர் ஆகிய உயர்திரு. **ம.சு. சண்முகம்** இ.ஆ.ப., அவர்களுக்கும் நிர்வாக அலுவலர் உயர்திரு. **அ. மெய்யழகன்** அவர்களுக்கும் என் நன்றிகள் உரியன.

இந்த வண்ணப்பெருந்திரட்டு நூலை என் ஆயுட்காலத்தில் கண்ணால் பார்க்க முடியும் என்னும் நம்பிக்கையை முற்றிலும் இழந்துவிட்ட நிலையில் இப்பதிப்பு இன்று வெளிவருகிறதென்றால் இதன் முழுப் பெருமையும் ஊக்கமிகு முனைவர் ப. பெருமாள் அவர்களையே சேரும். அவருக்கு நன்றி கூற என்னிடம் வார்த்தைகள் இல்லை. ஊமை கண்ட கனவாக உள்ளக் கிழியில் உருவாக்கி உவகை கொள்கிறேன்.

இறுதியாக ஆனால் உறுதியாக இந்த நூலை அச்சுவாகனத்திலேற்றி உலா வரச் செய்யும் தஞ்சாவூர் **மாணிக்கம் பிரிண்டர்ஸ்** உரிமையாருக்கும் அந்நிறுவன அலுவலர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

பரவலான கல்வியும், ஆய்வு நுட்பமும், பேருக்கமும் தம் இயல்புகளாகப் பெற்ற இந்நாளைய தமிழ் ஆய்வாளர்கள் வளஞ்சுரக்கும் இத்துறையில் ஈடுபட்டுத் தமிழாய்வுத் துறைகளை விரிவாக்க வேண்டுகிறேன். இப்பதிப்பில் என் அறியாமை, சோர்வு, மறதி காரணமாக ஏதேனும் பிழைகள் நேர்ந்திருக்குமாயின் அவற்றைப் பொறுத்துக் கொள்வதோடு அமையாமல் எனக்குத் தெரியப்படுத்தினால் என்னைத் திருத்திக் கொள்ள பேருதவியாக இருக்கும்.

நன்றி. வணக்கம்

**ப.வெ. நாகராஜன்**

# பொருளடக்கம்

# வண்ணப் பெயரகராதி

(ஒவ்வொன்றன் பின்னும் வண்ணம் என்னும் சொல்லைச் சேர்த்துக் கொள்க)

# வண்ணத் தலங்களின் அகரநிரல்

| தலம் | | தொடர் எண் |
|---|---|---|
| 1. அவிநாசி | | 51 |
| 2. இராசவல்லிபுரம் (செப்பறை) | | 68 |
| 3. இராமேச்சுரம் | | 80 |
| 4. காஞ்சிபுரம் | | 47 |
| 5. குடுமியான்மலை | | 71 |
| 6. கும்பகோணம் | (வை) | 4 |
| 7. குன்றக்குடி | (கௌ) | 14, 18 |
| 8. குன்றுதோறாடல் | (கௌ) | 91 |
| 9. கொடுங்குன்றம் (பிரான்மலை) | | 61 |
| 10. சிதம்பரம் | | 86 |
| 11. சிவகிரி (காங்கேயம்) | (கௌ) | 55 |
| 12. சென்னைக் கந்தகோட்டம் | (கௌ) | 27 |
| 13. சேற்றூர் | | 77, 82 |
| 14. ஞானகிரி | | 21 |
| 15. திருக்கழுக்குன்றம் | | 16, 25 |
| 16. திருக்கோஷ்டியூர் | (வை) | 53 |
| 17. திருச்சிராப்பள்ளி | | 15 |
| 18. திருச்செங்கோடு | | 69 |
| 19. திருச்செந்தூர் | (கௌ) | 44, 59, 76 |
| 20. திருநெல்வேலி | | 2, 10 |
| 21. திருப்புல்லாணி | (வை) | 39 |
| 22. திருப்பூவணம் | | 62. 64 |
| 23. திருமாகறல் | (வை) | 22 |
| 24. திருவண்ணாமலை | | 30, 36 |
| 25. திருவரங்கம் | (வை) | 24 |
| 26. திருவான்மியூர் | | 74 |
| 27. திருவுருமாமலை | (கௌ) | 20, 23, 29, 41 |
| 28. திருவையாறு | | 60 |
| 29. திருவொற்றியூர் | | 11 |
| 30. தொட்டிக்கலை | (வை) | 6 |
| | (சை) | 26 |

| | | |
|---|---|---|
| *31.* நயினாமலை | (வை) | 58 |
| *32.* நாகப்பட்டினம் | (கௌ) | 50 |
| *33.* பழனி | (கௌ) | 17, 37,46,54,78 |
| *34.* பாண்டிச்சேரி | | 40 |
| *35.* போரூர்(கா) | | 1 |
| *36.* மயிலாப்பூர் | (கௌ) | 12 |
| | (சை) | 75 |
| *37.* மன்னார்குடி | (வை) | 45 |
| *38.* வில்லியனூர் | | 8 |

குறிப்பாகக் குறிப்பிடாதவையும், சை எனக் குறிப்பிடப் பெற்றவையும் சைவத் தலங்கள்; கா - காணாபத்தியத் தலம்; கௌ - கௌமாரத் தலம்; வை - வைணவத் தலம். இவற்றுள் சைவத் தலங்கள் 22; காணாபத்தியத் தலம் ஒன்றே ஒன்று; கௌமாரத் தலங்கள் 10; வைணவத் தலங்கள் 8. தொட்டிக்கலை, போரூர், மயிலாப்பூர் ஆகிய மூன்று ஊர்களிலும் இரண்டிரண்டு தலங்கள் வண்ணம் பெற்றிருப்பதால் மொத்த ஊர்கள் முப்பத்தெட்டுதான்.

# பாடினோர் அகரநிரல்

எண் தொடர்எண்

| | | |
|---|---|---|
| 1. | அந்தகக்கவி வீரராகவ முதலியார் | 3 |
| 2. | அருணாசலத் தொண்டைமான், திருநெல்வேலி | 92 |
| 3. | அழகிய சூத்தர், செப்பறை | 68 |
| 4. | இரட்டைப் புலவர் | 47 |
| 5. | இரண்டாம் சர்க்கரைப் புலவர் | 38 |
| 6. | கந்தசாமி சுவாமிகள், சிரவை | 42 |
| 7. | கந்தசாமி சுவாமிகள், திருப்பூவணம் | 62 |
| 8. | கருணையானந்த சுவாமிகள் | 21 |
| 9. | கருப்பையாப் பாவலர், கொட்டாம்பட்டி | 33, 57 |
| 10. | கன்றாப்புடையார் | 86 |
| 11. | சண்முகம் பிள்ளை, மகாவித்வான், மயிலை | 25 |
| 12. | சபாபதி முதலியார், அட்டாவதானம், புரசை | 1, 19, 31, 34, 78, 81 |
| 13. | சபாபதி முதலியார், மகாவித்வான், காஞ்சிபுரம் | 75 |
| 14. | சிந்தாமணிப்பிள்ளை என்னும் பொன்னாயிரங் கவிராயர் | 77, 82, (76?) |
| 15. | சிற்றம்பலக் கவிராயர், மிதிலைப்பட்டி | 9, (61?) |
| 16. | சுப்பராயர், இராமநாதபுரம் | 80 |
| 17. | சுப்பிரமணிய முனிவர், மதுரகவி, தொட்டிக்கலை | 6, 26 |
| 18. | சேறைக் கவிராசபிள்ளை | 30 |
| 19. | தண்டபாணி சுவாமிகள், வண்ணச்சரபம் | 2, 17, 18, 20, 23, 24<br>2, 7, 29, 41, 44,91 |
| 20. | நல்லகுற்றாலக் கவிராயர் | 72 |
| 21. | முத்துச்சாமி அய்யர், பாலபாரதி, பவானி | 83 |
| 22. | வேலச் சின்னோவையன், விசையகிரி | 37 |

ஆசிரியராக இருப்பாரோ என அய்யம்

| | | |
|---|---|---|
| 1. | அழகுமுத்துப் புலவர் | 50 |
| 2. | எல்லப்ப நாவலர், சைவ | 36 |
| 3. | காளியண்ணப் புலவர் | 48 |
| 4. | சண்டமாருதக் கவிராயர், முதுகந்திடல் | 64 |
| 5. | முத்துக்குமர முதலியார், புதுவை | 40 |

ஆசிரியர் பெயர் அறியப் பெறாதன:

4, 5, 7, 8, 10 - 16, 22, 28, 32, 35, 39, 43, 45, 46, 49, 51-56, 58-60, 63, 66, 67, 69 - 71, 73, 74, 79, 84, 85, 87-90 ஆக நாற்பத்தைந்து.

# பாடப்பெற்றோர் அகராதி

எண் தொடர்எண்

1. அவிநாசிக் கவுண்டர், பூந்துறை 48
2. அனந்தையர், மண்டகுளம் 88
3. ஆவுடையராயன், மண்டகுளம் 73
4. இரகுநாத சேதுபதி, (தளவாய், முதல்) 32,84 ஆக 2 வண்ணங்கள்
5. இரகுநாதத் தொண்டைமான், புதுகை 38
6. இளையபெருமாள் கவுண்டர் 83
7. ஒப்பிலாத மழவராயர், அரியலூர் 90
8. கயிலாசநாத அய்யர் 43
9. கருணைகிரி முத்தையன்,கடலூர் 56
10. குமாரச் சின்னோவையன், பழனி 65
11. குமார சாம்புவன் 5
12. சடையப்ப முதலியார் 79
13. சாமைய நாயக்கர், தஞ்சை 63
14. சிவபெருமான் 2.8,10,11,15,16,21,25,26,30,33,34,36,40,47,51,60-62,64,68,69,71, 74,75,77,80,82,86, ஆக 29 வண்ணங்கள்
15. செண்டலங்காரப் பிரபு (மன்னை) 67,89 ஆக 2 வண்ணங்கள்
16. தஞ்சைநாயகம் பிள்ளை 52
17. தாயுமான பிள்ளை, மதுரை 70
18. திருமால் 4,6,22,24,39,58,45,53 ஆக 8 வண்ணங்கள்
19. நம்மாழ்வார் 72
20. பரராச சிங்கன் ( ஈழம்) 3
21. பொன்னரியான் என்னும் மூவரையன் 9
22. முருகப்பெருமான் 12,14,17-20,23,27,29,31,37,41,44,46,50,54,55,57,59, 76,78,81,91, ஆக 23 வண்ணங்கள்
23. வடமலையப்பப் பிள்ளை ஐயன் 85
24. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 42,92 ஆக 2 வண்ணங்கள்
25. விட்டலராயச் சோழகன் 13
26. விநாயகர் 1
27. வீரச் சின்னையன் வராககிரி 49
28. வீரப்ப நாயக்கன் 7
29. வீரராகவ முதலியார்; பாலை 35
30. வெள்ளைச் செட்டியார்; தஞ்சை 87
31. வேங்கடேசுரன்; மாதை 66
32. வேலச்சின்னோவையன் விசையகிரி 28



# வண்ணத்தலங்களின் வரலாறு

## 1. அவிநாசி

கொங்குநாட்டுத் தேவாரத் தலங்களில் முதலாவது. திருப்பூரிலிருந்து 10 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருப்புக்கொளியூர் என்பது ஊரின் பெயர். இறைவன் பெயராகிய அவிநாசி என்பதே ஊர்ப் பெயராக வழங்குகிறது.

சுந்தரமூர்த்தி நாயனாருக்காக முதலைவாய்ப் பிள்ளையை மீட்ட ஏழாம் திருமுறையின் 92 ஆம் பதிகம் இத் தலத்திற்குரியது. அப்பதிகத்தின் நான்காம் பாடலில் இந்நிகழ்ச்சிக்கான அகச்சான்று உள்ளது. அப்பர் பெருமானின் திருத்தாண்டகத்தில் அவிநாசி கண்டாய் அண்டத்தான் கண்டாய் எனவும், திருவாசகத்து ஆனந்தமாலையில், அரியபொருளே அவிநாசியப்பா எனவும் இத்தலம் குறிக்கப் பெறுகிறது. திருப்புகழ் பெற்ற தலம். இளையான் கவிராயரால் இயற்றப்பெற்ற தலபுராணத்தோடு பிள்ளைத்தமிழ். உலா, மாலை, அந்தாதிகள், பதிகங்கள் எனப் பல சிற்றிலக்கியங்களால் போற்றப்பெறும் தலம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | அவிநாசி லிங்கேசுவரர், அவிநாசியப்பர் |
| இறைவி | - | பெருங்கருணை நாயகி, கருணாம்பிகை |
| தீர்த்தம் | - | நள்ளாறு, காசிக் கிணறு |
| தல மரம் | - | பாதிரி |
| தல விநாயகர் | - | வழிகாட்டி விநாயகர் |

## 2. இராசவல்லிபுரம் (செப்பறை)

திருநெல்வேலிக்கருகிலுள்ள இராசவல்லிபுரம் என்னும் ஊரில் உள்ள மடம் செப்பறைமடம் எனப்படுகிறது. இம் மடம் கி.பி. 1560 இல் நாகப்பட்டினத்தைச் சேர்ந்த பொன்னம்பல தேசிகர் என்பவரால் நிறுவப்பெற்றது. இது சைவசித்தாந்தத்தைப் பரப்புவதற்காக நிறுவப் பெற்றதாகும்.

இரண்டு உலாக்கள், ஓர் அந்தாதி, மூன்று வண்ணங்கள் ஆகியன ஊர்கோயில், திருமடம் இரண்டையும் போற்றி எழுந்துள்ளன. ஊர்ச் சிவாலயத்தில் இறைவன் பெயர் அக்கினீசுவரர் என்பதாகும். திருமடத்தில் உள்ளவர் நடேசப்பெருமான். தளவாய் ஆறை அழகப்ப முதலியார் அவர்கள்உதவியால் 1726இல் இப்போதுள்ள செப்பறைக்கோவில் கட்டப்பெற்றதாகத் தெரிகிறது.

## 3. இராமேச்சுரம்

பாண்டிய நாட்டுத் தேவாரத் தலங்களில் எட்டாவது, இத் தலம் பன்னிரண்டு ஜோதிர்லிங்கத் தலங்களில் ஒன்றாகும். இங்குக் கடலாடி இறைவனை வழிபட்டால்தான் காசியாத்திரை நிறைவு பெறும் என்பது ஐதீகம்.

திருஞானசம்பந்தரின் பதிகங்கள் இரண்டு ( 3 10,101 ) திருநாவுக்கரசரின் பதிகம் ஒன்று ( 4 61) ஆக மூன்று பதிகங்கள் இந்தத் தலத்திற்குரியவை. திருப்புகழ் பெற்ற தலம். நிரம்பஅழகிய தேசிகரால் இயற்றப்பெற்ற தலபுராணம் ( சேது புராணம்), கோவை, பிள்ளைத்தமிழ், உலா, பதிகங்கள் போன்ற பல சிற்றிலக்கியங்கள் இத் திருத்தலத்தைப் போற்றி எழுந்துள்ளன.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | இராமநாதசுவாமி, இராமலிங்கேசுவரர் |
| இறைவி | - | மலைவளர்காதலி, பர்வதவர்த்தனி |
| தீர்த்தம் | - | கடல் (அக்கினி தீர்த்தம்) உட்பட 44 தீர்த்தங்கள் |
| தல விநாயகர் | - | சந்தான கணபதி |

## 4. காஞ்சிபுரம்

முத்தி தரும் ஏழு நகரங்களுள் காஞ்சிபுரம் ஒன்று ஆகும். தொண்டை நாட்டுத் தேவாரத் தலங்களுள் முதலாவது இது. ஆலயம் திருவேகம்பம் என வழங்கப்பெறும். பஞ்சபூதத் தலங்களுள் இது நிலத்திற்குரியது. சக்தி பீடங்களுள் சிறப்புமிக்க காமகோடிபீடம் காஞ்சிபுரமே ஆகும். இத் தலத்தில் பல சிவாலயங்கள் உள்ளன. ஆனால் எதிலும் தனியாக இறைவிக்கு மூலச்சந்நிதி இல்லை. இத் தலம் முழுமைக்கும் இறைவி காமாட்சியம்மனே.ஒவ்வொரு கோயிலிலும் ஒவ்வொரு திருப்பெயர் தாங்கி உற்வச மூர்த்தம் மட்டுமே இருக்கும்.

சைவத்திருமுறைகள் எட்டிலும் தொடர்ச்சியாகப் பாடல்பெற்ற தனிப்பெருமை பெற்றுக் காஞ்சிபுரம் விளங்குகிறது. 1-133; 2-12; 3-41, 114-4,7,44,99;5-47, 48;6-64;7-61 ஆகப் பதினோரு பதிகங்கள் இத் தலத்திற்குரியன. மாதவச் சிவஞான முனிவரும் கச்சியப்ப முனிவரும் இணைந்து பாடிய காஞ்சிப்புராணத்தையன்றி வேறு இரு பழைய தலபுராணங்களையும் ஏராளமான சிற்றிலக்கியங்களையும் பெற்றுத் திகழும் புனிதமிக்க தலம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | ஏகாம்பரநாதன், ஏகம்பம் |
| இறைவி | - | காமாட்சி, ஏலவார் குழலி |
| தீர்த்தம் | - | கம்பையாறு |
| தல மரம் | - | மா |
| தல விநாயகர் | - | விகடசக்கர விநாயகர் |

## 5. குடுமியாமலை

இப்போது குடுமியான்மலை என வழங்கும் இவ்வூர் புதுக்கோட்டைக்கு வடமேற்கே 16கி.மீட்டர் தூரத்தில் உள்ளது. இது பாடல்பெற்ற தலம் அன்று. தலபுராணமும் ஓரிரு சிற்றிலக்கியங்களும் உள்ளன. இங்கு நிறையக் கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றில் இவ்வூர் திருநலக்குன்றம் என்றும், சிகாநல்லூர் என்னும் குறிப்பிடப்படுகிறது. இங்குள்ள

மகேந்திரவர்மனின் இசைக்கல்வெட்டு மிகப் புகழ் பெற்றதும் இசை ஆராய்ச்சிக்கு இன்றியமையாததும் ஆகும்.

குன்றின் உச்சியில் முருகப்பெருமான் கோயில் உள்ளது. குன்றின் கிழக்குச் சரிவில் சிவாலயம் உள்ளது.இந்த வண்ணப் பிரபந்தம் சிவன்கோயிலுக்குரியதாகும். சிற்பச் சிறப்புமிக்க ஆலயம்.

இறைவன் - குடுமீசர்,சிகாநாதசுவாமி
இறைவி - அகிலாண்டேசுவரி

## 6. கும்பகோணம் (குடந்தை ஆராவமுதர், வைணவம்)

கும்பகோணத்தில் இத்திருமால் ஆலயம் சாரங்கபாணிப் பெருமாள் கோயில் என வழங்கப் பெறுகிறது. ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற 108 திருப்பதிகளுள் ஒன்று. இது சோழநாட்டுத் திருப்பதிகள் 40இல் பதினான்காவதாகும். பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தார், பேயார், நம்மாழ்வார் ஆகியவர்களால் போற்றப் பெற்ற புனிதத்தலம்.

இறைவன் - சாரங்கபாணிப் பெருமாள், ஆராவமுதன்
இறைவி - கோமளவல்லித் தாயார்
விமானம் - வைதிக விமானம்
தீர்த்தம் - ஹேம புஷ்கரிணி

## 7. குன்றக்குடி (கௌமாரம்)

பேச்சுவழக்கில் குன்னக்குடி என வழங்கும் இத்தலம் காரைக்குடிக்கு மேற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ள சுப்பிரமணியத் தலம். அருணகிரிநாதரின் திருப்புகழ் பெற்ற தலம் (368-374 ஆக 7). இலக்கியத்தில் இத் தலம் மயூரகிரி, மயில்மலை, குன்றை எனப் பல பெயர்களால் வழங்கப்படுகிறது.

ஏறத்தாழ 125 அடி உயரமுள்ள மலையின் மீது திருக்கோயில் உள்ளது. இங்கு மூலவரின் திருப்பெயர் சண்முகநாதர். இக்கோயில் திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி அடிகளாரின் நிர்வாகத்திற்குட்பட்டது.

வேதாந்தம் சுப்பிரமணிய பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்ற தலபுராணம். அகப்பொருட் கோவை, கலம்பகம், பிள்ளைத் தமிழ், உலா, காதல் உள்ளிட்ட பற்பல சிற்றிலக்கியங்கள் இத் தலத்தைப் போற்றி எழுந்துள்ளன.

## 8. குன்றுதோறாடல் (கௌமாரம்)

முருகப் பெருமானைக் குறிஞ்சிநிலக் கடவுள் என்பது தமிழ் இலக்கண மரபு. முருகப் பெருமானுக்குச் சிறப்புடையன ஆறு படைவீடுகள் என வகுத்து அவற்றுள் ஐந்து திருத்தலங்களைக் குறிப்பிட்டுச் சுட்டிக் கூறி மற்றொன்றைப் பொதுவாகக் குன்றுதோறாடல்

என்பர். திருமுருகாற்றுப்படையின் 217 ஆவது அடியில் பயின்றது இத் தொடர். அருணகிரிநாதர், "பல குன்றிலும் அமர்ந்த பெருமாளே" "பல மலை உடைய பெருமாளே" "மலை யாவையும் மேவிய தம்பிரானே" (434-436) என்பார். இது குமரன் குடிகொண்டுள்ள குன்றுகள் அனைத்திற்கும் பொதுவானதாகும்.

## 9. கொடுங்குன்றம் (பிரான்மலை)

பிரான்மலை என இந்நாளில் வழங்கப்பெறும் கொடுங்குன்றம் தேவாரம் பெற்ற பாண்டி நாட்டுத் தலங்களுள் ஐந்தாவது ஆகும். இது சிவகங்கை மாவட்டத்தில் சிங்கம்புணரிக்கு அருகே உள்ளது; காரைக்குடியிலிருந்து 44 கி.மீ. மலை உயரம் ஏறத்தாழ 740 மீட்டர். சங்ககால மன்னன் பாரிவள்ளலின் பறம்புமலை இதுவே. திருஞானசம்பந்தரின் பதிகம் (1-14) இந்தத் தலத்திற்குரியது. மங்கைபாகர்கோயில் மேலே மலையின் சரிவிலும், கொடுங்குன்றநாதர் கோவில் கீழேயும் உள்ளன.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | (மேல் கோயில்) உமாமகேஸ்வரர், மங்கைபாகர்<br>(கீழ்க்கோயில்) கொடுங்குன்றநாதர், கடுர கிரீஸ்வரர் |
| இறைவி | - | (மேல்) தேனாம்பிகை, தேனம்மை<br>(கீழ்) குயிலமுதநாயகி, அமுதாம்பிகை, அம்ருதேஸ்வரி |
| தீர்த்தம் | - | தேனாழி, மதுபுட்கரணி |
| தலமரம் | - | 1. உறங்காப் புளி (தேனாழிக் கரையில் உள்ளது)<br>2. பெயரில்லா மரம் (மலைமீது மங்கைபாகர் சந்நிதி அருகே உள்ளது. இன்றுவரை இன்னமரம் என இனங்காணப்படாதது) |
| தல விநாயகர் | - | ஏகாந்த விநாயகர். |

இத்தலத்திற்குச் சிறப்புரிமை பெற்ற பறவையாகிய கூகை பாகா, பாகா (மங்கை பாகனே) எனக் கூவுமென்பர். இத் திருக்கோயில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திற்குச் சொந்தமானது.

## 10. சிதம்பரம்

சைவத்தில் கோயில் என்றாலே தில்லைச் சிற்றம்பலமாகிய சிதம்பரத்தைக் குறிக்கும். ஊர்ப்பெயர் தில்லைவனம்; கோயிலின் பெயர் சிதம்பரம், சிற்றம்பலம். சோழநாட்டுப் பாடல்பெற்ற தலங்களுள் முதலாவது இது. தேவார மூவராலும், மாணிக்கவாசகராலும் பாடப் பெற்றதோடு சைவத் திருமுறைகள் பன்னிரண்டிலும் இடம்பெற்ற தனிப்பெரும் சிறப்பு இத் தலத்திற்கே உரியது. திருமுறை விண்ணப்பத்தின் தொடக்கத்திலும் நிறைவிலும் திருச்சிற்றம்பலம் எனச் சிதம்பரத்தைத் தவறாமல் போற்றல் சைவமரபு.

திருஞானசம்பந்தரின் இரண்டு பதிகங்கள் (1-80, 3-1) அப்பர் பெருமானின் எட்டுப் பதிகங்கள் (4-22, 23, 80, 81; 5-1,2; 6-1,2), சுந்தரரின் பதிகம் ஒன்று (7-90) இத்தலத்திற்குரியன. பல தலபுராணங்களும் கணக்கற்ற சிற்றிலக்கியங்களும் இத் தலத்தைச் சிறப்பித்து எழுந்துள்ளன. வண்ணச்சரபம் சுவாமிகளின் தில்லைத் திருவாயிரம் என்னும் பிரபந்தம் 1000 செய்யுட்களாலான அரிய தோத்திரப் பிரபந்தமாலை ஆகும்.

இவ் வாலயத்தில் சிற்றம்பலம், பொன்னம்பலம், பேரம்பலம், கூத்தம்பலம் (நிருத்த சபை), அரசம்பலம் (இராஜ சபை) என ஐந்து சபைகள் உள்ளன.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | திருமூலநாதர், சபாபதி, நடராஜர் |
| இறைவி | | உமாமகேஸ்வரி, சிவகாமி |
| தலமரம் | - | தில்லை, ஆல் (கருங்கல்லால் செய்யப்பட்டுள்ளது) |
| தீர்த்தம் | - | சிவகங்கை |
| தல விநாயகர் | - | கற்பக விநாயகர், முக்குறுணி விநாயகர் |

## 11. சிவகிரி (கௌமாரம்)

சிவகிரி என்பது திருப்புகழ் பெற்ற (949-951) கொங்குநாட்டுச் சுப்பிரமணியத் தலம். "கறுத்த குழலணி" "குரம்பை மலசலம்" எனத் தொடங்கும் திருப்புகழ்ப் பாக்கள் இரண்டு (187, 188) இச் சிவமலைக் குரியனவாகலாம். பழனிமலைக் குரியனவாகப் பதிப்பாகியுள்ளன. பெரியார் மாவட்டம் காங்கயத்திற்கு வடக்கே 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. பண்டைய மரபின்படி காங்கேய நாட்டுப் பட்டாலியூர் என இவ்வூர் வழங்கப்பட்டது. சிவமலைக்கு அருகில் இருந்த பட்டாலியூர் இப்போது அழிந்து விட்டது. அரசம்பாளையம் என இப்போது வழங்கப்படும் சிற்றூர் பழைய பட்டாலியூரின் ஒரு பகுதியாக இருக்கலாம்.

கொங்குநாட்டில் பாடல்பெற்ற தலங்கள் ஏழு என்பதைப் போலவே கொங்கேழு மலைகளும் சிறப்பானவை. சிவமலை அவற்றுள் ஒன்று. மற்றவை; சென்னிமலை, அரளிமலை, பழனிமலை, வெள்ளிமலை, வட்டமலை, கதித்தமலை என்பன.

முருகப்பெருமான் திருக்கோயில் குன்றின்மேல் உள்ளது. சிவாசலபதி என்பது இவரது சிறப்புத் திருநாமம்; வள்ளிதேவி மட்டும் இங்கே இருக்கிறார். அருகே தனியான கருவறையில் வள்ளி தெய்வானை இருவரும் சேர்ந்தும் உள்ளனர். இத் திருவுண்ணாழிகள் (கருவறை) இரண்டிற்கும் இடையே சுரங்க அறை ஒன்று உள்ளது. சித்தராகிய சிவவாக்கியர் இச் சுரங்கத்தில் தவம் செய்ததாகவும் அவரே இக்கோவிலைக் கட்டியதாகவும் சொல்வர்.

இங்குச் சிவாலயம் ஒன்றும் உண்டு. நஞ்சுண்டேசுவரர், பர்வதவர்த்தனி, தல மரம் - தொட்டி மரம் ; பால விநாயகர். இங்கே உள்ள அநுமார் சந்நிதி மிகப் புகழ் பெற்றது. இவர் கோயிலில் வழங்கப்பெறும் பழைய நெய் தீராத நோய்களையும் தீர்க்கும். எனவே நாள்தோறும் அன்பர்கள் புதிய நெய்யைக் கொண்டுவந்து கொடுத்து விட்டுச் சமஅளவு பழைய நெய்யைப் பெற்றுச் செல்கின்றனர்.

இச் சிவமலையில் மற்றுமொரு சிறப்பும் உண்டு. சிவாசலபதி யாருடைய கனவிலாவது தோன்றி குறிப்பிட்ட ஒரு பொருளைக் கொணர்ந்து கொடி மரத்திற்குப் பக்கத்தே கட்டி வைக்கக் கட்டளையிடுவாராம். அந்த ஆண்டு அந்தப் பொருளுக்குப் பஞ்சம் வந்துவிடும் என்பதற்கு அது முன்னறிவிப்பாகும். தானியங்களுள் ஒன்று, கரும்பு, பருத்தி, தேங்காய் என முன்னறிவிப்பு வந்து விடுகிறது. ஆண்டு 1975 வாக்கில் தாலி (திருமாங்கலியம்) வைக்கக் கட்டளை பிறந்ததாம். அந்த ஆண்டில் கொங்குநாட்டில் நடுவயது ஆண்கள் ஏராளமாக மடிந்து கணக்கற்றோர் கைம்பெண்களாயினர் என்பர்.

சீகாழி அம்பலவாணக் கவிராயரால் பாடப்பெற்ற தலபுராணம், பிள்ளைத்தமிழ், குறவஞ்சி முதலிய சிற்றிலக்கியச் செல்வங்களைப் பெற்றது சிவமலை.

## 12. சென்னைக் கந்தகோட்டம் (கௌமாரம்)

இது சென்னையில் கந்தசாமி கோயில் என வழங்கப்பெறும் முருகப் பெருமான் ஆலயம். இராமலிங்க அடிகளாரின் முதல் மாலையாகிய தெய்வமணி மாலை இத்தலத்திற்குரியது. தலபுராணம், கலம்பகம், பிள்ளைத் தமிழ் முதலிய பல சிற்றிலக்கியங்களால் போற்றப் பெறுவது.

## 13. சேற்றூர்

சேறை எனக் கூறப்படுவது பாண்டிய நாட்டுப் பகுதியாகிய சேற்றூர் நாட்டுச் சேற்றூர் ஆகும். சேற்றூர் நாடு மறைநாடு எனவும் வழங்கும். இத் தலத்தில் இறைவர் அம்மையப்பர், திருமலைக்கொழுந்தர், ஆளுடைநாதர், சேவகத் தேவர், நச்சாடை தவிர்த்தவர் என்னும் ஐந்து சிறப்புப் பெயர்களால் வழங்கப்படுகிறார். இறைவியின் திருப்பெயர் தவம்பெற்ற நாயகி என்பதாம்.

பொன்னாயிரங் கவிராயரால் இயற்றப் பெற்றுள்ள தலபுராணக் குறிப்புகளை 77, 82 ஆம் வண்ணக் குறிப்புரைகளில் காண்க.

## 14. ஞானகிரி

சென்னை வேலூர் நெடுஞ்சாலையில் காவேரிப்பாக்கம் சோளிங்கர் வழியில் 14 ஆவது கிலோ மீடரில் மங்கலம் என்றும் ஊர் உள்ளது. அதன் அருகே உள்ள கிராமம் கோவிந்தச்சேரி. அங்கு உள்ள மலைதான் ஞானமலை என்பர். இரண்டு திருப்புகழ்ப்பாக்கள் (399, 400) உள்ளன. அம்மலையில் உள்ள கல்வெட்டில் இப்பெயர் இருக்கிறதாம்.

## 15. திருக்கழுக்குன்றம்

இது தேவாரம் பெற்ற தொண்டைநாட்டுத் தலங்களுள் 28 ஆவது ஆகும். செங்கல்பட்டிலிருந்து 15 கி.மீ. தென்கிழக்கில் உள்ளது. வேதகிரி, கதலிவனம், பட்சிதீர்த்தம் என்பன இத் தலத்தின் மறுபெயர்கள். நாள்தோறும் நடுப்பகலில் மலைக்கு இரு கழுகுகள்

வந்து உணவு பெற்றுச் செல்லுதல் இத் தலத்தின் சிறப்பாகும். மலை ஏறத்தாழ 155 மீட்டர் உயரம் உள்ளது.

மூவர் தேவாரமும் திருவாசகமும் பெற்ற சிறப்பிற்குரியது. திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று. (1-103), அப்பர் பெருமானின் பதிகம் ஒன்று (6-92) சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பதிகம் ஒன்று (7-81) என மூன்று திருப்பதிகங்கள் இத் தலத்திற்குரியவை. அந்தகக்கவி வீரராகவ முதலியார் அவர்களால் இயற்றப்பெற்ற தலபுராணமும், அகப்பொருட் கோவை, உலா, சிலேடை வெண்பா முதலிய பல சிற்றிலக்கியங்களும் இத் தலத்தைப் போற்றி எழுந்துள்ளன.

இறைவன் - பக்தவச்சலேஸ்வரர்
இறைவி - திரிபுரசுந்தரி
தல மரம் - வாழை
தீர்த்தம் - சங்கு தீர்த்தம்
தல விநாயகர் - வண்டுவனப் பிள்ளையார்

## 16. திருக்கோஷ்டியூர் (வைணவம்)

ஆழ்வார்களின் அருளிச்செயல் பெற்ற பாண்டிய நாட்டுப் பதிகள் 18 இல் இரண்டாவது திருக்கோட்டியூர், பெரியாழ்வார், திருமங்கை மன்னன், பூதத்தார், பேயார், திருமழிசையார் ஆகியோரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற இத் திருப்பதி சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூருக்குத் தெற்கே 10 கி.மீ. தூரத்தில் உள்ளது.

இறைவன் - சௌமியநாராயணப் பெருமாள்
இறைவி - திருமாமகள் நாச்சியார்
விமானம் - அஷ்டாங்க விமானம்
தீர்த்தம் - தேவ புஷ்கரிணி

## 17. திருச்சிராப்பள்ளி

பாடல்பெற்ற சோழநாட்டுத் திருத்தலங்களுள் 69 ஆவது ஆகிய திருச்சிராப்பள்ளி காவிரித் தென்கரைத் தலமாகும். இங்குள்ள மலைக்கோட்டையும் உச்சிப்பிள்ளையார் கோவிலும் புகழ்பெற்றவை. மலை ஏறத்தாழ 85 மீட்டர் உயரமுள்ளது.

திருஞானசம்பந்தர் (1-98), திருநாவுக்கரசு நாயனார் (5-85) ஆகியோரால் பாடப்பெற்ற இத் தலம் திருவாசகத்திலும் இடம் பெற்றுள்ளது. சமரச ஞானியாகிய தாயுமானவ சுவாமிகள் இத் தலத்தவரே. சைவ எல்லப்ப நாவலரால் இயற்றப் பெற்ற செவ்வந்திப் புராணம் என்னும் தலபுராணமும், அகப்பொருட் கோவைகள் இரண்டு, பதிற்றுப்பத்தந்தாதிகள் முதலிய பல இலக்கியங்களும் இத் தலம் பற்றியவையாகும்.

இறைவன் - தாயுமானவர், மாத்ருபூதேசுவரர்
இறைவி - மட்டுவார்குழலி, சுகந்த குந்தலாம்பிகை
தீர்த்தம் - காவிரி
தலவிநாயகர் - மாணிக்கப் பிள்ளையார்

## 18. திருச்செங்கோடு

சைவத் திருமுறையில் கொடிமாடச் செங்குன்றூர் என வழங்கப்பெறும் இத் தலம் பாடல்பெற்ற கொங்கேழ் தலங்களுள் நான்காவதாகும். திருச்செங்கோடு ஈரோட்டிலிருந்து 18 கி.மீ. கிழக்கில் உள்ளது. மலையின் உயரம் சுமார் 580 மீட்டர். இம் மலை சிலப்பதிகாரத்தில் நெடுவேள் குன்று எனக் கூறப்பட்டுள்ளது. இங்குள்ள செங்கோட்டு வேலவர் அருணகிரிநாதருக்கு மிக்க அபிமான மூர்த்தி.

நாகாசலம், உரககிரி எனத் தோற்றம் பற்றிப் பெயர் பெற்றது. திருஞானசம்பந்தப் பெருமானின் திருநீலகண்டப் பதிகமும் (1-116) வெந்த வெண்ணீறணிந்து என்பதும் (1-107) இத் தலத்திற்குரியன. அர்த்தநாரீசுவரரோடு செங்கோட்டு வேலவரும் பற்பல சிற்றிலக்கியங்களால் போற்றப் பெறுகின்றனர். கவிராஜபண்டிதரால் இயற்றப்பெற்ற தல புராணம் உள்ளது.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | அர்த்தநாரீசுவரர் |
| இறைவி | - | பாகம்பிரியாள் |
| தல மரம் | - | இலுப்பை |
| தீர்த்தம் | - | கணபதி தீர்த்தம் முதலிய 18 |
| தல விநாயகர் | - | நாரி கணபதி |

## 19. திருச்செந்தூர் (கௌமாரம்)

முருகப்பெருமானின் அறுபடை வீடுகளுள் இரண்டாவதாக விளங்குவது செந்திலம்பதி. திருநாவுக்கரசர், "நம் செந்தில்மேய வள்ளி மணாளன்" (6-23-4) என்கிறார். "சீர்கெழு செந்தில்" எனச் சிலப்பதிகாரம் (குன்றக்குரவை) சிறப்பிக்கிறது.

கடற்கரைத் தலமாகிய இப்பதி திருச்சீரலைவாய் எனவும், செயந்திபுரம் எனவும் வழங்கப்பெறும். பெரும்புகழ் பெற்ற புனித யாத்திரைத்தலம், வென்றிமாலைக் கவிராயரால் இயற்றப்பெற்ற தலபுராணமும் கோவை, கலம்பகம், பிள்ளைத் தமிழ், பரணி முதலிய எண்ணிலடங்காச் சிற்றிலக்கியங்களும் செந்தூர்ச் சிறப்பைப் பறைசாற்றுகின்றன. இங்குள்ள நாழிக்கிணறு தெய்வீக சக்தி வாய்ந்தது.

## 20. திருநெல்வேலி

பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற தலங்கள் பதினான்கனுள் பதினான்காவது திக்கெலாம் புகழும் திருநெல்வேலி. இவ்வூர் வேணுவனம், சாலிவாடி, நெல்லூர், சாலிநகர் என்றெல்லாம் வேறு பெயர்களைப் பெற்றுள்ளது. ஆடல்வல்லாவின் ஐந்து சபைகளுள் இங்குள்ளது தாம்பிரசபை என்னும் செப்பறை. திருஞானசம்பந்தரின் தேவாரம் பெற்றது (3-92) தாமிரபரணியாற்றங் கரையிலுள்ள இத்தலம்.

120 சருக்கங்களையும் 6891 விருத்தங்களையும் கொண்ட நெல்லைத் தலபுராணம் நெல்லையப்பப் பிள்ளையால் இயற்றப் பெற்றதாகும். இந்நூலைச் சிவபெருமானே திருத்தியருளினார் என்பர். இதைத்தவிர வேணுவன புராணம் என்னும் மற்றொரு தலபுராணம், கோவை, கலம்பகம், பிள்ளைத் தமிழ், அந்தாதிகள் என மிகப் பல சிற்றிலக்கியங்களைப் படைத்துள்ள சிவப்பதி இது.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | நெல்லையப்பர், வேணுவனநாதர், சாலிவாடீசர் |
| இறைவி | - | காந்திமதி, வடிவுடையம்மை |
| தலமரம் | - | மூங்கில் |
| தீர்த்தம் | - | பொற்றாமரைக்குளம், கருமாரித் தீர்த்தம் |
| தல விநாயகர் | - | பொல்லாப் பிள்ளையார். |

## 21. திருப்புல்லாணி (தர்ப்ப சயனம், வைணவம்)

மங்களாசாசனம் பெற்ற பாண்டிநாட்டுத் தலங்கள் 18 இல் நான்காவது இத் திருப்பதி. திருமங்கையாழ்வாரால் பாடப்பெற்ற இத் தலம் இராமநாதபுரத்திற்குத் தெற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | கல்யாண ஜகந்நாதன், தெய்வச்சிலையார் |
| இறைவி | - | கல்யாணவல்லித் தாயார் |
| விமானம் | - | கல்யாண விமானம் |
| தீர்த்தம் | - | ஹேம தீர்த்தம், சக்ர தீர்த்தம் |
| தல மரம் | - | அரசமரம் |

## 22. திருப்பூவணம்

பாண்டியநாட்டுப் பாடல்பெற்ற தலங்கள் பதினான்கனுள் பதினொன்றாவதாகிய திருப்பூவணம் மதுரைக்குக் கிழக்கே 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இப்போது திருப்புவனம் எனவும் பூவை எனவும் வழங்கப்படுகிறது. திருவிளையாடல் புராணம் கூறும் இரசவாதம் செய்த அருளாடல் நிகழ்ந்தது இத்தலத்தில்தான். புஷ்பவனம், பாஸ்கரபுரம், ரசவாதபுரம், நெல்முடிக்கரை என்பன இதன் மறுபெயர்கள். மூவர் தேவாரமும் பெற்ற சிறப்புடையது.

திருஞானசம்பந்தரின் இரு பதிகங்கள் (1-64, 3-20), அப்பர் பெருமானின் திருப்பதிகம் ஒன்று (6-18), சுந்தரரின் பதிகம் ஒன்று (7-11) என நான்கு இத் தலத்திற்குரியன. பொன்னனையாளின் மரபில் தோன்றிய கந்தசாமிப் புலவரால் இயற்றப்பெற்ற தலபுராணத்தோடு உலா முதலிய பல சிற்றிலக்கியங்கள் உள்ளன.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | பூவணநாதர், புஷ்பவனேசுவரர் |
| இறைவி | - | மின்னனையாள், அழகியநாயகி, சௌந்தரநாயகி |
| தல மரம் | - | பலா |
| தீர்த்தம் | - | வையை |

## 23. திருமாகறல் (வைணவம்)

இத் திருப்பதி காஞ்சிபுரத்திலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ளது. இது திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற தொண்டைநாட்டுத் தலங்களுள் ஏழாவதும் ஆகும். இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள வண்ணம் திருமாகறலில் எழுந்தருளியுள்ள வீற்றிருந்த பெருமாளைப் போற்றுவதாகும். இத் திருமால் கோவில் திவ்வியப் பிரபந்தத் திருப்பதிகளுள் ஒன்று அன்று.

## 24. திருவண்ணாமலை

பஞ்சபூதத் தலங்களுள் தேயுத் தலமாம் அண்ணாமலை பாடல்பெற்ற தலங்களுள் நடுநாட்டில் இருபத்திரண்டாம் தலமாகும். மலை ஏறத்தாழ 815 மீட்டர் உயரம் உள்ளது. மலைமீது கார்த்திகை மாதக் கிருத்திகையன்று நிகழும் தீபத் திருவிழா மிகப் புகழ் வாய்ந்தது. ஆலயம் அடிவாரத்தில் உள்ளது. நினைத்த மாத்திரத்தில் வீட்டுப் பேறளிக்கும் தலம். சோணாசலம், அருணாசலம் எனவும் இத்தலம் வழங்கும்.

திருஞான சம்பந்தரின் இரண்டு பதிகங்கள் (1-10, 69), அப்பர் பெருமானின் மூன்று திருப்பதிகங்கள் (4-63, 5-4,5) இப்புனிதத் தலத்திற்குரியன. திருவெம்பாவை இத் தலத்தில் அருளிச்செய்யப்பட்டதாகும். அருணகிரிநாதர் அவதரித்தருளிய திவ்வியத் திருப்பதி, சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய தலபுராணத்தோடு அருணகிரிபுராணம் என மற்றொன்றும் உள்ளது. கலம்பகம், சதகம், மாலை எனப் பற்பல இலக்கியங்கள் திருவண்ணாமலையைப் போற்றி எழுந்துள்ளன.

| | | |
|---|---|---|
| இறைவர் | - | அண்ணாமலையார், அருணாசலேசுவரர் |
| இறைவி | - | உண்ணாமுலை, அபீதகுசாம்பிகை |
| தல மரம் | - | மகிழ மரம் |
| தீர்த்தம் | - | பிரம தீர்த்தம், சிவகங்கை |
| தல விநாயகர் | - | சர்வசித்தி விநாயகர் |

## 25. திருவரங்கம் (ஸ்ரீரங்கம் வைணவம்)

வைணவத்தில் கோயில் என்றாலே ஸ்ரீரங்கத்தைத்தான் குறிக்கும். பெரியகோயில், பூலோக வைகுண்டம், போக மண்டபம் எனச் சிறப்பிக்கப் பெறும் புனிதத் திருப்பதி. இராமபிரான் திருஅவதாரம் செய்தருளிய இட்சுவாகு குலத்தினரின் குலதெய்வமும் ஆராதனை மூர்த்தியும் ஸ்ரீரங்கப்பெருமானேயாவார். வைணவ ஆசாரியார்கள் பலர் தோன்றிய தலம். ஸ்ரீ இராமானுஜர் ஐக்கியமடைந்த பெரும்பதி. ஆழ்வார்கள் அனைவராலும் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திவ்வியத் திருப்பதி.

இத் தலத்தைப் போற்றி எண்ணற்ற இலக்கியங்கள் தோன்றியுள்ளன. வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆயிரம் கவிகளால் திருவரங்கத் திருவாயிரம் பாடியுள்ளார்.

இறைவன் - ரங்கநாதன், நம்பெருமாள்
இறைவி - ரங்கநாயகித் தாயார்
விமானம் - பிரணவாகார விமானம்
தீர்த்தம் - சந்திர புஷ்கரிணி

## 26. திருவான்மியூர்

தொண்டைநாட்டுப் பாடல்பெற்ற தலங்கள் முப்பத்திரண்டுள் இருபத்தைந்தாவதாகிய திருவான்மியூர் சென்னை மாநகரின் தெற்குக் கோடியில் உள்ளது. திருஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டு (*i- 4; 3-35*), அப்பர் சுவாமிகளின் பதிகம் ஒன்று (*5-82*) என்பன திருவான்மியூருக்குரியன ஆகும். இத் தலத்திற்குத் தலபுராணமும் சில சிற்றிலக்கியங்களும் உள்ளன.

இறைவன் - மருந்தீசர், பால்வண்ணநாதர், ஔஷதீசர்
இறைவி - சொக்கநாயகி , திரிபுரசுந்தரி, சுந்தரநாயகி
தல மரம் - வன்னி
தல விநாயகர் - விஜயகணபதி

## 27. திருவுருமாமலை ( குறுக்குத்துறை கௌமாரம்)

திருநெல்வேலியில் தாமிரவர்ணி ஆற்றின் நடுவில் உள்ள முருகன் கோவில். வழக்கில் குறுக்குத்துறை என்றே அதிகமாக வழங்குகிறது. வண்ணச்சரபம் சுவாமிகள் எல்லா இடங்களிலும் திருவுருமாமலை எனவே குறிப்பிடுகிறார். அண்மைக் காலத்தில் தோன்றிய பல அருமையான சிற்றிலக்கியங்களைப் பெற்றுள்ள கௌமாரத் தலம் இது.

## 28. திருவையாறு

சோழநாட்டுப் பாடல்பெற்ற தலங்களுள் காவிரி வடகரைத் தலங்கள் அறுபத்துமூன்றில் ஐம்பத்தைந்தாவது தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் கயிலைக் காட்சி பெற்ற புனிதப்பதி. நாதோபாசனையின் சத்குரு ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் திவ்வியத் தலம். மூவர் தேவாரமும் பெற்ற பெருமையை உடையது.

சம்பந்தர் பதிகங்கள் ஐந்து ( *1-6, 120, 130; 2-6, 32* ) அப்பர் பதிகங்கள் *12 (4-3, 13,38,3940,91,92,98; 5-27,28; 6-37,38)* சுந்தரர் பதிகம் ஒன்று ( *7-77*) ஆகப் பதினெட்டுத் தேவாரப் பதிகங்கள் இத் தலத்தற்குரியன. தலபுராணத்தோடு சில சிற்றிலக்கியங்களும் இத் தலத்தொடர்பாகத் தோன்றியுள்ளன.

இறைவன் - ஐயாற்றீசர், செம்பொற் சொதீசர், பிரணதார்த்திஹரர்
இறைவி - அறம்வளர்த்தநாயகி, தர்மசம்வர்த்தனி
தல மரம் - வில்வம்
தீர்த்தம் - சூரிய தீர்த்தம், காவேரி

## 29. திருவெற்றியூர்

பாடல்பெற்ற தொண்டைநாட்டுத் தலங்கள் முப்பத்திரண்டில் திருவொற்றியூர் இருபதாவது ஆகும். சுந்தரர் சங்கிலி நாச்சியாரை மணந்து கொண்ட தலம். பட்டினத்தார் சமாதியடைந்த புனிதப்பதி. ஆதிபுரி என வழங்கப்பெறும் திருவொற்றியூர் சென்னையின் வடக்குப் பகுதியில் உள்ளது.

திருஞானசம்பந்தப் பெருமான் பதிகம் ஒன்று ( *3-57*), அப்பர் சுவாமிகள் திருப்பதிகம் ஐந்து (*4-45, 46,86; 5-24; 6-45*) சுந்தரர் பதிகம் இரண்டு (*7-54,91* ) ஆக எட்டுத் தேவாரப் பதிகங்கள் இத்தலத்திற்கு உரியன. இரண்டு தலபுராணங்களும் பல சிற்றிலக்கியங்களும் இத் தலத் தொடர்பாகக் கிடைக்கின்றன.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | ஆதிபுரீசுவரர், புற்றிடங்கொண்டார், ஆனந்தத் தியாகர், எழுத்தறியும் பெருமான், படம்பக்க நாதர். |
| இறைவி | - | வடிவுடையம்மை, திரிபுரசுந்தரி |
| தல மரம் | - | மகிழமரம் |
| தல விநாயகர் | - | குணாலய விநாயகர் |

## 30. தொட்டிக்கலை

இத்தலத்திற்குச் சிவபரமாக ஒரு வண்ணமும் (*20*), விஷ்ணுபரமாக ஒன்றும்(*6*) இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

கலைசை, கோவிந்தபுரம் எனவும் வழங்கப்பெறும் தொட்டிக்கலை சென்னை ஆவடிக்கு அருகே உள்ளது. இங்கே இறைவன் சிதம்பரேசர் என்றும் இறைவி சிவகாமி என்றும் வழங்கப்படுகின்றனர். சிவகங்கை என்பது தீர்த்தம் தல விநாயகர். செங்கழுநீர் விநாயகர். தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் சிதம்பரேசர் சந்நிதி மண்டபத்தில் தம் ஞானாசிரியர் மாதவச் சிவஞான முனிவரின் திருவுருவத்தை அமைத்து வழிபட்டு வந்தார்.

இத் தலத்தில் திருமாலின் பெயர் கேசவப்பெருமாள்; தாயாரின் பெயர் பெருந்தேவி.

திருமுறைகளிலோ நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலோ இடம்பெறாவிடினும் இத்தலம் ஏராளமான சிற்றிலக்கியங்களைப் பெற்றுப் புகழுடன் விளங்குகிறது.

## 31. நயினாமலை ( வைணவம்)

நாமக்கல் மாவட்டம் சேந்தமங்கலத்திற்கு வடமேற்கில் 6 கி.மீ. தொலைவில் உள்ளது நயினாமலை. இது கண்ணுவ முனிவரின் ஆஸ்ரமம் என்பர். திருமாலின் பெயர் வரதராஜப் பெருமாள்; தேவி குழல்வல்லித் தாயார். உயர்ந்த நெற்றுப்பாறையில் அழகிய ஆஞ்சனேயர் சிலை சிறப்பு வாய்ந்தது. அடிவாரத்தில் மலைகாவலய்யன் என்னும் கிராமதெய்வக் கோயில் உள்ளது.

## 32. நாகப்பட்டினம் ( கௌமாரம்)

தேவாரம் பெற்ற தலமாகவும் 108 திருமால் திருப்பதிகளில் ஒன்றாகவும் விளங்குவது நாகப்பட்டினம். இங்கெழுந்தருளியுள்ள முருகக் கடவுளின் திருநாமம் மெய்கண்ட வேலாயுதன். நாகப்பட்டினம் வடமொழியில் உரகாபுரி என வழங்கும். உரகை என்பது இதன் மரூஉ. இப் பெயர் சுவடி எழுதுவோரால் உதகை எனப் பிழைபட எழுதப்பட்டுவிட்டது. நாகையைப் போற்றும் இலக்கியங்கள் பல உள்ளன.

## 33. பழனி (கௌமாரம்)

அறுபடை வீடுகளுள் ஒன்று அடிவாரத்தில் உள்ள திருவாவினன்குடிதான் எனினும் மலைமேலுள்ள தண்டபாணிக் கடவுளே இத் தலத்தில் முதலிடம் வகிக்கிறார்.

பழனிமலை 137 மீட்டர் உயரம் உள்ளது. ஆலயத்திற்குச் செல்ல 656 படிகள் உள்ளன.குராவடிவேலர் சந்நிதி மலைப்படிகளில் உள்ளது.

பாலசுப்பிரமணியக் கவிராயரால் இயற்றப்பெற்ற தலபுராணம். அருணகிரிநாதரின் திருப்புகழ். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் பழனித் திருவாயிரம் என்பன தவிரக் கணக்கற்ற சிற்றிலக்கியங்களைப் பெற்ற வளமான கௌமாரத் தலமாகத் திருப்பழனி விளங்குகிறது.

## 34. பாண்டிச்சேரி ( புதுச்சேரி)

இவ்வூர் சைவ இலக்கியங்களில் வேதபுரி, வேதவனம் எனக் குறிப்பிடப்படுகிறது. இறைவன் வேதபுரீசர் எனவும், இறைவி திரிபுரசுந்தரி எனவும் பெயர்கொண்டு விளங்குகின்றனர். இவ்வூரிலுள்ள மணற்குள விநாயகர் மிகப் பிரசித்தமானவர். முத்துக்குமார முதலியார் என்பவரால் இத் தல இறைவி பிள்ளைத் தமிழால் போற்றப் பெற்றுள்ளார். இத் தலத்திற்கு மேலும் சில இலக்கியங்களும் இருக்கலாம்.

## 35. போரூர் (காணாபத்தியம், கௌமாரம்)

இத் தலத்தின் வேம்படி விநாயகரைப் போற்றும் வண்ணம் ஒன்றும், முருகப் பெருமானைப் புகழும் வண்ணங்கள் ஆறும் இப் பெருந்திரட்டில் இடம் பெற்றுள்ளன.

திருப்போரூர் செங்கற்பட்டிற்கு வடகிழக்கில் 25 கி.மீ. தொலைவில் உள்ளது. பழைய ஆலயம் 17-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகளால் புதுப்பிக்கப்பட்டது. இங்கே முருகப்பெருமான் பெண் பனைமரத்தின் கீழே சுயம்பு மூர்த்தியாக விளங்குகிறார். இவருக்குப் புனுகு சட்டம் மட்டுமே சாத்தப்படுகிறது; அபிஷேகம் இல்லை. ஆலயத்திற்குத் தெற்கே சரவணப் பொய்கை என்னும் திருக்குளம் இருக்கிறது. இத் தலத்தில் வேம்படி விநாயகர் பெரும்புகழ் பெற்றவர். சிதம்பர சுவாமிகள் மடாலயம் இங்கே உள்ளது.

## 36. மயிலாப்பூர் (சைவம், கௌமாரம்)

பாடல்பெற்ற கபாலீச்சுரரைப் போற்றும் வண்ணம் ஒன்றும், இக் கோயிலில் எழுந்தருளியுள்ள சிங்காரவேலரைப் போற்றுவது ஒன்றுமாக இத்தொகுப்பின் இரு வண்ணங்கள் இத் தலத்திற்குரியன.

தேவாரம் பெற்ற தொண்டைநாட்டுத் தலங்கள் முப்பத்திரண்டில் மயிலாப்பூர் இருபத்துநான்காவது ஆகும். திருக்கோயில் கபாலீச்சரம் என வழங்கப்பெறும். திருஞானசம்பந்தர் எலும்பைப் பூம்பாவையாக்கிய தலம். சம்பந்தரின் பதிகம் ஒன்று மட்டுமே ( 2-47) இத் தலத்திற்குரியது.

இத் தலத்தில் சிங்காரவேலர் ஆறுமுகப் பெருமானாகக் காட்சி வழங்குகிறார். இவர் இறைவியை வணங்கி வேல்பெற்ற தலம். இதனால்தான் சிங்காரவேலர் எனப்படுகிறார்.

மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இத் தலத்திற்குத் தலபுராணம் பாடத் தொடங்கினார். நம் தவக்குறைவால் அந்த அருமையான நூல் முற்றுப் பெறாததோடு இயற்றப்பெற்ற பகுதிகளும் இப்பொது கிடைக்காமல் மறைந்துவிட்டன. இப்போது மயிலைக்குத் தலபுராணங்கள் இரண்டு உள்ளன. கோவை, கலம்பகம், உலா, பிள்ளைத் தமிழ் , மாலைகள், அந்தாதிகள் என ஏராளமான சிற்றிலக்கியங்களைப் பெற்றுச் சிறந்துள்ளது இத் தலம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | கபாலீசுவரர், புன்னைவனநாதர். |
| இறைவி | - | கற்பகவல்லி |
| தல மரம் | - | புன்னை |
| தீர்த்தம் | - | சத்திகங்கை என்னும் கபாலிதீர்த்தம். வேத தீர்த்தம் |
| விநாயகர் | - | நடன விநாயகர், கூத்தாடும் பிள்ளையார். |

## 37. மன்னார்குடி (வைணவம்)

இராசமன்னார்குடி என வழங்கப்பெறும் இத் தலத்திற்கு வண்துவராபதி, தட்சிணத் துவாரகை எனவும் வேறு பெயர்கள் உண்டு. பெருமாளின் திருநாமம் - இராசகோபாலசாமி, செண்டலங்காரர், துவராபதிமன்னன்; தயார் செங்கமலவல்லி நாச்சியார். இத் தலத்தின் கருடகம்பம் சுமார் 17 மீட்டர் உயரம் உள்ளது. இது சிறந்த வேலைப்பாடமைந்த அழகிய படைப்பாகும்.

## 38. வில்லியனூர்

இது தொண்டைநாட்டில் முத்தாற்றின் கரையில் அமைந்துள்ள தலம். பிரமதேவர் வில்வவனம் உண்டாக்கிச் சிவலிங்கப் பிரதிட்டை செய்தமையால் வில்வவனம் எனப் பெயர் பெற்றது. இப் பெயர் வில்லவனம் என மாறி வில்லை என மருவிற்று, இப்போது வில்லியனூர் என வழங்கப்படுகிறது. ஆலயம் வில்வேச்சுரம் எனப் பெயர் பெற்றுள்ளது.

இறைவன் - காமேசுவரர், காமீசர், வைத்தியநாயகர்

இறைவி பெயர் - குயிலம்மை, கோகிலாம்பிகை

தல மரம் - வில்வம்

தீர்த்தம் - முத்தாறு, மௌத்திக நதி

வீரராகவ கவி என்பவரால் இயற்றப் பெற்றுள்ள தலபுராணம் தமிழ்த் தாத்தா அவர்களால் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. வேறு சிற்றிலக்கியங்களும் இருக்கலாம். தனிப்பாடல் திரட்டில் உள்ள,

பக்குவ மாகக் கவிநூறு செய்து பரிசுபெற
முக்கர ணம்மெதிர் பல்காலும் போட்டு முயன்றிடினும்
அக்கட போஎனும் லோபரைப் பாடி அலுத்துவந்த
குக்கலை ஆண்வருள் வில்வ வனத்துக் குயிலம்மையே

என்னும் பிரசித்தமான கட்டளைக்கலித்துறை இந்தத் தலத்து இறைவியைப் போற்றுவதே யாகும்.



# பாடினோர் வரலாறு

## 1. அந்தகக்கவி வீரராகவ முதலியார்

இவ் வண்ணப்பெருந்திரட்டின் ஈழத்து ராசா வண்ணத்தை (3) இயற்றியவர். இவர் காஞ்சியையடுத்த பொன்விளைந்த களத்தூருக்கு அருகிலுள்ள பூதூரைச் சேர்ந்தவர். தந்தையார் பெயர் வடுகநாத முதலியார். இவர் பிறவிக்குருடர். கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியார் மரபில் தோன்றி அப்பெயரே பெற்றிருந்த வேறொரு கச்சியப்ப சிவாசாரியார்பால் கல்வி கற்றார். இவர் 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்.

திருக்கழுக்குன்றப் புராணம், கழுக்குன்ற மாலை, சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ். சேயூர்க் கலம்பகம், திருவாரூர் உலா, திருக்கீழ்வேளூர் உலா, கயத்தாற்றரசன் உலா, சந்திரவாணன் கோவை ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். இவர் பாடிய பல சீட்டுக்கவிகளும் தனிப்பாடல்களும் கிடைக்கின்றன.

இவருடைய திருக்கீழ்வேளூர் உலாவைத் தமிழக அரசு தொல்பொருள்துறைவழிப் பதிப்பித்த பதிப்பாசிரியர் நூலாசிரியர் வரலாற்றில் இவர் கயிலைப்புராணம் என ஒன்றை இயற்றியுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். (பக்.6) தமிழ் நாவலர் சரிதையின் 257 ஆம் பாடலாக அமைந்துள்ள இப்புலவரின் சீட்டுக்கவி ஒன்றில், ''நாம் வேதசயிலப் புராணத்தை இத்தனைநாள் இருந்து ஓதினோம்'' என வருகிறது. சயிலம் என்னும் அச்சு வடிவைக் கயிலை எனக் கொண்டு கயிலைப்பபுராணம் எனத் தாமே படைத்துவிட்டார் போலும். வேதசயிலம் என்பது திருக்கழுக்குன்றத்தின் பல பெயர்களுள் ஒன்று. இங்கு கூறப்படுவது அத்தலபுராணமே. இந்தக் கயிலைப்புராணம் சிறப்பதிகாரம், திருப்பெருந்துறைத் தேவாரம், மாவிந்த புராணம் ஆகியவற்றின் வரிசையில் இடம்பெறத் தக்கதாகும்.

இந்த ஈழத்து ராசா வண்ணத்தைக் கேட்டு மகிழ்ந்த அரசன்

'' விரகன் முத்தமிழ்க் கவிவீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெலாம்
உரகனும் வாணனும் ஒப்பத் தோன்றினால்
சிரகர கம்பிதம் செய்ய லாகுமே'' (தமிழ்நாவலர் சரிதை 248)

எனப் பாராட்டி யானைக் கன்றும் வளநாடும் பரிசிலாக வழங்கினார் என்பர். கவிஞர் இறந்ததைக் கேள்வியுற்ற கயத்தாற்று மன்னன்.

"இன்னமுதப் பாமாரி இவ்வுலகத் தில்பொழிந்து
பொன்னுலகில் பெய்யப் புகுந்ததால் - மன்னும்
புவிவீர ராகமன்னர் பொன்முடிமேல் சூட்டும்
கவிவீர ராகவமே கம்".
தோற்றா தொளித்திருந்த தூலக் கவிகள்எல்லாம்
மேற்றா ரகையின் விளங்கியவே - ஏற்றாலும்
கன்னாவ தாரன் கவிவீர ராகவனாம்
பொன்னாரும் செங்கதிரோன் போய்" (தமிழ்நாவலர் சரிதை 262,270)

எனக் கையறுநிலை பாடி வருந்தினான். இவ்வாறு அந்தகக்கவி வீரராகவ முதலியார் புவி மன்னர்களாலும் போற்றிப் பாடப்பெற்ற கவிமன்னராகத் திகழ்ந்தார்.

## 2. அருணாசலத் தொண்டைமான் - திருநெல்வேலி

இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள தண்டபாணி சுவாமிகள் வண்ணத்தின் (92) ஆசிரியர் இவர். தந்தையார் பெயர் திருநெல்வேலி ஒளிமுத்துத் தொண்டைமான். 19ஆம் நூற்றாண்டினர். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் மாணவர், இவருடைய தீட்சாநாமம் சரவணதாசர் என்பது ஆகும். சிதம்பரத் தொண்டைமான் என்றும் இவர் அழைக்கப் பெற்றார். வேங்கடம்முதல் குமாரிவரை என்னும் கோயிற்கலை விளக்க நூல் வரிசையாலும், தரமான கம்பர் விழாப் பட்டிமன்றங்களாலும் பெரும்புகழ் பெற்று விளங்கியவரும், தமிழகத்தில் பல மாவட்டங்களில் துணைத் தலைவராகப் பணியாற்றியவருமான திரு தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் அவர்களின் பாட்டனார் இவர். இவருடைய முழுமையான வரலாற்றை அறிய முடியவில்லை. வண்ணச்சரபர் தன் சுயசரிதையாகிய குருபரதத்துவ நூலின் திருமலைச் சருக்கத்தில் இவரைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அது வருமாறு:-

வண்ணச்சரபம் சுவாமிகள் முருகப் பெருமான் தமக்கு நேரில் காட்சியளிக்காததால் திருமலை என்னும் குன்றிலிருந்து உருள முடிவுசெய்தார். அப்படிச் செல்லும்போது இந்தத் தொண்டைமானும் தடுத்தும் நிற்காமல் உடன் சென்றார். தன் குருநாதருக்கு ஏதாவது தீங்கு

நேர்ந்துவிட்டால் தானும் இறந்து விடுவது என்ற உறுதியோடு சென்றார், சுவாமிகள் மலையிலிருந்து உருண்டும் இறையருளால் பெரிய தீமை ஒன்றும் விளையவில்லை. தொண்டைமான் சுவாமிகளின் காயங்களைத் துடைத்துத் திருநீறு பூசிக் கட்டுப் போட்டார். பிறகு அவரோடு செங்கோட்டை சென்றார். அதன் பிறகு இருவரும் பிரிந்தனர் போலும்.

சில நாட்களுக்குப் பிறகு அருணாசலத் தொண்டைமான் மிகக் தீவிரமாக வீரவாகு தேவரை உபாசித்து வந்ததாகவும், பயனொன்றும் கிட்டாமல், நோய்வாய்ப்பட்டு இறந்துவிட்டார் என்றும் கேள்விப்பட்டுச் சுவாமிகள் மிக வருந்தினார். குருபரதத்துவப் பாடல்கள் வருமாறு.

"வெற்பினுக்கென் னுடன்வந்து மீண்டசர வணதாசன்
கற்பொருதோள் முதல்வீரன் கழல்துணையே மிகநாடிப்
பற்பலநாள் உபாசித்துப் பயனொன்றும் அடையாமல்
அற்பநெறி யினர்தாமும் அவமதிக்கப் பிணிஎய்தி,

அம்மலையில் நடந்ததெண்ணி அழுதழுது மெலிவாகிக்
கைம்மலையீர்த் தொழுகுபுனற் கவின்பொருநை வடகரையில்
தம்மவர்கள் கொண்டுய்ப்பச் சமாதிஉற்றான்; அவன்முன்போல்
இம்மணிடை வந்துமுத்தி எய்தலும்என் இச்சையதே"

( திருமலைச் சருக்கம் 32,33)

அருணாசலத் தொண்டைமான் இவ்வண்ணத்தைத் தவிர நெல்லைப் பள்ளி என்னும் சிற்றிலக்கியத்தையும் படைத்துள்ளார்.

## 3. அழகியகூத்தர், செப்பறை

இத் திரட்டின் செப்பறை அக்கினீசுவரர் வண்ணம் (68) இவரால் இயற்றப் பெற்றதாகும். இந்த வண்ணம் எழுதப் பெற்றுள்ள ஓலைச்சுவடியில் திரு அக்கினீசுவர சுவாமிபேரில் செப்பறை அருணாசலக் குருக்களய்யரவர்கள் குமாரர் அழகிய நடராச மூர்த்தி அடிமை அழகியகூத்தர் பாடின வண்ணம் முற்றும் என ஈற்றுக் குறிப்பு உள்ளது. இதனால் இவர் ஆதிசைவர் என்பதும். தந்தையார் பெயர் அருணாசலக் குருக்கள் என்பதும், இவர் நடராசப் பெருமானிடம் பேரீடுபாடு கொண்டவர் என்பதும் விளங்குகின்றன.

அறிஞர் மு.அருணாசலம் அவர்கள் தம் 14-ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றின் 176 ஆம் பக்கத்தில் 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த அழகியகூத்த தேசிகர் என்பவர் செப்பறை உலா, கனகசபை நாதன் உலா என்ற பிரபந்தங்களும் பிறவும் பாடினார் எனவும் அதே நூல் 421 ஆம் பக்கத்தில் 17 ஆம் நூற்றாண்டில் இம் மரபினரான ஒரு தேசிகர் இரு உலாப் பிரபந்தங்கள் பாடினார் (செப்பறை கனகசபைநாதன் உலா 1953,செப்பறை உலா 1958 புன்னைவனநாத முதலியார் பதிப்புப் பார்க்க) எனவும் எழுதியுள்ளார். இக் கூற்றுக்கள் தாமே ஒன்றையொன்று மறுத்துவிடுகின்றன.

மேலே கூறப்பெற்ற கனகசபை நாதன் உலாவைத் தஞ்சைச் சரசுவதிமகால் நூல்நிலையம் நாகைக் கனகசபைநாதன் உலா என்னும் பெயரில் வெளியிட்டுள்ளது. இலக்கிய வரலாற்றாசிரியர்கள் அம்மையப்பர் என்கின்றனர். 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த அழகியகூத்த தேசிகர் இவ்வண்ணத்தின் ஆசிரியராகலாம்; அவர் செப்பறை மடத்தலைவராகவும் இருந்திருக்கக் கூடும். தெளிவான வரலாறு புலப்படவில்லை.

## 4. இரட்டைப் புலவர்

இதில் 47 ஆவது ஆசிய காஞ்சி ஏகாம்பரர் வண்ணம் இவர்களால் பாடப் பெற்றதாகும். இத் திரட்டில் காலத்தால் மிகப் பழைய வண்ணம் இதுவே. இரட்டைப் புலவர்கள் இராசநாராயணச் சம்புவரையன் காலத்தில் (1331 -1383) வாழ்ந்தவர்கள். சோழமண்டல சதகத்தின் 58 ஆம் விருத்தம் இலந்துறை என்னும் ஊரை இவருடையது என்கிறது. இது கும்பகோணத்தையடுத்த திருநாகேச்சுரத்திற்குத் தெற்கில் உள்ளது.

இவர்கள் மாமன் மருகன் என்பதும், ஒருவர் முடவர் மற்றவர் குருடர் என்பதும், பெயர் முதுசூரியன், இளஞ்சூரியன் என்பதும் போன்ற பற்பல செவிவழிச் செய்திகளை உறுதிப்படுத்தப் போதிய சான்றுகள் இல்லை. 14 ஆம் நூற்றாண்டில் பெரும்புகழுடன் வாழந்த இணைபிரியாப் புவலர்கள் இவர்கள் என்பதும் கண்பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள் எனப் போற்றப் பெற்றவர்கள் என்பதும் மட்டுமே உறுதி.

தில்லைக் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம், காஞ்சி ஏகாம்பரநாதர் உலா ஆகிய சிற்றிலக்கியங்கள், பல தனிப்பாடல்கள், அம்மானைகள் ஆகியன இவர்களால் இயற்றப் பெற்றனவாகும்.

## 5. இரண்டாம் சர்க்கரைப் புலவர்

இத் திரட்டில் இடம்பெற்றுள்ள இரகுநாதத் தொண்டைமான் வண்ணம்(38) இவர் வாக்காகும். சேதுநாட்டின் கண்ணங்குடிச் சேகரத்துள்ள சிறுகம்பையூரைச் சேர்ந்த நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் இவர் பாட்டனார். இவர் தந்தையார் பெயர் சீனிப்புலவர். பாட்டனாரிடமிருந்து பிரித்தறியவே இவருக்கு இரண்டாம் என்னும் அடை சேர்க்கப் பெறுகிறது. சில இடங்களில் சின்னச் சர்க்கரைப் புலவர் எனவும் குறிக்கப் பெறுகிறார். திருவாவடுதுறைத் திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம் பாடிய சீனிப்புலவர் இவருடைய மைந்தரே.

மிழலைச் சதகம், மண்டலக்கோட்டை வண்டுவனப் பெருமாள் ஊசல், திருவாடானை ஆதிரத்னேசுவரன் சித்திரகவி மஞ்சரி, திருப்பத்தூர் வைரவர் அலங்காரம், திருப்புனவாயிற் பள்ளு, தட்சிணாமூர்த்தி மும்மணிக்கோவை, தாண்டவராயப் பிள்ளை கோவை.அரசர்குளம் வணங்காமுடியார் வண்ணம், காலசம்ஹார மூர்த்தி வண்ணம் ஆகிய பல்வகை நூல்களை இவர் இயற்றியிருக்கிறார். புதுக்கோட்டை இராகுநாதத் தொண்டைமான் மீது (1730 - 1769) இந்த வண்ணத்தோடு நட்சத்திரமாலை என ஓர் இலக்கியமும் படைத்திருப்பதாக தெரிகிறது.

பிரதாபசிம்மர் தஞ்சையை ஆண்ட காலத்தில் (1739 - 1763) இப்புலவர் துளுவ வேளாளர்களைச் சிறப்பித்து மிழலைச் சதகம் பாடினார். இவருக்கு அவ்வேந்தர் மகிமைதந்தார் என்பர். இராமநாதபுரம் சிவகங்கை மன்னர்களும் இவரை ஆதரித்தனர்.

## 6. கந்தசாமி சுவாமிகள், சிரவை

இத் தொகுப்பின் 42 ஆவதாகிய முருகதாச குருநாதர் வண்ணம் இவரால் இயற்றப்பெற்றதாகும். கோவையையடுத்த சிரவையாதீனத்தின் இரண்டாவது தலைவராகிய இச் சுவாமிகள் சிரவணம்பட்டி என்னும் சிற்றூரில் 18.04.1982 அன்று தோன்றினார். பெற்றோர் பெயர் :- வெங்கடசாமி கவுண்டர், குட்டியம்மாள்.

கந்தசாமி சுவாமிகள் 5ஆம் வகுப்புவரை உள்ளூர்ப் பள்ளியில் படித்தார். பிறகு கௌமார மடாலயத்தில் ( இன்றைய சிரவையாதீனம்) திருப்பணி செய்து கொண்டே தாமே படித்து வந்தார். தமிழ், மலையாளம், வடமொழி ஆகிய மூன்றிலும் நல்ல புலமை பெற்றார். 29.01.1923 அன்று மடாலயத்தன் இரண்டாவது தலைவராக அருளாட்சி ஏற்றார்.

வடமொழியில் சந்திரதத்தர் என்பவரால் இயற்றப்பெற்றுள்ள பக்தமாலா என்னும் பெருங்காப்பியத்தை - மலையாள மொழிபெயர்ப்பையும் துணையாகக் கொண்டு -பக்த மான்மியம் என்னும் பெயரில் 7500 கவிகளால் பாடி முடித்தார்.இதில் 103 வைணவ அடியார்களின் வரலாறு கூறப்பெற்றுள்ளது. இதைத் தவிர 3 தலபுராணங்கள், 6 பிள்ளைத்தமிழ்கள், 7 யமக அந்தாதிகள், ஐந்திணைக் கோவை கலம்பகம், சிலேடை வெண்பா வகைக்கு ஒவ்வொன்று, பல மாலைகள், பதிகங்கள் என ஏறத்தாழ 15,000 பாடல்கள் இயற்றியுள்ளர். இவர் கவிதைகள் சற்றுக் கடினநடை உடையனவாகவும், பொருட்செறிவும் சாத்திரக் கருத்துக்களும் மிக்கனவாகவும் விளங்குகின்றன. இவரியற்றிய நூல்களில் மிகப் பெரும்பாலானவை அச்சாகியுள்ளன.

சிரவைக் கந்தசாமி சுவாமிகள் இந்த அகப்பொருள் வண்ணத்தைத் தவிர, தண்டபாணி சுவாமிகளின் பூர்வ அவதாரக் குறிப்பு வண்ணம், தண்டபாணி சுவாமிகள் சரித்திரசார வண்ணம், சத்துருசங்கார விஞ்ஞாபனம் என்னும் சாத்தேய வண்ணம், குருநாதன் வண்ணம் என நான்கு எண்கலை வண்ணங்களை இயற்றியுள்ளார். அவை அகப்பொருள் பற்றியவை அல்லவாதலின் இந்த வண்ணப்பெருந்திரட்டில் இடம்பெறவில்லை.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் 10.12.1948 அன்று திருவருட் பேறெய்தினார். இவரைப் போற்றுமுகத்தான் பிள்ளைத்தமிழ், தாலாட்டு, வாழ்க்கை வரலாற்று வண்ணம் முதலிய பனுவல்கள் தோன்றியுள்ளன.

## 7. கந்தசாமிப் புலவர், திருப்பூவணம்

இவரால் இயற்றப்பெற்ற திருப்பூவணம் புஷ்பவனநாதர் வண்ணம் இப் பெருந்திரட்டில் 62 ஆம் பிரபந்தமாக இடம் பெற்றுள்ளது. திருவிளையாடற் புராணம் இரசவாதம் செய்த படலத்தில் கூறப்பெற்றுள்ள கணிகையாகிய பொன்னனையாளின் மரபில், திருப்பூவணத்தில்,

17 ஆம் நூற்றாண்டில் தோன்றியவர். இவர் எனத் தெரிகிறது. இவரால் இயற்றப்பெற்றுள்ள திருப்பூவணநாதர் உலாவின் சிறப்புப் பாயிரத்தில்,

"பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரன்நேர் கந்தசாமி"

எனக் கூறப்பட்டிருப்பதோடு இவரே அவ்வுலாவில் எம் பொன்னையாள் (கண்ணி 52,53) என உரிமையோடு கூறியிருத்தலானும் இது உறுதியாகிறது. இவர் அந்த உலாவில் சிவகங்கை அரசரை,

"மன்போசன் முத்து வடுகநா தேந்த்ரன் அருள்
பொன்போலும் ஆடை புனைந்தருளி"

எனப் புகழ்ந்துள்ளார். இப் புலவர் கீழைக்கரைச் சீதக்காதியால் சிறப்பாக ஆதரிக்கப் பெற்றவர்.இச் செய்தி

"சந்தமுத் தமிழ்தேறும் கல்வித்
தலைவர் மகிழ்உமறுப் புலவருடன்
செந்தமிழ்க் கந்தசாமிப் புலவனும்
சீராட் டெனத்தமிழ் பாராட்டவே" ( கண்ணி 185 )

என்னும் சீதக்காதி நொண்டி நாடகக் கண்ணியால் புலனாகிறது.

திருப்பூவணம் கந்தசாமிப் புலவரால் இயற்றப்பெற்றுள்ள நூல்கள் திரு ஆப்பனூர்ப் புராணம்,திருப்புனவாயிற் புராணம், மூர்த்தி வகுப்பு, தீர்த்த வகுப்பு, உலா என்பன ஆகும்.

## 8. கருணையானந்த சுவாமிகள்

இத் திரட்டின் ஞானகிரி ஈசன் வண்ணம் (21) எழுதப்பெற்றுள்ள சுவடியில் ஈற்றுக் குறிப்பாக, கருணையானந்த சுவாமியார் அருளிச்செய்த ஞானகிரியீசர் வண்ணம் முற்றிற்று என வரையப் பெற்றுள்ளது. இவரைப் பற்றிய பிறசெய்திகள் எதுவும் புலனாகவில்லை.

## 9. கருப்பையாப் பாவலர், கொட்டாம்பட்டி

இத் திரட்டில் இடம்பெற்றுள்ள 33,57 ஆகிய இரண்டு வண்ணங்களும் இவருடையனவாகும். இப் புலவர் மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் கொட்டாம்பட்டியில் 1864 ஆம் ஆண்டு யாதவர் குலத்தில் மருதக் கொத்தனார் என்பவருக்கு மகனாகப் பிறந்தார். முறையூர் பழ.சி.சண்முகம் செட்டியார் அவர்களின் சமுகப் புலவராக விளங்கினார். இவ் வள்ளலின் முயற்சியால் 1908 ஆம் ஆண்டு வெளியான தனிச்செய்யுட் சிந்தாமணி பெரும்பாலும் இவருடைய பணியே எனலாம். பாவலரவர்கள் 1907 ஆம் ஆண்டு இயற்கை எய்தினார்.

பாவலர் இயற்றிய பனுவல்களாவன : - திருப்பரங்கிரி மலை, திருப்போரூராண்டவர் திரிபந்தாதி, திருக்கோட்டியூர்த் திரிபந்தாதி, இலக்குமியந்தாதி, திருமெய்யம் ஓரெழுத்தந்தாதி, மருதூர் நாகநாதர் மாலை, திருமயிலைக் கற்பகாம்பிகை மாலை,

திருக்கோட்டாற்றுக் கலம்பகம், திருமயிலைச் செந்தில்வேல் முதலியார் கோவை, முறையூர் மீனாட்சி சுந்தரேசுவரர் பிரபந்தத் திரட்டு முதலின. தமிழில் வண்ணப் பாடல்கள் குறிப்பிடும் நாகநாதர் வண்ணம் (பக்.195) இவருடையதாக இருக்கலாம். இவருடைய தனிப்பாடல்கள் நிறையக் கிடைக்கின்றன. அவற்றுள் கீழக்கண்ட வெண்பா பலரும் அறிந்தது:-

" குச்சிலிய மாதர் குயமும் குவலயத்தோர்
மெச்சுதமிழ் மாதர் வியன்முலையும் - சிச்சீ
தெலுங்க மடமாதர் சிங்காரக் கொங்கைக்
கலிங்கம்என வேசொல் கவி."

## 10. கன்றாப்புடையார்.

இத்தொகுப்பில் 86 ஆவதாகிய தில்லைச் சிற்றம்பலவாணர் வண்ணத்தின் ஆசிரியர் இவர். சோழமண்டல சதகத்தின் 74 ஆவது விருத்தம்.

"பொன்றாப் புகழோன் தில்லைவண்ணம்
புகன்றோன் வெண்பா ஒன்பதுபொன்
நன்றாற் றியபொன் நூறுவண்ணம்
நாட்டி விருது நாட்டியகோன்
கன்றாப் புடையான் பேருடையான்
கல்வி உடையான் கனவாழ்வு
மன்றாற் பொலியும் திருவீதி
வகித்தார் சோழ மண்டலமே

எனக் கூறுகிறது. இச் சதகத்தைப் பாடப்பட்டோர் வரலாற்றோடு பதிப்பித்த பதிப்பாசிரியர் இச் செய்யுளுக்குச் சற்றும் தொடர்பற்றதும். சேரமான் பெருமாள் நாயனாரால் இயற்றப் பெற்றதுமாகிய பொன்வண்ணத் தந்தாதியை இங்கே குறிப்பிடுகிறார். வண்ணம் என்னும் இலக்கியவகையை உணராததால் நேர்ந்த குழப்பம் இது.

இக் கன்றாப்புடையார் பெரும்புகழ் வாய்ந்தவர், கல்வியிற் சிறந்தவர், ஏதோ வண்ணப்போட்டியில் வென்று பெருந்தொகையைப் பரிசாகப் பெற்றவர் என்பதை இவ் விருத்தத்தால் அறிகிறோம். விரிவான செய்திகள் தெளிவாக விளங்கவில்லை.

பாண்டியநாட்டில் ஊற்றுமலை ஜமீன்தார் மருதப்பத் தேவரின் அவைக்களப் புலவராகக் கன்றாப்பூர்க் கவிராயர் என ஒருவர் இருந்ததாகவும், அவர் வசைவிடு தூது, திருவருட் பாமாலை, ஜமீன்தார் மீது சில பிரபந்தங்கள் என்பனவற்றை இயற்றியிருப்பதாகவும், அவர் பரம்பரையோர் வீரகேரளம்புதூரில் வசித்துவந்ததாகவும் அறிகிறோம். இந்நூல்களையும் நோக்கி, காலம் முதலியவற்றைத் தெளிந்து ஆராய்ந்து வரலாறு அறியப்பெற வேண்டும்.

கன்றாப்பூர் என்னும் ஊர் சோழ நாட்டில் நாட்டியத்தான்குடிக்கு அருகில் உள்ளது.

## 11. சண்முகம் பிள்ளை - மகாவித்வான். மயிலை

இவ் வண்ணப் பெருந்திரட்டின் திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் வண்ணம் (25) இவரால் இயற்றப் பெற்றதாகும். இவர் 1858 ஆம் ஆண்டு சென்னை குயப்பேட்டையில் பிறந்தார். புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார், கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளை ஆகிய இருவரிடமும் கல்வி கற்றார். இவருடைய மாணவப் பருவத்து நிகழ்ச்சி ஒன்று சுவையானது.

இவர் கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளையிடம் கம்பராமாயணப் பாடங் கேட்க விழைந்தார். அவ்வாசிரியர் வீர வைணவர். அவரிடம் பாடம் கேட்பதற்காகச் சண்முகம் பிள்ளை தம் பெயரையும் நெற்றிக் குறியையும் வைணவ நெறிக்கேற்ப மாற்றிக்கொண்டு பொய் கூறிப் பாடம் பயின்று வந்தார். ஆயினும் ஒருநாள் இராசகோபாலர் செய்த சிவநிந்தையைக் கேட்டுப் பொறுக்கமுடியாமல் தம் உண்மைநிலையை வெளிப்படுத்தி வெளியேறி விட்டார். பிறகு அவர் இவரைத் தம் மாணவராக ஏற்றுக்கொள்ளவில்லை.

இவருக்கு மதுரைத் தமிழச்சங்கம் மகாவித்துவான் எனப் பட்டமளித்துப் பாராட்டியது. இவர் தொண்டைமண்டல துளுவவேளாளர் பள்ளியிலும், திருமயிலைச் சாந்தோம் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணியாற்றினார். மயிலை சீனி. கோவிந்தராசனார், கா. நமச்சிவாய முதலியார் ஆகியோர் இவர் மாணவர்களில் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

கா. நமச்சிவாய முதலியார் இவரிடம் 12 ஆண்டுகள் பாடம் கேட்டார். சண்முகம் பிள்ளை அவர்களுக்கு மக்கள் இல்லாததால் நமச்சிவாயரே இவருக்கு ஈமக்கடன்களைக் குறைவறச் செய்ததோடு இவருடைய மனைவியைத் தம் தாய்போலவே போற்றிப் பேணிவந்தார். சண்முகம் பிள்ளை அவர்கள் 23.1.1905 அன்று இறைவன் திருவடியடைந்தார்.

தமிழ் நூல்களை ஓலைச்சுவடிகளிலிருந்து அச்சேற்றிய தமிழ்த தொண்டர்களுள் இவரும் ஒருவர். மணிமேகலை மூலத்தை முதன் முதலாக 1891 இலேயே - தமிழ்த் தாத்தாவின் பதிப்புக்கு ஏழு ஆண்டுகள் முன்பாக- பதிப்பித்தார். மச்சபுராண மூலம் (1900), நன்னூல்விருத்தி, தஞ்சைவாணன் கோவை சொக்கப்ப நாவலர் உரை, சிவதருமோத்திர உரை, திருமயிலைக் கலம்பகம், திருமயிலை உலா ஆகிய நூல்களை அச்சில் பதிப்பித்தார். கம்பராமாயணம், திருக்கயிலாய ஞானஉலா, பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, சுந்தரநுபூதி, சிவவாக்கியர் பாடல் முதலியவற்றிற்கு உரை கண்டுள்ளார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் : சவுந்தரநாயகி மாலை, இராமநாதபுரம் இராசராசேசுவரி கலிவிண்ணப்ப மாலை, வெள்ளைக் கிழத்தி மாலை, வட திருமுல்லைவாயில் பதிற்றுப்பத்தந்தாதி, திருமயிலைக் கந்தகோட்டமாலை, சென்னை வல்லபவிநாயகர் பதிற்றுப்பத்தந்தாதி, திருமயிலைக் கற்பகவல்லி மாலை, திருவொற்றியூர் வடிவுடைவல்லி மாலை, திருமயிலைக் கபாலீசர் கலிவிண்ணப்ப மாலை, திருக்குருகூர்ச் சித்தமான்மியம், வடதிருமுல்லைவாயில் புராணம், பல பஞ்சரத்தினங்கள், கீர்த்தனங்கள் முதலியன. இவர் காலத்தில் வெளியான பல அரிய நூல்களுக்குச் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளார். இவர் மாதவச் சிவஞான யோகிகள்பால் பேரன்பு கொண்ட பெரியார் என்பது சிறப்பாகக்

குறிப்பிடத்தக்கது. டாக்டர் உ.வே.சாமிநாத அய்யரவர்களுக்கு மணிமேகலை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, புறநானூறு ஆகிய சுவடிகளை மயிலை சண்முகம் பிள்ளையவர்கள் வழங்கியுள்ளார் என்பதை நோக்கும்போது பண்டை இலக்கியங்களுக்கு நல்ல பதிப்பு வருவதற்கு முன்பே இவர் அந்நூல்களின் அறிமுகம் பெற்றிருந்தார் என்பது புலனாகிறது.

## 12. சபாபதி முதலியார், அஷ்டாவதானம், புரசை

இத் தொகுப்பில் 1, 19, 31, 34, 78, 81 ஆக ஆறு வண்ணங்ள் இவரால் இயற்றப்பெற்றன ஆகும். இவர் 19-ஆம் நூற்றாண்டினர். பெற்றோர் : புரசைப்பாக்கம் இரிசப்ப முதலியார், முனியாத்தை அம்மாள். ஆசிரியர்கள் : காஞ்சிபுரம் மகாவித்வான் சபாபதி முதலியார், தாண்டவராய முதலியார், இயற்றமிழாசிரியர் விசாகப்பெருமாளையர், மழவை மகாலிங்கையர், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், புதுவை நயனப்ப முதலியார் ஆகியோர். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளிடம் வண்ண இலக்கணமும், புதுவை அச்சுத உபாத்தியாயரிடம் அவதானக் கலையம் பயின்றார். இவருடைய மாணவர்களுள் மயிலை மகாவித்வான் சண்முகம் பிள்ளை, வெண்பாப்புலி வேலுச்சாமிக் கவிராயர், பள்ளிகொண்டான் பிள்ளை ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள ஆவர்.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்: திருப்போரூர்ப் புராணம், கலம்பகம், யமகவந்தாதி, திரிபந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, சதகம், குறவஞ்சி, வெண்பாமாலை, இருசொல்யமக மாலை, நான்மணிமாலை, சிதம்பர சுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி, காஞ்சிபுரம் வெண்பாமாலை, குமரகோட்டக் கலம்பகம், சென்னைக் கந்தசாமி கோயில் புராணம், வெண்பாமாலை, திருவொற்றியூர் வடிவுடையம்மை பதிற்றுப் பத்தந்தாதி, தோத்திரச் சந்தமாலை, திருத்தணிகை இரட்டைச்சொல் யமகமாலை, அருணை வெண்பா மாலை, பழனி வெண்பா மாலை, மயிலை வெண்பா மாலை முதலியன.

இவரால் உரை எழுதப் பெற்ற நூல்கள்: கந்தரநுபூதி விருத்தி, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், திருத்தணிகை யாற்றுப்படை.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் சென்னைக் கந்தசாமி பிள்ளைத் தமிழை அரங்கேற்றும் முதல்நாள் தம் ஆசிரியர் காஞ்சிபுரம் மகாவித்வான் சபாபதி முதலியார் அவர்களுடன் சென்றிருந்தார். (அன்றைய நிகழ்ச்சியின் விரிவை அடுத்துள்ள அவர் வரலாற்றில் காணலாம்.) மறுநாள்முதல் தனித்துப் பங்கேற்றார். வண்ணச்சரபர் தம் சுயசரிதையாகிய குருபரதத்துவத்தில் இவரை, "கற்ற தன் மாணாக்கர்களில் தலைவனேயாம் புரசைக்கவிஞன்" "விற்றலைமைக் காண்டீபன் என விளங்கினான்," "சத்தி அணி கரக்குமரன் திருவருளால் அட்டாவதானம் செய்யும் புத்தியினன்" (சென்னைச் சருக்கம் 28, 29) எனப் பாராட்டியுள்ளார். மேலும் அச் சுவாமிகள் இப்புலவர் பெருமானை,

சந்தமலி அட்டாவ தானச் சபாபதிக்கிங்
கெந்தச் சபாபதியும் ஈடில்லை - கந்தன்அருள்
பெற்றோன்; அறிவாற் பெரியோலைப் பேணும்நலம்
உற்றோன்; முழுப்புலமை யோன் (தனிப்பாடல்)

என்றும் புகழ்ந்துள்ளார்.

## 13. சபாபதி முதலியார் – மகாவித்வான், காஞ்சிபுரம்

இத் தொகுப்பில் 75 ஆவதாகிய திருமயிலைக் கபாலீசுவர் வண்ணம் இவரால் இயற்றப் பெற்றதாகும். 1792 முதல் 1871 வரை வாழ்ந்த இவர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்தார். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், இராமலிங்க சுவாமிகள், மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆகியோர் இவர்தம் மாணவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஆவர். திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா, சைவ சமய விளக்க வினா விடை முதலிய நூல்களை இயற்றினார். பிரம்மோத்திர காண்டத்திற்குப் பொழிப்புரை கண்டார்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் சென்னைக் கந்தசாமி பிள்ளைத் தமிழை அரங்கேற்றியபோது முதல்நாள் இவர் தம் மாணவர் புரசை முதலியாரையும் அழைத்துக் கொண்டு சென்றிருந்தார். பிள்ளைத்தமிழ்ச் சப்பாணிப் பருவத்தின் பத்தாம் பாடலில் தன்னன தய்யன என்னும் குழிப்பில் சென்னையில் வைகினை என வருகிறது. மகாவித்வான் அவர்கள் வைகி என்னும் சொல் தய்யச் சந்தம் ஆகாது என மறுத்தார். சுவாமிகள் மெய்தளரும் மான் (திருப்புகழ் 1091), வைதிகப் பாட்டினர் (மீனாட்சி, பிள்ளைக், காப்பு.2 ) என்னும் ஆன்றோர் ஆட்சிகளைக் காட்டித் தம் பிரயோகம் சரியானதே என நிறுவினார். எனினும் மகாவித்வான் அவர்கள் மனநிறைவடைந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை. அடுத்த நாளிலிருந்து பிள்ளைத்தமிழ் அரங்கேற்றத்திற்குத் தாம் செல்லாமல் புரசைப் புலவரை மட்டும் அனுப்பி வைத்தார். இச்செய்தியை வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தன்வரலாறாகிய குருபரதத்துவத்தின் சென்னைச் சருக்கத்தில் விரிவாகக் கூறியுள்ளார். அதில் மகாவித்வான் அவர்களைச் சுவாமிகள்,

அன்னவனும் நல்லநிரு வாகிஎனச்
சபைஅறிய அறைந்தான் உண்மைத்
தன்னவிலும் கொடியதய்யச் சந்தத்தில்
வாதுசெய்த தகவின் மேன்மை
என்னகம்நன் கறியும்; அவன் எனைஅறிவான்;
அவன்எளியன் எனஎண் ணேன்மின்;
முன்னமர்செய பாரதத்தில் துரோணனையே
நிகரும்ஒரு முதியோன் தானே (26)

எனப் பாராட்டியுள்ளார்.

## 14. சிந்தாமணி பிள்ளை என்னும் பொன்னாயிரங் கவிராயர்

இந்த வண்ணப்பெருந்திரட்டின் 77, 82 ஆவது வண்ணங்கள் இவருடையனவாகும். 76 ஆவதாகிய செந்தில் ஆறுமுகேசர் வண்ணமும் இவரால் இயற்றப் பெற்றிருக்கலாம். இவர் பாண்டியநாட்டுத் திருச்சேறைக்குத் தலபுராணம், கலம்பகம், உலா, பதிற்றுப்பத்தந்தாதி பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிறசெய்திகளை அறியக்கூடவில்லை.

## 15. சிற்றம்பலக் கவிராயர், மிதிலைப்பட்டி

இந்தப் பெருந்திரட்டின் ஒன்பதாவதாகிய மூவரையன் வண்ணம் இவரால் இயற்றப் பெற்றதாகும். 61 ஆவதாக அமைந்துள்ள கொடுங்குன்றம் மங்கைபாகர் வண்ணமும், திரு. சௌந்தரபாண்டியன் அவர்கள் கூறும் திருக்கோளநாதர் வண்ணமும் (தமிழில் வண்ணப் பாடல்கள் பக். 194) இவர் வாக்காக இருக்கலாம்.

சிற்றம்பலக்கவிராயரின் பூர்வீகம் தொண்டை நாட்டு மல்லை என்னும் ஊராகும். இவருடைய தந்தையாரின் பெயர் தில்லையாடியா பிள்ளை. தில்லையாடியா பிள்ளை பாலைவனம் ஜமீன்தார் வணங்காமுடிப் பண்டாரத்தாரின் தானாபதியாக இருந்தார். சிற்றம்பலக் கவிராயர் இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகரின் மைந்தராகிய சதாசிவ தேசிகரின் மாணவர். 17 ஆம் நூற்றாண்டு.

இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்: - ஆண்டவராயன் கோவை; மருங்காபுரி வீரப்பூச்சிய நாயகர் கோவை, பிள்ளைத்தமிழ்; சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத் தமிழ், உலா; பிரான்மலைத் தலபுராணம்; பெருந்துறை ஆன்மநாதர் யமகவந்தாதி; மூவரையன் விறலிவிடு தூது; ஆண்டவராயன் வண்ணம் முதலியன.

இவர் பல சிற்றரசர்களிடம் ஏராளமான நிலங்களைப் பரிசிலாப் பெற்று, பெரும் கொடையாளியாகவும் வாழ்ந்திருந்தார். இவருடைய மரபில் தோன்றிய குமாரசாமிக் கவிராயர் என்பவரால் இயற்றப் பெற்றுள்ள சுசீலவள்ளல் அம்மானை என்னும் நூலில் இவர் வரலாறு இடம் பெற்றுள்ளது. தளவாய் இரகுநாத சேதுபதி சிற்றம்பலக் கவிராயருக்கு இராசசிங்க மங்கலம் என்னும் கிராமத்தைப் பரிசிலாக வழங்கினார். இவர் அவ்வூரில் உள்ள ஏரியின் 48 மடைகளுள் ஒரு மடைப் பாய்ச்சல் நிலத்தை இராமநாத சுவாமிக்கும், மற்றொரு மடைப் பாய்ச்சல் நிலத்தை அந்தணர்களுக்கும் வழங்கி அதற்கறிகுறியாகக் கல்நாட்டி அங்கேயே வாழ்ந்திருந்தார். சேதுபதி சில காரணங்களால் இராசசிங்கமங்கலத்தைத் திரும்பப் பெற விரும்பினார். இவர் உடனே தான சாசனத்தைத் திரும்பக் கொடுத்துவிட்டார். சேதுபதி இதற்குப் பதிலாகக் கொற்றமங்கலம் முதலிய ஆறு கிராமங்களை அளித்தார். பிரான்மலையில் இவர் இறைவன் திருவடியடைந்தார். அங்குள்ள மங்கைபாகர் ஆலயத்தில் "சிற்றம்பலவன் சதா சேர்வை" எனக் கல்நாட்டப்பட்டது.

இக் கவிராயர் பரம்பரை வீட்டிற்கு 1891 ஆம் ஆண்டு தமிழ்த்தாத்தா அவர்கள் சென்றார். அப்போது அங்கிருந்தவரின் பெயர் அழகிய சிற்றம்பலக் கவிராயர். அதைப் பற்றி உ.வே.சா. அவர்களே கூறுகிறார்.

அவர் வீட்டிலுள்ள ஏட்டுச் சுவடிகளைப் பார்த்தேன். அவர் வீடு தமிழ்மகள் ஆலயமாகத் தோற்றியது. . . . அவர் வீட்டிலிருந்த சுவடிகள் எல்லாம் மிகவும் திருத்தமாக இருந்தன. . . . எனக்கு அந்த வீட்டை விட்டு வர மனம் இல்லை . . . மிதிலைப்பட்டிப் பிரதியை வைத்துக் கொண்டு பார்த்ததில் சிலப்பதிகாரம் பல இடங்களில் திருத்தமடைந்தது. பல இடங்களில் பாடல்களுக்குத் தலைப்புகள் இருந்தன. அந்தப் பிரதியை ஆராய ஆராய மிதிலைப்பட்டியின் சிறப்பு மேலும் மேலும் புலப்பட்டது. . . . மிதிலைப்பட்டிப் பிரயாணம் நேர்ந்திராவிட்டால் கலங்கியிருந்த என் மனத்தில் அமைதி தோன்றியிராது. அந்த நினைவினாலேதான் மிதிலைப்பட்டியைப் பற்றிப் பிற்காலத்தில் "தமிழ்நாட்டில் எவ்வளவோ புண்ணிய ஸ்தலங்கள் இருக்கின்றன. சிவஸ்தலங்களும் விஷ்ணுஸ்தலங்களும் சுப்பிரமணிய ஸ்தலங்களும் பல உள்ளன. அவற்றைப்போலத் தமிழ்த்தெய்வம் கோயில் கொண்டுள்ள ஸ்தலங்களுள் ஒன்றாகவே மிதிலைப்பட்டியை நான் கருதியிருக்கிறேன்" என்று எழுதினேன். (என் சரித்திரம், பக். 690 - 694)

இரண்டு நூற்றாண்டுகளுக்குமேல் தொடர்ந்த ஓர் அரிய புலமைப் பரம்பரைக்கும், தமிழ்த் தெய்வத்தின் கோயிலுக்கும் ஆதிகாரணமாக விளங்கும் வள்ளல் மகான் மிதிலைப்பட்டி சிற்றம்பலக் கவிராயர் அவர்களின் திருப்பெயரைக்கூட அறியாமல் நாமெல்லாம் நாமமது தமிழரெனக் கொண்டிங்கு வாழ்கின்றோம் ; வெல்க தமிழ்.

## 16. சுப்பராயர், இராமநாதபுரம்

இத் தொகுப்பின் இராமேச்சுரம் இராமநாதர் வண்ணத்தின் (80) ஆசிரியர் இவர். சுப்பராம வாத்தியார் எனவும் செந்நெல்குடி சாமிக்குட்டி அய்யர் எனவும் இவர் வழங்கப்படுவார். கன்னட அந்தணராகிய சுப்பராவ் அவர்கள் விஷ்ணு புராணத்தைத் தமிழிற் செய்ததோடு பல பிரபந்தங்களையும் இயற்றியுள்ளாராம். இன்னும் இவரைப் பற்றிய விரிந்த வரலாறுகள் அறிதற்கரியனவாக இருக்கின்றன.

## 17. சுப்பிரமணிய முனிவர், மதுரகவி, தொட்டிக்கலை

இத் திரட்டில் இவரால் இயற்றப்பெற்ற தொட்டிக்கலைக் கேசவப் பெருமாள் வண்ணம் (6), கலைசைச் சிதம்பரேசர் வண்ணம் (26) என்னும் இரண்டு பிரபந்தங்கள் இடம்பெற்றுள்ளன. இவர் சிதம்பரத்தையடுத்த காட்டுமன்னார் கோயிலில், கார்காத்த வேளாளர் மரபில், பூநொடையார் கோத்திரத்தில் பிறந்தவர். 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி. இவர் மாதவச் சிவஞான சுவாமிகளின் இறுதி நாட்களில் அவரிடம் பயின்றார். சுவாமிகள் பரிபூரணமானதும் (1786) தொட்டிக்கலைச் சிதம்பரேசர் கோயில் மண்டபத்தில் அவருடைய திருவுருவத்தை அமைத்து வழிபட்டு வந்தார். சுப்பிரமணிய முனிவர் திருவாவடுதுறை ஆதீனம் 13 ம் பட்டம் அம்பலவாண தேசிகர்பால் துறவறம் பெற்றவர்.

தொட்டிக்கலையில் இருந்த கேசவ முதலிார், வேதாசல முதலியார் என்னும் இருவரால் நன்கு ஆதரிக்கப்பெற்று இவர் பெரும்பாலும் அவ்வூரிலேயே தங்கி வந்தார். இவர் இருந்த மடம் சாமியார் மடம் எனப் பெயர் பெற்றிருந்தது.

இவரால் இயற்றப்பெற்ற பனுவல்கள்:- திருவாவடுதுறைக் கோவை, கலைசைக் கோவை, வடதிருமுல்லைவாயில் கொடியிடையம்மை பிள்ளைத்தமிழ், ஆயலூர் முருகன் பிள்ளைத்தமிழ், ஆவினன்குடிக் கைலாயநாதர் பதிற்றுப்பத்தந்தாதி கலைசைச் சிலேடை வெண்பா, கலைசைச் சந்நிதிமுறை, துறைசை அம்பலவாண தேசிகர் வண்ணம் முதலியன.

இவர் படைப்புக்களில் மிகப் பெரும்பாலானவை சைவச் சார்பினவே. இந்த வண்ணம் தொட்டிக்கலை வைணவ அன்பர்களின் வேண்டுகோட்கிணங்க இயற்றப் பெற்றிருக்கலாம். இவர் திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதி விஷயமாக அவ்வூர் அன்பர்கள் விரும்பியபடி தனிப்பாடலாக ஒரு யமகம் பாடியுள்ளார். அது வருமாறு:-

திருவல்லிக் கேணி வடிவந்
தனஞ்சொற்கட் சீர்ச்சிலம்ப
திருவல்லிக் கேணி யலருமுன்
னேயருள் செய்யவெழுந்
திருவல்லிக் கேணிபஞ் சொல்லிற்கண்
முத்தங்கள் சிந்துங்கண்டாய்
திருவல்லிக் கேணி மருவிய
சங்கத் திருக்கரனே

## 18. சேறைக் கவிராச பிள்ளை

இத் தொகுப்பில் உள்ள அண்ணாமலையார் வண்ணம் (30) இவருடையதாகும். இவருடைய விரிவான வரலாறு விளங்கவில்லை. எனினும் அந்தகக்கவி வீரராகவ முதலியார் தம் சேயூர் முருகன் பிள்ளைத் தமிழில்,

"கவிராசன் இப்பிரான் மிசைசெய்த திருஉலாக்
கவிவெள்ளை கற்றுருகலாம்" (அம்புலிப். 10)

என இவரால் இயற்றப்பெற்ற சேயூர் முருகன் உலாவைக் குறிப்பிடுவதால் இவர் அவருக்கு முற்பட்டவர் எனத் தெரிகிறது. இவர் கருணீக மரபினர் என்பதனை அவ்வுலாச் சிறப்புப் பாயிரத்தின், கருணேசன் சேறைக் கவிராசராசன் என்னும் பகுதியால் அறிகிறோம். திருக்காளத்தியில் இருந்த வேங்கடராச முதலியார் என்பவரால் ஆதரிக்கப்பெற்றவர். இவர் தன்னைப் பாண்டிய மன்னனுக்கு அறிமுகம் செய்து கொள்ளும்போது.

"தென்பார் ஆளும் அறிவிற் குறுமுனி
தெக்கிண கயிலையில்வாழ்
செங்குந் தக்குல வேங்கட ராயன்
திருவா சற்புலவன்;

என்பேர் வண்ணக் கட்சிய தன்றி
எதிர்த்தவர் மார்பாணி;
இந்தத் தேசப் புலவர்ம னத்துக்கு
இடிஎன வந்தேன்காண்'' (தமிழ்நாவலர் சரிதை 242)

என்கிறார். இப்பாடலின் பிற்பகுதியில் கூறப்பெறும் சீவலமாற பாண்டியன் கி.பி. 1563 - இல் முடிசூடியவன் என்பதால் இக்கவிஞரின் காலம் 16 - ஆம் நூற்றாண்டாகலாம் என்பர்.

சேறைக் கவிராச பிள்ளை இந்த அண்ணாமலையார் வண்ணத்தை அரங்கேற்றுவதற்குத் திருவண்ணாமலைக்கு ஆடம்பரமாகச் சென்றபோது அவ்வூரில் இருந்த எல்லப்ப நயினார் என்னும் புலவர் அஞ்சி ஒதுங்கி ஒளிந்து கொண்டதாகப் பரமேசுவரப் புலவரின் தனிப்பாடல் ஒன்று கூறுகிறது.

''கண்ணார் மதிக்கும் கவிராச
சிங்கம் கடந்துதிரு
அண்ணா மலையப்பர் மேல்வண்ணம்
பாடிமுத் தாலத்திகொண்டு
எண்ணா யிரமட வார்சூழப்
பல்லக்கில் ஏறிவந்தான்;
உண்ணா முலைஎல்லன் மூலைகள்
தோறும் ஒதுங்கினனே.'' (தமிழ்நாவலர் சரிதை 243)

திருக்காளத்திநாதர் உலா, சேயூர் முருகன் உலா, திருவாட்போக்கிநாதர் உலா, திருக்காளத்திநாதர் இட்டகாமிய மாலை ஆகியன இவர் படைத்த சிற்றிலக்கியங்களாகும்.

## 19. தண்டபாணி சுவாமிகள், வண்ணச்சரபம்

இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள 2, 17, 18, 20, 23, 24, 27, 29, 41, 44, 91 ஆகிய வண்ணங்கள் பதினொன்றும் இவர் வாக்காகும். இவற்றோடு புகழ்ந்து நிட்டூரம் சொற்று இரத்தல் என்னும் தோத்திர வண்ணத்தையும், சேதுபதி சமத்தானப் புலவர்களுக்குச் சமுத்தியாக இயற்றப்பெற்ற முதற்கலை ஒன்றையும் பாடியுள்ளார். இவை அனைத்தும் மூலம் மாட்டுமாக வண்ணமஞ்சரி என்னும் பெயரில் 1980 - ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளன.

12 வண்ணங்கள் (11 அகத்துறைப் பிரபந்தமும் ஒரு தோத்திர வண்ணமும்), 108 வகுப்புகள், 950 க்கு மேற்பட்ட திருப்புகழ்ப் பாக்கள், ஏராளமான வண்ண விருத்தங்கள் பாடியுள்ள இந்தத் தண்டபாணி சுவாமிகள்தான் தமிழில் மிக அதிகமாக வண்ணச் செய்யுட்களை - அருணகிரிநாதரையும்விட எண்ணிக்கையில் அதிகமாக - இயற்றியவர் ஆவார். இந்த யாப்பிற்குரிய சிறப்பு இலக்கணமாக வண்ணத்தியல்பு என இலக்கணமும் கண்டுள்ளார். இச் சிறப்பின் காரணத்தாலேயே இவர் வண்ணச்சரபர் என வழங்கப்படுகிறார்.

இவர் பிறந்த ஊர் - திருநெல்வேலி. பெற்றோர் - செந்தில்நாயகம் பிள்ளை. பேச்சிமுத்தம்மை. இயற்பெயர் - சங்கரலிங்கம். காலம் 22.11.1839 முதல் 5.7.1898 முடிய. பிற பெயர்கள் - முருகதாச சுவாமிகள், திருப்புகழ்ச் சுவாமிகள்.

இயற்றிய நூல்கள் - புலவர்புராணம், அருணகிரிநாதர் புராணம் ஆகிய வாழ்க்கை வரலாற்று நூல்கள் ; குருபரதத்துவம் என்னும் பெயரில் தன்வரலாறு; அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு என்னும் மூன்று இலக்கணங்கள்; முசுகுந்த நாடகம் என்னும் இசை நாடகம்; திருவாமாத்தூர்த் தலபுராணம்; ஐந்து பிள்ளைத்தமிழ்கள்; ஆறு கலம்பகங்கள்; ஏராளமான பிறவகைச் சிற்றிலக்கியங்கள்; கௌமார சாத்திர நூல்கள் முதலிய பல. இவருடைய படைப்புகளை மட்டும் பெயர்ப்பட்டியலிட்டு ஊர்த்தொகையும் நூற்றொகையும் என்னும் பெயரில் 1964ஆம் ஆண்டு திருவாமாத்தூர்க் கௌமார சபை வெளியிட்டுள்ளது. தாம் இயற்றிய நூல்கள் அனைத்தையும் சுவாமிகள் தம் கைப்பட ஓலைச்சுவடிகளாக எழுதி வைத்துள்ளார். இச் சுவடிகள் யாவும் இப்போது கோவையையடுத்த சிரவையாதீனத்தில் உள்ளன. ஏறத்தாழ 49, 750 பாடல்கள்.

இவருடைய வரலாற்றைத் தண்டபாணி விஜயம் என்னும் பெயரில் இவர் மைந்தர் செந்தினாயகம் பிள்ளை காப்பியமாகப் பாடியுள்ளார். தண்டபாணி சுவாமிகள் வாழ்க்கை வரலாறு உரைநடையிலும் பதிப்பாகி உள்ளது. இவரைப் போற்றிப் பல சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன.

கோவை சிரவணம்பட்டியில் கௌமார மடாலயத்தை நிறுவிய இராமானந்த சுவாமிகள் இவருடைய ஆன்மீக மாணவர்களுள் முதன்மையானவர் ஆவார். இவர் தம் வாழ்வின் இறுதிக் காலத்தில் விழுப்புரத்தையடுத்த திருவாமாத்தூரில் எல்லைதாண்டா நியமத்துடன் தங்கியிருந்து தம் 59 ஆவது வயதில் இறைவன் திருவருளிற் கலந்தார்.

## 20. நல்லகுற்றாலக் கவிராயர்

இத் தொகுப்பின் 72 ஆவதாகிய நம்மாழ்வார் வண்ண ஆசிரியர் இவர். ஸ்ரீவைகுண்டத்தில் தோன்றித் திருப்பனந்தாள் திருமடத்தை நிறுவிய குமரகுபர சுவாமிகளின் மரபில் தோன்றியவர் இந்த நல்லகுற்றலாக் கவிராயர் என்பதைத் தவிர வேறு வரலாறு கிடைக்கவில்லை.

## 21. முத்துசாமி அய்யர், பாலபாரதி, பவானி

இத் திரட்டின் 83 ஆவதாகிய இளையபெருமாள் கவுண்டர் வண்ணம் இவரால் இயற்றப்பெற்றதாகும். இவர் காலம் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகலாம். மோரூர்ப் பாம்பண காங்கேயன் குறவஞ்சி இவருடைய படைப்பாகும். இவரைப் பற்றிய விளக்கமான வரலாற்றுச் செய்திகள் கிடைக்கவில்லை.

## 22. வேலச்சின்னோவையன், விசையகிரி

இதில் 37 ஆவதாகிய சிவகிரிக் குராவடிவேலர் வண்ணம் இவரால் இயற்றப் பெற்றதாகும். இவர் 12 ஆவது பட்டம் பழனிச் சமீன்தாராக இருந்தவர்.

பழனிப் பகுதி 16 - 18 ஆம் நூற்றாண்டுகளில் இச் சமீன்தார்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. இவர்களின் இயற்பெயருக்கு முன்னால் விசையகிரி என்றும் பின்னால் சின்னோவையன் என்றும் சேர்த்து வழங்குவர். விசையகிரி என்பது பழனியின் பல பெயர்களுள் ஒன்று. சின்னோவள் என்பது இவர்களின் குலதேவதையின் பெயர். "நலங்கொண்டருள் சின்னோவள் அம்மன்" (வையாபுரிப் பள்ளு 5) ஐயன் என்பது மரியாதைச் சொல் - வடமலையப்பப் பிள்ளையன் என்பது போல. சின்னோவளையன் என்பது சின்னோவையன் எனத் திரிந்து, சின்னோவன் எனக் குறுகி வழங்கலாயிற்று.

இச் சமீன்தார்கள் வேடர் குலத்தவர், சண்டன் வங்கிசத்தார், வான்மீகி கோத்திரத்தவர் என அறிய முடிகிறது. "வேடர் குலம் தழைத்தோங்கக் கூவாய் குயிலே" மருவுலவு சண்டன் வங்கிசம்... வாழவே கூவாய் குயிலே" (வையாபுரிப் பள்ளு 26)

"பூமேவு சிவகிரிவேள் அருளால் ஓங்கும்
  புகழ்வையா புரிக்கரசு புரியும் வேந்தன்
தேமேவு வான்மீகி கோத்ரன் வேலா
  யுதச்சின்னோ வேந்திரன் ஈன் றருளும் சேயன்"

(மீனாட்சியம்மை கும்மி)

தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூல்நிலையத்தின் டி 2851 ஆம் ஓலைச்சுவடியாகிய ஆய்க்குடி ஜமீன்தார் கொண்டம நாயக்கர் வமிசாவளி என்னும் ஆவணத்தில் இச் சமீன்பரம்பரை பற்றிய குறிப்பு உள்ளது. இவர்களை இம்முடிப் பட்டம் உடையவர் என்பர். விசையகிரித்துரைப் பிள்ளைத் தமிழ் முத்தப்பருவம் பாடலொன்றின்படி இச் சமீன்பரம்பரை வருமாறு:-

1. சின்னோவையன
2. காக்கிவடவாடச் சின்னோவையன்
3. கடுப்பலச் சின்னோவையன்
4. பெரிய வடவாடச் சின்னோவையன்
5. சின்னவேலாயுதச் சின்னோவையன்
6. குமாரச் சின்னோவையன்
7. வேலாயுதச் சின்னோவையன்
8. குமாரச் சின்னோவையன்
9. வேலச் சின்னோவையன்
10 . . . . சின்னோவையன்
11. குமாரச் சின்னோவையன்
12. வேலச் சின்னோவையன்

சிவகிரிக் குராவடிவேலர் வண்ணத்தை இயற்றியுள்ள 12 - ஆம் பட்டம் வேலச் சின்னோவையன் இதனை அன்றி முருகையன் வண்ணம். முத்துக் குமாரசாமி வண்ணம் பழனிப்பிள்ளைத் தமிழ் (பருவத்திற்கு 3 பாடல்) ஆகியவற்றையும் இயற்றியுள்ளார். இத் திரட்டில் 65 ஆவதாக உள்ள பழனிக் குமாரச்சின்னோவையன் வண்ணமும் இவரால் இயற்றப் பெற்றிருக்கலாம். இவர் காலம் 18 ஆம் நூற்றாண்டு.

விசையகிரித்துரைப் பிள்ளைத்தமிழ், விசையகிரிவேலச் சின்னோவையன் வண்ணம் ஆகிய இரண்டும் இவரைப் போற்றி எழுந்தனவாகும். வையாபுரிப் பள்ளிலும் இடையிடையே இவர் பெருமை கூறப்பட்டுள்ளது (26, 50, 97, 162, 231, 239) பழனி மாம்பழக் கவிச்சிங்க நாவலர் தம் பழனாபுரி மாலையில், "விசையகிரித்துரை நாளில் அநேகம் விசேடம் இந்நாட்கு இசைய நடத்தினை" (45) எனக் குறிப்பிடுகிறார். இவ்வாறாக இவர் இலக்கிய ஆசிரியர், பாட்டுடைத் தலைவர் என்னும் இரண்டு வகையிலும் சிறப்புடையவர் ஆகிறார்.



# ஆசிரியரோ என்னும் ஐயம்

## 1. அழகுமுத்துப் புலவர்

இத் தொகுப்பில் ஐம்பதாவதாகிய மெய்கண்ட வேலவர் வண்ணம் இவரால் இயற்றப் பெற்றிருக்கலாம் என எண்ண இடமுள்ளது. 18 ஆம் நூற்றாண்டில் நாகப்பட்டினத்தில் இருந்த இவர் மெய்கண்ட வேலாயுதத் திருப்புகழ் என்னும் நூலை இயற்றியுள்ளார். நூற் பெயரொப்புமை, யாப்பின் இன ஒற்றுமை கருதி வேறு தக்க சான்றுகள் கிடைக்கும் வரை அழகுமுத்துப் புலவரையே இவ் வண்ண ஆசிரியராகக் கொள்ளலாம்.

இவரால் இயற்றப்பெற்ற மெய்கண்ட வேலாயுத சதகம், திருப்புகழ், உலா ஆகிய மூன்றும் நாகை நீலலோசனி பத்திராதிபர் சதாசிவப் பிள்ளையவர்களால் பதிப்பிக்கப் பெற்றுள்ளன என அறிகிறோம்.

## 2. எல்லப்ப நாவலர், சைவ

இவ் வண்ணப் பெருந்திரட்டின் 36 ஆவதாகிய அருணையம்பதிச் சங்கரர் வண்ணம் இவர் பாடியதாகலாம். இவருடைய அருணைக் கலம்பகத்தில் வண்ணக் கவிகள் மிகுதி. அதற்கும் இவ் வண்ணத்திற்கும் சொல்லாட்சிகளில் ஒற்றுமை உள்ளது.

சேறைக் கவிராச பிள்ளை அண்ணாமலையார் வண்ணம் பாடி அரங்கேற்றியபோது பரமேசுரப் புலவர் என்பார் இவரைப் பழித்துக் கூறினார் என்பர். (காண்க : பாடினோர் வரலாறு 18) அதனால் வெகுண்ட எல்லப்ப நாவலர் தாமும் வண்ணம்பாட வல்லவரே என்பதனை நிலைநாட்ட இந்த அருணையம்பதிச் சங்கரர் வண்ணத்தை இயற்றியிருக்கலாம்.

அருணாசல புராணம், செவ்வந்திப் புராணம், திருவிரிஞ்சைப் புராணம், திருவெண்காட்டுப் புராணம், திருவாரூர்க் கோவை, திருவருணைக் கலம்பகம் ஆகியன இவர் இயற்றியன ஆகும். 16-ஆம் நூற்றாண்டு. இவர் வரலாற்றுக் குறிப்புகளைத் தமிழ்த்தாத்தா அவர்களின் திருவாரூர்க் கோவைப் பதிப்பில் காண்க.

யாழ்ப்பாணம் தியாகராசபிள்ளை என்னும் புலவர் ஒருவரும் ஓர் அண்ணாமலை வண்ணம் பாடியுள்ளார் என்பர். இந்த வண்ணம் அவர் வாக்காக இருந்தாலும் இருக்கலாம். உறுதியான சான்றுகளில்லாததால் இறுதியாகக் கூற இயலவில்லை.

## 3. காளியண்ணப் புலவர்

இத் தொகுப்பின் பூந்துறை அவிநாசிக் கவுண்டர் வண்ணம் (48) இவர் வாக்காகலாம். இப் பாட்டுடைத் தலைவரின் தந்தை வாரணவாசிக் கவுண்டர். பூந்துறைப் புராணம் பாடிய காளியண்ணப் புலவர் இந்த வாரணவாசிக் கவுண்டரால் ஆதரிக்கப் பெற்றார். இவர் காலம் 19 ஆம் நூற்றாண்டுக் காளியண்ணப் புலவர் வரலாறு பூந்துறைப் புராணத்தில் ஓரளவு விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

## 4. சண்டமாருதக் கவிராயர், முதுகந்திடல்

இத் திரட்டின் புஷ்பவனேசர் வண்ணம் (64) இவரால் இயற்றப்பெற்றிருக்கலாம். டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம் வெளியிட்டுள்ள "பிற்காலப் புலவர்கள்" என்னும் புத்தகத்தில் திருப்பூவணநாதர் வண்ணம். பாரத வண்ணம் என்னும் இரண்டும் முதுகந்திடல் சண்டமாருதக் கவிராயரால் இயற்றப் பெற்றனவாகக் கூறப்பட்டுள்து. (பக். 408). அப் பூவணநாதர் வண்ணம் இதுவோ அன்றி வேறோ எனத் திண்ணமாகத் தெரியவில்லை. இக் கவிராயர் கி.பி. 1730 வாக்கில் இருந்தவர் என அப்புத்தகம் கூறுகிறது.

## 5. முத்துக்குமார முதலியார், புதுவை

இவ் வண்ணப் பெருந்திரட்டில் நாற்பதாவதாகிய புதுவை வேதபுரீசர் வண்ணம் இவரால் இயற்றப் பெற்றிருக்கக்கூடும். இந்த முத்துக்குமார முதலியார் புதுவைத் திரிபுரசுந்தரியைப் போற்றிப் பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். அது சென்னை அரசினர் கீழ்த்சைச் சுவடிகள் நூல்நிலையத்தாரால் 1956-ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற பிள்ளைத்தமிழ்க் கொத்தில் இடம் பெற்றுள்ளது. (பக். 349). இவருடைய விரிவான வரலாற்றுக் குறிப்புகளை அறியக்கூடவில்லை.



# பாடப்பெற்றோர் வரலாறு

## 1. அவிநாசிக் கவுண்டர், பூந்துறை

இவர் 48 ஆம் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர் ஆவார். இவர் கொங்கு நாட்டின் பூந்துறை என்னும் பழமையான ஊரைச் சேர்ந்த காடைகுலத்து வாரணவாசிக் கவுண்டர் என்பவரின் மைந்தர். பூந்துறை அவிநாசிக் கவுண்டர் வண்டுவிடு தூது என்னும் ஓர் நூலைத் தி.அ. முத்துசாமிக் கோனார் தம் கொங்கு மண்டல சதக உரையில் மேற்கோள் காட்டுகிறார். (பா. 56). அச் சிற்றிலக்கியம் பெரும்பாலும் இவரைப் பற்றியதாகலாம். அத் தூது இப் பதிப்பாசிரியரின் பார்வைக்குச் சிக்கவில்லை.

மேல்கரைப் பூந்துறை நாட்டிற்குத் தலைவன் வாரணவாசி என்பவன். இவன் விசயநகரச் சதாசிவராயர், இராமராயர் காலத்தைச் சேர்ந்த (1541-1565) குப்பிச்சி என்பவனின் மரபில் வந்தவன். இவன் வழியினர் பலர் வாரணவாசி என்ற பெயரில் இருந்தனர். 1641 ஆம் ஆண்டு கந்தருவ நரச வேந்தன் சேனையில் சேர்ந்திருந்த வணங்காமுடிக் கட்டி முதலியைத் தோற்கடித்த ஒரு வாரணவாசியைக் கார்மேகர்.

"வாரண வாகன னோஎன
　மன்னர் மனம்மதிக்கும்
காரண வான்வணங் காமுடிக்
　கட்டி கனத்தபடை
பூரண வாகினி யும்சிரம்
　தாழப் பொருதுவென்ற
வாரண வாசி வளர்பூந்
　துறைகொங்கு மண்டலமே" (கொங்குமண்டல சதகம் 83)

எனக் குறிப்பிடுகிறார்.

19-ஆம் நூற்றாண்டில் பூந்துறைப் புராணம் பாடிய காளியண்ணப் புலவரை ஆதரித்தவரின் பெயரும் வாரணவாசிக் கவுண்டர் என்பதுவே. இக் கவுண்டர் புலவரைச் சோதிக்க விழைந்து, காளி எனத் தொடங்கிக் கூளி என ஒரு வெண்பாவை முடிக்கக் கேட்டார். உடனே காளியண்ணப் புலவர்,

"காளி முரன்று கறங்கிவளர் பூந்துறைசை
வாளபிமன் வாரண வாசிமன்னன் - கேள்வியினால்
பொன்னனையேன் ஆனேன்; பொறாமயலுக் கென்செய்வேன்?
என்னுள்ளம் வெவ்வியகூ ளீ"

எனப் பாடினார். கவுண்டர் புலவருக்கு வீடும் விளைநிலமும் வழங்கி ஆதரித்தார். இந்த வாரணவாசிக் கவுண்டரின் மைந்தராகவே இவ் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவராகிய அவிநாசிக் கவுண்டர் இருக்கலாம். தந்தையால் ஆதரிக்கப் பெற்ற காளியண்ணப் புலவரே மைந்தன் மீது வண்ணம் பாடியிருக்கலாம்.

வண்ணத்தின் அகச்சான்றுகளை மட்டும் கொண்டு இவரைப் பற்றித் தெரிய வருவன:

அவிநாசிக் கவுண்டர் சிவபக்தர்; பெருவீரர்; அரசியல் அதிகாரம் உள்ளவர்; பல இலக்கியங்களால் புகழப் பெற்றவர்; வள்ளன்மை உடையவர்; காடை குலத்தைச் சேர்ந்தவர்; வாரணவாசி என்பவரின் மைந்தர் என்பனவே.

## 2. அனந்தையர், மண்டகுளம்

இவர் 88-ஆம் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர். இவரைப் பற்றித் தெரியவரும் செய்திகள் மிகக் குறைவானவையே.

இந்த அனந்தையர் அமீர்சாயபு என்னும் குறுநிலத் தலைவனின்கீழ் மாகாணத் தலைவராக (சுபேதார்) இருந்தவர்; அந்தணர் ; மார்க்கசகாயன் என்பவரின் புதல்வர்; வேங்கட அய்யர் என்ற அண்ணனையும், இராமையர் என்ற தம்பியையும் பெற்றிருந்தவர்; சிவபக்தர்; அரசியல் அறிஞர்; கொடையாளி; சுற்றத்தாரால் மதிக்கப் பெற்றவர்; மண்டகுளம் என்னும் ஊரில் வாழ்ந்தவர்.

வட ஆர்க்காடு மாவட்டம் போளூர் வட்டத்தில் மண்டகுளத்தூர் என ஓர் ஊர் உள்ளது.

## 3. ஆவுடையராயன், இரசை

இவர் 73-ஆம் வண்ணத்தால் போற்றப் பெறுபவர். இரசை என்பது சீரங்கத்தை அடுத்துள்ள இரையூர் ஆகும். இவ்வூரைச் சேர்ந்த இரசை வடமலையப்பப் பிள்ளையன் மிக்க புகழுடன் மதுரைச் சொக்கநாத நாயகர் காலத்தில் (1704-34) திருநெல்வேலிப் பகுதியை ஆண்டுவந்தார். இவர் வேளாளர்.

விசயநகரப் பேரரசர் மூன்றாம் வேங்கடராயர் (1630 - 42). 1639 - ஆம் ஆண்டுவாக்கில் தம் குழுவினருடன் இராமேஸ்வர யாத்திரை மேற்கொண்டார். அப்போது கறம்பக்குடி வழியே செல்லும் போது யானை ஒன்றுக்கு மதம் பிடித்து விட்டது. ஆவுடையராயத் தொண்டைமான் என்பவர் விரைவில் யானையை அடக்கி மன்னன் எதிரில் நிறுத்தினார். இச் செயலால் மகிழ்ந்த பேரரசர் அவருக்கு "ராய ராகுத்த ராய வக்ருடு" என்ற பட்டத்தையும், பல அரச மரியாதைகளையும், கறம்பக்குடிப் பகுதியில் நிலங்களையும் வழங்கினார். இவரே புதுக்கோட்டை அரச மரபின் முதல்வராகக் கூறப்படுகிறார். இவர் கள்ளர் மரபினர்.

இந்த இரண்டும் (ஊர், இயற்பெயர்) இங்கு இணைந்துள்ள போதிலும் இப் பாட்டுடைத் தலைவர் யார் எனத் தெரியவில்லை. ஊர்ப்பெயர் விரசை என இருக்கலாமோ என்றும் ஓர் ஐயம்.

இவ்வண்ணத்தின் வழி அறியப்பெறும் வரலாற்றுச் செய்திகள் வருமாறு:

ஆவுடையராயன் வேதாரணியத்துப் புவனிவிடங்கர்பால் (சிவபெருமான்) பேரன்புடையவன்; பெரு வீரன்; எனினும் கருணை நிறைந்தவன் ; தமிழ்ப் பிரபந்தங்களை ஏற்றுப் பெரும் பரிசில்களை வழங்குபவன் ; அறிஞர்களைத் தகுதியறிந்து பாராட்ட வல்லவன்; இரசை அல்லது விரசையூரன். இவ்வளவே.

## 4. இரகுநாத சேதுபதி (தளவாய், முதல்)

32,84, ஆகிய இரு வண்ணங்களால் போற்றப்படுபவர் இவர். 1646 முதல் 1678வரை ஆட்சிபுரிந்தவர்; திருமலை சேதுபதி எனப் பெரிதும் போற்றப்படுபவர். சடைக்கண் சேதுபதியின் சகோதரியின் குமாரர். அவரால் தத்து எடுத்துக்கொள்ளப் பெற்றவர். மதுரை மன்னர்களுடன் சில நேரங்களில் நட்புக் கொண்டும் சில நேரங்களில் மாறுபட்டும் இருந்தார்.மதுரைத் திருமலை நாயக்கர் உடல்நலம் குன்றிப்படுத்த படுக்கையாக இருந்தபோது அவர்மீது போர் தொடுத்த மைசூர் கந்தர்வ நரசிம்ம ராஜனின் தளவாய் உறம்பையாவைத் திண்டுக்கல் போரில் இச் சேதுபதி தோற்கடித்தார். போரில் எஞ்சியவர்களை மைசூர் எல்லைவரை துரத்திச் சென்று சில படைத்தலைவர்களின் மூக்கை அறுத்தார். இந்த வெற்றிக்காகத் திருமலை நாயக்கரால் பெரிதும் பாராட்டப் பெற்றார்.

மதுரைப் பேரரசுக்குப் பகைவர்களால் ஏற்பட்ட போர்களில் எட்டையபுரம் பாளையக்காரர் முதலியவர்களை அடக்கினார். இப் போர்களில் அமைக்கப் பெற்ற மறவர் பாசறைகளே பின்னர்க் குடியிருப்புகளாக மாறி இராமநாதபுரம் என்னும் பெயருடன் சிற்றூர்களாயின. திண்டுக்கல்லையடுத்த தாடிக்கொம்பு அருகேயும் இத்தகைய இராமநாதபுரங்கள் உள்ளன.

இரகுநாத சேதுபதிக்கும் திருமலைக்குப்பின் அரசுகட்டில் ஏறிய மதுரைச் சொக்கநாத நாயக்கருக்கும் உறவு சரியாக அமையவில்லை.நாயக்கர் சேதுபதிமீது போர் தொடுத்தார். மதுரை மன்னருக்குப் பெரும் வெற்றி கிடைக்கவில்லை.

தளவாய் இரகுநாத சேதுபதி தமிழபிமானம் மிக்கவர். தளசிங்க மாலையை இயற்றிய மிதிலைப்பட்டிச் சிற்றம்பலக் கவிராயர், ஒரு துறைக் கோவை பாடிய அமுதகவிராயர், மொஹியித்தீன் ஆண்டவர் பிள்ளைத்தமிழை யாத்த சவ்வாதுப் புலவர், மருதூர் அந்தாதி படைத்த தலைமலைகண்ட தேவர், மருதூர்ப் புராணம் இயற்றிய சிற்றம்பலவையா, தாயுமானவர் முதலிய பெரும்புலவர்களோடு இவருக்குத் தொடர்பிருந்தது.

இரகுநாத சேதுபதி ஆலயத் திருப்பணிகளிலும் நிறைய ஈடுபட்டார். இராமேசுவரத்தின் இரண்டாம் பிராகாரம், திருப்புல்லாணிக் கோபுரம், இராமநாதபுரம் ராஜதுர்க்கை ஆலயம் முதலின இவர் திருப்பணியாகும். திருப்புல்லாணி ஆலயத்தில் இவருடைய சிலை இடம் பெற்றுள்ளது.

இரகுநாத சேதுபதிக்கு மக்கள் இல்லாததால் தம் சகோதரர் நாராயணத் தேவரின் மைந்தர் இராஜசூரிய தேவரை வாரிசாக நியமித்தார். இரகுநாத சேதுபதி 1678 இல் காலமானார்.

## 5. இரகுநாதத் தொண்டைமான் புதுக்கோட்டை

இவர் இத்தொகுப்பின் 38 ஆவது வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர். புதுக்கோட்டைத் தொண்டைமான் அரச பரம்பரையின் இரண்டாவது மன்னர் விஜய ரகுநாதராயத்

தொண்டைமான் ஆகிய இவர் இரகுநாதராயத் தொண்டைமானின் பேரர். இவரது ஆட்சிக்காலம் 1730 -1769.

இவர் ஆட்சிக்கு வந்தபோது தென்னாட்டு அரசியல் மிகக் குழப்பமான நிலையில் இருந்தது. ஆர்க்காடு நவாப்கள் தென்னகத்தில் கப்பம் வசூலிக்கும் பொறுப்பைப் பெற்றிருந்தனர். இந்த அதிகாரத்தைக் கொண்டு அவர்கள் நாட்டைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்தனர். ஆர்க்காட்டு நவாப் பதவிக்கான போட்டி, ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரரின் குறுக்கீடுகள், உள்நாட்டு மன்னர்களுக்குள் ஒருமித்த கருத்தின்மை ஆகியன இவர்காலச் சூழ்நிலை.

சந்தாசாகிப் புதுக்கோட்டையைத் தாக்கி வெற்றி பெற்றான். விஜய ரகுநாதராயத் தொண்டைமான் மணிபள்ளம் காட்டில் சில காலம் மறைந்திருந்தார். மறுபடியும் தஞ்சை மன்னன் துக்கோஜியின் படைத்தலைவர் ஆனந்தராவின் தாக்குதலைத் தாக்குப்பிடிக்க முடியாமல் திருமயம் கோட்டைக்குள் புகுந்து வாழ்ந்தார். இத் தொண்டைமான் பெரும்பாலும் ஆங்கிலேயர்களுக்கு ஆதரவாக இருந்தார். தென்னகத்தின் சிற்றரசர்களிடம் கப்பம் வாங்கியது போல நவாப் 1755 இலிருந்து இவரிடம் கப்பம் பெறவில்லை. சிறப்பு விலக்களித்திருந்தார். இச்செயல்களால் சமஸ்தானமாக மலர வழிகோலினார்.

விஜய ரகுநாதராயத் தொண்டைமான் இடைவிடாமல் பல போர்களில் ஈடுபட்டிருந்த போதிலும் அறச்செயல்களையும் சமயக் கடமைகளையும் மறந்துவிடவில்லை. இக் காலத்தில் வாழந்த பிரமஞானி சதாசிவப் பிரமேந்திரரிடம் தட்சிணாமூர்த்தி மந்திர உபதேசம் பெறும் பேறு இவருக்கு வாய்த்தது. புதுக்கோட்டையில் நவராத்திரி விழா இவர்காலத்தில்தான் தொடங்கியது.

இந்த விஜய ரகுநாதத் தொண்டைமானுக்கு ஆறு மனைவியர் இருந்தனர். இவர்களுள் மூன்றாவது மனைவியான ரங்கம்மாவின் மகனாகிய ராயரகுநாதத் தொண்டைமான் 1769 இல் மூன்றாவது மன்னரானார்.

## 6. இளையபெருமாள் கவுண்டர்

இவர் இத்திரட்டில் இடம்பெற்றுள்ள 83 ஆம் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர். இவரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளை அறியக்கூடவில்லை. கொங்குநாட்டில் காங்கயத்தை அடுத்த சிவமலை என்னும் முருகனுக்குரிய குன்றின் அடிவாரத்தில் உள்ள தலயநல்லூரைச் சேர்ந்தவர். சின்னப்பெருமாள் கவுண்டர் என்பவரின் மைந்தர்; சிவபெருமான், திருமால் ஆகிய இருபெருந் தெய்வங்களையும் வழிபடுபவர்; புகழ்மிக்கவர்; வள்ளல்; தமிழ்ப் புலவர்களைப் போற்றுபவர்; அரசியல் அதிகாரம் படைத்தவர் என்பன மட்டுமே இவ் வண்ணத்தின்வழி அறியப்படுகின்றன.

இந்த வண்ணத்தின் ஆசிரியர் ஆகிய பாலபாரதி முத்துச்சாமி அய்யர் பாம்பண காங்கேயன் குறவஞ்சி எனச் சிற்றிலக்கியம் ஒன்றைப் படைத்துள்ளார். அந்தப் பாம்பணன் கி.பி. 1800 ஐ ஒட்டிச் சற்று முன்பின் இருந்தவர். அதனால் இந்த இளையபெருமாள் கவுண்டரின் காலமும் அதுவே ஆகலாம்.

## 7.ஒப்பிலாத மழவராயன்

திருச்சி மாவட்டம் அரியிலூருக்கு (இன்றைய அரியலூர்) வேறொரு பெயர் குன்றை. இவ்வூரைச் சுற்றியுள்ள பகுதி குன்றவளநாடு எனப் பெற்றது.அதுவே குன்றை என மருவியது. இங்குள்ள துர்க்கையம்மன் ஒப்பிலாதவள் என்னும் திருநாமம் படைத்தவள். இத்தேவி அரியலூர் ஜமீன்தார்களுக்குக் குலதெய்வம். ஆதலால் ஒப்பிலாத என்னும் தொடர் இந்த ஜமீன்தார்களின் பெயர்களோடு சேர்த்து வழங்கப்படுகின்றது. மழவர்கள் போர் வீரர்களுள் ஒரு பகுதியார். மழவர்களுக்குத் தலைவராதல் பற்றி மழவராயர் என்பது பட்டமாயிற்று. இம் மூன்றும் இணைந்து அரியலூர் ஜமீன்தார்களின் குடிப்பெயர் குன்றை ஒப்பிலாத மழவராயர் என்பதாயிற்று.

17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அந்தகக்கவி வீரராகவ முதலியார் கிருஷ்ணைய ஒப்பிலாத மழவராயரையும். அவர் மைந்தர் குமார ஒப்பிலாத மழவராயரையும் பாராட்டிப் பாடிய செய்யுள்கள் தமிழ்நாவலர் சரிதையில் (எண் 250,251) இடம் பெற்றுள்ளன.

1742 ஆம் ஆண்டில் ( 18ஆம் நூ) அரங்கப்ப மழவராயன் மைந்தர் விசய ஒப்பில்லாத மழவராயன் என்பவர் அரியலூர் ஜமீன்தாராக இருந்ததைக் கல்வெட்டின்வழி அறிகிறோம். (A.R.E. 90,1927) . இவ் வண்ணத்தின் நான்காம் கலை, விசையராசராச கிரீடி ; ரங்க வசீரன்.... மகிழ்ந்தே தரு துரை என வருகிறது. இப்பகுதிக்கு அரங்கப்பன் மகனாகிய விசயன் எனப் பொருள் கொள்ளலாம். இதனால் இவ் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர் 18 ஆம் நூற்றாண்டின் இடையில் அரியலூர்ச் சமீன்தாராக இருந்த விசய ஒப்பிலாத மழவராயர் எனத் துணியலாம். இவரைப் பற்றிய பிற வரலாறுகளை அறியக்கூடவில்லை.

## 8. கயிலாசநாத அய்யர்

இத் தொகுப்பின் 43 ஆம் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர் இவர். இவரைப் பற்றி அறியப்படும் வரலாற்றுக் குறிப்புகள் மிகச் சிலவே.

இவருடைய ஊர் மான்றூர் அல்லது ஆன்றூர். வெள்ளோடை என்பது ஒரு நதியா? இவ்வூர் தமிழ்நாட்டின் எந்தப் பகுதியில் உள்ளது ? என அறியக்கூடவில்லை.

கயிலாசநாத அய்யர் தமிழ் பேசும் அந்தணர்; சுமார்த்தர்களில் வடமர் என்னும் பிரிவைச் சேர்ந்தவர். தந்தையார் பெயர் முகுந்த ஐயர். சிவபெருமான்மேல் பேரன்புடையவர். கயிலாசநாத அய்யர் நல்ல கல்விமான்; கொடையாளி அரசியல் அதிகாரம் படைத்தவர். இதற்குமேல் ஒன்றும் கூறுவதற்கில்லை.

## 9. கருணைகிரி முத்தையன், கடவூர்

இத் தொகுப்பின் 56 ஆவது வண்ணம் இவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது. இவர் திருச்சி மாவட்டம் கடவூர் என்னும் ஊரின் ஜமீன்தார்.

கருணைகிரி முத்தையன் குரிவார் குலத்தைச் சேர்ந்தவர். சிவபெருமான் திருமால் ஆகிய இருவரையும் வழிபடுபவர். அரசியல் அதிகாரம் மிக்கவர். புலவர்களால் பாராட்டப் பெற்றவர் என்பதைத் தவிரக் குறிப்பிட்டுச் சொல்லுமளவு வரலாறு விளங்கவில்லை. இவரைப் போற்றி ஒரு பிள்ளைத்தமிழ் எழுந்துள்ளது. அது பருவத்திற்கு ஆறு பாடல்களை உடையது.

1836 முதல் 1884 வரை வாழ்ந்திருந்த மாம்பழக் கவிச்சிங்க நாவலர் இவரைப் பாடியிருப்பதால் இவர் காலம் தெரிகிறது. மற்ற செய்திகள் அறியப்பட வேண்டிய நிலையில் உள்ளன.

## 10. குமாரச் சின்னோவையன், பழனி

வண்ணப் பெருந்திரட்டின் 65 ஆம் வண்ணம் இவரைப் போற்றுவதாகும். இவர் பதினொன்றாம் பட்டத்திலிருந்த பழனிச் சமீன்தார். சிவகிரிக் குராவடிவேலர் வண்ணத்தைப் படைத்தவராகிய இவர் மைந்தர் விசையகிரி வேலச்சின்னோவையன் அவர்களே இதனையும் படைத்திருக்கலாம். பாடினோர் அகரநிரலில் 22 ஆவது காண்க.

வையாபுரிப்பள்ளு இந்தக் குமாரச் சின்னோவையனால் இயற்றப் பெற்றதாகும்.இவர் சமயமாலை எனவும் ஒரு நூல் இயற்றியிருப்பதாகக் கூறி அப்பள்ளின் பதிப்பாசிரியர் கீழ்க்கண்ட செய்யுளைக் காட்டுகிறார்.

கலியின்நா லாயிரமும் கடந்தபின்எண் ணூறதுமேல்
மலிநந் தனவருடம் மங்களநேர் தைப்பூசம்
சிலைதிருத்தி நாற்பதுநாள் திருப்பணிப்ர திட்டைசெய்து
வலியஉனைத் தோத்தரித்தேன் வருவாய் இதுசமயம்

(வையாபுரிப் பள்ளு - முகவுரைப் பக். 11 மேற்கோள்)

கலி 4800 ஆம் ஆண்டு தைப்பூசம் என்பது 1699 ஆம் ஆண்டுத் தொடக்கமாகும். இதனால் இவருடைய காலம் 17,18 ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தது என அறியலாம். சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தின் டி.2851 ஆகிய ஆயக்குடி ஜமீன்தார் கொண்டம நாயக்கர் வம்சாவளி என்னும் சுவடியில் இச் சமீன்தார்களைப் பற்றிய குறிப்பு உள்ளது. இச் சமீன்தார்களின் வரலாறு விரிவாக ஆராயப் பெறவேண்டும்.

## 11. குமார சாம்புவன்

இத் திரட்டில் இடம்பெற்றுள்ள 5 ஆவது வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர் இவர். இவரைப் பற்றிய ஆதாரபூர்வமான வரலாற்றுச் செய்திகளை உறுதியாகக் கூற இயலவில்லை.

பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாகிய கருவை வளநாட்டைச் சேர்ந்தவர்; சங்கரன் என்பவரின் மைந்தர்; நாயக்கர் ஆட்சியில் அமைச்சராக இருந்தவர்; சொக்கநாத நாயக்கரின் மனைவி அல்லது தாயின்வழி உறவினராக இருக்கலாம்; சொக்கநாத நாயக்கர் பட்டமேற்பு விழாவைச் சிறப்பாக நடத்தியவர் என்பனவே அறியத்தக்கன. இங்கே கூறப்படும் சொக்கநாதர்

1659 முதல் 1682 வரை அரசுபுரிந்தவரா அல்லது 1706 முதல் 1732 வரை ஆட்சியில் இருந்தவரா எனத் தெரியவில்லை.

## 12. சடையப்ப முதலியார்

இத் தொகுப்பின் 79 ஆவது வண்ணம் இவர்மேற் பாடப்பெற்றதாகும். இவரைப் பற்றிய தெளிவான வரலாறு அறியப்படவில்லை.

காரிகைக் குழந்தையூரைச் சேர்ந்தவர்; வேளாள மரபினர்; எல்லபூபன் என்பார் மைந்தர்; சூரியனார்கோயில் ஆதீனம் சிவக்கொழுந்து தேசிகர்மீது பெரும் பற்றுடையவர்; கும்பகோணத்துக் கோயில்களில் சில நிவந்தங்களை ஏற்படுத்தியவர்; கொடையாளி என்பனவே அறியப்படுவன.

சூரியனார் கோயில் ஆதீனத்தில் நான்காம் பட்டத்திலிருந்த சிவக்கொழுந்து தேசிகர் காலம் 1600-1640 என்பர். இந்தச் சடையப்ப முதலியாரும் அக் காலத்தவரே. தொண்டை மண்டலத்தில் காரிகைக் குளத்தூர் என ஓர் ஊர் இருப்பதாக அறிகிறோம். இவர் அவ்வூரினரா என உறுதியாகத் தெரியவில்லை.

## 13. சாமைய நாயக்கர், தஞ்சை

இத் திரட்டில் 63 ஆவதாக இடம் பெற்றுள்ள வண்ணம் இவரைப் போற்றுவதாகும். இவர் தஞ்சை அரசியலில் அதிகாரம் மிக்க ஓர் அமைச்சர் ; திருமால் அடியார் ; துரை குமார் அழகசாமையன் என்பது முழுப் பெயர் போலும். வேறு செய்திகள் எதுவும் விளங்கவில்லை.

## 14. சிவபெருமான்

இவ் வண்ணப் பெருந்திரட்டில் மொத்தம் 29 வண்ணங்கள் சிவபெருமானைப் போற்றுவதாகும். இவை எந்த எந்தத் தலத்திற்குரியன என்பது வண்ணத் தலங்களின் அகரநிரலில் கூறப்பட்டுள்ளது.

## 15. செண்டலங்காரப் பிரபு ( மன்னை)

இத் தொகுப்பின் 67, 89 ஆகிய வண்ணங்களின் பாட்டுடைத் தலைவர் இவர்.

இவர் மன்னார்குடியைச் சேர்ந்தவர் ; தியாகப்பன் என்பது இவருடைய தந்தையார் பெயர்; பாட்டனார் மன்னப்பன் எனப்பட்டார். யாதவ மரபினர்; தஞ்சை மராட்டிய மன்னர் சகஜியின் ஆட்சிக்காலத்தில் கிராம மணியத்து அட்டவணை அதிகாரியாக இருந்தவர்; மந்திர சாத்திரத்தில் வல்லவர்; மன்னார்குடி இராசகோபாலப் பெருமாளை வழிபடுபவர்; இவரைப் போற்றும் விறலிவிடுதூது ஒன்றும், காப்புமாலை ஒன்றும், சில தனிப்பாடல்களும் கிடைத்துள்ளன.

தஞ்சைச் சகஜி மன்னனின் காலம் 1684 1711 ஆகும். இந்தச் செண்டலங்காரனின் காலமும் அதுவே.

## 16. தஞ்சைநாயகம் பிள்ளை

இத்திரட்டிலுள்ள 52 ஆவது வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர் இவர். திருவாரூரில் வாழ்ந்திருந்த புழுகாச்சி பிள்ளை என்பாரின் மைந்தர்; கஞ்சமலைநாதன் என்பாரின் தம்பி; மணவை என்ற ஊரில் இருந்த வேளாளர்; சைவ சமயத்தார் ; பெரு வள்ளல். இவ்வளவே இவரைப் பற்றி அறிய வருவனவாகும். இவரைப் பற்றிய பல தனிப்பாடல்கள் தஞ்சைச் சரசுவதிமகால் சுவடிகளில் உள்ளன. பிற செய்திகள் விளங்கவில்லை.

தஞ்சைப் பெரியகோவில் முன்மண்டபத்தில் தஞ்சை நாயக பிள்ளை என்ற பெயர் வெட்டப்பட்டுள்ளது என்பர். அவரும் இவரும் ஒருவரோ வேறு வேறானவரோ அறியக்கூடவில்லை.

## 17. தாயுமான பிள்ளை, மதுரை

இத் தொகுப்பின் எழுபதாவது வண்ணம் இவரைப் போற்ற எழுந்ததாகும். இவர் திருநெல்வேலிக்கு அருகே உள்ள வெள்ளோடை என்னும் ஊரைச் சேர்ந்தவர்; வேளாளர்; முத்துக்குமார் என்பவரின் மைந்தர்; மதுரைச் சொக்கநாதர்பாலும் பழனி முருகன்மீதும் பேரன்பு கொண்டவர்; திருமலைராயனின் அரசில் தண்டல் கணக்கு அதிகாரம் வகித்த அமைச்சர்; இவர் ஒரு விநாயகர் கோயிலில் மண்டபம் ஒன்றைக் கட்டினார் எனத் தெரிகிறது. இவர் மதுரையில் வசித்திருந்தார்.

மதுரையை ஆண்ட திருமலை நாயக்கரின் காலம் 1623 -1659 ஆதலின் இந்தத் தாயுமானபிள்ளையின் காலமும் அதுவே.

## 18. திருமால்

இவ் வண்ணப் பெருந்திரட்டில் 8 வண்ணங்கள் திருமாலைப் போற்றுவனவாகும். இவை எந்த எந்தத் தலத்திற்குரியன என்பது வண்ணத் தலங்களின் அகரநிரலில் கூறப்பட்டுள்ளது.

## 19. நம்மாழ்வார்

இத் திரட்டின் 72 ஆவது வண்ணம் நம்மாழ்வாரைப் போற்றுவதாகும். வைணவ ஆழ்வார்களில் தலை சிறந்தவராகிய இப்பெருமானின் திவ்விய சரித்திரத்தை விரிவான நூல்களிற் காண்க.

## 20. பரராசசிங்கன் (ஈழம்)

இத் தொகுப்பின் மூன்றாவது வண்ணம் இவனைப் போற்றுவதாகும். யாழ்ப்பாணப் பகுதியை ஆண்டுவந்த தமிழ் மன்னர்கள் ஆரிய சக்கரவர்த்திகள் என அழைக்கப் பெற்றனர். இவர்கள் பரராசசேகரன், செகராச சேகரன் என்னும் பட்டப் பெயர்களை மாறி மாறி இட்டுக் கொண்டனர் என்பர். தமிழ் இலக்கியங்களில் இவர்களைப் பற்றிப் பல குறிப்புகள் கிடைத்தபோதிலும் இம் மரபினரின் தெளிவான வரலாறு விளங்கவில்லை.

கம்பரை ஆதரித்த திருவெண்ணெய்நல்லூர்ச் சடையனைப் பாராட்டிய பரராசசிங்கன் பாடியதாக இரு பாடல்களைச் சோழமண்டல சதகத்தின் 42 ஆம் பாடலுக்குரிய மேற்கோள் பாடல்களாகக் காண்கிறோம். இவற்றுள் முதல் பாடல் மட்டும் பெருந்தொகையில் இடம்பெற்றுள்ளது (1135).

"யாழ்ப்பாணத்தை ஆண்ட ஆரியச் சக்கரவர்த்தி என்பான் கி.பி. 1288 இல் சிங்களவரசன் தலைநகரான அநுராதபுரத்தைக் கைப்பற்றி அதன் பொக்கிஷங்களையும் கவர்ந்து சென்றனன் என்றும் 1290 இல் சிங்களம் ஆண்ட பராக்கிரமபாகு அவனுடன் சமாதானஞ் செய்துகொண்டு இழந்த ஊர்பொருள்களைத் திரும்பப் பெற்றனன் என்றும் கூறுவர்"

"தனுக்கோடித்துறை அக்காலத்து இவ்வாரிய சக்கரவர்த்திகள் காப்புக்குரியதாயிருந்த தென்பது சேதுகாவலன் என்ற இவர் (ஆரியசேகரன்) சிறப்புப் பெயராற் புலனாம்" (பெருந்தொகை, பக். 602)

அந்தகக்கவி பரராசசிங்கனைக் காணச் சென்றபோது குருடரை மன்னர் பார்க்கலாகாதென்னும் மரபுபற்றித் திரைக்குள் மறைந்தும், வில்லேந்தியும் அவன் இருந்தானாம். கவிஞர் அதனைத் தம் அகக்கண்ணால் அறிந்து (இவர் கூட வந்த சீடன் குறிப்பாகச் சிதம்பரம் எனச் சொல்லித் திரையைத் தெரிவித்தனன் என்பர்) பாடியதாக இரண்டு பாடல்கள் வழங்குகின்றன (பெருந்தொகை 1253, 1254). இம் மன்னன் பொற்கிழி அளித்த போது அந்தகக் கவி பாடிய வெண்பா என ஒன்றும் உள்ளது. அது வருமாறு:

பொங்குமிடி யின்பந்தம் போயதே என்கவிதைக்கு
எங்கும் விருதுபந்தம் ஏற்றதே - குங்குமம் தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம்
பொற்பந்தம் இன்றளித்த போது

(தமிழ்நாவலர் சரிதை 246, பெருந்தொகை 1255)

வீரராகவர் இராமாயணச் சொற்பொழிவாற்றக் கேட்ட பரராசசிங்கன் பாராட்டியதாகக் கட்டளைக் கலித்துறை ஒன்றும் காணப்படுகிறது. (தமிழ்நாவலர் சரிதை 247, பெருந்தொகை 1678). இவருடைய திருவாரூர் உலாவைக் கேட்டுப் பரராசசிங்கன் பாராட்டியுள்ளான் (தமிழ்நாவலர் சரிதை 259, பெருந்தொகை 1681) தமிழ் நாவலர் சரிதையின் பதிப்பாசிரியராகிய ஔவை. துரைசாமிப்பிள்ளை, "பரராச சேகரனான யாழ்ப்பாணத்து வேந்தன் திருவாரூர்த் தியாகேசன்பால் பேரன்பு கொண்டவன். அதனால்

அவன் ஆண்டுதோறும் திருவாரூர்க்கு வந்து போவது வழக்கம். அவனுக்கெனத் திருவாரூரில் தனி மாளிகை இருந்தது என்றும் மாளிகைக்கும் கோயிற்கும் இடையே கரவுவழி (சுரங்கம்) அரச மகளிர் செல்வதற்காக அமைக்கப்பட்டிருந்தது என்றும், அவன் விருப்பத்துக் கிசைந்தே அந்தகக்கவி திருவாரூருலாவைப் பாடினர் என்றும் கூறுவர்" என்கிறார்.

இந்த வண்ணப் பெருந்திரட்டில் இடம்பெற்றுள்ள வண்ணப் பிரபந்தத்தைப பாராட்டிய வெண்பா அங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

அந்தகக்கவி வீரராகவ முதலியாரின் காலம் 17 ஆம் நூற்றாண்டு என்பது வெளிப்படை. ஆனால் பரராசசிங்கனைக் குறிப்பிடும் அறிஞர் அனைவரும் 16 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்கின்றனர். இது மேலாய்விற்குரியது. அந்தகக்கவியால் பாடப்பெற்றவன் 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவனாகவே இருக்க வேண்டும்.

கி.பி. 13 ஆம் நூற்றாண்டு முதல் ஏறக்குறைய 17 ஆம் நூற்றாண்டு வரை ஆரியச் சக்கரவர்த்திகள் மரபு நிலைத்திருந்தது போலும். யாழ்ப்பாணத்தின் விரிவான வரலாற்றில் இப் பரராசசிங்கன் யார் என்பது தெளிவாக உறுதிசெய்யப் பெறவேண்டும்.

## 21. பொன்னரியான் என்னும் மூவரையன்

இத் திரட்டின் ஒன்பதாம் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவன் பொன்னரியான் என்னும் மூவரையன் ஆவான். பொன் அரியான் என்பது இலட்சுமி நாராயணன் என்பதன் தமிழ் வடிவம்; மூவரையன் பதவிபற்றி வந்த ஒரு பட்டப் பெயர் போலும். "திருவேங் கடநாதா மூவரையன் வேந்தா அருளொளி வெள்ளமே" (கண்ணி 451) என்னும் மூவரையன் விறலிவிடு தூதுப் பகுதியால் இது உணரப்படும்.

பாண்டிமண்டலத்தில் சேது சமத்தானத்தைச் சேர்ந்த களவேள்வி நாட்டில் வீரசோழன் என்னும் ஊரினன். இவ்வூர் மதுரைக்குக் கிழக்கே உள்ளது. இப் பொன்னரியானின் தந்தையின் பெயர் இரங்கண்ணன்; தம்பியின் பெயர் அரங்கன்; மாமனாகிய திருவேங்கட நாத மூவரையன் என்னும் திருமலை முத்துவீர மூவரையன் திருமலை நாயக்கரின்கீழ் இருந்த குறுநிலத் தலைவன் ஆவான். இங்கு குறிக்கப்பெறும் விறலிவிடு தூது இத் திருவேங்கடநாதன்மேல் எழுந்ததே. இத் திருமலை நாயக்கரின் காலம் 1623-1656 ஆதலின் இப் பொன்னரியானும் 17 ஆம் நூற்றாண்டினனே.

பொன்னரியான் சாந்தை என்னும் சதுரகிரியில் திருக்கோயில் கொண்டுள்ள அழகியமணவாளப் பெருமாளின் அடியார். இந்தக் குடும்பமே வைணவம் என்பதற்கு இவர்தம் பெயர்களே சான்றாகும். பொன்னரிய மூவரையன் நல்ல தமிழறிஞன் என்று வண்ணம் கூறுகிறது. இவற்றைத் தவிர வேறு உறுதியான வரலாற்றுச் செய்திகள் விளங்கவில்லை.

## 22. முருகப்பெருமான்

இவ் வண்ணப் பெருந்திரட்டில் 23 வண்ணங்கள் முருகப் பெருமானைப் போற்றுவன ஆகும். இவை எந்த எந்தத் தலத்திற்குரியன என்பது வண்ணத் தலங்களின் அகர நிரலில் கூறப்பட்டுள்ளது.

## 23. வடமலையப்பப் பிள்ளை ஐயன் - இரசை

இத் தொகுப்பின் 85 ஆவது வண்ணம் இவரைப் பாட்டுடைத் தலைவராகப் பெற்றது. இரசை என்பது திருவரங்கத்திற்கு அருகிலுள்ள இரையூர் ஆகும். இவ்வூர் திருவானைக்காவிற்கும் அருகில் இருப்பதால் சில இடங்களில் இவர் காவை வடமலையப்பப் பிள்ளை எனவும் கூறப்பெறுகிறார்.

வடமலையப்பப் பிள்ளை சோழநாட்டு இரையூரில் கார்காத்த வேளாளர் மரபில் நாரணக்குடை கோத்திரத்தில் இருப்பவனின் என்பவருக்கு மகனாக 17 ஆம் நூற்றாண்டில் பிறந்தார். மிக்க இளமையிலேயே தாய்தந்தையரை இழந்தார். சிறிய தந்தையால் வளர்க்கப் பெற்றார். மன வேறுபாட்டால் யாருக்கும் தெரியாமல் வீட்டைவிட்டு வெளியேறினார். செல்லும்பொழுது நல்ல வெய்யிலில் களைப்பு மிகுதியால் வழியில் படுத்துத் தூங்கினார். அப்போது நல்ல பாம்பொன்று படம் விரித்து இவர்மீது வெய்யில் படாமல் மறைத்துக் கொண்டிருந்ததாம்.

அவ்வழியே பல்லக்கில் சென்று கொண்டிருந்த தாதாசாரியார் இந்த அபூர்வமான காட்சியைக் கண்டாராம். தாத்தாசாரியார் மதுரை நாயக்க மன்னர்களின் குரு ஆவார். இவர் இப்பையன் மிகப் புகழ்பெற்று விளங்குவான் என உணர்ந்து தன்னுடன் அழைத்துச் சென்று, சிறப்பாகக் கல்வி புகட்டி மன்னனிடம் ஒப்படைத்தார். நாயக்க மன்னன் வடமலையப்பப் பிள்ளைக்குத் திருநெல்வேலிச் சீமை ஆட்சியையும் அய்யன் என்ற பட்டத்தையும் வழங்கினான். இவர் மிகச் சிறப்பாக ஆண்டு வந்தார்.

இவர் ஆட்சிக் காலத்தில் போர்ச்சுகீசியர்கள் திருச்செந்தூர்க் கோயிலின் நகைகளைக் கொள்ளையிட்டு, ஆறுமுகப்பெருமான் திருச்சிலையையும் கைப்பற்றிக்கொண்டு, கடலில் படகில் சென்றனர். அப்போது சுழல்காற்று மோதச் சிலையைப் போர்த்துகீசியர் கடலில் போட்டுவிட்டுப் போய்விட்டனர். திருச்செந்திலாதிபன் வடமலையப்பப் பிள்ளையின் கனவில் தோன்றிக் கடலில் சிலை இருக்கும் இடத்தை அறிவித்தார். இவர் சிலையை மீட்டு மறுபடியும் ஆலயத்தில் நிறுவித் திருக்குட முழுக்காட்டினார்.

இவரைப் போற்றி, இவ்வண்ணத்தைத் தவிர திருக்குருகூர் சிறிய இரத்தினக் கவிராயர் இயற்றிய புலவராற்றுப்படை, பாகை அழகப்பன் இயற்றிய வடமலை வெண்பா என்னும் இரண்டு சிற்றிலக்கியங்களும் பல தனிப்பாடல்களும் கிடைக்கின்றன. வெளிவராமல் மேலும் சில இருக்கவும் வாய்ப்புண்டு. சங்கரலிங்க உலா, முக்கூடற்பள்ளு, சிறைவிடந்தாதி, திருக்கோளூர் தென்திருப்பேரைத் திருப்பணி மாலைகள் ஆகிய சிற்றிலக்கியங்களிலும், புலவர்

புராணத்தும் (சோலைய சாமி, இரு வைணவச் சருக்கங்கள்) இவரைப் பற்றிய குறிப்புகள் உள. பல கல்வெட்டுக்களும் கிடைக்கின்றன (A.R.E. *296, 297, 480/1916; 652/1917* முதலியன).

இரசை வடமலையப்பப் பிள்ளை அவர்களுக்குச் சூரியமூர்த்தி, இருவப்பன் என இரு மைந்தர் இருந்தனர். இவருடைய வழிமுறையினர் இன்றும் நெல்லையில் சிறப்பாக வாழ்வதாகத் தெரிகிறது.

## 25. விட்டலராயச் சோழகன்

இத் தொகுப்பின் பதின்மூன்றாம் வண்ணம் இவனைப் போற்றுவதாகும். இச் சோழகன் திருவிடைமருதூருக்கு அருகில் உள்ள திருபுவனம் என்னும் ஊரைச் சேர்ந்தவன்; சீகாழியில் திருக்கோயில் கொண்டுள்ள சட்டைநாதரின் அன்பன்; பெருவீரன்; தமிழோடு வடமொழியிலும் அறிஞன்; கலைகளில் நாட்டமுள்ளவன். இதற்குமேல் ஒன்றும் உறுதியாகக் கூறுவதற்கில்லை.

## 26. விநாயகர்

திருப்போரூர் வேம்படி விநாயகப் பெருமானே இவ் வண்ணப் பெருந்திரட்டுக்குக் காப்புக் கடவுளாக (முதல் வண்ணம்) அருள்புரிகிறார். இத் தலம்பற்றிய செய்திகளை வண்ணத்தலங்களின் அகரநிரலிற் காண்க.

## 27. வீரச் சின்னையன் வராககிரி

இத் தொகுப்பின் *49* ஆவது வண்ணம் இவனைப் பற்றியதாகும். பெரும்பாலும் இவன் விரூபாட்சிப் பாளையப்பட்டின் தலைவனாக இருக்கலாம். சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தின் டி. *3254* ஆம் ஆவணத்தின வழி விரூபாட்சியின் பாளையக்காரர்களில் ஆறாம்பட்டமும் (கி.பி. *1521-1551*), பதினாறாம் பட்டமும் *(1724-1734)* வராககிரி என்பதை இயற்பெயராகவும் கொண்டவர்கள் இவர்களுள் இந்த வண்ணம் பதினாறாம்பட்டம் திருமலை வராககிரி சின்னப்ப நாயக்கர் மேல் எழுந்ததாகலாம். இது மேலாய்வு செய்தற்குரிய கருதுகோளே ஆகும்.

## 28. வீரப்ப நாயக்கன்

இத்திரட்டின் ஏழாவது வண்ணத்தின் பாட்டுடைத் தலைவன் இவன். இவ் வீரப்பன் கி.பி. *1572* முதல் *1595* வரை மதுரையை ஆண்ட வீரப்ப நாயக்கரே. இவருடைய வரலாற்றை மதுரை நாயக்கர் வரலாற்றில் காண்க.

## 29. வீரராகவ முதலியார், பாலை

இத் தொகுப்பின் *35* ஆவது வண்ணத்திற்குரியவராகிய வீரராகவ முதலியார் சோழ நாட்டைச் சேர்ந்த வேளாளர், வைணவர், நாவாகனப் பெருமாள் நயினார் என்பவரின்

மைந்தர் என்பனவற்றைத் தவிர வேறு செய்திகள் விளங்கவில்லை. இதில் கூறப்பெறும் பாலை எந்த ஊர் என உறுதியாகக் கூறச் சான்றுகள் கிடைக்கவில்லை.

## 30. வெள்ளைச் செட்டியார், தஞ்சை

இத் திரட்டின் 87 ஆவது வண்ணம் தஞ்சை வெள்ளைச் செட்டியாரைப் பாட்டுடைத் தலைவராகப் பெற்றதாகும். இவர் மன்னார்குடி இராசகோபாலசாமிமாட்டுப் பேரன்புடையவர், இருமுடி செட்டியாரின் மைந்தர், தஞ்சையில் இருந்த பெருஞ்செல்வர், பெரு வணிகர் என்பன மட்டுமே அறியப்படும் செய்திகளாகும்.

## 31. வேங்கடேசுரன், மாதை

இத் தொகுப்பின் 66 ஆம் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர் மாதை வேங்கடேசுரன் ஆவார். இவர் பிரபோத சந்திரோதயத்தை மொழிபெயர்த்தவரும் இலக்கண விளக்கத்தை இயற்றுவித்தவருமாகிய மாதைத் திருவேங்கடநாதரின் இரண்டாவது மைந்தர். இவருக்குக் கிருஷ்ணன் என ஓர் அண்ணனும், மணிவண்ணன், இராஜகோபாலன், கனகசபாபதி, வெங்கடராமன் என நான்கு தம்பியரும் இருந்தனர்.

*"கிம்புரிமால் யானைசொர்ண கிர்ஷ்ணபூ பாலனுக்குத்*
*தம்பியென வந்த தயாளுவாய் - அம்புவியில்*
*எண்ணெண் கலைஞானம் எல்லாம் தெளிந்தமணி*
*வண்ணப் பெருமாள் மகிபதியும் - தண்ணளியால்*
*தேசமோர் ஆணைகொண்டு செங்கோன்மை செய்யவந்த*
*ராசகோ பால நராதிகனும் - நேசமிகு*
*துங்கன்அக ளங்கன் துலங்குகன காவியப்ர*
*சங்கன் கனக சபாபதியும் - இங்கிவர்கள்*
*திங்கட் திருமுகத்தில் செங்கமலை கூத்தாடும்*
*வெங்கட்ட ராம விதரணனும் இங்கிவர்கள்*
*பின்னுதித்த நால்வர் பிராணபதத் தம்பியராம்"*

*(மாதை வேங்கடேசன் பணவிடுதூது 58-63)*

வண்ணத்தில் மூத்த சகோதரர் பெயர் பெருமாள் ஐயர் எனக் கூறப்பட்டுள்ளது.

தந்தையாரைப் போலவே இவரும் அமைச்சராக - தென்மதுரை வாசல் பிரதானியாக - மதுரை அரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் காலத்தில் செல்வாக்குடன் இருந்தவர்.

*"முத்ரைபெற்ற ரங்ககிர்ஷ்ண முத்துவீ ரேந்த்ரன்அருள்*
*வைத்தகொற்ற வாசலுக்கோர் மந்திரியாய்"*
*"தேசப்ர தானம்எனும் தென்மதுரை வீட்டுக்கு*
*வாசப்ர தானி மகராசன்"*

மேற்படி தூது 43, 57

இவருடைய சொந்த ஊர் சோழ நாட்டின் மாத்தூர். அந்தணர். திருமால் அடியவர். இவர் கல்விகேள்விகளில் சிறந்து விளங்கியதோடு அறிஞர்களை வரிசையறிந்து பாராட்டுவதில் வல்லவராக இருந்தார். இவ்வுண்மையைப் படிக்காசுப் புலவர் வேறொருவரைப் பாராட்டும் பாடலில் உவமை வாயிலாக,

*"எல்லப்பன் அம்மையப்பன் தருதிருவேங்*
*கடநாதன் எழிற்சீ ராமன்*
*வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே*
*சுரன்போல வரிசை செய்தே*
*செல்லத்தம் பியருடனே கத்தூரி*
*மகன்கறுப்பன் தெருவீ திக்கே*
*பல்லக்குத் தான்சுமந்தான் இதுநமக்கோர்*
*ஆயிரம்பொன் பரிசு தானே"* (பெருந்தொகை 1729)

ஆய்வறிஞர் மு. இராகவையங்கார் அவர்கள் இந்த வேங்கடேசுரனை மாதைத் திருவேங்கடநாதர் எனவே மயங்கியுள்ளார். (காண்க: பெருந்தொகை 1729 இன் விசேடக் குறிப்பு)

இந்த வண்ண ஆசிரியராலேயே இயற்றப்பெற்ற மாதை வேங்கடேசுரன் பணவிடுதூது என்னும் சிற்றிலக்கியத்தையும் பெற்ற புகழாளர். இவர் காலம் 17 - ஆம் நூற்றாண்டு.

## 32. வேலச்சின்னோவையன், விசையகிரி

இவ் வண்ணப் பெருந்திரட்டின் 28 ஆவது வண்ணத்தின் பாட்டுடைத் தலைவர் பழனிச்சமீன் வேலைச்சின்னோவையன் ஆவார். இவர் கவிஞரும் ஆவார். இவர் வரலாற்றைப் பாடினோர் வரலாற்றில் (22) காண்க.



# உரையில் எடுத்தாளப்பெற்ற நூல்களின் அகரநிரல்

அகநானூறு
அண்ணாமலை சதகம்
அந்தாலந்தீர்த்த செழியதரையன் மஞ்சரி
அபிராமி அந்தாதி
அபிராமி பதிகம்
அம்பிகாபதி கோவை
அமிர்தகவிராயர் ஒருதுறைக்கோவை
அருணகிரிநாதர் புராணம்
அருணாசல புராணம்
அருளாளதாசர் பாகவதம்
அவ்வை குறள்
அவிநாசித் தலபுராணம்
அற்புதத் திருவந்தாதி
அறப்பளீசுர சதகம்
அறுவகை இலக்கணம்
அறுவகை இலக்கணம் (சாத்துகவி)
ஆனந்தரங்கன் கோவை
இரகுவமிசம்
இரணியவதைப் பரணி
இரத்தினச் சுருக்கம்
இரத்தினமூர்த்தி விறலிவிடு தூது
இராசராச சோழன் உலா
இராமய்யன் அம்மானை
இராமாயணம் - உத்தர காண்டம்
இலக்கணக்கொத்து
ஈங்கோய்மலை எழுபது
உதயம் (திருலோக சீதாராம்)
உவமான சங்கிரகம் (இரத்தினகவி)
உவமான சங்கிரகம் (கடிகைப் புலவர்)
உவமான சங்கிரகம் (செந்தமிழ்)
ஏழாம் இலக்கணம்
ஐங்குறுநூறு
ஒலியலந்தாதி (வண்ணச்சரபம்)
கங்காதரச் செழியன் திரு வாணி வாது
கப்பற்கோவை
கபிலமலைக் கோவை
கம்பர் புராணம் (காஞ்சி)
கம்பர் வாழ்த்து
கம்ப ராமாயணம்
கயிலாச நாதர் சதகம்
கல்லாடம்
கலிங்கத்துப் பரணி
கலித்தொகை
கலைசைக் கோவை
காசிக் கலம்பகம்
காசி காண்டம்
காஞ்சிப்புராணம்
காஞ்சிப் புராண உரை
காந்தியம்மை பிள்ளைத் தமிழ்
காவடிச் சிந்து (ரெட்டியார்)
கும்பேசர் குறவஞ்சி
குமாரலிங்க வேந்தன் காதல்
குமாரலிங்கன் குறவஞ்சி
குருபரதத்துவம்
குலோத்துங்க சோழன் உரை
குலோத்துங்க சோழன் கோவை
குற்றாலக் குறவஞ்சி
குற்றாலக் கோவை
குறிஞ்சிப்பாட்டு
குறுந்தொகை
கூர்ம புராணம்
கூளப்ப நாயக்கன் காதல்
கூளப்ப நாயக்கன் விறலிவிடு தூது
கொக்கோகம்
கொங்கு வேளாளர் காணிப்பாடல்
கொடுமணல் கந்தசாமி காதல்
கொடுமணல் பொன்னையன் காதல்
கோயிற் புராணம்

கடம்பவன புராணம்
கடலூர் கருணைகிரி முத்தையன் பிள்ளைத்தமிழ்
கணபதி ஆயிரம்
கந்தபுராணச் சுருக்கம்
கந்தபுராணம்
கந்தர் கலிவெண்பா
கந்தரலங்காரம்
கந்தரனுபூதி
சதக உந்தி
சமுத்திர விலாசம்
சிங்கார ரச மஞ்சரி
சிங்கைச் சிலேடை வெண்பா
சித்தர் பாடல்
சித்தாந்தப் பஃறொடை
சித்திர மடல்
சிதம்பரச் செய்யுட் கோவை
சிதம்பர மும்மணிக்கோவை
சிதம்பரேசுரர் விறலிவிடு தூது
சிராமலைக் கோவை
சிலப்பதிகாரம்
சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரை
சிவகங்கை இராசேந்திர பூபதி காதல்
சிவகிரி வேலாயுதசுவாமி பிள்ளைத்தமிழ்
சிவஞான சித்தியார்
சிவஞான போதம்
சிவப்பிரகாச விகாம்
சிவ மகாபுராணம்
சிவமலைக் குறவஞ்சி
சிறுபாணாற்றுப்படை
சீகாழிக் கோவை
சீகாளத்திப் புராணம்
சீவக சிந்தாமணி
சீவக சிந்தாமணி நச்சர் உரை
சுசீல வள்ளல் அம்மானை
சுப்பிரமணிய நூல்
கோயிற் றிருப்பண்ணியர் விருத்தம்
கோவிந்த சதகம்
கௌமாரத் தொகை
கௌமார முறைமை
கௌமார அந்தாதி
சங்கரமூர்த்தி கோவை
சடகோபர் அந்தாதி
சத்திய வாசகம்
தஞ்சைவாணன் கோவை
தஞ்சைவாணன் கோவை உரை
தட்சிணாமூர்த்தி திருவருட்பா
தண்டபாணி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்
தண்டியலங்காரம் உரை
தணிகைப் புராணம்
தமிழ் நாவலர் சரிதை
தனிப்பாடல்
தாகந்தீர்த்த செழியதரையன் கோவை
தாகந்தீர்த்த செழியன் பிள்ளைத்தமிழ்
தாயுமானவர் பாடல்
தாயுமானவர் மடல்
திரிசிராமலைக் கோவை (அ.சு. பிள்ளை)
திருக்கரந்தை வருக்கக்கோவை
திருக்கருவைத் தலபுராணம்
திருக்கருவை வெண்பாவந்தாதி
திருக்கழுக்குன்றக் கோவை
திருக்கழுக்குன்றப் புராணம்
திருக்குற்றாலப் புராணம்
திருக்குறள்
திருக்குறள் மணக்குடவர் உரை
திருக்கோவையார்
திருக்கோவையாருண்மை
திருச்செங்கோட்டுப் புராணம்
திருச்செந்திற் கலம்பகம்
திருச்செந்திற் குஞ்சரி மாலை
திருச்செந்திற்கோவை (வண்ணச்சரபம்)

செங்கோட்டு வேலவர் பிள்ளைத்தமிழ்
செண்டலங்காரன் விறலிவிடு தூது
செவ்வைச் சூடுவார் பாகவதம்
சென்னிமலையாண்டவர் காதல்
சென்னைக் கலம்பகம்
சேக்கிழார் புராணம்
சேதுபதி விறலிவிடு தூது
சேதுபுராணம்
சேந்தனார் திருப்பல்லாண்டு
சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்
சேறைத் தலபுராணம்
சௌந்தரிய லகரி
ஞாயிறு ஆயிரம்
தக்கயாகப் பரணி
தக்கயாகப் பரணி உரை
தஞ்சைப் பெருவுடையார் உலா
திருப்போரூர் ஸ்ரீகந்தர் சிந்து

திருமகளந்தாதி
திருமந்திரம்
திருமயிலைப் புராணம்
திருமாலந்தாதி
திருமுருகாற்றுப்படை
திருவகுப்பு
திருவரங்கக் கலம்பகம்
திருவரங்கத் தந்தாதி
திருவரங்கத் திருவாயிரம்
திருவரங்கத்து மாலை
திருவருணைக் கலம்பகம்
திருவல்லைக் கந்தர் காதல்
திருவாசகம்
திருவாதவூரடிகள் புராணம்
திருவாரூர்க் கோவை
திருவாரூர் நான்மணிமாலை
திருவாலவாயுடையார்
திருவிளையாடற் புராணம்

திருச்செந்திற் சிலேடை வெண்பா
திருச்செந்திற் பதிற்றுப் பத்தந்தாதி
திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்
திருச்செந்தூர்ப் புராணம்
திருச்செந்தூரகவல்
திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி
திருநாகைக் காரோணப் புராணம்
திருநெல்வேலிப் புராணம்
திருப்பரங்கிரிக் கோவை
திருப்பரங்கிரிப் புராணம்
திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்
திருப்புகழ்
திருப்பூவணநாதர் உலா
திருப்போரூர்ப் சந்நிதிமுறை
திருப்போரூர்ச் புராணம்
திருப்போரூர் வெண்பாமாலை
நன்னூல்
நாமதீப நிகண்டு
நால்வர் நான்மணிமாலை
நாலடியார்
நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
நான்மணிக் கடிகை
நிட்டை விளக்கம்
நீதிநெறி விளக்கம்
நெடுநல்வாடை
நெல்லை அலங்கார சட்கம்
நைடதம்
பட்டிநாயக மாலை
பதிற்றுப் பத்து
பரங்கிரி - அலங்காரம்
பரிபாடல் - பரிமேலழகர் உரை
பழமலைக் கோவை
பழனாபுரிமாலை
பழனித் தலபுராணம்

பழனித் திருவாயிரம்

திருவாவடுதுறைக் கோவை
திருவிசைப்பா
திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்
திருவிலஞ்சி முருகன் பிள்ளைத் தமிழ்
திருவிளையாடற் பயகர மாலை
திருவிளையாடற் புராணம்
திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா
திருவெங்கைக் கோவை
திருவேங்கட சதகம்
திருவேங்கடத் தந்தாதி
திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு
திருவையாற்றுப் புராணம்
தில்லைபாதி நெல்லைபாதி
தினகர வெண்பா
துகளறு போதம்
தேவாங்க புராணம்
தேவாரம்
தேவையுலா
தொல்காப்பியம்
தொல்காப்பியம் இளம்பூரணம்
தொல்காப்பியம் பேராசிரியம்
நண்ணாவூர் சங்கமேசுரசுவாமி
விறலிவிடு தூது
நம்பியகப்பொருள்
நளவெண்பா
நற்றிணை
மயில் விருத்தம்
மயிலாசலக் கலம்பகம்
மனுநெறித் திருநூல்

மாறன் கோவை
மாறனலங்காரம் - உரை
மீனாட்சியம்மைக் கலிவெண்பா
மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ்
முத்துக்குமாரசாமிப் பிள்ளைத்தமிழ்

பாஞ்சாலி சபதம்
பாண்டிக் கோவை
பாம்பலங்காரர் வருக்கக் கோவை
பாவநாசம் உலகம்மையந்தாதி
பிங்கல நிகண்டு
பிரபந்தத் திரட்டு
பிரபந்த தீபிகை
பிரபுலிங்க லீலை
புசுண்டர் நாடி
புதுவைத் திரிபுரசுந்தரி பிள்ளைத் தமிழ்
புலவர் புராணம்
புலவராற்றுப்படை
புறநானூறு
பூந்துறைப் புராணம்
பூவாளூர்ப் புராணம்
பெரிய புராணம்
பெருங்கதை
பெருந்தொகை
பேரூர்க்கோவை (சிரவை)
பேரொலியலந்தாதி
பொருநராற்றுப்படை
பொன்வண்ணத் தந்தாதி
மச்ச புராணம்
மணிமேகலை
மதுரைக் கலம்பகம்
மதுரைச் சொக்கநாதர் உலா
வாட்போக்கிநாதர் உலா
விக்ரம சோழன் உலா
விசையகிரி வேலச்சின்னோவையன்
பிள்ளைத் தமிழ்
விநாயக புராணம்
வியாசைக் கோவை
வில்லி பாரதம்
வில்லைப் புராணம்
விஜயன் அப்துல் ரகிமான் கோவை

முருகப்பெருமான் திருவிளையாடற் கலிவெண்பா
மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை
மூவரையன் விறலிவிடு தூது
மேருமந்தர புராணம்
மேழிவிளக்கம்
யாப்பருங்கலக் காரிகை - உரை
வண்ணத்தியல்பு
வருணகுலாதித்தன் மடல்
வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ்
வீரை நவநீத கிருஷ்ணன் கலம்பகம்
வேதாரணிய புராணம்
வையாபுரிப் பள்ளு
ஸ்ரீ தேசிகப் பிரபந்தம்
க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்

## வடமொழி நூல்கள்

யோக சிகோபநிஷத்
வியாச பாரதம்
ஸ்ம்ருதி ஸாரோத்தர ரத்னபரீக்ஷா
ஹாலாஸ்ய மஹாத்ம்யம்



# 1. திருப்போரூர் வேம்படி விநாயகர் வண்ணம்

புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார் அவர்களால் இயற்றப்பெற்ற இவ் வண்ணம் ஊ. புஷ்பரத செட்டியாரது கலாரத்னாகர அச்சுகூடத்தில் சுக்ல வருஷம் (1869) கன்னிமதி (புரட்டாசி) பூர்வபட்சம் அச்சான வண்ணத்திரட்டில் உள்ளது. இப் பதிப்பில் முன்னுரை முதலிய எதுவுமே இருந்ததாகத் தெரியவில்லை. இத்துடன் திருப்போரூர் தியாக கயிலாசநாதர் வண்ணம் (மதிவளர் செஞ்சடையார்), திருப்போரூர் ஆண்டவர் வண்ணம் (ஓங்கும் பொன்செறி) என்னும் இரு வண்ணங்களும் உள்ளன. இப்பதிப்பில் வண்ணங்களின் துறைக்குறிப்புகளும் இல்லை.

92 வண்ணங்களைக் குறிப்புரையோடு பெற்று விளங்கும் இந்தப் பதிப்பில் இது விநாயகர் வண்ணமாக இருப்பதால் முதலில் வைக்கப்படுகிறது. மற்றவை அனைத்தும் அகப்பொருள் அமைதிக்கு ஏற்பவே வரிசைப்படுத்தப்படும்.

இவ் வண்ணம் செறிவான நடையை உடையது. ஆண்கலையில் விநாயகரின் பெருமையும் திருப்போரூர்த் தலச்செய்திகளும் கூறப்பெற்றுள்ளன. கலவிமகிழ்தல் என்னும் அகப்பொருள் துறையில் அமைந்த பெண்கலையில் காட்சி, ஐயம், துணிதல், முன்னலையாக்கல், வறிதுநகை தோற்றல், இடம்பெற்றுத் தழாஅல் என்னும் துறைகளையடுத்து மெய்யுறுபுணர்ச்சி கூறப்படுகிறது. அகப்பொருள் கூறும் கைக்கிளை இயற்கைப் புணர்ச்சி ஆகிய இரு கிளவிகளும் சேர்ந்தது இவ் வண்ணத்தின் பாடுபொருள். இதன் தொங்கல்களில் 6, 7, 8 ஆகிய தொங்கல்களுக்குத் தாந்ததன தானதன தத்தனா என்ற குழிப்பு மிகப்பெருந்தும்.

இவ் வாசிரியர் தன் பெயரை வாக்கேய முத்திரையாகப் பெரும்பாலும் வண்ணத்தின் மூன்றாம் தொங்கலில் அமைக்கும் வழக்கம் உள்ளவர். இதிலும் அம் முத்திரை இடம்பெற்றுள்ளது.

பண்டைய அகப்பொருளில் தலைவிக்குத் தலைவன்முன் கூற்று நிகழ்வது மிகமிகச் சிறுபான்மை. ஆனால் வண்ணங்களில் உள்ளக் காதலைவிட உடற்கலப்பு அதிகமாக விவரிக்கப்படுவதால் தலைவியும் தன் காமமிகுதியைக் கூறுவதாக அமைக்கப்பெறும்.

வடமொழி நாயிகாபேதத்தின்படி இந்த விநாயகர் வண்ணத்தலைவி பிரகற்பா நாயகி எனப்படுவாள். இவள் இலக்கணம் : "தவன்உருகக் கலவிசெயும் சமர்த்தி பிரகற்பை எனத்தக்கபெண்."

"பொறிபல வும்சம இன்பம் திளைக்கப் புளகெழும்என்
அறிவணு வேனும் அகலாது தன்வசத் தாழ, அன்பில்
குறிமத கேளி நடாத்தும் இவளைக் கொடுத்துளதால்
செறிவுற நான்முன் சுகவனர் வெற்பினில் செய்தவமே"

இவ் வாசிரியர் தன் பெயரை வாக்கேய முத்திரையாகப் பெரும்பாலும் வண்ணத்தின் மூன்றாம் தொங்கலில் அமைக்கும் வழக்கம் உள்ளவர். இதிலும் அம் முத்திரை இடம்பெற்றுள்ளது.

பண்டைய அகப்பொருளில் தலைவிக்குத் தலைவன்முன் கூற்று நிகழ்வது மிகமிகச் சிறுபான்மை. ஆனால் வண்ணங்களில் உள்ளக் காதலைவிட உடற்கலப்பு அதிகமாக விவரிக்கப்படுவதால் தலைவியும் தன் காமமிகுதியைக் கூறுவதாக அமைக்கப்பெறும்.

வடமொழி நாயிகாபேதத்தின்படி இந்த விநாயகர் வண்ணத்தலைவி பிரகற்பா நாயகி எனப்படுவாள். இவள் இலக்கணம் : "தவன்உருகக் கலவிசெயும் சமர்த்தி பிரகற்பை எனத்தக்கபெண்."

# 1. திருப்போரூர் வேம்படி விநாயகர் வண்ணம்

## புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார்

### கலவி மகிழ்தல்

தானானந் தனதன தந்தத்
தனத்த தந்தன தனத்த தந்தன
தானானந் தனதன தந்தத்
தனத்த தந்தன தனத்த தந்தன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தான தந்தன
(தொ) தாந்தன தனாதன தனத்தனா

வாழ்வாருஞ் சரவச ரங்கட்
கநுக்ர கம்புரி தனிப்பெ ரும்பொரு -
ளாய்வீறும் பரசுக இன்பப்
பெருக்க டங்கலும் உருக்கொ ளும்பதி;
வளர்ஒரு கலைமதி சுரநதி மதுநிறை
இதழியொ டரவணி வேணிஅங்கணர்;

நால்ஆறும் புகலுவ தங்கைத்
தலத்த ருங்கனி எனத்தெ ருண்டவர்;
நாடோறுந் திருவுடன் இன்புற்-
றிருக்க அஞ்0சல்செய் அருட்சு தந்திரர்
நவில்சிர புரமுனி வரர்முத லியபெரி -
யவர்உரை திருமுறை தாம் அணிந்தருள்

வாகாருஞ் சிகரநெ டும்பொற்
கிரிக்க ணம்பொரு வலத்த எண்புயர்;
தார்சூடும் திவியசு கந்தக்
குழற்ப ரம்பரை, அனைத்தை யுங்கரு
தருகயல் விழி, உமை, கவுரி, விமலை, இம
மலைமகள் மகிழ்கயி லாசசுந்தரர்
ஆய்ந்தவர் பராவஅ ருள்புத்ரனார் 1

வானோருந் தவசிக ளுந்தத்
தமக்கு ளந்தனில் நினைத்தி டுஞ்செய
லேயாவுந் தடையற முந்திப்

பலித்தி டுந்தகை கிடைப்ப வும்பெரு
வலிகிளர் அசுரர்கள் கொடியவர் நினைபவை
தடையது படவுமு னாள் இறைஞ்சிய
நீடோலஞ் செவியுற முந்திக்
கனத்தந ந்தியின் மிசைக்கொ டெண்டிசை
ஆகாயந் தவழும்அ னந்தக்
குவட்டு டன்பொலி வளத்த மந்தர
நெடுமலை யிடைஉயர் பிரணவ மதகிரி
உருவினில் உளதது காணஅம்பிகை
மாதேவன் தனைவின வும்பற்
றினுக்கி சைந்துமை தனைப்பு ணர்ந்திட
வேயூறுங் கடதட கும்பப்
புழைக்கை வண்கய முகத்தொ டுந்தனி
வர, இமை யவர் தலை மிசைஇரு கரமொடு
நிறைதுதி செய, அருள் கூரும்ஐங்கரர்;
ஆண்டவர்; எலாம்உத வும் நித்தனார் 2

சூழ்வாசம் புனைமலர் கொண்டுட்
களித்து மென்கழல் பழிச்சும் அன்பர்கள்
ஆதாரம் பெறஅவர் நெஞ்சத்
திருத்தும் அங்குச கரத்ரி யம்பகர்
சொலும்எழில் வலபையை மகிழ்இறை பிறைசடை
அணிகண பதி; சிவ யோகஅந்தணர்
தேன்ஊறுஞ் சததள கஞ்சத்
தினைப் பொருந்திரு உளத்த மர்ந்தெழு
ஞானானந் தமிகும்அ கண்டச்
சுடர்ப்பி ழம்பொளி விளைக்கும் மங்கள
ஜெயசுப கரநய அதுலஅ நகர்; இணை
அடிதொழு பவர்நினை பேறுதந்தவர்
சூர்மாளும் படிஅயில் செங்கைத்
திரித்து முன்பொரு தடக்கி, அண்டர்க
ளானோர்தஞ் சிறைவிடும் வென்றிப்
புயத்தர்; குஞ்சரி குறக்கு லந்தரு
துடியிடை மருவிய கணவரை ஒருதுணை
எனமகி ழுவர்தமிழ் மாலைசந்ததம்
வேய்ந்திடு சபாபதி மனத்தினார் 3

தோய்தேன்உண் டளிமுர லுங்கட்
சிவத்த பங்கயம் இருக்கும் இந்திரை
மேனாள்கொண் டிடுமுனி வெஞ்சொற்
றிறத்தின் அஞ்சலை எனப்பு கன்றவள்
துயர்கெட, அருமறை முதலினில் அநுதினம்
மருவுவ தெனஉல கோர்பணிந்திட
வாள்ஆருந் தளிர்செறி நிம்பத்
தருக்க ணந்தழை நிழற்ற, உம்பரும்
நீர்ஆர்தொண் டரும்நிதம் வந்திக்
கமிக்க துந்துபி ஒலிக்க எங்கணும்
மகிழ்வுடன் உறைபவர்; மநுநெறி புகல்ஒரு
முதியவள் பரவிய வாகுவிஞ்சையர்
தூய்வானந் தொடுசிக ரந்தட்
ட, உற்ற செங்கதிர் கொழிக்க அஞ்சுடர்
பூமாதின் சிரமகு டம்பெற்-
றெனச்சி றந்தொளி தழைக்க விஞ்சிய
சுருதியின் அடிமுடி நிலவுப்ர ணவகிரி
வளநிறை தருசம ராபுரந்தனில்
வேம்படி விநாயகர் புரிக்கணே 4

ஏழ்பாரும் புகழ்செய ஐந்தக் -
கினிக்குள் நின்றயன் இயற்ற ருந்தவம்
நீள்காலம் பெரிதுபு ரிந்திட் -
டமைத்த, இங்கித விசித்ர சுந்தர
இளமதி நுதல்அதி சயவலி; விகசித
பருவநல் ரதி; அழ கார்பசுங்கிளி;
மாலாகுஞ் சுரதவ சந்தப்-
ரசித்த ரம்பையின் நயத்த ரஞ்சனி;
"ஓகோ ! என் தவபலன் இங்கிட்
டழைத்து வந்தது நிகர்த்த பைங் (கனி);
வசிகர அபிநய மிகுவித ரணசுப
குணவதி இவள்" என வேநினைந்தனன்;
ஏரார்மென் பதமலர் இந்தப்
புவித்த லந்தனை மிதித்தி டுந்தகை
யாலேநந் தரம்இவள் என்றச்
சம்அற்று நண்புற அடுத்து நின்றெழில்

இணைமுலை களைஒரு பிடிஇடை பொறைகொளல்
அரிதரி தெனஉரை யாடிவந்திட,
ஏய்ந்தது கைகூடும்ஓர் நகைப்பினால் 5

ஈடாகுந் தனதிது என்றுட்
குறிப்பு ணர்ந்தச மயத்தில் என்றனொ
டேதானும் பிடியில்ந டத்தப்
பொழிற்கண் வம்பலர் பரப்பும் மஞ்சமீ
தெனதரு கினில்வெகு விபவச ரசசுக
மதுபெரு கிடஉற வாய்இருந்துகை
யால்நீளுங் குழலைஇ ணங்கப்
பகுத்த லங்கலை எடுத்த ணிந்தனள்;
பாகோடுஞ் சுருள் மென்றற்
புதத்தொ டுங்கவுள் அணைத்த தம்பல
மதுருசி தயைசெய்து, கரிசன மொடும் "உனை
அலதொரு பொருளிலை காணும்" என்றனள்;
யாதோஇங் குனை அடை யுங்கற்
பெனக்கி சைந்தது நினைத்தி டுந்தரம்
ஆமோநன் றெனைமரு வும்பட்
சமுற்று வந்தென உரைக்க அன்புடன்
இருதன மிசைவிசி கவசம தனைநெகிழ்
வுறவிடு தலும், அதில் நீடிஎண்டிசை
ஈண்டும்உ யர்வாசம்எ னசொற்பமோ? 6

தாழாவெஞ் சிறுகண்நெ டுங்கைக்
களிற்ற கிம்புரி மருப்பி ணைந்தென
வார்தாவும் புனுகுக தம்பத்
தனத்தை என்புயம் நெருக்கி அங்கையில்
தழுவுவள் இறுக; என் மடிமிசை விழுவள்; பின்
எழுவள்; இ னிதுபரி யாசமும்பல
வாய்பேசுங் கவுளினில் அங்கைப்
புடைப்பள்; கொஞ்சுவள்; கடிப்பள்; மென்சுருள்
நீர்தாரும்; ததி" என மிஞ்சிப்
பதைத்து மென்றிதழ் சுவைப்பள்; "வங்கண
வரிசைகொள் புருஷருள் ஒருநவ மணி" எனும்;
"மதன்நிகர் அல" என வேபுகழ்ந்திடும்;

சார்பாகுங் கழைமத னன்சொற்
கலைக்கு றும்பொருள் தொடச்சி ணுங்குவள்;
தான்நாணுந் திறம்இனி இன்றித்
தொடுக்க விஞ்சையை முடுக்க என்பள்;இ -
தயம்மகிழ் கொளமுகம் மலர்தர விரைகுவள்;
கரிகர மதுசெய வேநயம்பெற
வாய்ந்தணை யமாமயல் எழுப்புவாள்; 7

தாதாருங் குழல்இவள் தந்த்ரப்
பகட்டை என்சொல? உரைக்க டங்குமொ?
ஆனாலும் சிலசொலு வன்;புட் -
குரற்ப யின்றொரு நொடிப்பி ணங்குவள்;
தனைஅடி பரவிட உடன்அது நினைகிலள்;
அகம்உரு குவள்; களி யால்விருந்துண
வாவாஎன் றணுகிம யங்கிப்
படுப்பள் என்கையில்; விழிப்பள் அன்பொடு;
"வாராய்இங் கிருவரும் ஒன்றிச்
சுகிப்பம்" என்றெனை அணைத்தி ணங்குவள்;
வரவர உடல்புள கிதம்உறும் என, மறு
தரம்ஒரு விசைமய லாகி, முன்படி
தாராளஞ் சொலி, இசை சந்தக்
கலிப்ப தந்தரு வனக்க ருங்குயில்
போலேவண் டமிழ்மொழி சிந்துப்
படித்த னந்தமும் நடத்தும் விந்தைகள்
தமைஇது வகைஎன உரைசெயல் அரிதவ -
ளுடன்என தொருமன மேயறிந்துள
வாஞ்சைஅ நுபோகமும் மறப்பதோ ? 8

## தொங்கற்றாழிசை

ஆய்ந்தவர் பராவஅ ருள்புத்ரனார்
ஆண்டவர் எலாம்உத வுநித்தனார்
வேய்ந்திடு சபாபதி மனத்தினார்
வேம்படி விநாயகர் புரிக்கணே
ஏய்ந்தது கைகூடுமோர் நகைப்பினாள்
ஈண்டும்உ யர்வாசம்ள னசொற்பமோ?
வாய்ந்தணை யமாமயல் எழுப்புவாள்
வாஞ்சைஅ நுபோகமும் மறப்பதோ ?

▲▲▲▲

# 1. திருப்போரூர் வேம்படி விநாயகர் வண்ணம்

## குறிப்புரை

1. வாழ்வு ஆரும் - உயிர் வாழ்க்கையைப் பெற்றுள்ள ; சர அசரங்கட்கு - இயங்குதிணை நிலைத்திணை உயிர்கட்கு; அநுக்ரகம் புரி - கருணை காட்டுகின்ற ; வீறும் - மிகுதியான ; பரசுக இன்பப்பெருக்கு அடங்கலும் - மோட்சமாகிய நிறை பேரின்பமே முழுமையாக, உம்மை முற்றும்மை ; பதி - பரம் பொருள்; "பந்தம் அறுக்கும் ஆனந்த மா கடலே" என்பர் மணிவாசகர் (திருவாசகம் 22-9); வளர் ஒரு கலை மதி-வளர்கின்றதும் ஒரு கலையை மட்டும் உடையதும் ஆகிய பிறைச்சந்திரன்; சுரநதி-கங்கை ; மது-தேன்; இதழி-கொன்றை ; அரவு அணி; வேணி-சடை ; அங்கணர்-சிவபிரான்; மதி, நதி, அரவி மூவிடத்தும் எண்ணும்மைகள் தொக்கன; நால்ஆறும்-நான்கு மறைகளும் ஆறு அங்கங்களும், வேதங்களாவன-இருக்கு, யஜுசு, சாமம், அதர்வணம் என நான்கு; இவற்றிற்கு உறுப்பாகிய வேதாங்கம் ஆறு. அவை சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம் என்பனவாம். இவற்றுள் வேதத்தின் உச்சரிப்பு முறைகளை விளக்குவது சிட்சை, வைதிகச் சடங்குகளின் செய்முறையை அறிவுறுத்துவது கற்பம்; வேதங்களுக்குரிய எழுத்து, சொல் ஆகியவற்றின் இலக்கணம் வியாகரணம் எனப்படும். வேதத்திற் பயின்ற சொற்களின் பொருளை உறுதிப்படுத்துவது நிருத்தம் ஆகும். சந்தோபிசிதம் என்பது வேதத்தின் யாப்பிலக்கணம்; வைதிகச் சடங்குகளைச் செய்தற்குரிய காலத்தைத் தீர்மானிக்கக் கோள்நிலை கூறும் நூல் சோதிடம் எனப்படும்."வினைகெட வேதம் ஆறங்கம் பிழையாவண்ணம் பண்ணியவற்றால் பெரியோர் ஏத்தும் பெருமான்" (தேவாரம் 1-42-7); அங்கைத்தலத்து அருங்கனி என உள்ளங்கை நெல்லிக்கனியைப் போன்று; தெருண்டவர் - ஐயமற்றுத் தெளிவாக அறிந்தவர்; அஞ்சல்செய் - அஞ்சாதே என அருள்புரியும், அபயம் அருளும் என்றபடி; சுதந்திரர் - மற்றவர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டாத தலைமை வாய்ந்தவர்; சிரபுர முனிவரர் - சீகாழியில் தோன்றியருளிய திருஞானசம்பந்தர், சிரபுரம் என்பது அத்திருத்தலத்திற்குரிய பனிரெண்டு திருநாமங்களுள் ஒன்று.

வாகு ஆரும் - அழகிய; சிகர-கொடுமுடிகளையுடைய ; பொற்கிரிக் கணம் - பொன்மலைக்கூட்டம், இல்பொருளுவமை; வலத்த - வலிமை மிக்க ; எண் புயர் - எட்டுத் தோள்களை உடையவர், "போர் கொண்ட எண்தோட் பொலங்குவடு" (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்க் காப்பு) ; திவிய - திவ்விய, இனிய ; சுகந்த - நறுமணமிக்க; பரம்பரை - அனைத்திற்கும் மேற்பட்ட பராசக்தி ; கரு தரு - கருப்பமாகப் பெற்றளிக்கும், சந்தம் நோக்கி வல்லினமெய் தொக்கு இயல்புப் புணர்ச்சியாயிற்று; "கருதரிய கடலாடை உலகுபல அண்டமும் கருப்பமாய்ப் பெற்றகன்னி" (சிவப்பிரகாசர் தனிப்பாடல்); கயல்விழி-அங்கயற்கண்ணி; விமலை - மலங்கள் அற்றவள்; கயிலாச சுந்தரர் - திருப்போரூர்ச் சிவபெருமான் பெயர்; ஆய்ந்தவர்-சிந்திப்போர்; ஆய்ந்தவர் பராவுவதற்காகக் கயிலாசசுந்தரர் அருள்புத்ரன், ஆய்ந்தவர் பராவ அருளிகின்றவராகிய கயிலாசசுந்தரர் புத்ரன் என இருவகையாகவும் கொள்ளலாம்; "கனிய நினைவொடு நாள் தொறும் காமற் படும்அடியார்க் கினியன்" (மூத்தநாயனார் திருவிரட்டைமணி மாலை 6).

2. தத்தமக்கு உளந்தனில்; பலித்திடும் தகை - நிறைவேறல்; அசுரர்களும் கொடியவர்களும் என எண்ணும்மை விரிக்க ; பெரும்பாலும் வானோருக்கு அசுரரும், தவசிகட்குக் கொடியரும் பகையாதலின் நிரனிறையாகவும் கொள்ளலாம்; "புகர்இல்பொருள் நான்கினையும் இடர்தீர்ந் தெய்தப் போற்று - நருக் கறக்கருணை புரிந்தல் லார்க்கு நிகரில்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும் நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்." ( விநாயக புராணம் - கடவுள் வாழ்த்து 1) ; படவும் முன் நாள் ; நீடு ஓலம் - பெரிய அபயக்குரல்; நந்தியின் மிசைக்கொடு - சந்தம் நோக்கிய விரித்தல் விகாரம்; எண்டிசை ஆகாயம் தவழும் அனந்தக் குவட்டுடன்பொலி வளத்த - எட்டுத் திக்குகளிலும் செழிப்பினை உடைய ; மதகிரி - மதத்தையுடைய மலையைப் போன்ற யானை, மாதேவன் தனை (தன்னை) அம்பிகை வினவும் (வேண்டும்) பற்றினுக்கு (விருப்பத்திற்கு) இசைந்து, உனமதனைப் புணர்ந்திடவே என்பது முடிபு; ஊறும் கட தட - பெருகும் மதநீர் பாய்ந்த வழிச் சுவட்டினையும்; கும்ப - மத்தகத்தையும்; புழைக்கை - உள்தொளையை உடைய துதிக்கையையும் பெற்ற ; வண - வளப்பம் பெற்ற; கயமுகத்தொடும் - யானையின் வதனத்தையுங் கொண்டு, உம்மை மனித உடற்பகுதியைத் தழுவியது; தனிவர - ஒப்பற்றவராக உதித்தருள ; "பிடியதன் உருஉமை கொளமிகு கரியது வடிவொடு தனதடி வழிபடு மவரிடர் கடிகன் பதிவர அருளினன்' (தேவாரம் 1- 123 - 5); பிரவை மதகிரி:

" பூமாது தனைமணந்த புயல்வண்ணப் பெருமபளும் புலவர் போற்றும்
நாமாது தனைமணந்த நான்முகனும் போர்மாதும் நயக்கும் எண்டோள்
கோமானும் தானேஎன் றுணர்த்துதற்கே பிரணவகுஞ் சரமாய்த் தோன்றி
மாமலின் முகத்தானை உயிர்தானை நினைந்திறைஞ்சி வழுத்து வாமே".

(விநாயக புராணம் - கடவுள்வாழ்த்து 3);

(நித்தனார் - என்றும் அழிவற்றவர், சத்துப் பொருள்)

3. உள்களித்து- (அன்பினால் தோன்றும்) உவகையோடு; நெஞ்சத்து இருத்தும்; அங்குச கர - யானைத்தோட்டியை ஏந்திய கைகளை உடைய ; த்ரியம்பகர் - முக்கண்ணர்; விநாயகருக்கும் நெற்றிக்கண் உண்மை - "கண்ணுதல் உடையதோர் களிற்று மாமுகப் பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்" (கந்தபுராணம்-கடவுள்வாழ்த்து 8); வலபை-வல்லபை, விநாயகரின் சக்தியருள் ஒருவர்; சததள கஞ்சத்தினைப்பொரும்-நூறு இதழ்களை உடைய தாமரைமலரைப் போன்ற ; உளத்து உமர்ந்து எழு; ஞான ஆனந்தம்-மெய்யறிவும் பேரின்பமும், சித்ஆனந்தம் என்பதுவும் இது. வடமொழி தீர்க்கசந்தி. இனி உம்மைத்தொகையாக்காது மெய்யறிவால் விளையும் பெருமகிழ்ச்சி எனினுமாம்; அகண்ட - பிளவுபடுத்தப்படாத ; மங்கள - வாழ்த்துதலுக்குரிய ; ஜெய - வெற்றியை அருளுகின்ற ; சுபகர - நன்மையைச் செய்கின்ற ; நய-இனிமை மிக்க; அதுல - இணையற்ற ; அநகர் - பாவமற்றவர் ; அந்தணர் ( தம் ) உளத்தமர்ந்தெழு மங்கள, ஜெய, சுபகர, நய, அதுல, அநகர் (ஆகிய விநாயகரின்) இணையடி எனப் பொருள் முடிபு காண்க; இரண்டாம் தொங்கலில் நித்தனார் எனச் சத்து நிலையையும் இங்கே ஞானானந்தம் எனச் சித்து ஆனந்த

நிலைகளையும் காட்டி விநாயகப்பெருமான் சச்சிதானந்தப் பரம்பொருள் என உணர்த்துகிறார். ஒப்பு;

"என்றும் நீங்குறாத் திருஉரு உடையதாய் எங்கும்
ஒன்றி நின்றுணர்ந் திடும்அறி வானந்த உருவாய்த்
துன்றும் யோகினர் தியானிக்கப் படுஞ்சுக மாகிச்
சென்று சேர்தராக்கணேச!நின் திருவடி தொழுதாம்"

(விநாயகபுராணம் - மூவரும் உபாசித்த படலம் 15);

நினைபேறு தந்தவர் - அளித்தருளுவது உறுதி என்பதால் இறந்த காலத்தில் கூறினார்.

"விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉம்முக் காலமும் ஏற்புழி" (நன்னூல் 384)

என்பது பற்றி; நினைபேறு தருதல் - "வேண்டுவார் வேண்டிற்றெல்லாம் வினைத்தருள் விமலபோற்றி" ( விநாயக புராணம் -தேவர்கள் வரம்பெறு 19); திரிந்து -சுழற்றி; பொருது -போரிட்டு; அண்டர்கள்- தேவர்கள்; ஆனோர்- பகுதிப்பொருள் விகுதி; குஞ்சரி - தெய்வயானையம்மையும்; துடியிடை உடுக்கையைப் போன்ற இடுப்பினை உடையவராகிய வள்ளிநாயகியும், குஞ்சரி துடியிடை என்னும் இரண்டு இடங்களிலும் எண்ணும்மை தொக்கது; கணவர் இங்கே முருகப்பெருமான்; ஒரு துணை - ஒப்பற்ற சகோதரன்; சபாபதி - இவ் வண்ணத்தின் ஆசிரியரைச் சுட்டும் முத்திரை.

4. தேன் உண்டு அளி முரல்; உங்கண் -உவ்விடத்தில்; இந்திரை- திருமகள்; மேல்நாள் - முற்காலத்தே ; முனி - பிருகுமுனிவர் ; வெம்சொல்திறம் - வேப்பமரமாக ஆவாயாக எனக் கடுமையாக உரைத்த சாபத்தின் வலிமை ; இவ் வரலாற்றின் விரிவைத் தலபுராணத்துட் காண்க ; அஞ்சலை எனப்புகன்று - பயப்படாதே எனக் கூறி ; அருமறை முதலினில் அநுதினம் மருவுவது என அரிய வேதங்களின் தொடக்கத்திலேயே எப்பொழுதும் இருப்பது என, ஓம் எனும் பிரணவ வடிவன் என்று; வாள் ஆரும் - ஒளிபொருந்திய ; நிம்பத்தரு - வேப்பமரம் கண் -ஏழன் உருபு ; அம் - தழை அழகிய இலை ; நீர் ஆர் - நற்பண்புகள் பொருந்திய ; இந்திரை வெஞ்சொல் திறத்தின் துயர் கெடவும், உலகோர் பணிந்திடவும், தழைநிழற்ற, வந்திக்க, ஒலிக்க மகிழ்வுடன் உறைபவர் என்பது பொருள் முடிபு; திருமகளுக்கு அருள் புரிந்தது: "தன்கண் பிருகுமொழி தாங்கு மலர்மகள்அப்புன்கண் கடக்கவரும் போரூரே "வேரிக் கமலைநிம்ப மென்மரமா ஆண்டுறைந்து பூரித்துஏ ரம்பன்அருள் பேரூரே" (பேரூர் வெண்பாமாலை 36,49) மநுநெறி - ஈண்டு மக்களுக்கு இன்றியமையாத நீதிநெறி என்ற பொருளில் ஆளப்பட்டது, மனுஸ்ம்ருதி அன்று; முதியவள் - (ஆத்திசூடி கொன்றைவேந்தன், வாக்குண்டாம்,நல்வழி ஆகிய நீதிநூல்களை இயற்றிய) அவ்வையார், இவர் விநாயகரை வழிபடுபவர் என்பதும், விநாயகர் அகவல் பாடிச் சுந்தரருக்குமுன் திருக்கயிலையை அடைந்ததும் வெளிப்படை, கதிர்மலி வெள்ளியங் கயிலை வாழ்க்கை ஓர் முதியவள் பெறவிடு முக்கண் வேழமே (கணபதி ஆயிரம் 670); வாகு விஞ்சையர் - (பூவுலகிலிருந்து கயிலையில் தூக்கி வைத்த) கைத்திறமை மிக்கவர், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்,

“ஒளிர்அவ்வையைஉய்ப்பக் கண்ணுதல் வாழ்கயி வாயமட்டும்துதிக்கைநீள் கணபதியே” என்பார் (கணபதி ஆயிரம் 650); தூய்வானம் - (நீரைத்) தூவுகின்ற மேகம், வினைத்தொகை, குடநீர் தூயும் (பெருங்கதை 2-5-111 ); வானம் ஆகுபெயர்; தட்ட -முட்டவும்; உற்ற - அங்கடைந்த ; செங்கதிர் -சூரியனின் கிரணங்கள், கொழிக்க - தெரிக்க; அஞ்சுடர் -(அதனால் உண்டாகும்) அழகிய ஒளி; மகுடம் -கிரீடம், மலைகள் கிரீடம் போலவும்,அதில் ஒளிரும் பல நிறங்கள் பல மணிகள் பதிக்கப் பெற்றவை போலும் தோற்றமளிக்கின்றன. சுருதியின் - வேதங்களின்; அடிமுடி நிலவு ப்ரணவம் -தொடக்கத்திலும் முடிவிலும் விளங்குகின்ற ஓங்காரம், வேதபாராயணத்தைப் பிரணவத்தைக் கூறித் தொடங்கி அதை உச்சரித்தே நிறைவேற்றுதல் மரபு; ப்ரணவகிரி - திருப்போரூரில் உள்ள மலையின் பெயர், “ வேதகிரி ஓம்எழுத்து வெற்புவி ராட்டிருதோள் பூதகிரி யாய் ஓங்கும் போரூர்” (போரூர் வெண்பாமாலை 2); சமராபுரம் -போரூர், “திகழ்சம ராபுரி முருகச டானன செங்கோ செங்கீரை (போரூர் முருகன் பிள்ளைத்தமிழ் -செங்கீரை 6); வேம்படி விநாயகர் - தலவிநாயகரின் திருநாமம், காரணம் மேலே கூறப்பட்டது, “மேன்மைதரு போரூரில் நிம்பநீ ழற்குலவு வேழமுகன் இருசரணமே” (போரூர் முருகன் பிள்ளைத்தமிழ்க் காப்பு).

5. ஏழ்பார் -ஏழு உலகங்கள்; ஐந்து அக்கினிக்குள் நின்று தவம் செய்தல் : கும்ப கன்னன் ஐந்தீயுள் கொதிக்கும் காலத் திடைநின்றும் (இராமாயணம் - உத்தரகாண்டம் -இராவணன் பிறப்புப் படலம் 24) “நிலைத்தவம் புரிவோன் ஐவகை நெருப்பில் நடுவுஉற நின்றவா கண்டார் திவில்லி. அருச்சுனன் தவநிலைச். 59) அயன் - பிரமன்; இங்கித - இடத்திற்கும் சமயத்திற்கும் ஏற்ற இனியமொழிகளைக் கூறுதல்; இளமதி நுதல் -பிறையைப் போன்ற நெற்றியை உடைய;வலி- வல்லி, கொடி போன்றவள் ; அயன் நின்று பிரிந்திட்டு அமைந்த வல்லி என்பது முடிபு; விகசித - மலர்ந்த ; மால்ஆகும் - வேட்கை ஆகிய ; சுரத - புணர்ச்சிக்குரிய ; வசந்த - இந்திரன் மாளிகையில் உள்ள ; ப்ரசித்த -புகழ்பெற்ற ; ரம்பை -பாற்கடலில் தோன்றிய தெய்வலோகப் பெண் ; ரம்பையின் இன் உரும உருபு. நயத்த - நயத்தையுடைய, சிறந்த ; ரஞ்சித -நேசிப்பதற்குத் தகுதியானவள் ; இங்கிட்டு - இவ்விடம், வழக்குமொழி; தலைவியைத் தனியே கண்டது தவப்பயன் எனல்: “சேடியரும் இல்லாமல் தேன்மொழியீர் இவ்வனத்தில் நாடிவரப் பெற்றதும்முன் நான்செய்த மாதவமோ (கூளப்ப நாயக்கன் காதல் 206); பைங்கனி - அழகிய கன்னிப்பெண்;வசிகர -கவர்ச்சிமிக்க ; அபிநய -ஒப்பனைமிக்க ; விதரண -செய்வதை முறையாகச் செய்யும் இயல்புள்ள ; சுப - நன்மையான இவள் அதிசயவ(ல்)லி, ரதி, பசுங்கிளி, ரஞ்சகி,பைங்க(ன்)னி, குணவதி எனவே நினைத்தனன் என்பது பொருள் முடிபு; ஏர் ஆர்-அழகு பொருந்திய ; நம் தரம் -நம் இனத்தைச் சேர்ந்தவள் அதாவது மானிட மங்கை ; என்று அச்சம் அற்று நண்பு உற அடுத்து நின்று; முதலில் கண்டது காட்சி ; பிறகு மானிட மகளே எனத் துணிந்ததைக் கூறியதால் இடைநின்ற ஐயம் ஓர்ந்து உணர விடப்பெற்றது; அடுத்து இடம்பெற்றது முன்னிலையாக்கல்; இதுவரை கூறப்பெற்றவை தலைவனின் செயல்கள் ; பொறைகொளல் - சுமத்தல் ; பணைத்த இரண்டு நகில்களை இளைத்த ஓர் இடை சுமப்பது அரிய செயல் என்று கூறியவாறு தலைவன் தலைவியை நெருங்குகிறான் ; ஏய்ந்தது -உள்ளத்தில் நினைத்ததை; கைகூடும் - முடியவைக்கும், பிறவினைப் பொருளில் ஆட்சி; நகைப்பினாள் -தன்

காதலைக் குறிப்பால் உணர்த்தும் புன்முறுவலைச் செய்தவள் ஆனாள் ; இது தலைவியின் செயல் ; இத்துறை வறிது நகை தோற்றல் எனப்படும். ''மெலிந்தனம் நாம்;உள்ளம் மெல்லியற்குப் பிறிதோகோல் என்னும் பெருந்தகை தேறப் பெரிதுயிர்த்து வறிதே முறுவல் செய்தாள்'' (தஞ்சைவாணன் கோவை 15)

6. இது தனது ஈடாகும் என்று உள் குறிப்பு உணர்ந்த சமயத்தில்- இவ்வாறு முறுவல் செய்தது தன்னோடு உளமொத்த கருத்தாகும் எனத் தலைவியின் மனநிலையை அறிந்துகொண்டபோது; என்றனொடே தானும் ; பிடியில் நடந்து - பெண் யானையைப்போல் நடந்து; வம்பு அலர் பரப்பும் மஞ்சமீது -மணமிக்க மலர்கள் பரப்பப்பெற்ற மேடைமீது,இயற்கையான இம்மேடையைத் தஞ்சைவாணன் கோவை உரையாசிரியராகிய சொக்கப்ப நாவலர், ''தலைவி நிற்குமிடத்து அயலாய்த் தேனருவியாற்றங்கரையில் அசோகமரம் நிற்க, பூங்கொடி சுற்றும் படர்ந்திருக்க, மாதவிக்கொடி நின்று மலர்பூத்து வண்டும் தேனும் பாட, வரிக்குயில் கூவத் தென்றல் வீசாநிற்க மணம்பரந்து பூந்தாது தவிசுபடுத்தாற்போற் பொலியும் (19ஆம் பாடலின் தோற்றுவாய்) என வர்ணிப்பார் ; இத்துறை இடம்பெற்றத் தழால் எனப்படும் ; எனது அருகினில் ; விபவ-சிறப்பான ; சரச- சுவைமிக்க ; சுகமது-இன்பம். அது பகுதிப்பொருள் விகுதி ; குழலை -கூந்தலை ; அலங்கலை - பூச்சரத்தை எடுத்து அணிந்தனள் ; பாகோடும் - பாக்குடன் சுருள்தர; வெற்றிலைச் சுருளை நான் அளிக்க; மென்று அற்புதத்தொடும் ; கவுள் அணைத்த தம்பலம் அது ருசி -கதுப்பில் ஒதுக்கி வைத்திருந்த வெற்றிலைச் சாரத்தின் சுவையை ; தயைசெய்து எனக்குக் கொடுத்து ; இங்கு உனை அடையும் கற்பு எனக்கு இசைந்தது யாதோ, நினைத்திடும் தரமாமோ. நன்று, பட்சமுற்று வந்த எனை மருவு - இது தலைவி கூற்று; விசி- கட்டப்பெற்ற ; கவசமதனை - கச்சினை ; நீடி -நிலைத்திருந்து; எண்டிசை என்புழி முற்றும்மை தொக்கது;ஈண்டும் - நெருங்குகின்ற, சொற்பமோ - கொஞ்சமோ, வினா எதிர்மறையின் பொருட்டு.

7. தாழா - சரியாத ; வெம் -விரும்பத்தக்க ; களிற்ற - யானையின் ; கிம்புரி - பூண்கள் அணியப்பெற்ற மருப்பு - தந்தங்கள்; இணைந்தென -இரண்டு சேர்ந்திருப்பதைப் போன்ற வார்தாவும் - கச்சைத் தாண்டுகின்ற; புனுகுகதம்ப - புழுகும் வாசனைப்பொடியும் பூசப்பெற்ற; உம்மைத்தொகை ; தாழா வெம் இணைந்தென, வார்தாவும் புனுகுகதம்பத் தனம் என்க; பரியாசமும் - பரிகாசமும், கேலிப் பேச்சுக்களையும் ; பலவாய்ப் பேசும் எனற்பாலது சந்த நோக்கி இயல்பாயிற்று; கவுள் - கன்னம் ; புடைப்பள் - அடிப்பாள் ;ததி -இது சரியான வேளை ; மென்று - வெற்றிலைச் சுருளை மென்று கொண்டே ; வங்கண வரிசை - நட்பும் மதிப்பும் கொள்ளற்குரிய நவமணி - விருப்பத்திற்குரிய இரத்தினம் ; எனும் -என்று கூறுவாள் ; சார்பாகும் - காமக் கலைக்குக் கடவுள் ஆகிய ; கழை மதனன் -கரும்பு வில்லினையுடைய மாரன் ; கலை - காமநூல்; பொருள், இங்கே அல்குல் ; விஞ்சை -வித்தை இங்கே, கலவி ; முடுக்க - விரைவில் விஞ்சையை முடுக்கத் தொடுக்க என்பள் என இயையும்; தொடுக்க - தொடங்குவீராக கரிகரம் - புணர்ச்சி விளையாடல்களுள் ஒன்று; வாய்ந்து - நெருங்கி.

8. தாது - மலரின் இதழ், ஆகுபெயராகப் பூவைச் சுட்டிற்று; பகட்டை - நூலறிவினால் பெற்ற இறுமாப்பை, நூல் என்றது காம சாத்திரத்தை, ''மதன் தந்திரம்'' ''மதனக்கலை'' "மதனாகமம் காமவேதம்'' "இன்ப சாஸ்த்ரம்'' என்பார் அருணகிரிநாதர் ( திருப்புகழ் 54,748, 230,1120,328) ; புட்குரல் பயின்று - புள்ளோசை எழுப்பி, கலவிக் காலத்தே மகளிர் எழுப்பும் எட்டுவிதமான பறவையொலி,

"அரிகுயில் மஞ்சை செம்போத்து அனம்புறா காடை கோழிக்
குரல்என ஒலிசெய் வித்துக் கூடும்உள் இன்பம் ஓங்க''

(சீகாளத்திப் புராணம் - நான்முகச். 18)

பிணங்குவள் -ஊடுவாள்; தனை அடிபரவிட என்பதற்கு அவள் தோன்றா எழுவாய்; அது - முன்கொண்ட பிணக்கத்தை ; என்று அணுகி ; சுகிப்பம் -இன்புறுவோம் ; ஒருவிசை - ஒருமுறை; முன்படி - முதல் தடவையைப் போல; தாராளம் சொலி தன் விருப்பத்தைக் கூறி; சந்தக்கவி - வண்ணக்குழிப்பைக் கொண்டு பாடிய கவிகள், கலவிக்காலத்தே வண்ணம் பாடுதல்: சோதிவடி வேலர்மேல் சொன்னவண்ணத்துறையும் (சேதுபதி விறலி 562 ) மங்கை பதம்படித்தாள்; வண்ணம் படித்தாள் என்காதுக்கு இதம்படைக்கும் தேன்போல இருக்க (கூளப்பநாயக்கன் விறலி) பதம் - நாட்டியத்திற்குரிய இசைப்பாடல்; தரு - இசைப்பாடல்களுள் ஒன்று; வன கரும் குயில் -காட்டில் வாழும் கரியநிறமுள்ள கோகிலம்; படித்து அனந்தமும் விந்தைகள் தமை -தம் பகுதிப்பொருள் விகுதி ; இதுவகை என - இத்தகையது என்று; அவளுடன் எனது ஒரு மனமே அறிந்து(ள்)ள ; வாஞ்சை அநுபோகம் - ஆசையைத் தரும் துய்ப்பு; மறப்பதோ - மறக்க இயலாதது என்பது கருத்து, வினா எதிர்மறையில் வந்தது.



# 2. திருநெல்வேலி நெல்லையப்பர் வண்ணம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்ற இந்த வண்ணம் நெல்லைக் கலம்பத்தின் ஒரு கவியாகும். இக் கலம்பகம் இதுகாறும் அச்சேறவில்லை. கோவையை அடுத்த சிரவை ஆதீனத்தில் காக்கப்பெறும் இச் சுவாமிகளின் சொந்தக் கையெழுத்தாகிய ஓலைச்சுவடிகளில் நெல்லைக் கலம்பகம் ஐந்தாம் எண்ணிட்ட சுவடியில் உள்ளது. இவ் வாசிரியரால் இயற்றப்பெற்ற 11 வண்ணங்கள் இந்த வண்ணப்பெருந்திரட்டுப் பதிப்பில் இடம்பெற்றுள்ளன. இவற்றோடு தோத்திர வண்ணம் ஒன்றுமாக இவரால் மொத்தமாக இயற்றப்பெற்ற பன்னிரண்டும் திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத்தாரால் 1980 ஆம் ஆண்டு வண்ணமஞ்சரி என்னும் பெயரில் வெளியிடப்பட்டுள்ளது. இவ் வண்ணம் அத்தொகுப்பில் பத்தாவதாக உள்ளது.

நெல்லையப்பரின் உலாவைப் பார்த்த தலைவி ஒருத்தி அவர்மேல் காதல் கொண்டு வருந்துவதாக இவ்வண்ணம் பாடப்பட்டுள்ளது. இதில் கிளவித்தலைவன் இறைவன் ஆதலின் தூய அகத்துறை ஆகாது. புறப்பொருள் பாடாண்திணை கடவுள்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்தபக்கத்தின் பாற்படும். இக்காரணத்தால் தூய அகத்துறைப் பாடல்களுக்குப் புறத்தே விநாயகர் வண்ணத்தை அடுத்து இரண்டாவதாக வைக்கப்படுகிறது. அடுத்ததும் இத்தகையதே.

இவ்வண்ணம் அரியதில் அரியதாகிய தன்ன, தய்யச் சந்தங்கள் விரவிவருமாறு பாடப்பட்டள்ளது. ஆண்கலையில் சிவபெருமானின் பெருமைகள் பரக்கப் பேசப்படுகின்றன. ஐந்தாங் கலையில் அவ்விறைவர் ஆனித்திருவிழாவில் நான்காம் நாள் காளைவாகனத்தில் திருஉலாவருதல் கூறப்படுகிறது. அவ் வுலாவைக் கண்டு காதல்கொண்ட தலைவியின் கூற்றாக இறுதி மூன்று கலைகள் அமைகின்றன.

இவ் வண்ணத்தின் நடை மிகச் செறிவானது. பொதுவாக இச் சுவாமிகளின் வண்ணங்களில் ஆண்கலை கம்பீரமாகவும், பெண்கலை சற்றுப் பேச்சுவழக்கு விரவி எளிமையாகவும் அமையும். ஆனால் சந்தத்தின் அருமை காரணமாக இதில் அவ்வேறுபாடு மிக வெளிப்படையாகத் தெரியவில்லை.

# 2. திருநெல்வேலி நெல்லையப்பர் வண்ணம்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

## பெண்பாற் கைக்கிளை

*தன்னதன தய்யதான தன்னதன தய்யதான*
*தன்னதன தய்யதான தன்னதன தய்யதான*
*தத்ததன தந்ததான தத்ததன தந்ததான*
*தத்ததன தந்ததான தத்ததன தந்ததான*
*தனனதன தானதான தனனதன தானதான*
*தனனதன தானதான தனனதன தானதான*
*(தொ) தனதாத்த தாந்ததன தானனா.*

பொன் அனைய செய்யமேனி அண்ணல்; வெகு வெள்ளவாரி
மன்னுசடை ஐயன்; ஆலம் உண்ணுமிட றுள்ளஆதி;
பொற்புமலி கந்தநாத னைத்தருசெ ழுங்கண்மேய
நெற்றியினன்; இந்திராதி யார்க்குமுன்இ ரங்கும்நேய
புனிதன்;அசு ரேசரேனும் மிகுதவம தேசெய்தால்அன்
னவர்கருது மாறுபேறு தருகருணை நீடுசோதி;
விண்ணில்இடை ஒல்லும் ஆடல் பண்ணுமுதல்; வள்ளல்; காலன்
என்னும்ஒரு வெய்யன்ஆவி உண்ணும்அடல் மல்குபாதன்;
வெற்பிறைப யந்தபாவை பற்பலம டந்தைமாரொ-
டுற்றுயர்த வஞ்செய்காலை யிற்றலைந டுங்குசோரன் ;
விபுதர்உடல் நீறுபூசி, மகபதியும் வேதநீதி
அறிபவனும் மாலும்ஈயும் அளவில்அடை யாளம்மேவு
புண்ணியன்; ஓர் பிள்ளைவேடன் உண்ணஎன மெல்லும்வேளை
பன்மணமும் ஒல்லும்ஊனை நண்நசையும் எய்துசாமி ;
புத்தர்எதிர் கண்டவாதில் வெற்றியத டைந்தஞான
வித்தகன்நு வன்றபாடல் முற்றும்எழு துங்கையாளி;
புகர்முகநி சாசரேசன் மடிவடைய வாரணாசி-
தனில்ஒரும காகுரூர வடிவொடுநி லாவுதேவு;
புருடார்த்தம் ஈந்தருள்சு பாவகோ (1)

புன்மையினர் வவ்வொணாத தண்ணியன்;ஓர் தையல்ஒடி
என்னஇனி செய்வன்ஈதி என்னஅவண் உள்ளபானை
புத்தமுது றழ்ந்தவாறி ரட்டியப ழுங்கள்ஈய
அக்கணம்நி னைந்தபான்மை செப்பும்அவர் நெஞ்சில்வாசி;

பொருவில்சன காதியோர்கள் அரியசிவ ஞானம்மேவ
ஒருமுதுக லாலநீழல் வயின்உறுத யாகுணாளன்;
மின்னல் அதும் ஒல்குகோல நுண்ணிடைகொள் செல்விபாகம்
மன்னல்அருள் கையமாமன் வண்ணமுடி கொய்துவேள்வி
வெப்பழல்அ ருந்தவீசும் மற்புயம்ம லிந்தவீரன்;
விப்பிரர்தி னம்பரவு மெய்ப்புகழ்உ றுங்கிரீ சன்;
விடஅரவு, கோடுபால மதி, இதழி, ஆர், விளா வெள்
அறுகறுகு, கூவிளாதி அணிதரும யேசன்; ஈடில்
பொய்ம்மொழிஓர் நல்லபாலன் உன்னஎன விள்உபாயன்;
மும்மதிலும் வல்லைவேவும் வெண்ணகையன்; மெய்விடாத
புத்தியினர் தங்கள்பேரு ணர்ச்சியில்வி ளங்கும்ஏக
தத்துவசு தந்தரேசர்; அத்தன்;நவ கண்டரூபி;
புகழ்பலபல் கோடிமேய பரசிவன்;அ னாதி;யோகி;
சருவமத பேதவாதம் அறுசமர சானுபூதி
பொலிகீர்த்தி தோய்ந்தவிளை யாடலான் (2)

அன்னநடை வல்லிபோலும் வண்மையுறு தையலார்கள்
பின்வரஓர் வெள்ளைஓடு கொண்மதனன் ஒவ்வஏகும்
அத்தன்;மத குஞ்சரான னத்தனைவ ழங்குதாதை ;
சத்திகள்அ னந்தகோடி மொய்த்துமரு வுஞ்சையோகன்;
அதிரதம காரதாதி வயவர்கள்ப ராவு,சூலம்
முழுமுதல வாயவேல்கள் புனைதருபல் பூதநாதன்;
மண்ணுலகில் வைகுவார்கள் உன்னுபவும் நல்குசீலன்;
எண்ணில்பல தெய்வம்ஆகும் முன்னவன்;ஓர் வில்வம்ஏறும்
மற்கடம்அ கன்றபூமி முற்றும்ஒரு தன்கைஆள்கை
உட்கொளவ லிந்தநாள்அ ளித்தவன்;உ டன்குலாவு
மரகதக லாபிபோலும் உமைஉரைத வாதகோர
நிருதர்குல பாலவாதை அறஅருளும் மோகவாரி;
ஐம்முகவன்; வெள்ளிஆய தொன்மலையில் வைகும்ஆர்வன்;
அம்மலையின் எல்லைபேர முன்முயல்ஓர் வல்லன்ஆவி
அப்படிவ ருந்தஓர்வி ரற்கொடுமு யன்றமீளி;
அத்திரம்வி ழைந்தபேடி கைச்சமர்உ வந்தவேடன்;
அபரிமித மானசார தமிழ்கொடுமுன் நால்வர்ஓது
பதிகம்மொழி வார்கள் ஆவல் முழுதுதவு சீர்விநோதன்;
அருளாட்சி வேண்டுநரை ஓவிடான். (3)

அம்மலரின் மையவாசன் நன்மறைகள் விள்ளும்நீதி
அண்மைஉறு சைவர்சேனை, தொன்னெறியில் கர்மசீலம்
அத்தனையும் ஒன்றுதூய விப்பரர்சு கந்ததாம
மற்புயம்இ லங்குகாவ லர்த்திரள்,ச ளம்செயாத
அருநெறிய நாய்கர், யாவர் விழையினும்வி டாமல்ஈயும்
அருள்மலிப ரோபகாரம் உறுசதுரர் வாசம்ஆகும்;
மைமருவு செய்யசோலை தன்னில்உதிர் கள்ளறாத
நன்மலரை நள்ளும்மாலூர் கும்மல்என உள்ளுலாவும்;
வத்திரமுடன் பல்பூண்இ டத்தகுசி கண்டிபோல
மொய்த்தமட மங்கைமாரொ டிக்குவில்ம தன்சுலாவும்;
மரணபயம் மேவிடாத புலவர்அவர் மாதரோடு
தளிரில்மலர் மீதுநாளும் மிகவும்விளை யாடலாகும்;
அன்னையினும் நல்லர்ஆன தன்மைஉறு பல்வலோர்கள்
துன்னுபொதி யைநனீரில் மும்மையத மிழ்விராவும்
அத்தியினி டம்பெண்ஈயும் அச்சிறுகு ழந்தைபாடல்
நித்தம்முர லும்;பல்சார ணர்க்கழுவி டந்தநாளில்
அணிபொடியி னால்நன்மேனி கொளும்வழுதி யார்செய் கோயில்
அவிர்தரும்நெல் வேலிஆளும் அனவரத தானநாதன்
அணிவாய்த்த காந்திமதி தோள்புல்வான் *(4)*

இன்னல்இல தையர்வாழ, அன்னவரை வெல்லநாளும்
முன்னும்அவு ணர்கள்தாழ, உண்மையொடு தர்மம்நீட,
இற்றொறும்ம டந்தைமார்கள் கற்புநிலை மிஞ்சஆட -
வர்க்குவயம் முன்சொல்பான்மை அத்தனையும் வந்துசேர
எழிலிஇனம் ஏழும்வானில் இரவிசெலும் மாதம்யாவும்
விதிவழிமு மாரிஈய, விளைவுகுறை யாததாக
உன்னுதலின் வெள்ளைஏறு தன்னில்ஒரு தையலோடும்
அம்மகள் ஓர் கைவிடாத செம்மைமுரு கையனோடும்
உச்சியில்இ ருந்தநீர்ம கட்கினிய திங்கள்சூடி,
முக்கணும்அ சைந்தவால்வ ளைக்குழைக ளுங்குலாவ,
உரகம்முத லாயபூணும், இதழிமுத லாயதாரும்,
மழுவும்எழில் மானும்,யாதும் அழல்சிதறி டாததாகும்
இன்னகையும் வல்லதோல்கள் துன்னுடையும், மெய்மைஞானம்
என்னமிளிர் துய்யநீறும், அன்னபல செவ்வியாவும்
எற்பொழுது கொண்டு, தேவர் முற்பகர்க ணங்கள்சூழ,
டுட்டுடுடு டுண்டுடூடு டுட்டெனஇ யங்கள்ஓல,
இருவகைய வேதசாலம் முறையிட,மி னார்கள் ஆட,

இசைமுனிவர் பாட, ஆனி விழவினது நாள்ஓர்நாலில்
இருள்தீர்க்கும் வான்பவனி காணலால் (5)
என்னதுடல் வல்லைசோர, மின்னும்வளை யல்கள் ஆழி
தன்னொடுக ழல்வதாகும்; வன்மெலிவு கொள்ளமாரன்
இக்குடன்ம லிந்ததேம லர்க்கணைபொ ழிந்துபோர்செய்
திட்டனன்;அ வன்றன்மாம திக்குடைகு ளிர்ந்தநீர்மை
இலது; கனல் கோடிபோலும் வெயில் உமிழ்வ தாயதேழு
பனைஉயரம் ஆனமேன்மை எலிஉயரம் ஆயதாரும்
உண்மைஉற வில்லர்ஆகும் அன்னவர்த முள்அநேக
வண்ணம்வசை சொல்லினார்கள்; உண்அமுதும் நல்லபாலும்
ஒப்பிலது, மிஞ்சலான கைப்பொடுதி கழ்ந்தகோகி
லத்தினிசை. அன்றில்ஓசை, மைக்கடல்செ யுங்கலோல
ஒலிமுதல வானகோடி பகைவிளைப வான; சோகம்
இரவுபகல் மாறிவீழல் பிறழல்எழல் ஓடல் போலும்;
எண்ணில்வகை அல்லல்ஆன பண்ணிவிடு கிள்ளையாதி
இன்னம்வர வில்லை ; தோழி அன்னைமுதல் உள்ளபேரும்
எட்டியைநி கர்ந்தநூறு சொற்சொலிமு னிந்துளார்கள்;
கட்டில்அணை கந்தம்மீறு புட்பகள பங்கள்தீயில்
எரிவுதர லானதீதில் கனவுபல வாயும் ஓர்நல்
நனவில்அவன் ஈவதான தழைவரவும் நேரல்காணன்;
எழில்ஆத்தி வாஞ்சையிடை மூழ்கினேன். (6)

முன்னம்எனில் மையல்ஆகி அம்முதல்வன் நல்கும் ஆர்வம்
நன்னலம தெய்தினாரிம் மன்னுலகில் இல்லைபோலும்;
முத்தலம்வி யந்தராவ ணற்புணர்ம டந்தைதோள்வி
ருப்பும்உளன் என்றுநூல்கள் செப்புதலும் வம்புபோலும்;
முகுளமலர் வாளியான்நல் உடல்பொடிய தானபோதும்
இமயமலை தேடிஏகி மணம்முயலல் ஓர்பொய்போலும்;
நன்மைதவிர் புல்லன்ஆன சின்னவிதி இல்லில்நீடு
பெண்ணுரிமை கொள்ளும்ஆடல் பண்ணியதும் இல்லைபோலும்;
நத்தணித ருங்கைநார ணற்கினிய தங்கையாம்ஒ
ருத்தியைம ணஞ்செய்தான்எ னச்சொலலும் வம்புபோலும்;
நதிவடிவ மானபாவை தனைஇதழி மாலைசூடும்
நெடியசடை யூடுவாழ அருளலும்ஓர் காதைபோலும்;
மும்மைஉல குய்யுமாறு தென்மலையில் ஐதுபோய
மன்முனித மிழ்வழாது முன்வளர்தல் செய்தபேருள்
முக்கியன்எ னஞ்சொல்மேவ அக்கிரிவ ரைந்தகேத

னத்தினைஅ ணிந்துளான்ம கட்புணர்த லும்பொய்போலும்;
முறையிடும்எ னாதுமோகம் அறிகிலவர் போல்உளான்இ
தருள்நெறிய தாகுமோ ? எல் மிதுனம்அதில் ஏகுதோறும்
முருகாற்றல் ஏந்திழைகள் வாடவோ? (7)

மொண்ணைமுகி அல்லன்; ஈனர் தம்மரபி அல்லன்; வாரி
தன்னில்வரு தையலாரும் என்னெழிலை நள்ளுவார்கள்;
முற்பவம்உ ணர்ந்தமோன வித்தகர்க ளும்பெணாசை
அத்தனையும் வென்றிடார்எ னப்பகர்வ துண்டதாயின்
முதியன்இவன் ஏதென்ஆவல் அணுவளவும் மேவிடாமல்
இவன்உரிமை ஈர்கிறான்;இ திணையில்கொடி தாம்அநீதி;
நண்ணல்அருள் உள்ளமூவர் துன்னெரியில் வெய்துறாமல்
இன்னம்மகிழ் வெய்தல்காணும் அண்ணல்இவன் அல்லனோ?பல்
நச்சரவ ணிந்ததோள்கொ டுக்கவும்இ சைந்திலான்; முன்
நக்கன், அரன், அம்பைபாகன், அத்தன்என நின்றபேர்கள்
நவில்பவரும் வீடுசேர அருளினன்எ னாமுனூலும்,
உலகினரும் ஓதல்வாய்மை எனில், எனைவி டான்விடான்மெய்
மொய்ம்முகர்தல் உள்ளிமீது துன்னுமுகை கள், கொல்யானை,
பொன்னவிர்சி மிழ், கிரீடம் என்னமிளிர் செவ்விமேவி
முத்தணிவ டங்களாதி நற்பணிபு னைந்து, தேமல்
மொய்த்து, மத னன்றனோட வற்கினிய நங்கைகோலம்
முழுதும்மட மாதரார்கை எழுதுபொறி தோய்வதாகி,
முகமும்அகல் வானில்நீடு பிறைநுனியின் மேலதாம்என்
முலையாற்செய் வேன்சமரம் நேரினே. (8)

## தொங்கற்றாழிசை

புருடார்த்தம் ஈந்தருள்சு பாவகோ;
பொலிகீர்த்தி வாய்ந்தவிளை யாடலான்;
அருளாட்சி வேண்டுநரை ஓவிடான்;
அணிவாய்ந்த காந்திமதி தோள்புல்வான்
இருள்தீர்க்கும் வான்பவனி காணலால்
எழில்ஆத்தி வாஞ்சையிடை மூழ்கினேன்;
முருகாற்றல் ஏந்திழைகள் வாடவோ?
முலையாற்செய் வேன்சமரம் நேரினே ! (8)



# 2. திருநெல்வேலி நெல்லையப்பர் வண்ணம்

## குறிப்புரை

1. வெள்ளவாரி -ஒருபொருட் பன்மொழி, நீர்ப்பெருக்காகிய கங்கையைக் குறித்தது; ஆலம் - நஞ்சு; மிடறு-கழுத்து; பொற்புமலி -அழகுநிறைந்த ; செழுங்கண் - மாட்சிமை மிக்க விழி; அசுரேசரேனும் -அரக்கர்களின் தலைவர்களாயினும். இழிவு சிறப்பும்மை ; விண்ணில்இடை - சிதாகாசத்தில், விகுதிமேல் விகுதி; முதல் - முழுப்பொருள்; ஓங்கும்ஒளி வெளியேநின் றுலகுதொழ நடமாடும் (கோயிற்புராணம் பாயிரம் 1) காலன் -இயமன்; வெய்யன் - கொடியவன்; அடல்மல்கு -வலிமை நிறைந்த ; பாதன் - திருவடிகளை உடையவர், மார்க்கண்டேயர் வரலாறு வெளிப்படை ; வெற்பு இறை -மலையரசன், இமவான்; பயந்த பாவை- பெற்ற மகள், பார்வதி; தலைநடுங்கு சோரன்- தலை நடுங்குகின்ற கிழவனாக வந்த திருட்டுத்தனம் கொண்டவர். ஒப்பு: திரைந்துதசை மெய்முழுதும் சென்னிகை குலைப்ப ( பேரூர்ப்புராணம் - கௌரி தவம்புரி.56) வஞ்சக முதல்வன் சொற்ற வாசகம் (கந்தபுராணம் 1-6-28) உமை தவம் புரிந்தபோது இறைவன் கிழவனாக வந்த வரலாறு வெளிப்படை ; விபுதர் உடல்நீறு-எரிந்த தேவர்களின் உடற்சாம்பல்,

"ஊழி வந்துழி உம்பரை நுதற்கணின் எரித்துப்
பாழி என்புவெண் தலைபொடி பராபரன் தனது
வாழி நித்தியத் தியல்பும்மற் றவர்அநித் தியமும்
கேழில் வையகம் தெரிந்துஉய்யக் கிளர்ந்துரு அணிந்தான்"
( பேரூர்ப் புராணம் - கௌரி தவம்புரி.131)

மகபதி - இந்திரன்; வேதநீதி அறிபவன் - பிரமன்; ஈயும் கொடுக்கும்; இதுவும் சர்வ சங்கார காலத்தில் அனைத்துத் தேவர்களையும் அழித்து அவர்தம் எலும்பு முதலியவற்றை அணிந்ததைக் குறித்தது.

"பரமன் இவ்வகை அடுந்தொறும் அடுந்தொறும் பலவாம்
பிரமன் ஆதியோர் என்பினைத் தரிக்கும்; அப் பெரியோர்
சிரம்எ லாம்தொடுத் தணியலாய் அணிந்திடும்; சிகைதன்
உரம்உ லாவுமுந் நூல்என வேஅணிந் துறையும்" (கந்தபுராணம் 6-13-12)

பிள்ளை வேடன் - வேடம்பிள்ளை என மாறுக, கண்ணப்ப நாயனார் வரலாறு வெளிப்படை; உண்ண என - குடுமித்தேவர் உட்கொள்ள வேண்டும் என்று; மெல்லும் வேளை - வேகவைத்த தசைகளைச் சுவைபார்க்கத் திண்ணனார் வாயிலிட்டு மெல்லுகிறபோது; நண் நசை -ஏற்றுக்கொள்ளும் விருப்பம், வினைத்தொகை ;

வெள்வாய் குதட்டிய விழுதுடைக் கருந்தடி
வைத்தமை யாமுன் மகிழ்ந்தமு துண்டவன்
மிச்சலுக் கின்னும் இச்சைசெய் பெருமான் ( கல்லாடம் 15:34-36)

புத்தர் எதிர் கண்ட வாதில் வெற்றி அடைந்த ஞான வித்தகன் நுவன்ற பாடல் - புத்த சமயத் தலைவர்களுடன் வாதம் புரிந்து வென்ற மாணிக்கவாசகர் பாடிய திருவாசகம்; கையாளி - கரங்களை உடையவர்; மணிவாசகர் தில்லையில் புத்தரை வென்றதும். அம்பலவாணரே திருவாசகத்தைத் தம் கைகளால் எழுதியதும் வெளிப்படை ;புகர்முக நிசாசரேசன் மடிவடைய - கயாசுரனாகிய அரக்கர் தலைவன் இறக்குமாறு; புகர்முகம் -யானை ; நிசாசர ஈசன்- வடமொழி குணசந்தி; வாரணாசிதனில் - காசியில்; மகா குரூர வடிவு:

"குறித்தெ லாம்அடும் உக்கிர வடிவினைக் கொண்டு
நிறுத்தும் அண்டமேல் உச்சியின் முடிதொட நிமிர்ந்தான்" ( கந்தபுராணம் 6-13-141)

மகிடாசுரனின் மகனாகிய கயாசுரன் காசியில் அடைக்கலம் புக்க தேவர்களைத் துரத்திச் சென்று சிவபிரானெதிர் சென்றான். இறைவன் உக்கிர வடிவெடுத்து அவனைக் கொன்றார். இவ்வடிவமே கரியுரி போர்த்த மூர்த்தி; புருடார்த்தம் - அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கு; சுபாவ கோ - இயல்பை உடைய தலைவன், இரண்டன் தொகை, வடமொழியாதலின் இயல்பாகப் புணர்ந்தது.

2. புன்மையினர் - இழிகுணத்தோர்; வவ்வொணாத - தம் ஆற்றலால் கைப்பற்றிக் கொள்ள முடியாத. அல்லது விரும்பாத எனினுமாம்; தண்ணியன் - குளிர்ந்த கருணையை உடையவன்; ஓர் தையல் என்றது காரைக்கால் அம்மையாரை, வரலாறு வெளிப்படை ; ஈதி -தருக; புத்தமுது உறழ்ந்தவாறு இரட்டிய பழங்கள் - புதிய அமுதத்தை நிகர்த்த இரண்டு மாங்கனிகள்; நெஞ்சில் வாசி -காரைக்கால் அம்மையாருக்கு அருள்புரிந்த கருணையை நினைப்பவர் உள்ளத்தில் இறைவன் குடியிருப்பான் என்பது கருத்து; சனகாதியோர் -சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் பிரமனின் மைந்தர் நால்வர்; கலால நீழல்வாயின் - கல்லால மர நிழலிடத்தில்; தயாகுணாளன் - கருணைப் பண்பாளன்; நால்வருக்கு உபதேசித்த வரலாறு வெளிப்படை ; மின்னல் அதும் ஒல்கு கோல நுண்ணிடை கொள் செல்வி - மின்னலும் கண்டு நாணும்படி அழகும் நுட்பமுமுடைய இடுப்பினைப் பெற்ற தாட்சாயிணி, அது பகுதிப்பொருள் விகுதி, உயர்வு சிறப்பும்மை ; பாகம் மன்னல் அருள் -பக்கத்தில் பொருந்தும்படி திருமணம் செய்து கொடுத்த; கைய மாமன் - உரிய அவிர்ப்பாகத்தை வழங்காத வஞ்சகனாகிய மாமனார், தட்சன்; இறைவன் வீரபத்திரனால் தக்கன் வேள்வியை அழித்து அவன் தலையை அறுத்த வரலாறு வெளிப்படை, விப்பிரர் -ஞானிகள், பார்ப்பனர் என்பாரும் உளர்; கிரீசன் -கயிலைமலைத் தலைவர், வடமொழி தீர்க்கசந்தி; கோடு பாலமதி- வளைந்த இளம் பிறை ; இதழி- கொன்றை ; ஆர் - ஆத்தி; உன்ன என - தன்பக்தியில் கிளர்ந்தெழுவதற்காக; உபாயன் - தந்திரமாகச் செயல்பட்டவர்; வியாக்ரபாதரின் மகனாகிய உபமன்யு முனிவர் தம் தாய்மாமன் ஆகிய வசிட்டர் வீட்டில் பிறந்து வளர்ந்தவர். சில மாதங்களுக்குப் பிறகு தில்லையிலிருந்த வியாக்ரபாதர் வீட்டிற்குத் தாயுடன் கொண்டு வரப்பட்டார். வசிட்டர் இல்லத்தில் காமதேனுவின் பாலுண்டு வளர்ந்த குழந்தைக்குத் தந்தைவீட்டு வறிய உணவு பிடிக்கவில்லை. இந் நிலையில் சிவபெருமானே பெருஞ்செல்வர்; அவரைக் கேட்டால் உனக்குப் பால் கிடைக்கும் எனத் தாய் உபதேசித்தாள். உபமன்யு வேண்டச் சிவபிரான் பாற்கடலையே அளித்தார் என்னும் வரலாறு சேந்தனார்

திருப்பல்லாண்டு, கோயிற்புராணம் ஆகியவற்றால் அறியப்படுகிறது. பால் வேண்டித் தவம்புரிந்த உபமன்யுவின் எதிரில் இறைவன் இந்திரன் உருக்கொண்டு தோன்றிச் சிவநிந்தனை செய்ததாகவும் அதனைப் பொறுக்காமல் குழந்தை சினந்தபோது, சுயரூபத்துடன் காட்சியளித்துப் பாற்கடலை வழங்கினார் என்றும் ஆதித்யபுராணம் கூறுவதாக அபிதான சிந்தாமணி காட்டுகிறது. (பக்கம் 241) இவ் வரலாறே இங்கு இடம்பெற்றது; மும்மதில் - திரிபுரம்; வல்லை -விரைவில்; வேவும் - வெந்து போகச் செய்யும்,செயப்பாட்டு வினையாக வந்தது; வெள் நகையன்; மெய் விடாத -சத்தியத்தை விட்டு அகலாத ; ஏக தத்துவ - தனித்த பரம்பொருளாகிய ; சுதந்தரேசர் குணசந்தி; அத்தன் - உயர்ந்தவர் ; நவகண்ட ரூபி - பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுவரன்,சதாசிவன், விந்து, நாதம், சக்தி, சிவம், ஆகிய நவந்தருபேதத்தை உடையவன் ; பலபல் கோடி புகழ் மேய பரசிவன்; அனாதி - தொடக்கம் இல்லாதவன், எனவே முடிவும் இல்லாதவன்; பேதவாதம் - சமயங்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பிக்கும் தன்மை; சமரச அநுபூதி - ஒரே இறைவனை அடைவதற்குரிய நெறிகளே பல்வேறு சமயங்களும் என உணர்வுபூர்வமாக அறிந்து அவ்வுணர்ச்சியில் லயித்தல்; சமரசாநுபூதி - தீர்க்கசந்தி; பொலி கீர்த்தி - வினைத்தொகை.

3. வல்லி -கொடி; அன்னநடை வல்லி போலும் - இல்பொருள் உவமை ; வண்மையுறு( பிட்சாடனருக்கு உணவு படைக்கும்) கொடைத்தன்மை உடைய ; தையலார்கள் -தாருகாவன மகளிர்; வெள்ளை ஓடு -பிரமனின் மண்டையோட்டை நினைந்தது; ஒவ்வ -நிகர்க்க ; அத்தன் -தலைவன்; தாருகாவன வரலாறு வெளிப்படை ; மத குஞ்சர ஆனனத்தனை - மதம்மிக்க யானையின் முகத்தை உடைய விநாயகப் பெருமானை ; தாதை -தந்தை ; சையோகன் - கூட்டத்தை உடையவன், பற்பல சக்திகளால் சூழப்பெற்றவன்; அதிரதர், மகாரதர் - தேர்வீரர்களின் படிநிலைகள் நான்கில் முதல் இரண்டு, மற்றவை சமரதர், அர்த்த ரதர் என்பனவாம், இவை இறங்குவரிசையில் அமைந்தவை ; மகாரத ஆதி - வடமொழி தீர்க்கசந்தி; வயவர்கள் - வீரர்கள்; பராவு - துதிக்கின்ற ; வேல்கள் - படைக்கலங்கள்; பராவுபல்பூதம், புனைதரு பல் பூதம் எனத் தனித்தனி இயையும்; பூதநாதன் -பூதகணங்களின் தலைவன்; மண்ணுலகில் வைகுவார்கள் உன்னுபவும் - உலகியல் வாழ்க்கை அளவிலே இருப்பவர்கள் வேண்டுவனவற்றையும், இறையன்போ மறுமைபற்றிய எண்ணமோ இல்லாமல் அன்றாட வாழ்க்கையை மட்டுமே கருதுபவர்களுக்கும் அருள்பவர் என்றவாறு, உம்மை இழிவு சிறப்பு; வில்வம் - கூவிள மரம்; மற்கடம்- குரங்கு; வலிந்து அ(ந்)நாள்; ஒரு குரங்கு கயிலையில் வில்வ மரத்திலிருந்து இலைகளைப் பறித்துப் போட அது கீழிருந்த சிவபெருமானுக்கு அருச்சனை ஆயிற்று. இப் புண்ணியத்தால் அது சூரியவம்சத்தில் திலீபன் மகனாகப் பிறந்து முசுகுந்தச் சக்ரவர்த்தியாகப் பெரும்புகழ் பெற்றது. இவ் வரலாற்றின் விரிவை இவ் வண்ண ஆசிரியர் இயற்றியுள்ள முசுகுந்த நாடகம் என்னும் இசைநாடகத்துள் காண்க ; மரகதகலாபி - பச்சை மயில்; உமை உரைதவாத மோகவாரி என இயையும்; நிருதர்குல பாலவாதை அற அருளும் என்பதில் இடம்பெற்ற வரலாறு தெளிவாக விளங்கவில்லை ; ஐம் முகவன் - ஐந்து முகங்களை உடையவர்; ஆய - ஆகிய ; அம்மலை என்றது கயிலையை ; வல்லன் - வலிமைமிக்க இராவணன்; மீளி - வலிமையை உடையவன்;

"முந்திமா விலங்கல்அன் றெடுத்தவன் முடிகள்தோள் நெரிதரவே
உந்திமா மலரடி ஒருவிரல் உகிர்நுதி யால்அடர்த்தார்"

(தேவாரம் 3-92-8)

அத்திரம் - பாசுபதக்கணை ; பேடி - ஊர்வசி சாபத்தால் ஒரு பேடியாக இருந்த அருச்சுனன்; வேடன் - கிராதமூர்த்தி; அருச்சுனன் பாசுபதம் வேண்டித் தவம் புரிந்தபோது சிவபெருமான் ஒரு வேடனாக வந்து, பன்றி வடிவிலிருந்த மூகாசுரனைக் கொன்று, அருச்சுனனுடன் பொய்ச்சமரிட்டு, வில்லடி ஏற்ற வரலாறு வெளிப்படை ; நால்வர் - சம்பந்தர் முதலிய நான்கு சமயாசாரியர்; பதிகம் - தேவார திருவாசகம்; ஓவிடான் - விட்டு நீங்காதவன்.

4. அம் மலரின் மைய வாசன் நன் மறைகள் - அழகிய தாமரையின் நடுவே இருக்கிற பிரமன் கூறிய நல்ல வேதங்கள்; வேதநெறிக்குப் புறம்பாகாத தூய சைவர்களும்; தொல் நெறியில்-தமக்குரிய பழமையான ஒழுக்கங்களில்; கர்ம சீலம் - உடலாலும் மொழியாலும் செய்யும் சடங்குகள் ஆகிய கர்மம், மனத்துக்கன் மாசற்று விளங்குதலாகிய சீலம், திரிகரண சுத்தியைக் குறித்தது, உம்மைத் தொகை, ஒன்று - பொருந்திய ; விப்பிரர் - அந்தணர்; சுகந்த தாம மற்புயம் - நறுமணமிக்க பூமாலைகளை அணிந்துள்ள வலிமையான தோள்களை உடைய; காலர்த்திரள் - அரசர் கூட்டம், சத்திரியர்; சளம் செயாத - வாணிபத்தில் ஏமாற்றாத ; நாய்கர் -வணிகர்; சதுரர் -திறமை உடையவர்களாகிய வேளாளர், நான்காம் வருணத்தார் எனப் பொருள் தரும் சதுர்த்தர் என்பது தொனியாக உள்ளது. சைவர் முதல் சதுரர் வரையான ஐந்திடத்தும் எண்ணும்மை கூட்டுக ; வாசம் - வசிப்பிடம் ; மை மருவு -மேகங்கள் பொருந்திய; கள் அறாத - தேன் குறையாத ; நள்ளும் - விரும்பும் ; மா -வண்டு; கும்மல்-கும்பல்,கூட்டம்; மா சோலைக்குள் உலாவும்; வத்திரம் -ஆடை ; சிகண்டி -மயில் ; இக்குவில் மதன் - கரும்புவில்லை உடைய மன்மதன்; சுலாவும் -சுற்றி வருவான், திணை வழுவமைதி; மரணபயம் மேவிடாத புலவர் - இறப்பற்ற தேவர்கள்; பல் வலோர்கள் என்றது பொதிகையில் வாழும் பற்பல சித்தர்களை ; பொதியை நல்நீரில் - பொதியை மலையில் தோன்றிய பொருநையாற்றில்; மும்மைய தமிழ் - இயல், இசை, நாடகம் ஆகிய முப்பகுப்புகளை உடைய தமிழ், திருஞானசம்பந்தர் இத்தலத்துப் பதிகத்தில் அருந்தமிழ் மாலைகள் பாடி ஆடக்கெடும் அருவினையே (தேவாரம் 3-9-211) என்பதால் இவை இயற்றமிழ் மட்டுமன்றிப் பாடுதற்குரிய இசைப்பாடல்களும் ஆடுதற்குரிய கூத்துப்பாக்களுமாம் என விளக்கியவாறு; அத்தி -எலும்பு ; பெண் என்றது பூம்பாவையை ; சிறுகுழந்தை பாடல் - திருஞானசம்பந்தரின் தேவாரம், சிறப்பாக மருந்தவை மந்திரம் என்னும் சாதாரிப் பண்பதிகம் (3 92) சாரணர் - சமணர் ; கழு இடு அந்த நாள் ; பொடியினால் - திருநீற்றால் ; நன்மேனிகொளும் வழுதியார் -கூன் நீங்கி நிமிர்ந்த உடலைப் பெற்ற நின்றசீர் நெடுமாறனாகிய பாண்டியன்; இவன் திருநெல்வேலிக் கோயிலில் திருப்பணிகள் செய்ததாக அத் தலபுராணம் கூறுகிறது.

"நீதிதழைத் தோங்கதிரு நெல்வேலி
நாதர்முன்பே நிலைபெற் றோங்கச்
சோதிமணி மண்டபத்தைத் தூயமகா
மேருஎனத் துலங்கச் செய்தே
வேதிகைபொற் படிதூண்கள் விளங்குதிரு

வாயில்அணி விரவிச் சூழ்ந்த
கோதில்மணிக் கோபுரமும் சேண்மதிலும்
வெள்விடையும் குலவச் செய்தான்''

அனவரத தானநாதன் - முகம்மது அலியின் ஸ்தானாதிபதியான அன்வர் உதீன்கானின் மனைவியின் வயிற்றுவலியைப் போக்கியதால் அமைக்கப்பெற்ற சிவலிங்கம், அன்வர் உதீன்கான்நாதர் நாளாவட்டத்தில் அனவரததான நாதர் ஆயிற்று என்பர் ; இந்த அன்வருதீன்கானின் ஆட்சிக் காலம் கி.பி. 1743 - 1749 என்பர். காந்திமதி - தலத்து இறைவியின் திருநாமம்.

5. இன்னல் இலது ஐயர் வாழ -துன்பமில்லாமல் தேவர்கள் வாழவும்; அவுணர்கள் தாழ- அரக்கர்கள் சிறுமை எய்தவும்; நீட- நீடுழி வாழ ; இல் தொறும்; வயம்முன் சொல் பான்மை -வீரம் முதலிய புகழ்ச்சிக்குரிய பண்புகள்; எழிலி -மேகம்; ஏழு மேகங்களாவன ; சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம்; தமிழ் மாதங்கள் வானில் சூரியனின் நிலையைக் கொண்டு கணக்கிடப்படுவதால் வானில் இரவிசெலும் மாதம் என்றார், இது சௌரமானம் எனப்படும்; மு மாரி - மாதம் மூன்று மழை; உன்னுதலின் - கருதுவதால்; இறைவனுக்குத் திருவிழாக்களும் உலாவும் நிகழ்ந்தால் இதுவரை கூறப்பெற்ற நலங்கள் யாவும் எய்தும் என்பது கருத்து; ஏறு - இடபம்; ஒரு தையல் - ஒப்பற்ற காந்தியம்மை; செம்மை - சிவந்த நிறத்தினரான; நீர்மகட்கு இனிய திங்கள் - கங்கையின்கண் அழகிய பிறை, நான்கன் உருபு ஏழன் பொருளில் வந்தது, பிறைமதி கங்கைநதியில் ஒரு தோணி போல உள்ளது என்பதனை நினைந்து கூறியது, "வியன் கங்கை பொங்கி வருநீர் மடுவுள் மலைச் சிறு தோணி வடிவின் வெள்ளைக் குருநீர் மதிபொதியும் சடை'' (திருவாசகம் 6 - 26); வால் வளைக் குழைகள் - ஒளிவீசும் சங்கினாலாகிய காதணிகள்; உரகம் - பாம்பு ; இதழி - கொன்றை; தார் - மாலை ; இறைவர் சிரித்துப் புரமெரித்தவர். ஆனால் இப்போது நெருப்பு இல்லாத புன்னகையராக உலா வருகிறாராம்; தோல்கள் துன் உடை என்றது புலித்தோலையும் யானையுரியையும். செவ்வி - சிறப்பு; எற்பொழுது - பகலில்; முற்பகர் - முதலாகச் சொல்லப்படுகின்ற ; இயங்கள் - இசைக் கருவிகள் ; இருவகைய வேதசாலம் - தமிழ் வடமொழி மறைத்தொகுதிகள் மினார்கள் - அழகிய மகளிர் ; இசை முனிவர் - சங்கீதத்தில் சிறந்த இருடிகள்; ஆனி விழா - நெல்லையில் ஆனிப் பெருந்திருவிழா பத்துநாள் நடைபெறும்; நாலாம் திருவிழா ஊர்வலம்; பவனி கண்டிரங்கல் ஒப்பு ; வீதிக்கே நின்று விளையாட் டயருங்கால் மஞ்சனக் கண்ணாளும் தாமும் அணிதில்லைச் செஞ்சடைக் கூத்தனார் வெள்விடைமேற் சேறலும் உண்ணெக் குருக எதிர்ப்பட்டு'' (சிதம்பரச் செய்யுட் கோவை 62:4- 7)

6. வல்லை சோர - விரைவில் சோர்வடைய; ஆழி - மோதிம்; இக்குடன் - கரும்பு வில்லோடு; தேம் மலர்க்கணை - தேன் நிறைந்த பூக்களாகிய அம்புகள் ; மா மதிக்குடை - அழகிய சந்திரனாகிய குடை ; வெப்பம் செய்கிறது என்றபடி ; ஏழுபனை உயரமான மேன்மை எலி உயரம் ஆயது - என் பெருமை குறைந்தது என்பது கருத்து ; ஆரும் - பொருந்துகின்ற, இவ் வெச்சம் உறவைக் கொண்டு முடிந்தது ; வசை - அலர் ; மிஞ்சலான - மிகுந்த ; கைப்பொடு - கசப்புடன்; கோகிலம் - குயில்; மை - கரிய; கலோலஒலி - அலைஓசை;

"சொக்கர் மாலைகொடார்; கூற்று ஒன்றுஅல ஒரு கோடி" (மதுரைக் கலம்பகம் 6)

எண்ணில் வகை - கணக்கற்ற ; அல்லல் ஆன - துயரங்களை ; பன்னவிடு - இறைவனிடம் சென்று சொல்லுவதற்குத் தூதாக அனுப்பிய ; கிள்ளையாதி - கிளி முதலியனவும் ; நூறு என்றது பல என்னும் பொருட்டு; முனிந்துளார்கள் - சினந்து வைகின்றனர் ; அணை - படுக்கை ; கந்தம் மீறு - நறுமணம் மிகுந்த ; களபங்கள் - வாசனைப் பொருட்கள்; புட்பகளபங்கள் - உம்மைத் தொகை ; தீயில் - இல் உவம உருபு; தீதுஇல் கனவு பலவாயும் - (தலைவன் தனக்கு அருள் செய்வதைப் போன்ற நலமுடையதாகிய) தீமையற்ற பல கனவுகள் ஏற்பட்டபோதும், நற்சகுனங்களாகி சொப்பனங்கள் நேர்ந்தும் எனினும் ஆம் ; தழை - தலைவன் தன் காதலின் அறிகுறியாகத் தலைவிக்கு அளிக்கும் தழைகளாலான உடை, "கொடிச்சி திருந்திழை அல்குற்குப் பெருந்தழை உதவி" (குறுந்தொகை 214); ஆத்தி - இறைவன் அணிந்துள்ள தாதகி மலர் மாலை, ஆகுபெயர்; வாஞ்சை - ஆசை.

7. முன்னம் - பண்டைக் காலத்தில் ; எனில் - என்னைப் போல, இல்உவம உருபு; எய்தினார் இம்மன் உலகில் ; மடந்தை என்றது மண்டோதரியை ; வம்பு - பொய்ம்மொழி;

"ஆர்கலி சூழ்தென் இலங்கை அழகமர் வண்டோ தரிக்குப்
பேரருள் இன்பம் அளித்த பெருந்துறை மேய பிரான்" (திருவாசகம் 18 - 2)

இவ்வரலாறு விரிவாகத் திருப்பெருந்துறைப் புராணத்தில் உள்ளது என்பர்; முகுளமலர் வாளியான் - மலர் அரும்புகளைக் கணைகளாகப் பெற்றுள்ள மன்மதன்,

"கருப்பு வில்லி அருப்புக் கணைதூவ" (மணிமேகலை 25 - 90)

". . . . . . . . . . . . . . விரியாது தம்மேல்
பொரிபூ மழைநோக்கிச் சோர்வார்" (திருப்பூவணநாதர் உலா 148)

காமதகனத்திற்குப் பிறகு பார்வதியை மணந்தது வெளிப்படை, நன்மை தவிர் புல்லன் - நற்பண்புகளை நீக்கிவிட்ட தீயவன் ஆகிய ; சின்னவிதி - பிரமனின் மகனாகிய தக்கன்,

"தேசின் மிக்க சிறுவிதி யாரினும்
பேசொ ணாத பெருமகிழ் வெய்தினான்" (கந்தபுராணம் 6 - 2 - 16)

பெண்ணுரிமை கொள்ளும் ஆடல் - தாட்சாயணியை மணந்த அருளாடல் ; நந்துஅணி தரும் - சங்கேந்தும்; ஒருத்தி என்றது பார்வதியை ; பாவை - பெண், கங்கை ; தன் - பகுதிப் பொருள் விகுதி ; உலகு உய்யுமாறு - பார்வதி திருமணத்தில் எல்லாக் கணத்தவர்களும் இமயத்தில்கூடிவிட்டதால் இமயம் ஆழ்ந்து தென்திசை மேலேறத் தொடங்கியது. இதனால் உலகம் கவிழ்ந்துவிடாமல் காப்பதற்காக அகத்தியர் தெற்கே அனுப்பப்பட்டார் ; தென்மலை - பொதியை; ஐது - விரைவில் ; மன் முனி - முனிமன் என மாறுக, தவராசர், அகத்தியர் ; அக் கிரி என்றது பொதியை மலையை ; அக் கிரி வரைந்த கேதனத்தினை அணிந்துளான் - மலயத்துவசன் ; மகள் - மீனாட்சி ; வரலாறு வெளிப்படை ; எனாது - என்னுடையது, ஆது ஆறன்உருபு; அறிகிலவர் போல் - அறியாதவர் போல ; இது அருள்நெறி; எல்மிதுனம் அதில் ஏகுதோறும் - சூரியன் மிதுனராசியில் செல்லும் ஆனிமாதம் தோறும், அது - பகுதிப்பொருள் விகுதி ; முருகாற்றல் - திருவிழா இயற்றுதல்.

8. மொண்ணை முகி - உறுப்புக்கள் எடுப்பின்றிச் சப்பட்டையான முகத்தை உடையவள்; தலைவி தான் அழகற்றவள் அல்லள் என்கிறாள் ; வாரி தன்னில் வரும் தையலார்கள் - பாற்கடலில் தோன்றிய அரம்பையர்கள்,

"ஐஅரி பரந்த மைக்கண் அரம்பையர் உதித்தார் பின்னர்"

(செவ்வைச் சூடுவார் பாகவதம் 8 - 3- 28)

நள்ளுவார்கள் - விரும்புவர், விகுதி மேல் விகுதி ; முற்பவம் - கடந்த பிறவி; முதியன் - தகுதியால் உயர்ந்தவன், கிழவன் என்பது தொனி; ஏது என் ஆவல் ; உரிமை ஈர்கிறான் - என் நட்பைப் பிளக்கிறான் ; இது இணை இல் ; மூவர் - திரிபுரத்து அசுரர் மூன்று பேர் ; திரிபுரங்களை எரித்துச் சாம்பலாக்கியபோதும் சிவபக்திமிக்க மூன்று அசுரர்களைக் காத்தார் என்பது வரலாறு ; விடப் பாம்புகளுக்குத் தோள்களை அருளினார், ஆனால் எனக்குத் தர மறுக்கிறார் என்பது குறிப்பு; உம்மை - இழிவு சிறப்பு ; நக்கன் - திகம்பரன், சிரிப்பவன் என்னும் பொருள்களில் சிவபெருமான் ; இறைவன் என்னைப் பொறுத்தவரை நக்கனாக இல்லையே என்றபடி; அரன் - அடியாரின் துன்பத்தைப் போக்குபவன் ; என் மையலைத் தீர்க்கவில்லையே என்பது குறிப்பு ; அத்தன் - எல்லாவற்றிற்கும் தலைவன், என்னைத் தலைவனாக ஆட்கொள்ளவில்லையே என்றவாறு; எனா - என்று கூறுகின்ற ; முன் நூல் - பழைய புராணங்கள் முதலியன ; விடான் - கைவிட்டுவிட மாட்டான், அடுக்கு உறுதிப் பொருட்டு; மொய் - வண்டு; முகர்தல் உள்ளி - தேன் முகத்தலை நாடி; மீது துன்று முகைகள் - தம்மேல் பொருந்திய தாமரை மொட்டுகள், நகில்களுக்கு மொட்டுகளும் முலைக்காம்புகளுக்கு வண்டும் உவமை; மொய்ம் முகர்தல் - சந்தம் நோக்கிய விரித்தல் விகாரம் ; பொன்னவிர் சிமிழ் - தங்கத்தாலாகிய ஒளி வீசுகின்ற சிறு செப்பு ; அவிர்பொற் சிமிழ் என்க ; முகை முதலிய நான்கனுடனும் என்ன என்னும் உவம உருபு இயையும், முத்து அணிவடங்கள் ஆதி நல்பணி; அணிவடங்கள் - வினைத்தொகை ; மதனன்தனோடு அவற்கு இனிய நங்கை - காமன் இரதி ; கோலம் முழுதும் - இருவருக்கும் உரிய அழகிய உபகரணங்கள் அனைத்தையும், என்றது வில்லாகிய கரும்பையும் அம்பாகிய மலர்களை உடைய கொடியையும், என்னை? தொய்யிலாக எழுதப்பெறுபவை இவையே ஆதலின்,

"கரும்பும் வல்லியும் பெருந்தோள் எழுதி" (சிலம்பு 2-29)

இவை நகிலிலும் எழுதப்பெறும் ; எழுதுபொறி - வரையப்பெற்ற தொய்யிற்கோலம்.

". . . . . . . . . . . . . . . . . நெடுமென்தோள்
பெய்கரும் பீர்க்கவும் வல்லன்; இளமுலைமேல்
தொய்யில் எழுதவும் வல்லன்" (கலித்தொகை 143 : 31 - 33)

முகம் என்றது நகிற்காம்புகளை ; பிறைநுனியின் மேலதாம் - பிறைச்சந்திரனின் நுனிகளைவிட அழகாற் சிறந்த, கூர்மையைக் கருதுகிறார் போலும், உவமை தெளிவாக விளங்கவில்லை ; மிளிர் செவ்வி மேவி, புனைந்து, மொய்த்து, தோய்வதாகி, முகமும் மேலதாம் என முலையாலே நேரின் சமரம் செய்வேன் என்பது முடிபு; நேரின் - எதிரில் வந்தால் ; சமரம் - போர் ; நெல்லைநாதர் செய்வது அநீதியாதலால் நான் அவரோடு போரிடுவேன் என்பவள் நகில்களால் தாக்குவேன் என்கிறாள். ஈற்றேகாரத்தைப் பிரித்து முலையால் என்பதனோடு கூட்டுக.

# 3. ஈழுத்து ராசா வண்ணம்

பெரும்புலவர் அந்தகக்கவி வீரராகவ முதலியார் அவர்களால் இயற்றப் பெற்ற இந்த வண்ணம் பேரூராதீனத்தின் 147 ஆம் எண்ணிட்ட சுவடியில் உள்ளது. இச் சுவடி மிகச் சிதைந்தும் ஏடுகள் பிறழ்ந்தும் இருந்த ஒன்றைப் பார்த்துப் படியெடுத்த தாகலாம். ஏனெனில் இதில் ஆண், பெண் கலைகள் இடம்மாறியிருப்பதோடு தொங்கல்களும் மிகப் பிறழ்ந்துள்ளன. இதன் பெண்கலை மட்டும் மு.ரா. கந்தசாமிக் கவிராயர் அவர்களால் 1908 இல் பதிப்பிக்கப்பெற்ற தனிச்செய்யுட் சிந்தாமணி முதற்பாகத்தின் 166 ஆம் பக்கத்தில் அச்சாகி உள்ளது. அந்நூலில் "இதில் மற்றைப்பாதி கிடைத்திலது" என்பது அடிக்குறிப்பு. தமிழில் வண்ணப்பாடல்கள் நூலில் இது பரராசசிங்கன் வண்ணம் எனப் பெயரளவில் குறிப்பிடப்பெற்றது. இதன் காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு ஆகலாம் என்று கூறப்படுகிறது.

பரராசசிங்க பூபதி என்னும் ஈழவேந்தனை உலாவில் கண்ட தலைவி அவன் மேல் காதல் கொள்கிறாள். காதல் நிறைவேறாததால் பெருந்துயரம் கொள்கிறாள். தலைவியின் துயரத்தை அரசனுக்கு எடுத்துக் கூறி அவளுக்கு அருளவேண்டும் எனத் தோழி வேண்டுவதாக அமைந்தது இந்த வண்ணம். கிளவித்தலைவனின் பெயர் கூறப்பெற்று விட்டதால் இது அகத்திணை ஆகாது. புறத்திணையே. எனவே தூய அகத்துறைப் பாடல்களுக்குப் புறத்தே வைக்கப்பட்டது. அடுத்ததும் இத்தகையதே.

இது மிகச் சிறந்த வண்ணங்களுள் ஒன்று. தெளிவாக உள்ள இன்னம் ஒரு பழைய சுவடியாவது கிடைத்தால் இந்த அருமையான வண்ணம் மேலும் செப்பமுறும். பெருமிதமான நடையும், பொருளாழம் மிக்க சொற்களும் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. பரராசசிங்கன் இவ் வண்ணத்தை,

"விரகன்முத் தமிழ்க்கவி வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெலாம்
உரகனும் வாணனும் ஒப்பத் தோன்றினால்
சிரகர கம்பிதம் செய்ய லாகுமே"

எனப் பாராட்டியதோடு வளநாடும் யானைக்கன்றும் பரிசளித்தான் எனத் தமிழ் நாவலர் சரிதை (245) கூறுகிறது.

ஆண்கலையில் பரராசசிங்கனின் சிவபக்தி, கொடை, கல்வியறிவு, வீரம், மனத்திண்மை ஆகிய பண்புகள் பாராட்டப்பெறுகின்றன. மணிநாடு, இலங்கை என இடப்பெயர் சுட்டப்பெறுகிறது. பாங்கியின் கூற்றாக அமைந்த பெண்கலை தலைவியின் பேரெழில், அவள் தலைவனைக் கண்டதால் அடைந்த காமநோய் மிகுதி இரண்டையும் தக்கவாறு விளக்கித் தலைவியின் துயர்தீர அருளாதது ஏன் என வினவுகிறது. இலக்கியத் தரம் மிகுந்த சிறந்த வண்ணங்களுள் இதுவும் ஒன்று.

# 3. ஈழுத்து ராசா வண்ணம்

## அந்தகக்கவி வீரராகவ முதலியார்

## பெண்பாற் கைக்கிளை - பாங்கி தலைவனை வேண்டல்

தனனத் தனனதனா தனதன
தனன தனனதன தானன
    தனனத் தனதன தனன தனனதன
    தனன தனனதன தனதனதான
        (தொ) தனதான தந்தனா தனனா

ததிமித் தரிகிடதோ தகிடத
    ததிமி ததரிகிட தோதிரு
ததமித் தரிகிட ததிமி ததரிகிட
    ததிமி திமிதிகட தரிகிடதீதோ
எனஒத் தியநடனார் ; துதிசெயும்
    இமைய சிமையஉமை யாள், அனை
எனும்உத் தமிஇடம் (மருவு) கடவுளர்தம்
    இணையில் (அடியைகதி) என நினைவோனே!
சரசக் கரதலனே ! இரணிய
    தரணி விதரணிக னே ! திசை
தடவிப் புடவியில் (நிழலை வெகுளுகிற)
    தடக ரடபகடு தருபெருவாழ்வே !
        மணிநாடர் தங்கள்நா யகமே ! (1)

சதுருக் கொருசதுரே ! சகதல
    சகல கலைவலவ னே ! பர
சமயப் பெருமையும் அமையும் நமதுசிவ -
    சமய நியமவழி(வ)ருபெருமானே!
அவனிக் கதிபதியே ! சசிகுல
    அரசர் பரவுபத னே! குவ -
டையப் பொடிபட, முகடு செவிடுபட,
    அகடு கடல்மறுக அயில் (எறி)வேளே!
சயிலக் கருமுகிலே! கரதல
    சரச விதரணிக னே! ரகு,
சகரப் பகிரதி தருதெய் வவ்ருதன்நளன்,
    பரதன் (எனும்அரசர் தகும்) உரவோனே!
        நரலோக கண்டநா ரணனே! (2)

மதுரக் கவிரசமே! அபிநவ
வசன கனஉசித னே! வெகு
மகரச் சலதியில் உலமு சலமதிட
அசுரர் அமரர்நடு வரும்ஒரு மாலே!
திகிரிச் செயதரனே! கருதலர்
திமிறி (அனிகமுட) னேவரு
செருவிற் பிரமனும், வெருவிட வருபவர்
சிரமும் உருளவிடு தெரிகணையோனே!
வனகற் பகஇனமே! குறுகலர்
வயிறு பிசையும்அன லே! கடும்
அமரிற் கருநடர், கவுடர், குடகர், குரு
வடுக நிருபர் முடி வருடியஏறே!
கவினார்இ லங்கைகா வலனே! (3)

வனசத் திசைமுகன்நேர் அவர்அவர்
வரிசை தெரிகுரிசி லே! புகழ்
வளரக் கிளைஞரும் வளர, உயர்கவிதை
வளர, அறம்வளர வளர்உறவோனே!
நளினக் குறுமுனியே! அறுபத
ஞிமிறு திமிருபுய னே! வரை
நெடுமைக் குடுமியின் நடுவு கொடுவரியை
(நிலவு பதகைஎன) நிறுவியகோவே!
மனுவிற் குலமுதலே! ரவிகுல
மவுலி குலதிலத னே! திரு
மலை(யர்ப்) பதியினும் வள(வர்) நகரியினும்
மதுரை நகரியிலும் உளவர்பிரானே!
பரராச சிங்கபூ பதியே! (4)

பதுமத் தடிஇணையாள்; பிடி, நடை
பயிலும்அனம்என்நடை யாள்;அதி
படிவக் கடிதடம் இடறு கடிதுபட
படல அடல்உரக படமுடி போல்வாள்;
கலைபொற் கலைஉடையாள்; பயிரவி
கரட மருகஇடை யாள்;இரு
கடினத் துறுகுடம் மகுடம் விகடமிடு
(களிறின் மதகம்நிகர்) கனதனமார்பாள்;
பசலைக் கிளிஉகிராள்; வளர்கிளி

பழகும் அழகியகை யாள்; புரி
பரவத் (துவைநினை) தவ (ரும் மயலினொடு)
பரவு திகிரிநிகர் படர் இருதோளாள்;[1]
களமேவி ங்குகோ டனையாள் (5)

பனிமுக் கனிமொழியாள் ; உடுபதி
பகரும் அதிக[2]நகை யாள்;சிறு
பவளத் துளவளம் எவள வவளவுள
பலித இத (ழ்கள்பொலி) பரிமளவாயாள்;
பரு[3]முத் துறுகுமிழாள்; சததள
பதும வதனமத னாள்;[4] பணி
அணிபற் றிரணிய புரண கிரணகுண[5]
அருண வருணமிளிர் வரிஇணைகாதாள்;
பருவப் பிறைநுதலாள்; நறவறி[6]
பறவை ஞிமிருகுழ லாள்; (விரி)
படியைக்[7] கடிதடு கடுவை, வடுவை, அடு
படையை, முடுகுகணை அடர்இருகோவாள்
உனைவீதி யின்கணே தொழுதாள் (6)

புதுமைப் ரபையுடையாள்;[8] எழுபரி
புணரி புணரஉண ராள்; வெயில்
புதையக் கதிரெதிர் உதயம் மதியம்என[9]
புதிய மதியையும் விதியையும் நோவாள்;
விமுகத் துயர்அவியாள்; நறுநுதல்
ம்ருகம ததிலகம்இ டாள்; பொரு[10]
விரகப் பரவையை வெருவி, உருவிலியை
வெருவி அருவிஇரு விழிதரல்ஓவாள்;
புலரிக் கலைதரியாள்; புழுகிரு
பொழுதும் முழுதும்எழு தாள்; பல
புளினத் துழனிய சுனையில் (மகிழ்வினொடு)[11]
புளக களபம்எழு புனல்விளையாடாள்;[12]
அயிலாள்; க ருங்கணே துயிலாள் (7)

1. திகிரி நிரை பரவிருதோளாள் 2. பரவும் ஒளிய 3. அணி 4. வனச அதிக வதனாள் 5. அணிபொற்கிரணய க்ரகண வருணகுண 6. நறையறி 7. முகில்படியக் 8. யனையாள் 9. அள 10. பெரு 11. தளிநளி நளின நளின நளினவிள 12. கலபவித முறுபுனலாடாள்.

புனைநற்[1] பணியணியாள்; மிளிர்தளிர்
பொதுள அளகம்முடி யாள்;திரை
புரளக் கரளம தருளும் இருள்உததி
(புரையும்) ஒருவர்எதிர் பொழு(தக)ம் ஆறாள்;
அயலுக் கயலும்நிலாள்; தன்அனையை,
மனை,அ மனையைநினை யாள்;மனம்
அழலிற் றுவளுவள்; எழுவள்; தொழுதழுவள்;
விழுவள்; மொழிவள்; உயிர் அயர்குவள்; சோர்வாள்;
பொழிமட் டணைதனிலே, இனிஇவள்
புலரும் மயல்அகல வே, (முறை)
புல (நற்) சிலைமுலை குழைய, அமலைமலை
புலவி கலவிநிலை புனைதரவே, நீ
மருவாத தென்கொலோ புகல்வாய். (8)

(இவ் வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை)

1. புனிதப்

- மாவிந்தநாட்டு மன்னன், தமயந்தியின் கணவன், நளவெண்பா, நைடதம் ஆகிய காவியங்களின் நாயகன்; பரதன் - துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் பிறந்தவன், இவனால்தான் நம் நாடு பாரதம் என வழங்கப்படுகிறது; தகும் - நிகரான; உரவோனே - வலிமை உடையவனே ; நரலோக கண்ட - நில உலகின் தலைவன் ஆகிய ; நாரணனே - திருமால் போன்றவனே.

3. மதுரக் கவிரசமே - இனிமைமிக்க கவிதையின் சுவையைப்போல் எப்போதும் மகிழ்விப்பவனே ; அபிநவ கன உசித வசனனே என மாறுக, புதுமையும் பெருமையும் இடத்திற்குப் பொருத்தமானபான்மையும் பெற்ற மொழிகளைப் பேசுபவனே என்றபடி; மகரச் சலதி - சுறாமீன்களுக்கு இடமாகிய கடல்; உல முசலம் அது இட - மலையாகிய உலக்கையால் கடைய, உலம் - கல், ஆகுபெயராக மலையை உணர்த்தியது; அது - பகுதிப் பொருள் விகுதி; பாற்கடல் கடைந்த வரலாறு வெளிப்படை ; திகிரி - ஆணைச் சக்கரத்தை உடைய; செயதரனே - வெற்றி மிக்கவனே; கருதலர் - பகைவர் ; திமிறி - அடங்காமல் மீறி; அனிகமுடனே - படையுடன், அத்துச் சாரியை கெட்டது, ஏகாரம் அசை ; வெருவிட - அஞ்சும்படி ; தெரி கணையோனே - தேர்ந்தெடுக்கப்பெற்ற அம்புகளைச் செலுத்துபவனே ; வன கற்பக இனமே - அழகிய கற்பகமரத்திற்குத் தொடர்புடையவனே, வேண்டுவார் வேண்டுவதை ஈபவனே என்றவாறு; குறுகலர் - பகைவர் ; அனலே - தீ அனையவனே; அமரில் - போரில்; குரு - குரு நாட்டு மன்னர்; வடுக நிருபர் - தெலுங்க மன்னர்; முடி வருடுதல் என்றால் தலையைத் தடவுதல் என்பதே பொருள், இங்கு சீவிய அல்லது வணக்கிய என்னும் கருத்தில் ஆள்கிறார் போலும்.

4. வனசத் திசைமுகன் - தாமரைமலரை இருக்கையாகக் கொண்ட நான்முகன், பிரமன்; எல்லோருடைய விதியையும் அவரவர் தலையில் எழுதுகிற பிரமனுக்கு ஒவ்வொருவரைப் பற்றியும் எவ்வாறு ஐயமில்லாமல் தெரியுமோ அவ்வாறே பரராசசிங்கனுக்கும் கலைஞர்களின் தரம் மிக நன்றாகத் தெரியும் என்றது சிறப்பான உவமை ; உறவோனே - அனைவரிடமும் நட்புப் பாராட்டுவோனே ; நளினக் குறுமுனியே - இங்கிதம் தெரிந்த அகத்தியர் போன்றவனே ; அறுபத ஞிமிறு - ஆறுகால் வண்டு; திமிரு - ஒலிக்கின்ற ; நெடுவரை மைக்குடுமி என மாறுக, உயரமான மலையின் மேகங்கள் பொருந்திய கொடுமுடி என்றவாறு; கொடுவரி - புலி; பதகை - கொடி; கரிகாற் சோழன் இமயத்தில் புலிக்கொடி நாட்டிய செயல் பின்னோருக்கு ஏற்றி உரைக்கப்படுவதுடன் இலங்கை மன்னன் சோழ மரபினனாகக் கூறப்படுகிறான்.

"தெள்அருவிச் சென்னிப் புலியே றிருத்திக் கிரிதிரித்துப்
பொன்னிக் கரைகண்ட பூபதி" (விக்கிரமசோழன் உலா 12 - 13)

மனுவிற் குலமுதலே-மனுச்சக்கரவர்த்தியின் ஒளிமிக்க மரபில் தோன்றிய முதன்மையானவனே,

"அவ்வருக்கன் மகனாகி மனு மேதினி புரந்து
அரிய காதலனை ஆவினது கன்றுநிகர் என்று
எவ்வருக்கமும் வியப்ப முறை செய்த" (கலிங்கத்துப் பரணி 187)

மனுநீதிச் சோழன் வரலாறு வெளிப்படை ; ரவிகுல மவுலி குலம் - சூரியனின் மரபாகிய தலைமைவாய்ந்த மரபு, சோழர்களைச் சூரியவமிசத்தார் எனல் மரபு,

"மன்னி நீடிய செங்கதி ரவன்வழி மரபின்
தொன்மை யாமுதற் சோழர்தம் திருக்குலத்து" (பெரியபுராணம் - அதிபத்தர். 1)

திரு - அழகிய; மலையர்ப்பதி - மலைநாடு எனப்படும் சேரர்களின் தலைநகர், மலையர்ப்பதி எனற்பாலது வண்ணம் நோக்கி விரித்தல் விகாரம் பெற்றது; வளவர் நகரி - சோழர் தலைநகர்; உளவர் - உள்ளவர், இருப்பவர், இடைக்குறை ; பரராசசிங்கன் சேர சோழ பாண்டியர் மூவருக்கும் தலைவன் என்றபடி.

5. பதுமத்து இணையடியாள் என மாறுக, தாமரை போன்ற இரு கால்களை உடையவள் என்றவாறு; பிடி - பெண் யானை; படிவக் கடிதடம் - அழகிய அல்குல்; கடிது இடறுபட - கடுமையான ஆபத்து உண்டாகும்படி; படல அடல் - அதிகமான வலிமையையுடைய ; உரக முடி படம் போல்வாள் - பாம்பின் தலையில் உள்ள படத்தைப் போன்று அமைந்தவள் ; உரக படம் வடமொழியாதலின் இயல்பாகப் புணர்ந்தது ; பொருள் தொடர்பிற்கேற்பச் சொற்கள் கொண்டு கூட்டப்பெற்றன; உரகபடம் புகழப்பெற்று உவமிக்கப் பெற்றதால் இது புகழுவமையணி ; கலை - மேகலை என்னும் அணியையும்; பொற்கலை - பொற்சீலையையும்; கலைபொற்கலை - உம்மைத்தொகை ; பயிரவி கர டமருக - துர்க்கையின் கைகளில் உள்ள உடுக்கையைப் போன்ற ; மகுடம் - கிரீடம், நகிலுக்கு உவமை.

"வீரமதன் வண்ணமுடி என்று மதிக்கலாம் ; அம்மகுடம்
தண்ணெனவும் வெச்செனவும் தாராதே" (வருணகுலாதித்தன் மடல் 81, 82)

விகடம் இடு - பெருமை பொருந்திய, பெரிய ; களிறின் - ஆண்யானையின், வண்ணம் நோக்கிக் களிற்றின் என மெய் இரட்டாமல் இயல்பாய் நின்றது ; மதகம் - மத்தகம், நகிலுக்கு உவமை.

"அங்குசங்கள் பட்டங் கழுத்துகரி மத்தகமும்
பொங்குசுரும் பேறுமுகைப் போதுமாய்" (தாயுமானவர் மடல் 79)

பசலை - பச்சை நிறம் வாய்ந்த ; உகிர் - நகம், நகத்திற்குக் கிளிவாய் உவமை,

"கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு வள்ளுகிர்" (பொருநர். 34)

தவரும் மயலினொடு பரவுதல்;

"அன்ன நடையும் அன்னம்இலா அய்யர் நடையும் தளர்வெய்த"
(பிரபுலிங்கலீலை - மாயை உற்பத்தி 5)

திகிரி நிகர் - மூங்கிலைப்போன்ற; தோளுக்கு மூங்கில் உவமை, "காம்பேர் தோளி" (சிந்தாமணி 924); களம் - கழுத்து, ஏகாரம் அசை ; கோடு - சங்கு.

6. பனி - குளிர்ந்த ; உடுபதி - விண்மீன்களுக்குத் தலைவனாகிய சந்திரன் ; நகைக்கு உவமை ; "முகமதி யூடெழு நகைநிலவாட" (மீனாட்சியம்மைப் பிள்ளைத். 17); பவளத்து

8. புனை நற்பணி - அணிந்துகொள்வதற்குரிய நல்ல அணிகலன்களை ; மிளிர்தளிர் - ஒளிர்மிக்க இளந்தழைகள், வினைத்தொகை ; பொதுள - நெருங்கும்படி, சூடிக்கொண்டு என்பது கருத்து; அளகம் - கூந்தல் ; திரை புரள - அலைகள் புரண்டு விழமாறு ; கரளம் அது அருளும் - ஆலகால விடத்தைக் கொடுக்கும். அது - பகுதிப்பொருள் விகுதி ; இருள் உததி புரையும் ஒருவர் - கரிய கடலைப் போன்ற ஒப்பற்ற மன்மதன், காமனைக் கருவேள் என்பர், "பசுமையதான உரு; மனை இரதி" (பிரபந்தத் திரட்டு 240) விடத்தைத் தோற்றுவித்த கடலைப்போன்ற மன்மதன் என்றது துன்பத்தைச் செய்பவன் என்னும் கருத்துடை அடைகொளி, நிந்தை உவமை எனினும் ஆம், ஒருவர் எனப் பன்மையிற் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு; எதிர்பொழுது - போர் புரிகையில்; அகம் ஆறாள் - உள்ளத்தில் அமைதியடைய மாட்டாள் ; அயலுக்கு அயலும் நிலாள் - அருகில் உள்ளவர்களுக்கு (தோழியர்களுக்கு) பக்கத்திலேகூட நிற்கமாட்டாள், தனித்தே இருப்பாள் என்றபடி; அனையை - அன்னையையும்; மனை - வீட்டையும், இரண்டன்உருபு விரிக்க; அமனையை - அம்மானை ஆடுதலை, இது பிற விளையாடல்களுக்கும் உபலட்சணம் ; அனையை முதலிய மூவிடத்தும் எண்ணும்மை கூட்டுக; அழலில் - நெருப்பைப் போல; பொழிமட்டு அணைதனிலே - வடிகின்ற தேன்நிறைந்த மலர்ப்படுக்கையில், ஏகாரம் அசை; இவள் - இந்தத் தலைவி; புலரும் - வாடுகின்ற ; முறைபுல - காமசாத்திரத்தில் கூறியுள்ள வகையில் புணரவும்; சிலைமுலை - மலையைப் போன்ற நகில், உவமைத்தொகை ; அமலை - குற்றமற்றவளாகிய தலைவி ; மலைபுலவி - மறுத்தலாகிய ஊடலையும் ; கலவி - (விழைவதாகிய) புணர்ச்சியையும்; புலவி கலவி - உம்மைத் தொகை ; மலை புலவி என்ற அருத்தாபத்தியால் விழைவதாகிய கலவி என்பது பெறப்பட்டது ; நிலைபுனைதரவே - எப்போதும் நிலையாகப் பெறும்படி, விட்டுப்பிரியாமல் என்பது கருத்து, புல, குழைய என்னும் இரண்டிடங்களிலும் எண்ணேகாரம் விரித்துக் கொள்க; மருவாதது - அணையாதது; என்கொலோ - ஏனோ.

பரராசசிங்க பூபதியே ! அடியிணையாள் . . . . . . . . இருகோவாள் உனை வீதியின்கணே தொழுதாள். (அதனால்) உணராள் ; நோவாள்; அவியாள் ; திலகம் இடாள்; ஓவாள்; தரியாள்; எழுதாள்; விளையாடாள்; அயிலாள்; துயிலாள் ; அணியாள்; முடியாள்; ஆறாள்; நினையாள்; துவளுவள்; எழுவள்; தொழுது அழுவள்; விழுவள்; மொழிவள்; உயிர் அயர்குவள்; சோர்வாள்; மயல் அகல, புல குழைய புனைதரவே நீ மருவாதது என்கொலோ? (அதனைப்) புகல்வாய் என்பது பொருள் முடிபு.



# 4. குடந்தை ஆராவமுதர் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இந்த வண்ணம் சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தின் டி371 ஆம் எண்ணிட்ட சுவடியில் உள்ளது. தமிழில் வண்ணப்பாடல்கள் நூலாசிரியராகிய சௌந்தரபாண்டியன் தன் நூலில் இதன் பெயரை மட்டும் குறிப்பிட்டு, இது கி.பி. 17 ஆம் நூற்றாண்டை ஒட்டிய காலவட்டத்தில் எழுந்தது என்கிறார் (பக். 43)

இதுவும் தனி அகமன்று. குடந்தை ஆராவமுதப் பெருமாளை உலாவில் கண்ட தலைவி அவர்மீது காதல் கொள்கிறாள். காதல் நிறைவேறாததால் மிக வருந்துகிறாள். தன் மகளின் வாட்டத்தைக் கண்ட தாய் மனம் இரங்குவதோடு அவளுக்கு அருள்புரியுமாறு ஆராவமுதனை வேண்டுகிறாள். எனவே இது புறப்பொருள் பாடாண்திணை கடவுள்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கம் ஆகும். பெண்பாற் கைக்கிளையில் நற்றாய் இரங்கல். இதனால்தான் இது பெண்பாற் கைக்கிளையில் பாங்கி வேண்டலை அடுத்து வைக்கப்படுகிறது.

எளிய சொற்களால் அழகாக அமைந்த ஒரு நல்ல வண்ணம் இது. வைணவ இலக்கிய மரபு சிறப்பாகப் பின்பற்றப்பட்டுள்ளது. அளவில் சிறியதாக இருந்தாலும் திருமாலைப் பற்றிய பல வரலாறுகளும், விஷ்ணு பரத்துவமும், அடியார் பெருமையும் நன்றாகக் கூறப்பட்டுள்ளன.

தலைவியைப்பற்றிய செய்திகள் மிகக் குறைவுதான். "மங்கைப் பருவத்தாளாகிய என் மகள் வாசலில் வந்து உலாவைப் பார்த்தாள். பேசவும் இல்லை, மயங்கி விழுந்தனள். பேராசையினால் மெலிந்தனள். (கலை 5) என் மங்கையை ஆள நினைவு ஏதும் இலையோ (6). ஊறா மகளோ இளந்தலை. வில்லும், இடபங்களும் யாம் ஓதுகிலோம். இரங்கிலீர். ஈதும் ஒரு உலாவின் அழகே'' என்னும் இவ்வளவுதான் அகப்பொருள்; மற்றவை யாவும் திருமாலின் திருப்புகழே. தலத்தின் இயற்கை வளத்தைப் பாடும் நான்காவது கலையைக்கூட இவர் நாராயணன் புகழைக் கூறவே பயன்படுத்துகிறார். இதனால் இவ்வாசிரியரின் இறையன்பு வெளிப்படுகிறது.

இந்த வண்ணத்தில் தொங்கல்களின் அமைப்பு சிறப்பாக அமையவில்லை. இது ஏடெழுதியோர் பிழை ஆகலாம். நல்ல சுவடி கிடைத்தால் வடிவம் செம்மையடையக் கூடும். பொதுவாக இந்த வண்ணம் அளவில் கச்சிதமாக அமைந்த, எளிய, சுவையான வண்ணம் ஆகும்.

# 4. குடந்தை ஆராவமுதர் வண்ணம்

நற்றாயிரங்கல்

தானன தய்யன தந்தன தந்தன
தானாதன தானதந்தன
(தொ) தானதன தானதனனா

சீதர செல்வமு குந்தள னும்பல
பேராயிர மேபெரும்புகழ்
பேயொடு பொய்கைசொ லுந்திரு மங்கையின்
ஆழ்வார்துணை யே! கரங்கொடு
சேவடி புல்லிவ ருந்திய தொண்டர்கள்
பாராயண மே! அரன்பெறு
சா(ப)இருள் காயும் நிலவே! (1)

தேவரை அல்லல்செ யுங்கன கன்பட
வாழ்கேசரி யே! இலங்கையில்
ராவணன் வல்லைபு குந்துபி டுங்கிய
போர்மாகளி றே! நிரந்தரர்
சேவையில் உள்ளம்ம கிழ்ந்துபு ரந்தருள்
சூடாமணி யே! எனுந்திரு
(வாளர்தமை ஆளும் அரியே!)[1] (2)

கோதறு கல்வித ருந்தவர் கும்பிடு
ஞானோததி யே! எழும்திரு
நாஉரை செய்யப சுந்தமிழ் கொண்டருள்
மாபூதர மே! வரம்பெறு
கோவியர் மையல்வ ளர்ந்துதி ரிந்தருள்
கோவே! அர சே! நறும்புனல்
காவிரியில் ஆடும்முகிலே (3)

கோசலை கையில்இ ருந்துவி ளங்கிய
கோமேதக மே! அனந்தஅ -
ராஅணை எல்லைக டந்துகி டந்தருள்
சாமீகர மே! தவம்புரி
கோமள வல்லிகு டந்தையி டந்துயில்
ஆராவமு தே! எனுஞ்சில
விதுமட வார்களுடனே (4)

1. "மானபரி னாமவொளியே" என்பது சுவடிப்பாடம்

பேதையும் அல்லள்பெ தும்பையும் அன்றொரு
மாதேதலை வாசல்நின்றனள்;
ஈசரும் எல்அவி ருங்கரு டன்பிடர்
மீதேஇவள் காணவந்தனர்;
பேசவும் இல்லைம யங்கிவி ழுந்தனள்;
பேராசையி னால்மெலிந்தனள்;
சேடியர்கள் ஓடிஎதிரே (5)

பீடுயர் வையம்அ டங்கலும் உண்டுமிழ்
தாமோதர னே! என் நெஞ்சிலும்
ஆலிலை உள்ளும்அ டங்கிந டுங்கிய
கார்மேனிய ரே! குணம்பகு
பேதமும் எவ்வுல கும்பல வுந்தரு
நாராயண ரே! என்மங்கையை
ஆளநினை வேதும் இலையோ? (6)

மாதவி குல்லைவ லம்புரி செண்பகம்,
ஆனாள்இலை யேபு யம்பெற
ஆகிலும் மையல்அ றிந்திது பெண்பவம்
ஆமாறென வேஇரங்கிலிர்;
மானினும் ஐயவர் அங்குளிர் உந்தியில்
நீராடிய (போதுவம்பினில்)
நாணமொடு கூறைகவர்வீர் ! (7)

மாதரில் வல்லிய பெண்கள்இ ருந்திட
ஊறாமக ளோஇளந்தலை ;
ஏறிடு வில்லும், இ ணங்கிட பங்களும்
யாம்ஓதுகி லோம்; அருந்திரு -
வாய்மொழி கொள்ளைகொ ளுஞ்செவி என்குறை
கேளாதுகொ லோ? இரங்கிலிர்;
ஈதும்ஒரு லாவின் அழகே! (8)

(இவ் வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை)

# 5. குடந்தை ஆராவமுதர் வண்ணம்

## குறிப்புரை

1. பல ஆயிரம் பேரே என மாறுக ; பேரே - திருநாமங்களே ; பெரும்புகழ் என்பதை முதல்நிலைத் தீபகமாகப் பேய், பொய்கை, திருமங்கை என்னும் மூன்றனுடனும் இணைப்பதைப் போலவே ஆழ்வார் என்பதனை இறுதி விளக்காக இம் மூன்றுடனும் இயைக்க. பேராயிரமே சொல்லும் பேய், பொய்கை, திருமங்கை ஆழ்வார் துணையே என்பது முடிபு ; ஏகாரம் விளி ; "ஆயிரம் விந்தைப் பேரும்விளம்பற் காசைகொள் அன்பர்க் கெளியோனே" (திருவரங்கத் திருவாயிரம் - திருப்புகழ் 45); கரங்கொடு - தங்கள் கைகளால்; புல்லி - பற்றி; பாராயணமே - ஓர் ஒழுங்குமுறையுடன் படிக்கப்பெறும் தோத்திரங்களாலும், காப்பிய இதிகாச புராணங்களாலும் போற்றப் பெறுபவனே, தோத்திரம் - நாலாயிர திவ்வியப் பிரபந்தம், விஷ்ணுசஹஸ்ரநாமம் முதலியன ; காப்பியம் - ஸ்ரீமத் பாகவதம் முதலியன ; இதிகாசம் - இராமாயணமும் மகாபாரதமும்; புராணம் - விஷ்ணுபுராணம் முதலியன ; இவை யாவுமே பாராயணத்திற்குரியன ; அரன்பெறு சாப இருளைக் காய்ந்தது: சிவபெருமான் பிரமனின் தலைகளுள் ஒன்றைக் கிள்ளியதால் அக்கபாலம் அவர் கையை விடாமல் ஒட்டிக் கொண்டது. அதைவிட்டு நீங்க வேண்டிச் சிவபிரான் அந்தத் தலையோட்டில் பிட்சை பெற்றபோது சாபம் நீங்கியது. மண்டையோடும் கையைவிட்டு அகன்றது.

"பிண்டியர் மண்டை ஏந்திப் பிறர்மனை திரிதந் துண்ணும்
உண்டியான் சாபம் தீர்த்த ஒருவன்" (நாலாயிரம் - குறுந்தாண்டகம் 19)

2. கனகன் - இரணியன்; கேசரி - சிங்கம், இங்கு நரசிங்கப்பெருமாளைக் குறித்தது. பிரகலாதனின் சொற்படித் தூணில் தோன்றி இரணியனைக் கிழித்த வரலாறு வெளிப்படை; வல்லை - கோட்டையை, வல்லைப்புகுந்து எனற்பாலது வண்ணம் நோக்கி இயல்பாயிற்று, தொகுத்தல் விகாரம் ; நிரந்தரர் - நித்திய சூரிகள், இவர்கள் வைகுந்தத்தில் பரமபதநாதனின் சாரூபம் பெற்று அழியாதவர்களாய்ப் பேரின்பத்தில் திளைக்கும் முத்தான்மாக்கள், "மாமணி மண்டபத்து அந்தமில் பேரின்பத் தடியர்" (திருவாய்மொழி 10 - 9 - 11) என்பார் நம்மாழ்வார்; சூடாமணி - தலையில் அணிந்து கொள்ளும் மணிகள் பதித்த அணிகலன்.

3.கோது அறு - குற்றமற்ற, ஊரை ஏமாற்றித்திரியும் திருட்டுக் கல்வியாளர்களிலிருந்து பிரித்து மெய்யறிவுடையோரைக் குறிக்கும் பிறிதின் இறைபுநீக்கு விசேடணம்; ஞானோததி அறிவுக்கடல், ஞானததி - வடமொழி குணசந்தி; திரு நா எழும் உரை என்க; செய்ய பசுந்தமிழ் - சொன் முரண்; புதரம் - உலகைத் தாங்குவது, மலை ; கோவியர் - கோபியர், ஆய்ச்சியார்; கோவே - தலைவரே ; நறும்புணல் - நல்ல தண்ணீர் நிறைந்த, மலர்களின் வாசனையைப்பெற்ற நீர் எனினுமாம்; ஆடும் - திருமஞ்சனம் கொள்ளும்; முகிலே - மேக நிறத்தவரே, உவம ஆகுபெயர்.

4. கோமேதகம் - கோமேதக மணி நிகர்த்த இராமபிரான்; "புகழ்க் கோசலைஆம் அன்னைக்கு அரியமுத்தே" (திருவேங்கடத்து அந்தாதி 42); அனந்த அராஅணை - திருவனந்தாழ்வாராகிய பாம்புப் படுக்கை; எல்லை கடந்து முடிவு இல்லாமல், கால தத்துவத்திற்கு அப்பாற்பட்டு என்பது கருத்து; சாமீகரம் - பொன்; கோமளவல்லி - திருக்குடந்தையில் தாயார் திருநாமம், துயில் ஆராவதுது - சாரங்க பாணிப்பெருமாள் கிடந்த திருக்கோலம், திருப்பெயர் - ஆராவமுதப் பெருமாள். திருமால் புகழ்பாடிக் கொண்டு குடந்தை நகரத்து வீதியில் தோழிகளுடன் தலைவி நின்றிருந்தாள் என்பது கருத்து.

5. பேதை, பெதும்பை அன்று என்றதால் மங்கை எனக் கொள்க ; மாது தலைவாசலே நின்றனள் என ஏகாரத்தை இடம் மாற்றுக, இவளாக எங்கும் வெளியே செல்லவில்லை, தலைவனே உலா வந்து காதல் கொடுத்தான் என்றவாறு; ஈசர் - தலைவராகிய திருமால்; எல் அவிரும் - ஒளி விளங்கும் ; பிடர் - கழுத்தின் பின்புறம்; காண வந்தனர் - பார்க்கும்படியாக எனப் பொருள் கொள்ள வேண்டும், காண்பதற்காக அன்று; சேடியர்கள் - தோழியர்கள், விகுதிமேல்விகுதி. இத்தொங்கல் நன்கு அமையவில்லை.

6. பீடு - பெருமை ; தாமோதரன் - வயிற்றில் கயற்றால் கட்டுண்டவன், யசோதையால் உரலிற் கட்டிப்போடப்பெற்ற கண்ணன் ; ஆலிலை - திருமால் பேரூழிக் காலத்தில் ஒரு குழந்தை வடிவாக ஓர் ஆலிலையில் பள்ளிகொண்டு ஊழி வெள்ளத்தே மிதப்பார்; பரம்பொருள் மிகப் பெரிய வடிவினராயும் எதற்கும் எட்டாததன்மை வாய்ந்தவராகவும் இருப்பினும் ஒரு சிறிய ஆலிலையிலும், அன்பற்ற என் புன்நெஞ்சிலும் தம் எளிவந்த கருணையாலே தாமே எழுந்தருளியவர் என்பது இரண்டு இழிவு சிறப்பும்மைகளாலும் போந்த பொருளாகும்; குணம் - சத்துவம், ராஜஸம், தாமசம் என்னும் முக்குணங்களையும்; பகு பேதமும் - விஜாதீய பேதம், சஜாதீய பேதம், சுவகத பேதம் என மூன்றாகப் பிரித்துக் கூறப்படுகின்ற வித்தியாசம், வேறுபட்ட இருபொருள்களுக்கிடையே உள்ள வேறுபாடு (உ-ம்) பசு, குதிரை, ஒரே இனத்தில் இருபொருள்களுக்கிடையே உள்ள வேறுபாடு (உ-ம்) இரு பசுக்கள் ஒரே பொருளின் பகுதிகளுக்குள்ளே உள்ள வித்தியாசம். ஒரே பசுவின் தலை கால் என முறையே இவை பகுக்கப் பெறும் ; எவ்வுலகும் - எல்லா உலகங்களையும்; பலவும் - இயங்கு திணை நிலைத்திணைப் பொருட்கள் அனைத்தையும்; நாராயணர் என்ற சொல்லுக்கு வைணவம் ஆன்மாக்களின் கூட்டத்திற்கு உபாயம் ஆகவும், துய்க்கப்பெறும் பயனாகவும், அறிவு உள்பொருள் இல்பொருள்களுக்கு ஆதாரமும் ஆனவர் எனப் பொருள் கூறும். மேலும் சேதன அசேதனப் பொருட்களைத் தான் புகும் வஸ்துவாகக் கொண்டவன் என்பதும் மற்றோர் பொருளாகும்.

"அயனம்இவ் வனைத்துக் குந்தான்
அவைதனக் கயனம் என்னப்
பயனுமாய்ப் பதியும் ஆன
பரமனைப் பணியும் நீரே" (திருமந்திரச் சுருக்கு - 8);

என் மங்கை - என் மகளாகிய தலைவியை.

7. மாதவி - மல்லிகை; குல்லை - திருத்துழாய்; வலம்புரி - நந்தியாவட்ட மலர்; உம் தோளைத் தழுவ மலர்மாலையாகப் பிறந்திருந்தால் ஒருவேளை வாய்ப்புப் பெற்றிருக்கலாம் என்றபடி; மையல் அறிந்து - (என் மகள் உம் மீது கொண்ட) காதலை உணர்ந்து; பெண்பவம் ஆமாறு - பெண்பாவம் ஏற்படும் வழி, மானினும் ஐயவர் - மானைவிட வடிவழகிற் சிறந்த ஆயர் மகளிர் - மயிர்நீப்பின் உயிர்வாழாக் கவரிமானைவிடக் கற்பாகிய பண்பு நலனிலும் உயர்ந்த கோபியர் என்பதுவுங் கொள்க; அம் குளிர் உந்தி - அழகிய குளிர்ந்த நீர்நிலை; வம்பினில் - வலியவந்து; கூறை - சேலை; தாம் உண்டு தம் வேலை உண்டு எனத் தனியே குளித்துக் கொண்டிருந்த கோவியரிடை வலியச் சென்று அவர்கள் நாணமுறும்படி புடவைகளைத் தூக்கிக்கொண்ட உமக்குப் பெண்களின் துன்பம் எங்கே தெரியப் போகிறது என்பது கருத்து. இதுபற்றியே "பெண்ணின் வருத்தம் அறியாத பெருமான்" (நாலாயிரம் - நாச்சியார் திருமொழி 13-1) என்றாள் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி.

8. வல்லிய - வலிமை மிக்க, உடலளவு, காமநிலை என இரண்டுங் கொள்க ; ஊறா மகள் - உடம்பு பிடிக்காதவள்; இளந்தலை - மிக இளையவள் ; ஏறிடு வில் - இந்த வில்லை வளைப்பவர்களுக்கு எம் மகளைத் தருவோம் என்றோ; இலங்க இடபங்கள் - இந்தக் காளைகளை அடக்குபவர் எம் மகளின் மணாளராக உரியர் என்றோ ; சீதைக்காகச் சிவதனுசும் நப்பின்னைக்காக ஏழு எருதுகளும் நாட்டிச் சுயம்வரம் வைத்தது போல் எம் பெண்ணிற்கு நாங்கள் ஒன்றும் செய்யவில்லையே! நீராக வலியவந்து ஏன் துன்பம் தருகிறீர் என்பது கருத்து; அரும் திருவாய்மொழி - அருமையானதும் நம்மாழ்வாரின் திருவாக்குமாகிய திருவாய்மொழிப் பிரபந்தத்தை ; கொள்ளை கொள்ளல் - மிகுதியாகஏற்றல் ; கேளாது கொலோ - நீர் எளியவர்மாட்டுப் பேரன்புடையீர், அதனால் என் விருப்பத்திற்கு அவசியம் தேவரீர் செவி சாய்க்க வேண்டும் என்பது கருத்து, இரங்கலிர் - கருணை காட்டாமல் என் மகளை இவ்வாறு வருத்துகிறீரே! ஈதும் - இவ்வாறு மகளிரை வருந்தச் செய்வதும்; ஓர் உலாவின் அழகே - ஒரு பவனியின் சிறப்பு ஆகுமோ, ஆகாது என்றபடி; இவ்வாறு தன் மகளை ஆட்கொள்ள வேண்டுகிறாள்.



# 5. குமார சாம்புவன் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்படாத இவ் வண்ணம் தஞ்சாவூர்ச் சரசுவதிமகாலில் உள்ள எம் 619, எம் 702 ஆகிய இரண்டு ஓலைச் சுவடிகளில் உள்ளது. சரசுவதி மகால் 1969 இல் வெளியிட்ட வண்ணத்திரட்டு என்னும் புத்தகத்திலும் இது இடம் பெற்றுள்ளது. அப்பதிப்பு பக்கம் 31 காண்க. சுவடி, பதிப்பு இரண்டிலும் துறைக் குறிப்போ, வண்ணக்குழிப்போ கொடுக்கப்படவில்லை. பதிப்பைப்பற்றிக் கூறுவதற்கு ஒன்றும் இல்லை.

இந்த வண்ணப்பெருந்திரட்டில் இங்கிருந்து அகப்பொருள் துறைகள் முறையாகத் தரப்படுகின்றன. முதலில் தலைவன் வேண்டல் என்னும் துறை இடம்பெறுகிறது. இது மடலைப் பற்றிய குறிப்பு இல்லாதன, உள்ளன என இரு பிரிவாகப் பிரிக்கப்பெற்று மடற்குறிப்பு இல்லாதவை முதலில் வைக்கப் பெறுகின்றன. இவ்வாறு அமைந்த ஐந்து வண்ணங்கள் அகரவரிசையில் தொகுக்கப் பெறுகின்றன.

இவ்வண்ணத்தின் நடை சிறப்பாக உள்ளது. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவன் குமார சாம்புவன் மிகவும் சிறப்பிக்கப்படுகிறான். பிற்கால அவைப்புலவர்கள் தங்களை ஆதரிக்கும் தலைவர்களை எல்லையே இல்லாமல் புகழ்ந்து தள்ளுவதால் தெளிவான வரலாற்றாராய்ச்சிக்கு இந்தப் பாடல்கள முற்றிலுமாகப் பயன்படுவதில்லை என்னும் கருத்து இந்த வண்ணத்திற்கும் பொருந்தும், ஒப்பு;

"போகாத போருக்குப் போர்எடுத்தான்; போர்க்களத்தே
வேகாத பிணம்தின்ன விதவிதமாயப் பூதவகை
வந்து பசியாறி வாழ்த்தியதாய்ப் பொய்கூறிச்
சிந்துக் கவிவரிசை சிந்திடுவார்".

(கவிஞர் திருலோக சீதாராம் - உதயம் - பக். 40)

பெண்கலை காட்சி, ஐயம், துணிவு போன்ற நல்ல ஐந்திணைக் களவுக் காதலைப் போல் அமையாமல் காதல் பிரபந்தத்தில் அமைவது போலத் தலைவியின் அங்க வர்ணனை கூறி விளித்தல், அவளுக்குப் பணிவிடை செய்யவோ என வினாதல், கலவியைப் பற்றிப் பேசுதல் என்ற முறையில் அமைந்துள்ளது. காதல் பிரபந்தத்தில் இடம்பெறும் தலைவி விலைமகள். அந்த முறை நல்ல களவியலிற் சிறக்காது. முதன் முதலாகப் பார்க்கும் ஒரு பெண்ணிடம் வரம்பு கடந்து பேசினால் தலைவனின் மதிப்பு என்னவாகும்? வண்ணம் பாடும் புலவர்களில் பெரும்பாலோர் எப்படியாவது காமச்செய்திகளை நிறைத்துக் கேட்போரை மலிவான கிளர்ச்சிக்கு உள்ளாக்கவே முயல்கின்றனர். இந்த வண்ணமும் அதற்கு விலக்கல்ல.

# 5. குமார சாம்புவன் வண்ணம்

## தலைவன் வேண்டல்

தனதத்த தான தனதத்த தான
தனதந்த தனதந்த தனதந்த தான
தானத்த தானத்த தானத்த தானத்த
தானத்த தானத்த தானதந்தன
(தொ) தானான தனனதன தானனா

திகுதத்த தோதி திகுதத்த தோதி
செகணங்க செகணங்க செகணங்க தோதி
தீதக்க தோதிக்க தீதக்க தோதிக்க
தீதக்க தோதிக்க தோஎனும்படி
தமரிக்கும் வீர முரசொத்த (பேரி)
தவில்திண்டி மமுழங்க நவகண்ட லோக
தாளத்தி லேகொட்டு மேளத்தி லேசக்ர
வாளத்தி லேதத்து வாசுகண்டனி;
செருவிற்க னாடர் பரச்கர சேனை
சிதறும் ப டி . . . . ம்பை அமர்வென்ற வீர
தீரத்தி னால்மிக்க சூரத்தி னால்வெற்றி
சேர்விக்ர மாதித்த னானதிண்டிறல்
ஆள்வீரன் அழகன் அதி வீரவேள் 1

சிகரப்பொன் மேரு கிரியொத்த மேடை
திகழ்வெண்கு டை விளங்க மணிமுன்றில் மீது
சேவிக்கும் ஈழத்தர் தார்மத்ரர்.........
சீனத்தர் பாரக்கர் சேரர்செம்பியர்
வரவிட்ட நீல மணிமுத்து மாலை
மருவுங்க ருவுலம்பொன் உலகிந்த்ர (போக)
வாழ்வுக்கு நேரொக்க நாளுக்கு நாள்மிக்கு
வாழச்சன் மானத்தி னால்வரும்புயல்
வரைஎட்டும் ஏறு திசைஎட்டும்......
..... மண்ட லமும் வந்து புகழும்ப்ர தானி
சீலத்தி னால்மிக்க தானத்தி னால்வித்தை
தீரத்தினால் மிக்கதான சங்கரன்
வே............ யல்மருக னானமால் 2

குகுதத்தர் கூடி வரவிட்ட வாசி
குலவுங்க வரிகுஞ்சம் வளைமுன்கை ஆழி
கோலக்க பாய்சட்டை (போழ)ப்ப டாவச்ர
கோபக்கு லாஇட்ட (மேவு) பொன்குடை
மதுரச்சொல் ஆசு கவிசித்ரம் ஆக
வரும்விஞ்சை யார்புகழ்ந்து கவிவந்து பாட
மாகத்து மேகப்ர வாகத்தை நேரொக்க
வாழ்விக்கும் வாலத்தி யாகசந்ததி;
குருபத்தி யான சிவபக்தி ஞான
குணமும்பொ றையும் இன்சொல் நெறியும்பொ யாது.
கோதற்ற நீதிப்ர தாபத்தி னால்மிக்க
கோபக்க டாமத்த யானையின்பிடர்
வாழ்மாறன் எனமதுரை மீதிலே 3

குருசொக்க நாதர் முடிவைத்த போது
குயில்வெண்ட ரளமிஞ்சு வயிரம்பொன் மாலை
கோடிக்க பூசக்ர வாளப்ர வாளத்து -
மேல்வட்ட மாய்இட்ட மானகஞ்சுகன்;
அரசற்கு நீடு பரிவட்டம் ஆடை
அமுதுண்ப ரிகலம்ப ரிமளம்பொன் ஆரம்
ஆழிக்கை யாய்மிக்க காணிக்கை பாலிக்கும்
ஆணத்தன் மாவித்த னானமந்திரி;
கொடைகற்ற போது நடைகற்ற (த்யாகி);
குலசங்க ரன்விளங்க வருமைந்த னான
கோதைச்சன் மாதர்க்கு மோகிக்கும் வேளொத்த
கோலப்ர தாபக்கு மாரசம்புவன்
வீறான கருவைவள நாடுசூழ் 4

மகரக்க லோல சலதித்த டாக
மலர்மங்கை கலைமங்கை அரமங்கை போலும்
மாதர்க்கெ லாம்மிக்க ரூபப்பெ ணே! சித்ர
மாலைக்க லாரப்பெ ணே! அனங்கனும்
இரசிக்கும் மோக இரதிப்பெ ணே! பொன்
எழுதுந்தி லதம்இந்து நுதல்இந்த்ர லோக
ராகப்பெ ணே! முத்து மோகப்பெ ணே! பத்ம -
ராகப்பெ ணே! மட்டு வார்கரும்பினில்

வடியிட்ட தேனில் அமுதத்தின் மேனி
வடிவங்கொ டுசமைந்த தொருநங்கை யே! பெண்
மாணிக்க மே! வச்ர நீலப்பெ ணே! கட்டி
மாடைப்பொ னே! பத்ம பாதம்நொந்திட
நீகாவில் வருவதென நீதியோ? 5

மலர்மெத்தை மீது சயனத்தில் வாரும்
மலர்பஞ்ச டிநடந்த விதனங்கள் தீர
வாசப்ப னீர்அப்ப வோ? பொற்ப டீரத்தை!
மார்பத்திலே ஒற்றவோ? நிலந்தனில்
அடிவைத்த போதென் முடிவைக்க வோ? முன்
அழகும்பின் அழகுங்கண் டெதிர்கொண்டு பேணி
ஆலத்தி சேவிக்க வோ? இட்ட வேலைக்கொர்
ஆயத்தமாய் நிற்கவோ? அதன்றியும்
வடமிட்டு நீல முகவட்டம் மீறி
வளருங்க ளபகும்ப மதகொங்கை யான
மாமத்த யானைக்கொர் மாவுத்த னா (கிப்)ப -
டாம்இட்டு வார்கட்ட வோ? சொலுஞ்சொலும்;
ஏதேது பணிவிடைகள் ஏவுவீர்? 6

அகலிட்ட வாச னைப்பிச்சி மாலை
அகல்மஞ்ச ரிசரிந்த சரிகொண்டை வாகும்
ஆழிச்ச கோரத்தை வேள்தொட்ட பாணத்தை
ஆலத்தை நீலத்தை மேவும் அஞ்சன
விரகக்க பாட விழிகற்ற கீலும்
விழிகொண்டெ றியும்இன்ப விரகுங்க லாமும்
வேடிக்கை யாய்மிக்க கோலச்ச லாரிக்கு
மேலிட்ட பூவிட்ட சேலையுந்தனி
அருணப்ர வாள நகை(யுற்ற) வாயின்
அழகுஞ்சு ழிமிகுந்த வயிறுந்தி வாகும்
ஆசைப்ப டாதுற்ற யோகர்க்கும் மோகிக்கும்;
ஆருக்கும் மோசிக்கும் நூல்மருங்கிலும்
ஈரேழு புவியும்விலை பேசுமே 7

அமுதச்சொல் ஓசை மொழிகற்ற ளாட,
அரவின்ப டம்அனுங்கி அமுதங்கள் பாய,
ஆகத்தில் மேவிக்கு லாவிச்ச மாளித்து
ரோமத்து வாரத்து வேர்வரும்பிட,
இதமொக்க நீடு முறைசுற்றி நீவி
இருசங்கி டைமுழங்க ஒரு சங்கில் ஓசை
ராகத்தி லே இட்ட தாளத்திலேவிட்ட
மானத்திலே (இச்சை யாய்) முழங்கிட,
அறுபத்து நாலு கரணத்தி னாலும்
அளகம்பு டைசரிந்து, கரியும்பொ னூசல்
ஆடக்கு வாலிட்டு, நாளுக்கு நாள்இட்ட
கேளிக்கை ஏறச்செய் வாய்; இணைந்திடு;
மானார்கள் முறைமைஇது காணுமே. 8

(இவ்வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை.)

# 5. குமார சாம்புவன் வண்ணம்

## குறிப்புரை

1. தமரிக்கும் - ஒலிக்கும்; முரசு. பேரி, தவில், திண்டிமம் தாள வாத்தியங்கள்; நவகண்டலோக தாளத்திலே - இது விளங்கவில்லை ; சக்ரவாளத்திலே - எல்லைப் பகுதிகளில், அல்லது சக்கரவாகப் பறவை போன்று எனினும் ஆம், இது விரைவில் பாய்வதற்கு உவமை ஆயிற்று; தத்து - பாய்கின்றவன் ஆகி; ஆசுகண்டனி - தீமைகளை அழிப்பவன், பகைவரை ஒழிப்பவன் என்றபடி; கனாடர் - கருநாடர்; பரசக்ர சேனை - மாற்றரசரின் படைகள்; விக்ரமாதித்தன் ஆன - குப்த வம்சத்தின் இரண்டாவது சந்திரகுப்தனைப் போலப் புகழ்ப்பெற்ற, ஆதல் உவமைப்பொருளில் வந்தது; திண்திறல் - ஒருபொருட் பன்மொழி.

2. சிகரப் பொன் - பொன்சிகரம் என மாறுக, அழகிய கொடுமுடியை உடைய ; மேடை - மாடி ; தார் மத்ரர் - வெற்றிமாலையணிந்த மத்திர நாட்டார்; வரவிட்ட - திரையாகச் செலுத்திய ; கருவுலம் - கருவூலம், பொக்கிஷம், குறுக்கல், விகாரம்; பொன்உலகு இந்த்ரபோக வாழ்வு - சுவர்க்கத்துத் தேவேந்திரனுக்குரிய ஆடம்பரமான வாழ்க்கை; நேர்ஒக்க - ஒரு பொருட் பன்மொழி; சன்மானம் - பரிசில்; புயல் - மேகநிறம் பெற்ற திருமாலைப் போன்றவன்; வரை - குலமலைகள் எனப்பெறுபவை; ப்ரதானி - அமைச்சன்; சீலம் - ஒழுக்கம்.

3. குகுதத்தர் - குகுதநாட்டார், இது குதிரநாடு போலும்; வாசி - குதிரைகள்; கவரி - சாமரை ; முன்கை வளை என மாறுக; ஆழி - மோதிரம் ; கோலக்கபாய்சட்டை - அழகிய கபாயாகிய சட்டை, கபாய் - முழங்கால்வரை வரும் நீண்ட அங்கி; போழப்படா வச்ர - துளையிடப்படாத வைரமணிகள் பதிக்கப்பெற்ற ; கோபக் குலா - அதிகாரிகளுக்குரிய தொப்பி, குல்லா என்பதன் இடைக்குறை ; ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பன நாற்கவி, இவற்றுள் உடனே இயற்ற இயலாதது வித்தாரம் ஆதலின் அதனை விடுத்து ஏனைய மூன்றும் கூறப்பட்டன ; விஞ்சையர் - கல்விவலார், புலவர் ; மாகத்து - வானிலுள்ள ; மேகப்ரவாகத்தை - முகில்கள் மழை பொழிதலை ; பொறை - பொறுமை ; பொயாது - தவறாமல் ; கோதற்ற - குற்றமில்லாத கோபம், கடாம், மத்த என்பனவற்றைத் தனித்தனியே யானையொடு கூட்டுக; கடாம் - மதம் ; மத்த - பெருமிதம் ; மாறன் - பாண்டியன்.

4. குரு சொக்கநாதர் - உயர்வுடைய சொக்கநாத நாயக்கர், இது கி.பி. 1659 முதல் 1682 வரை அரசுபுரிந்த மன்னரையோ அல்லது 1706 முதல் 1732 வரை ஆண்டவரையோ குறிப்பிடுகிறது. மற்ற வரலாற்றுச் சான்றுகளையும் கண்டு துணியப்பட வேண்டும் ; முடி வைத்தபோது - பட்டம் கட்டிக்கொண்ட போது ; குயில்வெண் தரளம் - சேர்த்துக் கோக்கப்பெற்ற வெண்மையான முத்தம்; மிஞ்சுவயிரம் - சிறப்புடைய வைரமும் இழைக்கப்பெற்ற ; தரளம் வயிரம் என்னும் ஈரிடத்தும் எண்ணும்மை கூட்டுக ; கோடிக்க - அலங்கரிக்க ; பூ சக்ரவாளப்ரவாளம் - உலகைச் சுற்றியுள்ள பெருமலையின் சிகரம்; பட்டாபிஷேக விழாவில் மதுரை நகரத்தை இக் குமார சாம்புவன் மிகச் சிறப்பாக

அலங்கரித்திருந்தான் போலும்; மான கஞ்சுகன் - சுயகௌரவத்தையே சட்டையாக உடையவன்; தன்மானம் மிக்கவன்; பரிவட்டமாகிய ஆடை என்க கை ஆழியாய் என மாறுக; ஆணத்தன் - அன்புடையவன்; ஆடை, உண்கலம் ஆழி ஆகியவற்றைப் பரிசளித்த ஆணத்தன் என்றதால் இவன் சொக்கநாத நாயக்கரின் மனைவி அல்லது தாயின் வழியில் நெருங்கிய உறவினன் ஆகலாம் ; மா வித்தன்ஆன - பெரிய அறிவினை உடைய அல்லது மிகுந்த செல்வனாகிய, பிறர்க்கு உதவி செய்வதில் சிறந்த எனினுமாம்; த்யாகி - வள்ளல்; பொதுவாகப் பிற்காலச் சிற்றிலக்கியங்களில் ஒருவரைப் புகழும்போது நடைகற்றபோதே கொடை கற்றவன் என்பர், இவ்வண்ண ஆசிரியர் இன்னமும் ஒருபடி மேலே போய், முதலில் கொடை கற்றான் அதற்குத் தேவைப்பட்டதால் அங்கமாக நடையையும் கற்றான் எனச் சொல்கிறார்; சங்கரன் குலம் விளங்கவரு மைந்தன் ஆன குமாரசம்புவன் என இயையும்; கோதைச் சன்மாதர்க்கு - மலர்மாலையைப் போன்ற அழகிய மகளிருக்கு; கோல ப்ரதாப - அழகையும் வெற்றியையும் உடைய, உம்மைத்தொகை; கருவை வளநாடு - பாண்டிய நாட்டின் ஓர் பகுதி.

5. மகர-சுறாமீன்கள் நிறைந்த; கலோல - கல்லோல, அலைவீசுகின்ற ; சலதி-கடலைப்போல் பெரிய ; தடாக - குளத்தில் உள்ளதாகிய ; மலர்மங்கை - திருமகள்; கலைமங்கை - வாணி ; அரமங்கை - தெய்வ மகளிர் ; சித்ர - அழகிய ; கலாரமாலை என மாறுக, குவளைத்தார், குவளைமாலையைப் போன்ற அழகியே ; அனங்கன் - உடல் இல்லாதவனாகிய மாரன் ; எழுதும் திலதத்தையுடைய ; இந்துநுதல் - பிறையனைய நெற்றி; ராகப்பெணே - ஆசையை மூட்டுபவளே ; மட்டுவார் - தேன் ஒழுகுகின்ற; வடியிட்ட - வடித்தெடுத்த ; பத்மபாதம் - தாமரை போன்ற கால் ; கா - சோலை.

6. மலர்ப்பஞ்சடி எனற்பாலது தொகுத்தல் விகாரம் பெற்றது; விதனங்கள் - துன்பம், மிகுதி பற்றிப் பன்மை கூறினார்; பனீர் - பன்னீர் ; பொற்படீரம் - அழகிய சந்தனத்தை ; அடிவைத்தபோது - கால்களை வைக்குங்காலை, உன் கால்கள் நிலத்திற்படாமல் என் தலையில் தாங்கவோ ; இட்ட ஓர் வேலைக்கு ; வடம்இட்டு - முத்துமாலைகளை அணிந்து; முகவட்டம் - சூசுகம், நகிற்கண்கள்; களப - வாசனைச் சாந்தணிந்த ; கும்ப - கலசம் போன்ற; மத - மதர்த்த; மா - பெரிய; மத்த - மதம் பிடித்த ; மாவுத்தன் - பாகன் ; படாம் - யானையின் நெற்றிப்பட்டம்; வார் - கயறு, கச்சு.

7. அகலிட்ட - எல்லாப் பக்கங்களிலும் பரவிய ; பிச்சி - சாதி மல்லிகை, ஜாதிப்பூ என்பர்; அகல் மஞ்சரி - வளரும் தளிர்கள் ; சரிந்த - கூடிய ; மலரும் தளிரும் கூடிய கொண்டை; சரிகொண்டை வாகும் - ஒரு பக்கம் தாழ்ந்துள்ள கூந்தல் முடிச்சின் எழிலும்; ஆழி - கடலையும், இரண்டன் உருபும் எண்ணும்மையும் விரிக்க; வண்ணம் நோக்கிச் சகரமெய் விரிந்தது; சகோரத்தை - சக்கரவாகப் பறவையை ; வேள் தொட்ட பாணம் என்றது குவளையை ; ஆலத்தை - நஞ்சினை ; நீலத்தை - இருளை ; அஞ்சன - மைபூசப்பெற்ற ; விரகக் கபாட விழி கற்ற கீலும் - காமநோய் வரும் கதவாகிய கண்கள் புரியும் துன்பமும், கற்ற கீல் என்றது தெரிந்துகொண்டே என் நெஞ்சைப் பிளக்கின்றாய் என்ற கருத்தில், கீல் - முதல்நிலைத் தொழிற்பெயர் ; இன்ப விரகும் - உவகை அளிக்கும் திறமும் ; கீலும் விரகும் என்றது.

"இருநோக்கு இவள்உண்கண் உள்ளது; ஒருநோக்கு
நோய்நோக்கு; ஒன்று அந்நோய் மருந்து" (திருக்குறள் 1091)

என்பதை நினைந்து ; கலாம் - கலகம் ; சலாரி - அலசற்சீலை, இழைகள் நெருக்கமாக இல்லாத துணி, உள்ளாடை ; அருண ப்ரவாள நகை உற்ற - ஒளிமிக்க முத்துக்களைப் போன்ற பற்களைப் பெற்றுள்ள ; வயிறுந்தி - வுயிற்றின்கண் உள்ள கொப்பூழ், ஏழன்தொகை; கொண்டை வாகும், விழிகற்ற கீலும், இன்ப விரகும், கலாமும், சேலையும், வாயின் அழகும், உந்தி வாகும் யோகர்க்கும் மோகிக்கும் என்பது பொருள் முடிபு ; யோகர்க்கும் உயர்வு சிறப்பு உம்மை ; ஆருக்கும் - எவரையும், யாராயிருந்தாலும் என்பது கருத்து, நான்கன் உருபு இரண்டன் பொருளில் வந்தது, "உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்" (சிலம்பு. பதி. 56) என்புழிப்போல ; மோசிக்கும் - மோசம் செய்யும், ஏமாற்றும், இருக்கிறதா இல்லையா என உணர இயலாமல் திகைக்கச் செய்யும் என்பது கருத்து ; நூல் மருங்குல் - இழையைப் போன்ற இடை, உவமைத்தொகை மருங்குலும் - இழிவு சிறப்பும்மை, உண்டா இல்லையா என உணரமுடியாத இடையே ஈரேழு புவியை விலைபேசும் என்றால் கண்களில் உறுத்தும் பகுதிகளுக்கு மதிப்பு ஏது என்றபடி.

8. மொழிகள் தள்ளாட - இயல்பாகப் புணரவேண்டியது வண்ணம் நோக்கி விரித்தல் விகாரம் பெற்றது. அரவினபடம் - கடிதடம், உவமஆகு பெயர் ; அனுங்கி - புலம்பி; ரோமத்துவாரம் - மயிர்க்கண்; இதம் ஒக்க நீடுமுறை - இன்பம் இருவருக்கும் சமமாக ஏற்படுமாறு; இரு சங்கு - இரு கைகளிலும் உள்ள வளையல்கள்; ஒரு சங்கு - ஒப்பற்ற சங்கைப் போன்ற கழுத்து; ஓசை - புள்ளொலி ; விட்ட மானத்திலே - நாணத்தைத் துறந்த நிலையில்; அளகம் - கூந்தல் ; கரி - யானை போன்ற நகில், உவம ஆகுபெயர் ; குவால்இட்டு - மிக நெருங்கி ; நாளுக்கு நாள் இட்டம் ஏறக் கேளிக்கை செய்வாய் என இயையும்; மொழிகள் தளாட, அமுதங்கள் பாய, வேர்வரும்பி, ஓசை முழங்கிட, ஊசலாட, குவாலிட்டு, இட்டம் ஏறக் கேளிக்கை செய்வாய் எனப் பொருள் முடிவு காண்க ; மானார்கள் முறைமை :

"பெண்மை பெற்றவர் தமக்கெலாம் பெருமகிழ்வு அளிக்கும்
திண்மை பெற்றதோட் கணவர்தம் கலவியில் திளைத்தல்
ஒண்மை." (திருப்பேரூர்ப்புராணம் - கௌரி தவம்புரி.77).



# 6. தொட்டிக்கலைக் கேசவப்பெருமாள் வண்ணம்

தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் அவர்களால் இயற்றப்பெற்ற இந்த வண்ணம் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் இலக்கிய மாத இதழாகிய 'செந்தமிழ்' தொகுதி 20 பகுதி 2 இல் (சனவரி 1922) வெளியாகியுள்ளது. செந்தமிழில் துறை கூறப்படவில்லை. வண்ணக் குழிப்பும் தொங்கற்றாழிசையும் முறையாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

மாதவச் சிவஞான முனிவரின் சீடரும், பல அரிய சிற்றிலக்கியங்களை இயற்றியவரும், மதுரகவி எனச் சிறப்புப்பெயர் பெற்றவருமாகிய இம் முனிவரால் இயற்றப்பெற்ற இவ் வண்ணம் நல்ல இலக்கியத்தரம் வாய்ந்து விளங்குவதில் வியப்பில்லை. திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சைவத் தம்பிரானாகிய இவர் ஆண்கலையில் திருமாலின் பெருமைகளைச் சிறப்பாக எடுத்துக் கூறியிருப்பது மிகுந்த மகிழ்ச்சிக்குரியதாகும். மூன்றாம் கலையில் அட்ட மூர்த்தமாக விளங்கும் சிவபெருமானின் கூத்தினைக் குறிப்பிட்டு, அத்தகையவரின் சத்திக்குத் தமையன் என்று கூறுமுகத்தான் தம் வழிபடு கடவுளையும் உரியமுறையில் போற்றியுள்ளார். இரண்டாம் கலையில் இராம இராவணர்போர் ஒரு பரணிப் பிரபந்தத்தைப் போல அமைந்துள்ளது. நான்காம் கலையின் இயற்கை வர்ணனை அடுத்து பெண்கலையின் பாடுபொருளுக்குப் பொருத்தமாக அமைந்துள்ள சிறப்பு கவனிக்கத்தக்கது. கலைசையில் திருமாலின் பெயர் கேசவப்பெருமாள் என்பதும், தாயார் பெயர் பெருந்தேவி என்பதும் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன.

பெண்கலையின் கிளவித் தலைவன் காதற்பிரபந்தத் தலைவன் போன்றவனே. களவியல் தலைவனுக்குரிய பெருந்தன்மை இல்லாதவன். ஐந்தாம் கலையில் இயற்கையை மீறிய செயல்களாகச் சிலவற்றைத் தொகுத்துக் கூறுவதும், ஆறாம் கலையில் சமயாசாரக் கலைச்சொற்கள் மிகப் பொருத்தமாக ஆளப்பட்டிருப்பதும் கற்றவர்க்கு மிகுந்த இலக்கிய இன்பத்தைப் பயப்பதாகும்.

# 6. தொட்டிக்கலைக் கேசவப்பெருமாள் வண்ணம்

## தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர்

## தலைவன் வேண்டல்

தனதனதந்தன தானதந்தன தானதானன
தனனதந்தன தானதந்தன தானதானன
தத்தத்தனதானன தத்தத்தனதானன
தத்தத்தனதானன தத்தத்தனதானன
(தொ) தனந்தான தானதன தந்தானா

திருமடந்தையை மார்பினும்பிர மாவைநாபியும்
எமதுசிந்தனை தாளினுங்குலை மாலைதோளினும்
வைத்திட்டபுராதனர்; முத்திக்கருவாகிய
சுத்தப்பரிபூரண நித்தப்பரசேதனர்;
கரைகரைந்திட மோதிவெண்டிரை பாய்பயோததி -
யிடைவிடம்பொதி ஆயிரம்பட நாகமீமிசை
மெச்சித்துயில்சார்பவர் ; கச்சிப்பதிகாவலர்;
சிட்டர்க்கொளியானவர்; துட்டர்க்கிருளானவர் ;
திகழ்பொலங்கிரி மேல் உறிஞ்சிய மேகமேஎன
உவணன் என்றொரு வாகனந்தனை ஊரும்நாரணர்;
தித்தித்திடஆயர்அ கத்துக்கரவாய்நல
கட்டித்தயிர்ஏடுதி ரட்டித்தினும்வாயவர்;
பெருந்தேவி மாதுபுணர் மொய்ம்பினார் (1)

திசைமுகன்றனை ஏனைஉம்பரை வாழ்தபோதனர் -
தமையும்முன்பணி ஏவல்கொண்டுகு ரூரமாய்வெகு
திக்குக்களும்ஆணைசெ லுத்தித்திரிராவணர்
பத்துத்தலைமாலையும் ஒக்கப்பிதிராயிட
நிருதர்தங்குல மாதர்நெஞ்சுப கீர்பகீர்என
ரணகளந்தனி லேநடந்தும காபசாசுகள்
குட்டிக்கணமோடுகை கொட்டிப்பிணம்வாயில்அ -
டக்கித்திறல்பாடிந டிக்கக்குடர்மூளைகள்
சிதறிடுந்தசை மேதைஎன்புகள் சோரிநீர்நிண -
மொடுகுழம்பிட, நீள்கவந்தமும் ஆட, வாள்கொடு
வெட்டிச்சமராடிமுன் வெற்றித்தொடைவாகைமு
டித்துச்செயவீரர்து திக்கப்பொலிசேவகர்
பிணங்காது பேயின்உயிர் உண்டுளார். (2)

குருவிளங்கிய காசைமென்றுணர் போலும்மேனியில்
விழிபதங்கரம் வாய்சிவந்தழ கானசோபிதர்;
அப்புச்சசிவானம் மருத்துக்கதிர்தீநிலம்
எச்சத்தியமான் எனும் எட்டுத்திறம்ஆனவர்,
ஒருகரந்துடி ஓர்கரங்கனல் ஓர்கைவீசுகை
அபயம் ஒன்றினில் ஆடமன்றிடை ஆடும்நாயகர்,
வட்டச்சடைமாமுடி அத்தற்கொருபால்அமர்
சத்திக்குமுன் ஆகஉ தித்திட்டபிரான்; அருள்
குலவிடும்பெரு மாள்; அரும்பெரு மாள்; சராசரம்
நிலவிடும்பெரு மாள்; பரம்பரர்; ஆதிமூலம்எ -
னச்செப்பிடும்ஓசைசெ விக்குட்புகுதாமுனம்
அத்திக்கெதிர்போய்அப யத்தைச்செயும்மாயவர்
பருந்தாடும் ஆழிவளை அங்கையார் (3)

குருகுவந்திரை தேர்புறம்பணை சூழவே, களை
களையும்மங்கையர் வாரிசந்தனில் ஊறுதேன்றனி
துய்த்திட்டிருபார்வைசி வப்பிற்றிகழ்நீர்மைது -
டித்துக்கனிவாயும்வெ ளுப்பைத்தரவேஉடல்
வசமழிந்திட வேர்வையும்புதி தாய்விராவிட
வறிதுநின்றிடு மாறுகண்டிது நேயமானபு -
ணர்ச்சிக்குறியாம்என இச்சித்துவிகாரம்மி -
குத்துப்பலகாமுகர் சுற்றக்கவினார்பதி
கொடிநுடங்கிய வீதிமண்டப கூடகோபுரம்
மதில்அரங்குகள் கூலம்அம்பலம் மாடமாளிகை
மொய்த்திட்டளகாபுரி யொத்துப்புகழ்மீறிய
தொட்டிக்கலைமாநக ரத்திற்பயில்கேசவர்
பயின்நேகு லாவிவளர் குன்றிலே (4)

மருவுசுந்தர சோமமண்டல மேதாய்முகில்
விரவுமண்டலம் மேவ, இந்துவி னூடுவாழ்குமு -
தத்துத்துணர்நாளும்மு கிழ்ப்பக் கொடிதானவி -
டத்தைத்தரு நாகப டத்துக்கமுதூறிட,
உபயகுஞ்சரம் ஓர்மடங்கலை மீதுசீற, மொய்
குவலயம்பக லேமலர்ந்திட வேதநாதர்ப -
டைப்புக்கெதிராகவ குத்துத்தமியேனைவ -
ருத்திப்பிணைபோலவி ழித்துத்தனியேவரு
மலர்அணங்கர சே ! கருங்குயி லே ! குலாவியே

சிறுபசுங்கிளி யே! நறுஞ்சுவை யே! நறாவிரி
செச்சைத்தளிரே! என திச்சைக்கருவே! படர்
மருந்தாகி மேவும்மட மங்கையீர் ! (5)

மலரும்ஐங்கணை யாளர்சந்ததி மேவுதேசிகர்
எவரினும்பிர தானமுன்குரு பீடமே ! உனை
மெத்தப்பலகோடித வத்துப்பயனால்அணு -
கப்பெற்றனன் ; மேலும்ம னக்குப்புகல்வேறிலை ;
திருவுளங்கனி வாய்மகிழ்ந்திள மூரலாய்ஒரு
வசனமுந்திரு வாய்மலர்ந்தரு காகவேஒரு
மிக்கச்சிறியேனைஅ ழைத்துக்கொளுவீர் ; பணி
கற்பித்திடும்ஊழியம் இட்டப்படியேசெய,
மதனசம்பிர தாயம்முந்துப தேசமாம்மொழி
ரகசியஞ்சில பேசி, நண்புறு காமதேவர்இ -
ருக்கைத்திரிகோணத லத்தைச்சிறிதேதரி -
சிப்பித்தருளால்உறு முத்திப்பலனேதர,
மயங்காது லீலைகள்தொ டங்கியே (6)

இருள்அடர்ந்திடை யேசரிந்துக ரேர் எனாவளர்
குழல்சரிந்தய லேகுலைந்திட, ஆரமாலைதெ -
றித்துப்படையேவிழ, நெற்றிப்பிறைநீள்புரு -
வத்துக்கடைசாலநெ றிக்கத்துடி நேர்இடை
வளையரெண்டிள வாள்அரம்பையி னூடுசீர்பெறு
குமுதமென்றமு தூறல்பொங்கிநி லாவவே, புள -
கித்துத்திருமேனிது வட்சிப்பட, வால்வளை
சத்திக்க, மனோலயம் உற்றுச்சிவமாடவும்
இருவர் அங்கமும் ஓர்உடம்பென லாகநீடிய
திருவரங்கபு ரேசர்தந்தசு வானுபூதிஇ -
தற்குச்சரியோஎன மெய்ப்பித்தநுராகந -
லத்தைப்பெரிதாகவி ளைத்துக்களிமீறிட
அரும்பான வார்முலைகள் பொங்கவே (7)

இருபதங்களி லேசிலம்புக லீர்என,
அளறுகொண்டச வாதுசந்தனம் நானம்நீர்கரை -
யப்பற்குறி, கூறும்ந கத்துக்குறிரேகைப -
தித்துக்குரல்ஓசைஎ ழுப்பிக்கனிதேன்நிறை
அமுது கண்டொடு பால்கலந்த சொரூபமே என
இதழ்மருங்கினில் ஊறிடும்பிர சாதசேடம்அ -

ளித்துக்களமோடுகை யொக்கப்பிணைவாகநெ -
ருக்கிப்பலகாலும்இ றுக்கிப்புணர்போதினில்
இறுகும்அன்புவி டாமல்இன்புறும் மோகலாகிரி
பெருகிடும்படி யேஇரங்கிடு வீர்; அலாது, கை
விட்டுச் சிறுபோதுத ரிக்கிற்பினைஆவிஉ -
யத்தக்கதுவோ? விரை விற்சற்றெனைஓர்தரம்
அணைந்தால்இந் நேரம்உயிர் தங்குமே (8)

## தொங்கற்றாழிசை

பெருந்தேவி மாதுபுணர் மொம்ய்பினார் ;
பிணங்காது பேயின்உயிர் ண்டுளார்;
பருந்தாடும் ஆழிவளை அங்கையார்
பயின்றேகு லாவிவளர் குன்றிலே
மருந்தாகி மேவும்ட மங்கையீர்!
மயங்காது லீலைகள்தொ டங்கியே
அரும்பான வார்முலைகள் பொங்கவே
அணைந்தாலிந் நேரம்உயிர் தங்குமே.

# 6. தொட்டிக்கலை கேசவப்பெருமாள் வண்ணம்

## குறிப்புரை

1. நாபியும் - கொப்பூழிலும், ஏழன் உருபு விரிக்க ; சிந்தனை - கருத்தை, நேயத்தை, இரண்டன் உருபு விரிக்க ; குலை - குல்லை, துளசி, இடைக்குறை ; புராதனர் - மிகப் பழமையானவர், "போதம ருந்திய மாதுடன் நின்ற புராணன்" (அதிகார சங்கிரகம் 13) என்பார் வேதாந்த தேசிகர் ; முத்திக் கரு ஆகிய - வீட்டின்பத்திற்கு மூலகாரணமாகிய; சுத்த - துய்மையான ; பரிபூரண - முழுமையான் நித்த - எந்நாளும் அழிவற்ற; பரசேதனர் - பரமாத்மா; கரை கரையும்படி - கடற்கரை கொஞ்சங்கொஞ்சமாக அழிந்து குறையுமாறு; திரைபாய் - அலைவீசுகின்ற ; பயோததியிடை - பாற்கடலில், பயஉததி வடமொழிக் குணசந்தி, இடை - ஏழன்உருபு ; பொதி - திணிந்துள்ள ; கச்சிப்பதி - காஞ்சிபுரம் ; சிட்டர் - நல்ல பண்புகளை உடைய அடியார் ; துட்டர் - தீயவர், "பத்துடை அடியவர்க் கெளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன்" (திருவாய்மொழி 1 - 3 - 1); பொலங்கிரி - பொன்மலை ; உறிஞ்சிய - (தண்ணீரைத்) தன்னுள்ளே வாங்கிய; உவணன் - கருடன் ; ஊரும் - செலுத்தும்; கருடனுக்குப் பொன்மலை உவமை ; "ஓர் கனக வரைவிரைய வருவ தெனஉதவு கருடன்" (இரணியவதைப் பரணி 456), "மாழைமால் வரையுறழ் வயின தேயனே" (திருவரங்கத் திருவாயிரம் 765) ; அகத்து - வீட்டில்; கரவாய் - திருட்டுத்தனமாக; பெருந்தேவி - தொட்டிக்கலையில் தாயார் திருநாமம்; மொய்ம்பினார் - மார்பை உடையவர்.

2. திசைமுகன்றனை - நான்கு முகங்களை உடைய பிரமனை; உம்பரை - தேவர்களை; தபோதனர்தமையும் - தவசிகளையும், பிரமன் இராவணனுக்குச் சொந்த முப்பாட்டன் ஆதலின் அவனைப் பணிகொண்ட கொடுமையை முதலில் கூறினார் ; மாலை - வரிசை ; ஒக்க - முழுமையான ; பிதிராயிட - பொடியாக ; நிருதர் - அரக்கர் ; ரணகளம் - போர் அரங்கம்; மகா பசாசுகள் - பெரிய பிசாசுகள் ; கணமோடு - கூட்டத்துடன், அத்துச் சாரியை கெட்டது ; பிசாசுகள் பிணங்களை உண்ணல் "பிணம் கூளிகள் தின்றசீர்" (தக்கயாகப் பரணி 616) ; திறல் பாடி - பேய்கள் போரில் வென்று தமக்கு உணவு தந்த வீரனை வாழ்த்திப் பாடுவதாகக் கூறுதல் பரணி இலக்கிய மரபு.

"என்றென்று நின்றுஇசை பாடினவே ; இரணியன் தோற்றமை பாடினவே
வென்ற செருக்களம் பாடினவே ; வீரத் திருப்புயம் பாடினவே ;"

(இரணியவதைப் பரணி 688)

மேதை - நரம்பு ; சோரி நீர் - இரத்தம்; கவந்தம் - தலையற்ற உடல், இது போர்க்களத்தில் ஆடும், "கவந்தம் ஆட முன்பு தம்க ளிப்பொடு ஆடுபேய் இனம்" (கலிங்கத்துப் பரணி 432); வாகைத்தொடை என மாறுக ; பிணங்காது - சற்றும் மனக்குழப்பமில்லாமல்; பேயின் - பூதனுயினுடைய, கம்சன் அனுப்பப் பாலுட்டுவதுபோல் வந்த பூதனையைக் கொன்ற வரலாறு வெளிப்படை.

3. குரு விளங்கிய - ஒளிமிக்க ; காசைமென் துணர் - காயாம் பூ; விழி முதலிய நான்கினொடும் எண்ணும்மை கூட்டுக ; சிவந்து அழகான; சோபிதர் - விளங்குபவர்; அப்பு - நீர்; சசி - திங்கள்; மருத்து - காற்று; கதிர் - சூரியன்; எச்சத்து - (அட்டமூர்த்தங்களில்) மீதமுள்ளதாகிய; இயமான் - ஆன்மா ; சிவபெருமான் எட்டுத் திருவுருவங்கள் உடையவர்.

"அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிகனல் காற்று ஆவான் - அவனே
இயமான னாய்அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து" (அற்புதத் திருவந்தாதி 21)

துடி - உடுக்கை; கனல் - தீ; வீசு கை - குஞ்சித பாதத்தைக் காட்டும் இடது கை; அபயம் - அஞ்சற்க என்னும் முத்திரை ; மன்றிடை - அம்பலத்தில்; வட்டச் சடை - கங்கையாகிய தண்ணீர் உள்ள சடை, வட்டம் ஆகுபெயராக நீரை உணர்த்திற்று; அத்தர் - சிவபெருமான்; ஒருபால் அமர் - இடதுபக்கத்தில் உள்ள ; சத்திக்கு - உமாதேவிக்கு ; முன் ஆக - தமையனாக,"என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே" (அபிராமி அந்தாதி 13); எட்டுத்திறம் ஆனவரும், ஆடும் நாயகருமாகிய அத்தற்கு ஒருபால் அமர் சத்திக்கு முன்ஆக உதித்திட்ட பிரான் என்பது பொருள்முடிபு; சராசரம் - இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்களை; நிலவிடும் - காத்து நிலைநிறுத்தும்; பரம்பரர் - எல்லாப் பொருள்களுக்கும் மேம்பட்டவர்; பருந்தாடும் ஆழி - (பகைவர்களை எப்போதும் வீழ்த்திக்கொண்டே இருப்பதால் இதன் பக்கத்தில் இருந்தால் உணவு தட்டின்றிக் கிடைக்கும் என்பதால்) பருந்துகள் நெருங்கிச் சூழ்ந்துள்ள சுதர்ஸன சக்கரமும்; வளை - சங்கும்; ஆழிவளை - உம்மைத்தொகை.

4. குருகு - நாரை; இரைதேர் புறம் - தமக்குரிய உணவைத்தேடும் இடமாகிய; பணை - பண், வயல் (இடைக்குறை); வாரிசந்தனில் - தாமரையில், தனித்தேன் என மாறுக, ஒப்பற்ற மது என்றவாறு; துய்த்திட்டு - பருகி ; இரு பார்வை - இரண்டு கண்களும் ; சிவப்பில் திகழ் நீர்மை துடித்து - சிவப்புநிறம் பெற்று விளங்கும் பண்போடு படபடத்து; கனிவாயும் - கோவைப் பழத்தைப் போன்ற உதடுகளும்; வெளுப்பைத் தரவே - தம் செம்மையை இழந்து வெண்மை நிறத்தைப் பெற; விராவிட - பொருந்த; வறிது நின்றிடுமாறு கண்டு - ஒன்றும் செய்யாமல் மயக்கமாக நிற்பதைப் பார்த்து, பார்த்தவர் காமுகர்; விழிகள் சிவத்தல், இதழ் வெளுத்தல், உடல் பரவசமடைதல், வியர்வை அரும்புதல், களைப்பால் சும்மா இருத்தல் ஆகிய இவை கலவியால் ஏற்படும் விளைவுகளுமாம். இச்சித்து - விரும்பி; விகாரம் மிகுத்து - காமஏக்கம் மேலிட்டு; மங்கையர் நின்றிடுமாறு பல காமுகர் கண்டு, இது குறியாம் என இச்சித்து, மிகுத்து, சுற்று அ கவின் ஆர் பதி என்பது முடிபு ; நுடங்கிய - அசைந்தாடுகின்ற; கூலம் - கடைவீதி; அம்பலம் - கோவில்; அளகாபுரி - குபேரனின் தலைநகர்; கேசவப்பெருமாள் என்பது தொட்டிக்கலையில் திருமால் திருப்பெயர்.

5. சுந்தரம் மருவு - அழகு பொருந்திய; சோம மண்டலம் மேலதாய் - சந்திரமண்டலம் போன்ற அழகிய முகத்திற்கு மேல்; முகில் விரவு மண்டலம் மேவ - மேக மண்டலம் போன்ற கரிய கூந்தல் பொருந்தியிருக்க ; இந்துவினூடுவாழ் குமுதத்துணர் - சந்திரனுக்குள்ளே இருக்கும் அல்லிமலரைப் போன்று எழில்மிக்க முகத்திற்குள்ளே உள்ள அழகிய வாய்; நாளும் முகிழ்ப்ப

- எப்போதும் குவிந்திருக்க, வாய் மூடியிருக்க ; நாகபடத்துக்கு - பாம்புப் படத்தைப் போன்ற நிதம்பத்தில், உவம ஆகுபெயர், நான்கன் உருபு ஏழன்பொருளில் வந்தது, "கைக்கு வான் முத்தின் சரிவளை பெய்து" (திருவிசைப்பா 18 - 1) என்புழிப்போல; உபய குஞ்சரம் - யானைகளைப் போன்ற இரு நகில்கள்; ஓர்மடங்கலை மீது சீறுற - சிங்கம் போல் சிறுத்த இடையின்மீது சினங்கொண்டு பாய ; இடைக்குச் சிங்கம் உவமை; "பணைமுலை மாதங்கம் தனக்கும்அம் மாதங்க பாரம் தரிக்கும் இடைச்சிங்கம் தனக்கும்" (திருவெங்கைக் கோவை 168); சிங்கம் யானையின்மீது பாய்தல்; "சிங்கக் குருளை பிறந்துஉடன் நாகத்தைச் சீறுகின்றது உங்கட்குத் தோன்றலையே" (விஜயன் அப்துல் ரகிமான் கோவை); மொய் குவலயம் பகலே மலர்ந்திட - வண்டுகள் சூழும் குவளைப்பூ பகற் போதிலேயே விரிவதைப் போலக் கண்கள் விளங்க ; வேதநாதர் - பிரமன் ; படைப்புக்கு எதிர் ; மேக மண்டலத்திற்கு மேல் சந்திரமண்டலம் இருத்தல் இயற்கை, ஆனால் இங்கே மாறியுள்ளது. மதியைப்பார்த்த அளவிலே அல்லி மலர்வதே இயல்பு ; ஆனால் இங்கே மதியின் உள்ளிருந்தும் குவிந்துள்ளது; நஞ்சு கக்கும் அரவம் அமுதம் தருகிறது; சிங்கத்தைக் கனவில் கண்ட அளவில் அஞ்சுதல் யானையின் பண்பு, ஆனால் இங்கே இடையின் மீதேறி வருத்துகிறது; இரவில்தான் காவிமலர் மலரும், ஆயின் இங்கோ பகலிலேயே அலர்ந்துள்ளது; இச்செயல்கள் யாவும் பிரமன் விதித்த விதிக்கு மாறானவை என்கிறான்; தமியேனை - எளியேனை; வகுத்தும், வருத்தியும், விழித்தும் வரும் அணங்கரசே என முடிபு கொள்க; பிணை - மான்; மலர் அணங்கரசே - திருமகளைப் போன்ற பெண்ணரசியே; நறா விரி - நறுமணத்தைப் பரப்புகின்ற; செச்சைத்தளிர் - துளசி இலை ; இச்சைக் கரு - விருப்பத்திற்குரிய கருப்பொருள்; மதன் விச்சைக்கொடி - காம சாத்திரத்தின் விருது; அரு - கிடைத்தற்கரிய; மருந்தாகி - அமுதம் போல.

6. சந்ததி மேவு தேசிகர் - ஞானபரம்பரையில் வந்த குருநாதர் ; பிரதான - தலைமையான; முன் - முதன்மையான் குருபீடம்:

"அனங்கலை ஞானம்; அனங்கஅனுட்டானம்;
அனங்ககுருத் தானம்; அனங்க தவத்தியானம்" (சிவகங்கை இராசேந்திர பூபதி காதல் 181)

தவத்துப்பயன் ;

"தன்னந் தனியே தனித்திவ் வனத்தில்வர
அன்னமே நான்முன் அருந்தவத்தைச் செய்தேனோ"

(குமாரலிங்க வேந்தன் காதல் 240)

இளமூரல் - புன்முறுவல்; ஒரு வசனம் - (குரு உபதேசம் செய்யும்) ஒப்பற்ற மொழி; ஒருமிக்க - (கேட்டதைச் சிந்தித்தபின் தெளிந்து நிட்டை கூட) மனம் ஒன்றாகப் பொருந்த ; பணி - வழிபாடு ; இட்டப்படியே ஊழியம் செய ; மதனசம்பிரதாயம் - காமகலைக்குரிய நெறிமுறைகள்; முந்து - முதன்மைபெற்ற ; ரகசியம் - உபாசனையில் எளிதில் வெளியே சொல்லக்கூடாத முறைகள்; காமத்தேவர் இருக்கைத் திரிகோண தலத்தை - மன்மதனின் இருப்பிடமாகியதும் முக்கோண வடிவுடையதுமாகிய கடிதடத்தை ; தரிசிப்பித்து - காணச்செய்து ; அருளால்உறு முத்திப்பலன் - உம்முடைய கருணையால் கிடைக்கக் கூடிய உலோகாயத முத்தியாகிய புணர்ச்சியின்பம்; உலகாயத முத்தி :

"ஊடுவது, உணர்வது, உற்ற கலவிமங் கையரை உள்ளி
வாடுவது, அடியில் வீழ்ந்து வருந்துவது அருந்த வம்;பின்
கூடுவது உணர்வு கெட்டுக் குணம்எலாம் வேட்கை யேயாய்
நீடுவது இன்ப முத்தி; இத்தில்நின் றார்கள் முத்தர்"

(சிவஞான சித்தியார் - பரபக்கம் 31);

லீலைகள் - (குருவின் திருவருளாடல்கள்) கலவி விளையாடல்கள்.

இக் கலையில் ஞானஉபதேச நெறிகளுக்கே உரிய பல பரிபாஷைச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ள திறம் அறிந்து மகிழத்தக்கது. சந்ததி, தேசிகர், குருபீடம், தவத்தால் குருவை அடைதல், சரணடைதல், வாயால் மந்திர உபதேசம், அருகே வைத்து ஒருமிக்கச் செய்தல் (நிட்டை), வழிபாட்டு முறைகளை அறிவித்துத் திருப்பணி ஏற்றல், சம்பிரதாயம் கற்பித்தல் (குறிப்பிட்ட ஞானநெறியைப் புகட்டுதல்), உபாசனையின் மறைபொருளைத் (ரகசியம்) தெரிவித்தல், முக்கோணயந்திர வழிபாடு, முத்தியாகிய பயன், மயக்கம் இல்லாமல் (சம்பிரதாயத்தில் தெளிவாக இருக்கத்) திருவருளாடல் புரிதல் முதலியன அவை.

7. இருள் அடர்ந்து - இருளைப்போலச் செறிந்து; இடையே சுரிந்து -நடுவில் வளைந்து; கரேர் எனா-கரிய நிறமாக ; குழல்- கூந்தல்; ஆரமாலை - முத்துச்சரம்; புடை - அருகே ; நெற்றிப்பிறை - நுதலாகிய பாதிமதி, உருவகம், எண்ணுமை கூட்டுக ; கடை என்புழியும் எண்ணும்மை கூட்டுக ; நெறிக்க -சிலிர்க்க ; துடி - உடுக்கை; ரெண்டு இளவாள் அரம்பை - இரண்டாகியனவும் இளமைமிக்கனவும் ஒளிவீசுவனவுமாகிய வாழைத் தண்டை நிகர்த்த துடைகள், அரம்பை - உவம ஆகுபெயர்; திருமேனி புளகித்துக் துவட்சிப்பட என்க ; வால் வளை- ஒளிமிக்க சங்கைப் போன்ற கழுத்து, உவம ஆகுபெயர்; சத்திக்க -புள்ளொலி எழுப்ப; மனோலயம் உற்று - வேறு எந்த விஷயத்திலும் பாய்ந்து செல்லாமல் உள்ளம் ஒருபொருளின்கண்ணே முழுமையாக ஒன்றித்து நிலைத்து ; சிவம் ஆடவும்- மங்கலம் பொருந்தவும்; (இறைவனின் திருநடன தரிசனத்தைப் பெறவும் என்பது தொனி) ; சுவானுபூதி - தானே விளையும் அநுபவம்; சரியோ என - ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்து நிகராகாது எனப் பொருள் தந்தது; அநுராக நலம் - புணர்ச்சியாகிய நன்மை; விளைத்து - உண்டாக்கி;குழல் குலைந்திட, மாலைவிழா, நெறிக்க, இடைவளைய பொங்கி நிலாவ (ஏகாரம் அசை), துவட்சிப்பட, சத்திக்க, உற்று சிவம் ஆடவும், மெய்ப்பித்து நலத்தை விளைத்து களிமீறிட என்பது முடிபு.

8. பதம் -கால்; அளறு கொண்ட - சேற்றைப் போன்ற ; நானம் - கத்தூரி; கண்டு - கல்கண்டு; சொரூபமே என - வடிவே என, இங்கு இனிமைச் சுவைக்குறிப்பு, "கருப்புஉரு வத்திரு வார்த்தைகள்" (கோயில் திருப்பண்ணியர் விருத்தம் 46) என்றாங்கு; பிரசாத சேடம் -குருநாதருக்கு நிவேதிக்கப்பட்டவற்றில் அவர் ஏற்றது போக மீதம்,இங்கு வாயிற் குதப்பிய வெற்றிலைபாக்கு ரசம்; களமோடு - கழுத்துடன், அத்துச் சாரியை கெட்டது; மோகலாகிரி - காம மயக்கம்; அலாது- அவ்வாறு செய்யாமல்; தரிக்கில் - (இக்காம வேதனையைத்) தாங்கிச் கொண்டிருந்தால்; வினா எதிர்மறை ; விரைவில் சற்று எனை.

# 7. வீரப்ப நாயக்கன் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இந்த வண்ணம் தஞ்சைச் சரசுவதி மகால் சுவடிகள் எம்.619, எம்.702 ஆகியவற்றில் உள்ளது. அவர்களால் பதிப்பிக்கப்பெற்ற வண்ணத்திரட்டிலும் இடம் பெற்றுள்ளது.(பக்கம் 36) சுவடியிலோ பதிப்பிலோ துறையும் குறிப்பும் கொடுக்கப்பெறவில்லை.

இவ் வண்ணத்தின் நடை நன்றாக உள்ளது. பொதுவாகத் தலைவன் ஒருவனைப் போற்றி வண்ணம் இயற்றப்படும்பொழுது அவனுடைய வழிபடு கடவுளை முதல்கலையில் இடம்பெற வைப்பது பெரும்பான்மை மரபு. அது இதில் போற்றப் பெறவில்லை. முதற்கலையில் பாட்டுடைத் தலைவனின் குதிரை மிகவும் உயர்த்திக் கூறப்படுகிறது. இரண்டாம் கலையில் திருமாலுக்கு நிகரானவனாகக் கூறப்படுகிறான். மூன்றாம் கலையில் சொக்கநாதருக்கு இணையானவனாகக் கூறப்படுகிறான். இது அருகிய வழக்கு. நான்காம் கலையில் பாட்டுடைத் தலைவனின் பெயரோடு அவனுடைய தந்தை, பாட்டனார் பெயர்களும் இடம்பெற்றுள்ளன. இந்த ஆண்கலையும் தெளிவான வரலாற்றாய்விற்குப் பயன்படாது.

இதன் பெண்கலை காட்சி,ஐயம் முதலியனவற்றைக் கொள்ளாவிடினும் கிளவித்தலைவன் தலைவியின் மேனியழகைச் சுட்டி விளிப்பதாகவும், அவளுக்குக் குற்றேவல் புரியலாமா என வினவுவதாகவுமே உள்ளது. மெய்யுறு புணர்ச்சி பற்றிய செய்திகள் இல்லாததால் இக் கிளவித்தலைவன் ஓரளவு பெருந்தன்மை வாய்ந்தவனே.

# 7.வீரப்ப நாயக்கன் வண்ணம்

தலைவன் வேண்டல்

தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன
தானத்தந் தானத்தந் தானத்தந் தனனா
(தொங்கல்) தானதந்த தத்ததான தானனா

தோதி தித்திமி தோதி தித்திமி
தோதி தித்திமி தோதி தித்திமி
தோகிட்டந் தோகிட்டந் தோகிட்டங் கிணதோ
தாதி குத்திகு தாதி குத்திகு
தாள னருக்கரு தார்மு டித்தலை
தாள்வைத்துந் தாடித்துங் க்ரீடிக்கும் குமார
தூளி மொய்த்திட வேந டித்திடும்.
வாளி யொப்பென ஓடும், மிக்கது,
வாகைச்சங் ராமச்சிங் காரத்தின் பரிமா
ஏறுமண்டி லப்ரகாச (வீர) மால்; 1

சூரன்; வெற்றிஉ தாரன்; உத்தம
மான சற்குண சீலன்; மைக்கடல்
சூழ்திக்கும் பார்முற்றுஞ் சோதிக்கும் புகழான்;
மோக னத்திரு மாது லட்சுமி
ஞான லட்சுமி வீர லட்சுமி
மூவர்க்கும் பூமிப்பெண் பாவைக்கும் பெருமான் ;
சோப னக்கவி வாண ருக்கும-
தாணி சித்திர சாம ரைத்திரள்
தூவட்டம் பூண்முத்தும் பாலிக்கும் புகழான்;
வீரகண்டிகைப்ரதாப வேலினான்; 2

மேதை செப்பிடு மேம றப்படை
வீரர் தொட்டியர் போய்ஒ ளித்திட,
மேகச்சஞ் சாரத்தின் கால்வைக்கும் பரிதேர்;
ஆட கத்திறை சீனர் கட்டிட,
நீடு சற்பன பாஷை கற்றவர்
ஆடிப்பண் பாடிக்கொண் டாடிக்கும் பிடவே

வீர ருக்கதி வீரன்; முத்தமிழ்
மாறன் இப்புவி மேல்ந டத்திய
வீதித்தென் காசிச்சுந்த் ரேசற்குஞ் சரியாய்
மாநிலம்பு ரக்கவீறு கூரும்மால் 3

மேல்தி சைக்கரு நாட ருக்கும்ம-
ராட ருக்கும்வி ராட ருக்கும்இ
லாடர்க்குஞ் சேரர்க்குஞ் சோழர்க்கும் இறையோன்;
நீள்க டற்புவி ஆளும் ஒட்டிய
ராச ருக்குப காரன்; மத்தக
யானைக்குந் தானைக்குந் தேருக்கும் பெருமாள்;
வீர ருக்கதி வீரன்; விக்ரம
தீரன்; விச்வகு மாரன் கிட்டின
வீரப்பன்; பாரக்கம் பீரத்திண் புயவேள்
வாழ்வுகொண் (டுயர்ச்சிசாரும் நாகம்மேல்) 4

மாத ருக்கர சே! க ருப்புவில்
வேள்த ரித்தசி காம ணிக்கொரு
மாணிக்கம் போலச்சிங் காரப்பெண் கொடியே!
மோக னக்குயி லே! அ னப்பெடை-
யே! எ(னக்குயி ரே! நி னைப்பவர்)
மோகிக்குங் காமச்சம் போகச்செந் திருவே!
வான வர்க்கமு தே! து ளைக்கவொ-
ணாத நித்தில மே! அ ழைத்தெனை
வாழ்விக்குந் தோகைச்செஞ் சாயற்பைங் கிளியே!
வாமம்மிஞ்சு ரத்னமான ரூபமே 5

மாவ டுப்பிள வோ! வ ரிக்கய-
லோ! ம டப்பிணை யோ! வி ழித்துணை
வாளுக்குங் காவிக்குஞ் சேலுக்குஞ் சரியோ!
தேன்வ ருக்கைக ளோ! ச ருக்கரை-
யோ! ம டக்கிளி போல் உ ரைப்பது
தேனுக்கும் பாலுக்குஞ் சீனிக்குஞ் சரியோ!
மாது ளைக்கனி யோ! மு ருக்கிதழ்
வீழி நற்கனி யோ! ம ணித்துடை
வாழைத்தண் டோ! புட்பஞ் சேர்நற்பங் கயமோ
(தாள்கள்; பண்டி பச்சை ஆலம் ஆனதோ! 6

ஆத வற்கழ கான பொற்கம-
லால யப்பதி யோமு கப்ரபை!
    ஆதித்தன் போல்வட்டங் காமச்செஞ் சுழியோ!
பாதி நெட்டிரு ளோ! ம ழைப்புய-
லோ! ம யிற்சிறை யோம லர்க்குழல்!
    பாளைச்செந் தேன்வைக்கும் பூகத்தன் டலையோ!
ஆன செப்பிணை யோ! ப ருப்பத -
மோ!ம ணிக்குட மோமு லைக் (கனம்!
    ஆசைக்கொம் போஉக்கம்! தோள்பொற்பின் கழையோ!)
        நீர்நடந்தி ளைத்தபாடு தீரவே, 7

ஆல வட்டமும் வீசி நெற்றியில்
வேர்து டைத்திட வோ? அ டப்பம-
    தாகப்பின் சேவித்தன் பாரக்கும் பிடவோ?
மாம லர்ப்பனி நீர்தெ ளித்திட-
வோ? எ னக்கொரு பான்மை செப்பிடில்
    வாய்முத்தஞ் சேரச்சிந் தாமற்சிந் திடுமோ?
ஆனை கட்டிய தூண்எ னத்தடு-
மாறு சிற்றிடை போல்இ ளைத்தஎன்
    ஆவிக்கன் பாகச்சொம் பாகக்கொண் டணைவீர்!
        (ஈது) மங்கை யர்க்குநீதி காணுமே! 8

(இவ் வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை.)

# 7. வீரப்ப நாயக்கன் வண்ணம்

## குறிப்புரை

1. என - என்னும் தாளப்ரமாணத்துடன்; கருதார் - பகைவர்; முடித்தலை - தலைகளின்மேல், தலை ஏழன்உருபு; தாள்வைத்தும் - தன் கால்களை அழுத்தியும்; தாடிக்கும் -அடித்தும், அதாவது உதைத்தும்; க்ரீடிக்கும் - விளையாடுகின்ற ; குர - காற்குளம்புகளை உடையதும்; மா தூளி - மிகுதியான புழுதி; வாளி - அம்பு; எய்த கணையென வேகமாகப் பாயும் எனத் தொழிலுவமம்; மிக்கது - உயர்ந்ததும்; வாகைச் சங்க்ராம - வெற்றியைத் தருகின்ற போருக்கு; சிங்காரத்தின் -அலங்காரமாகிய ; பரிமா - குதிரை, இருபெயரொட்டு; குரத்தை உடையதும், நடித்திடுவதும், ஓடுவதும், மிக்கதும், சிங்காரத்துக்கு உரியதும் ஆகிய பரிமா எனப் பொருள்முடிபு காண்க ; மண்டிலப்ரகாச - உலகில் பெரும் புகழ் பெற்ற ; மால் - திருமால் போன்றவன்.

2. வெற்றி உதாரன் - வெற்றி வீரன்; மைக்கடல் - கருநிறம் பெற்ற ஆழி; திக்கும்-திசைகளும்; சோதிக்கும் - சுடர்விடும், சோதி என்னும் பெயரடியாகப் பிறந்த வினைச்சொல்; மோகனத் திருமாது லட்சுமி -அனைவரையும் கவருகின்றதாகிய செல்வத்திற்கு உரிய தலைவி ஆகிய மலர்மகள்; ஞானலட்சுமி - கலைமகள்; வீர லட்சுமி -துர்க்கை, கொற்றவை ; பெண்பாவை- பாவையைப் போன்ற பெண், முன்பின்னாகத் தொக்க உவமத்தொகை ; பெருமான் - தலைவன் ; சோபனக் கவிவாணர் - மங்கலப் பாடகர்; மதாணி - பதக்கம்; சித்திர சாமரைத் திரள் - அழகிய கவரிகள்; தூவட்டம் - வெண்மையான அல்லது தூய்மையான ஆடை; பூண்முத்து - அணிவதற்குரிய முத்து நகைகள், பாலிக்கும்- வழங்கும்; வீர கண்டிகைப்ரதாப - தன் வீரத்திற் கறிகுறியாக வீரகண்டாமணி என்னும் பதக்கத்தை அணியத் தகுதிபடைத்த பெருமையை உடைய ; உடையவனின் பெருமை கருவி கருவியாகிய வேலின்மேல் ஏற்றப்பட்டது, உபசார வழக்கு.

3. மறப்படை வீரராகிய தொட்டியர் போய் ஒளித்திடக் கால்வைக்கும் பரிதேரே மேதை செப்பிடும் என முடிக்க ; மேகச் சஞ்சாரத்தின் - முகில்களின் இயக்கத்தைப் போல, இன் உவம உருபு; பரிதேர் -குதிரைகள் பூட்டப்பெற்ற இரதம், ஏகாரத்தை இங்கு கூட்டுக, தேர்களே போர்த்திறமையைக் காட்டிவிடும். பிறர் வேண்டியதில்லை என்றபடி; ஆடகத்திறை - பொன்னாகிய கப்பம்; சற்பன பாஷை- சற்பன்ன பாஷை, அனைத்து மொழிகளையும், இடைக்குறை ; முத்தமிழ் மாறன் - இயல் இசை நாடகங்களைப் பேணுதலில் பாண்டியனுக்கு நிகரானவன், பாண்டியருக்குரிய அடையாளங்கள் ஏதும் இவ்வண்ணத்தில் இடம்பெறாமையின் இவ்வாறு உரைக்கப்படுகிறது; வீதித் தென்காசிக்கு - அழகிய வீதிகளாற் சிறப்புப் பெற்றதும், தென்காசி எனத்தக்கதும் ஆகிய நகரத்தின்கண், நான்கன் உருபு ஏழன் பொருளில் வந்தது, பாசண்டச் சாத்தற்குப் பாடுகிடந் தாளுக்கு (சிலம்பு. கனாத்திறம். 15) என்றவிடத்திற்போல ; சுந்த்ரேசற்கும் சரியாய் - சோமசுந்தரருக்கும் நிகராக, உயர்வு சிறப்பும்மை.

4. மேல்திசை - மேற்கு; ராசருக்கும் என உம்மை கூட்டுக ; உபகாரன் - உதவிபுரிபவன்; தானை- சேனை ; விக்ரம - வெற்றியை உடைய ; விசுவகுமாரன் கிட்டிண வீரப்பன் - விசுவநாத நாயக்கரின் மகனாகிய குமாரகிருஷ்ணப்ப நாயகனின் மகனாகிய வீரப்ப நாயக்கன்; பார - பெரிய.

5. கருப்புவில் - கரும்புச் சிலை ; சிகாமணி - தலையில் அணியும் ஆபரணம்; சம்போக - புணர்ச்சிக்குரிய ; வானவர்- தேவர்; நித்திலம் - முத்து; தோகைச் செஞ்சாயல் -மயிலின் செம்மையான சாயலைப் பெற்ற ; செஞ்சாயற் பைங்கிளி - சொல் முரண்தொடை ; வாமம் மிஞ்சு -ஒளிமிக்க ; ரத்னம் ஆன - வைரத்தைப் போன்ற, ஆதல் உவமைப் பொருட்டு; ரூபமே -அழகே வடிவானவளே.

6. மாவடு - மாமரத்தின் இளங்காய்; மடப்பிணை - மடப்பத்தை உடைய மான்; காவி - கருங்குவளை மலர்; தேன் வருக்கை - பலாவில் ஓர் இனம்; முருக்கு இதழ் - முருக்கம்பூப் போன்ற உதடுகள்; வீழி - கோவை ; மணி - அழகிய ; பண்டி - வயிறு; ஆலம் - ஆலஇலை ; ஆனதோ- நிகர்த்ததோ.

7. ஆதவற்கு -சூரியனுக்கு, இங்குப் பகல் நேரத்தைக் குறித்தது; பொன் - ஒளி மிக்க ; மழைப்புயல் - நீருண்ட மேகம்; மயிற்சிறை - மயிலின் தோகை ; பூகத்தண்டலை - கமுகந்தோப்பு; பருப்பதம் - மலை ; ஆசைக்கொம்போ - பொற்கொடியோ; உக்கம் - இடை ; கழை -மூங்கில்; கழையின் பொற்போ என மாறுக ; பாடு - களைப்பு.

8. ஆலவட்டம் - விசிறி; வேர் - வேர்வை, கடைக்குறை ; அடப்பம் அது ஆக - வெற்றிலைப்பெட்டி சுமக்கும் பணியாளாக, அது பகுதிப்பொருள் விகுதி; பின் சேவித்து -பின்னால் திரிந்து வழிபட்டு; அன்பு ஆரக் கும்பிடவோ; பான்மை - பண்பான மொழி; சேர - முழுவதும்; வாய்திறந்தால் பெண்ணரசே வாய்முத்து உதிர்ந்திடுமோ (கந்தர் காதல் 48) ஆவிக்கு - உயிருக்கு; அன்பாக ; சொம்பு ஆக - சிறப்பாக ; ஈது -இச்செயலே ; ஒப்பு; பெண்மை பெற்றவர் தமக்கெலாம் பெருமகிழ் வளிக்கும் திண்மை பெற்றதோட் கணவர்தம் கலவியில் திளைத்தல் ஒண்மை ( திருப்பேரூர்ப்புராணம் - கௌரி தவம்புரி.77)



# 8. வில்லைக் காமீசர் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இவ் வண்ணம் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தின் டி.371 ஆம் எண்ணிட்ட ஓலைச் சுவடியில் உள்ளது. சுவடியில் துறையின் பெயரோ வண்ணக் குழிப்போ இடம்பெறவில்லை.

இவ் வண்ணத்தின் நடை சிறப்பாக உள்ளது. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவராகிய சிவபெருமானின் பெருமைகள் நன்றாகக் கூறப்படுகின்றன. வில்லியனூர்த் தலபுராணச் செய்திகளும் இடம்பெற்றுள்ளன. இறைவனின் பெயர் காமீசர் என்பதும், இறைவியின் திருநாமம் குயிலம்மை என்பதும் காட்டப் பெறுகின்றன. தலத்தின் இயற்கை வனப்பைப் புனைந்துரைப்பதற்குரிய நான்காவது கலையிலும் இவ் வாசிரியர் சிவபெருமானின் பெருமைகளையே கூறுவதால் இவருடைய ஆழ்ந்த சிவபக்தி புலப்படுகிறது.

பெண்கலையில் கிளவித்தலைவன் தலைவியின் உடல்எழிலைப் புகழ்ந்து, அவளுக்குக் குற்றவேல் செய்யவா எனக் கேட்பதாகவே அமைந்துள்ளது. இதனால் இவன் ஓரளவு பெருந்தன்மை வாய்ந்தவனாகவே காட்டப்பட்டுள்ளான் எனலாம். தலைவியின் அழகைப் புகழும்போதும் இலக்கிய நயம் மேலோங்கியுள்ளதேயன்றி விரசம் இல்லை.

# 8. வில்லைக் காமீசர் வண்ணம்

தலைவன் வேண்டல்

*தனதன தந்தன தனதன தந்தன*
*தானாதன தானதந்தன*
*(தொ) தய்யதன தானதன தானனா*

மதிநிறை வெண்புனல் மருவிய செந்துகிர்
வார்நீள்சடை யார்; விடந்திகழ்
நிமிர்பணி என்புடன் இதழிபு னைந்தவர்;
நீளார்அழ லாடும்இங்கிதர்;
மழுஒரு செங்கையும் மறிஒரு செங்கையு -
மானார்; திரு நீறணிந்தவர்
வையிலகு நீடுதிரி சூலனார் (1)

வடவழல் பொங்கிய நுதல்உறை கண்கொடு
மாவேள்தனை யேமுனிந்தவர்;
புரமவை பொன்றிட எனநகை கொண்டவர்;
சேவேறிய தூயபுங்கவர்;
மறலிஉ தைந்தவர்; கவரியு டன்பெரு
வாதேநட மாடிவென்றவர்;
வல்லர்இதம் மேவுகயி லாசனார் (2)

கதிர்ஒரு கண், செழு மதிஒரு கண்,தழல்
தான்ஓர்விழி யானவென்றியார்;
புலிஉரி யின்துகில் உடையினர்; பொன்கிரி-
யேமாதனு வானவிஞ்சையர்;
கருதிய பண்கவி இருவர்வி ளம்பிய
காதார்; கடல் ஆலம்உண்டவர்;
மெய்யழல்பொன் மாலைநிக ராயினார் (3)

கரடநெ டுங்கிரி உரிசெய்தி லங்கிய
மேலேடுயர் போர்வைகொண்டவர்;
விதிஅரி வெம்பணி புனிதனொ டுங்கணை
வேள்நீடிய பூசைகொண்டவர்;
கவிர்இத ழின்கொடி குயில்உமை பங்கினர்
காமீசர்;பு ராரி;சங்கரர்
வில்லைவன நாதர்வரை மீதிலே (4)

அதிர்கடல் அம்புவி புகழவ ருங்கிளி
யாரே! இர வேவரும்படி
பொழுதல தன்பொடு சததளம் என்கன
பூமாளிகை யார்திறந்தவர்?
அமரர்க டைந்திடும் அமுதொடும் வந்தவர்
ஆமோஅல வோ? விளம்புக ;
தொய்யும்எளி யேன் இதயம் ஆவியே (5)

அளகம்நி ரம்பிய தமியொடும் இன்புய
லா? மாமயி லே! வருந்திய
வறிதடை குங்கும குடம்இரு கொங்கையின்
மாமேருபொ றாதுபஞ்சடி
அதிரந டந்திடில்; மெலியஅ கன்றிட
லாமோ?இனி வாரும்இங்கிரும்;
சொல்லமுத மேசரச வாணியே! (6)

நிதிவடம் முங்கிய முலைகள்கு லுங்கிள
நீரோ? முகி லோகருங்குழல்?
தெளியவி ளம்பிடு மொழியமு தின்சுவை
தேனோ?கய லோகண் அம்பிணை?
நிலும்நிலும் என்செயல் உரையும்; ம தன்கொடி
நீரே! உம தேவலின்படி
செய்யும்முறை வேலைவழி ஓதுவீர் (7)

நிரைமல ரின்தொடை குழலில்அ ணிந்து,ப
னீர்பூசிட வோதனங்களில்?
விழிகளில் அஞ்சனம் எழுதியும் நும்பத
மீதேபணி கோ? விரும்பும்என்
நினைவைஅ றிந்தும்இ தெனஅகம்? அன்பிலை ;
நீர்ஓவிய மோ?மடந்தையர்
செல்வம்முறை கேள்வரொடு வாழ்வதே. (8)

## தொங்கற்றாழிசை

வையிலகு நீடுதிரி சூலனார்
வல்லர்இதம் மேவுகயி லாசனார்
மெய்யழல்பொன் மாலைநிக ராயினார்
வில்லைவன நாதர்வரை மீதிலே
தொய்யும்எளி யேன்இதயம் ஆவியே ;
சொல்லமுத மே!சரச வாணியே!
செய்யும்முறை வேலைவழி ஓதுவீர்;
செல்வம்முறை கேள்வரொடு வாழ்வதே.

# 8.வில்லைக் காமீசர் வண்ணம்

## குறிப்புரை

1. நிறைபுனல், வெண்புனல் எனத் தனித்தனி இயையும்,கங்கை ; மருவிய - பொருந்தியுள்ள ; செந்துகிர் - செம்பவளம் போன்ற ; வார்நீள் - ஒருபொருட் பன்மொழி; விடம்திகழ் பணி, நிமிர்பணி எனத் தனித்தனி இயையும்; நிமிர்பணி - நெருங்கிடும் அரவுகள், வினைத்தொகை ; என்பு- தேவர்களின் எலும்பு; இதழி - கொன்றை ; நீள் ஆர் அழல் - ஒளிபொருந்திய தீ; இங்கிதர் - இனியவர்; மறி - மான் கன்று; செங்கையும் ஆனார்; வை இலகு -கூர்மை மிக்க ; நீடு - நீண்ட.

2. வடவழல் - வடவைத்தீ போல, வடவைத்தீ - கடலுக்குள் இருந்துகொண்டு தண்ணீர் அதிகமாகாமல் வற்றவைத்துக் கொண்டிருப்பதாகக் கூறப்படும் நெருப்பு; நுதல் உறை - நெற்றியிலுள்ள ; மா வேள் -அழகிய மன்மதன்; முனிந்தவர் - சினந்து எரித்தவர் ; புரம் அவை - முப்புரங்கள், அவை பகுதிப் பொருள் விகுதி; பொன்றிட என - அழியட்டும் என்று; நகை -சிரிப்பு; சிரித்துப் புரமெரித்த வரலாறு வெளிப்படை ; சே ஏறிய - ஏற்றை வாகனமாகக் கொண்ட ; புங்கவர் - கடவுள்; மறலி -இயமனை ; கவுரியுடன் நடமாடிப் பெருவாதே வென்றவர் என இயையும்; வல்லர் - பெருவல்லமை படைத்தவர்; இதம் மேவு - உயிர்களுக்கு நன்மையைச் செய்கின்ற.

3. கதிர் - சூரியன்; செழுமதி - அழகிய சந்திரன்; தழல்தான் -தீ, தான் பகுதிப்பொருள் விகுதி; வென்றியர் -எதிலும் வெற்றியை உடையவர்; புலி உரியின் துகில் உடை - புலித்தோலாகிய துணியாலான ஆடை, துகிலுடை என்பதனை ஒருபொருட் பன்மொழி எனினுமாம்; பொன்கிரி - இமயமலை ; மா தனு - பெரிய வில்; விஞ்சையர் -(மலையை வளைத்த) வித்தையைப் புரிந்தவர்; முப்புரம் எரி செய்ய மலை வளைத்தது வெளிப்படை ; கருதிய பண்.... காதார் - சிவபெருமானின் இரண்டு காதுகளிலும், கம்பளர், அசுவதரர் என்னும் இரண்டு கந்தர்வர்கள் தோடா இருந்து பாடிக் கொண்டே உள்ளனர் என்பது வரலாறு, தோடுவார் காதன்றே தோன்றாத் துணைஐயர் பாடுவார் ஓர் இருவர்க் கிட்ட படைவீடே ( திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் 16); கடல் ஆலம் - ஆழியின்கண் தோன்றிய நஞ்சு; மெய் - தம்திருமேனி; அழல் -தீ; பொன் - தங்கம்; மாலை - செக்கர்வானம்; வீழ்சடைத் தீவண்ணன்சிவன் (திருக்கோவையார் 256) பொன்னார் மேனியனே (தேவாரம் 7-24-1); செக்கர் போலும் திருமேனி (திருவாசகம் 27-8); மெய் ஆகிய ஒரே பொருளுக்கு மூன்று உவமை கூறியதால் இது பலபொருளுவமை அணி.

4. கரட நெடும்கிரி - மதம் பொழிவதும் உயர்ந்த மலையை நிகர்த்ததுமாகிய யானையை; உரிசெய்து -உரித்து; இலங்கிய மேல ஏடு- விளங்கிய மேல் தோலை ; யானை உரி போர்த்த வரலாறு வெளிப்படை ; விதி - பிரமன் ; அரி-திருமால், இங்கு நரசிம்ம அவதாரத்தைக் குறித்து நின்றது; வெம்பணி - ஆதிசேடன்; புனிதன் - இந்திரன்; கணைவேள் - மலரம்புகளை உடைய மன்மதன்; வில்லையில் இவர்கள் பூசித்ததைக் தலபுராணம் இதே வரிசையில்,

"பங்கயன் நார சிங்கப் பண்ணவன் பகுவாய்ச் சேடன்
செங்கைவச் சிரத்தன் மாரன் செறிந்துபூ சித்த செல்வர்" (வில்லைப்புராணம் 3)

எடுத்துக் கூறுகிறது; இவ்வரலாறுகளின் விரிவைத் தலபுராணத்துட் காண்க ; கவிர் இதழ் - முள்முருக்கம்மலர் போன்ற உதடுகளை உடையவளும்; இன் கொடி - இனிமை தரும் மலர்க்கொடியை நிகர்த்தவளுமாகிய ; குயில் உமை - இத்தலத்தின் இறைவிபெயர் குயிலம்மை.

"மேகத்திற் குழலும் வெற்பிற் கொங்கையும் விரிநீர்க் கண்ணும்
மோகத்தின் வடிவம் அண்டச் சிற்றிலும் முடியப் பெற்றாள்
மாகத்து நிவந்த வில்வ வனத்தர்கா மீசர் வாம
பாகத்துள் அமர்ந்துள்ள அந்தக் குயிலம்மை பாதம் போற்றி" (வில்லைப் புராணம் 4);

காமீசர் - காமனால் வழிபடப்பெற்றவர்; யோகத்தில் ஆழ்ந்திருந்த சிவபிரான்மேல் பூவாளிகள் விட்டும், உரியர் அல்லதாரிடையே விருப்பத்தை உண்டாக்கிப் பல செயல்கள் நேரும்படி மலர்க்கணைகளை ஏவியும் தீவினை புரிந்தமைக்காக மாரன் மிக வருந்தினான். இவ் வருத்தம் நீங்க இந்திரனின் அறிவுரைப்படி வில்லியனூர் சென்று வழிபட்டு அருள்பெற்றான் என்பது தலபுராண வரலாறு; புராரி -முப்புரங்களை அழித்தவர்; சங்கரர் - உயிர்களுக்கு நன்மையைச் செய்பவர்.

5. கடலும் புவியும் என எண்ணும்மை கூட்டுக ; தலைவி திருமகளைப் போன்றவள், தாமரையாகிய வீடு இரவில் மூடிக்கொண்டுவிடும், எவ்வாறு வெளியே வந்தாள் என்றவாறு; பொழுது அலது - திறப்பதற்குரிய காலமல்லாத காலத்தில்; சததளம் என் - தாமரை என்கின்ற; கன -பெருமை பொருந்திய

"முளரிப்பூங் கோயிலைவிட் டின்னாகப் பூங்காவில் ஏன்வந்தீர் " (சித்திரமடல் 70);

பாற்கடல் கடைந்தபோது வந்த திருமகள் நீர் தாமோ என்றபடி ; விளம்புக - கூறுவீர்; எளியேன் - எளியவனாகிய எனது இதயம் ஆவி - உள்ளமும் உயிரும், உம்மைத்தொகை ; தொய்யும் - சோர்ந்துவிடும்.

6. அளகம் - கூந்தல் ; நிரம்பிய தமியொடும் - நன்றாகப்பொழுது சென்ற இரவுடனும்; இன்புயலா - நன்மையைத் தருகின்ற மேகமோ; வறிது இடை - சிறுமை பெற்ற இடுப்பு; குங்கும குடம்- செஞ்சாந்து பூசப்பெற்ற கலசங்களைப் போன்ற, வண்ணம் நோக்கி வல்லினமெய் தொக்கது; பஞ்சடி அதிர நடந்திடில் இடை கொங்கை பொறாது என்பது முடிபு; மா மேருவின் கொங்கை என மாறுக. இன் உவமஉருபு; மெலிய - நான் வருந்துமாறு; சொல் அமுதம் - புகழ்ந்து பேசப்படுகின்ற தேவர் அமுது; சரசவாணி - இனிமையாகப் பேசுபவள்.

7. நிதிவடம் - மணிகள் இழைத்த சரங்கள்; முங்கிய - மூழ்கிய என்பது சொற்பொருள், இங்கு நெருங்கிய ; குலுங்கு இளநீரோ; தெளிய - பொருள் விளங்குமாறு; இணைக்கண்களாகிய அம்பு கயலோ என்க ; என் செயல் - எனக்கு வேண்டிய காரியம்; மதன் கொடி - காமனின் வெற்றிப் பதாகை ; உமது ஏவலின்படி; செய்யும் வேலையையும் அதற்கான முறைகளையும், இடத்தையும் ஓதுவீர் என்பது முடிபு;

எந்நே ரமுமேநீர் ஏவினது கேட்டுமது
பின்னே திரிந்து பிழையேனோ (வருணகுலாதித்தன் மடல் 396)

8. நிரைமலரின் தொடை - வரிசையாக வைத்துக் தொடுக்கப்பெற்ற பூமாலை ; அஞ்சனம் - மை ; அகம் - அகம்பாவம், இறுமாப்பு; கேள்வர் - கணவர்; கேள்வரோடு வாழ்வதே மடந்தையர் செல்வமும் முறையும் ஆம் என்றவாறு; செல்வம் முறை - உம்மைத் தொகை.



# 9. மூவரையன் வண்ணம்

தமிழ் இலக்கிய உலகில் ஓரளவு அதிகமாகவும் பரவலாகவும் அறியப்பெற்ற வண்ணம் இது. இதன் ஆசிரியர் மல்லைக் கவிராசர் எனப்படும் மிதிலைப்பட்டிச் சிற்றம்பலக் கவிராயர் ஆவார். இச்செய்தி எந்தச் சுவடியிலும் இல்லாவிட்டாலும் டாக்டர். உ.வே.சா நூல் நிலையம் 1982 இல் வெளியிட்ட மூவரையன் விறலிவிடு தூது என்னும் சிற்றிலக்கியத்தில் அதன் பதிப்பாசியர் முனைவர் நாகசாமி அவர்கள் தமிழ்த்தாத்தா அவர்களின் குறிப்பை எடுத்துக் காட்டுகிறார். (பக். 3) இதில் ஐயப்படுவதற்குக் காரணமே இல்லை.

தஞ்சைச் சரசுவதிமகாலின் 1999 ஆம் எண்ணிட்ட சுவடி, மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் 218ஆம் எண்ணிட்ட சுவடி,பேரூராதீனத்தின் 147 ஆம் எண்ணிட்ட சுவடி, (இச் சுவடியில் பொன்னரியான் பேரில் வண்ணம் என்பது தலைப்பு) உ.வே.சா. நூலகத்தின் 342, 1048 ஆம் எண் சுவடிகள் ஆகியவற்றில் இவ் வண்ணம் உள்ளது. தமிழில் வண்ணப் பாடல்கள் என்னும் நூலில் (1988) ஆசிரியர் சௌந்தரபாண்டியன் அவர்கள் இவ் வண்ணம் இடம்பெற்ற சுவடி அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்துச் சுவடிக் கருவூலத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது என்கிறார். ஆனால் அவர் சுவடி எண்ணைக் குறிப்பிடவில்லை. அவர் இதனை மூவரசன் வண்ணம் எனக் குறிப்பிடுகிறார். ( பக். 159)

ஆ. சுப்பராய முதலியார் குமாரர் எதிராஜ முதலியார் அவர்கள் தமது சென்னை சூளை பிரின்ஸ் ஆப் வேல்ஸ் அச்சுயந்திர சாலையில் விஜய வருடம்(1893) பதிப்பித்த வண்ணத்திரட்டு (பக் 30), பு.அ. கோவிந்தராஜ நாயகர் அவர்கள் பார்வையிட்டுச் சென்னைப் புரசை மாறன் அச்சுக்கூடத்தில் குரோதன ஆண்டு (1926) பதிப்பித்த வண்ணத்திரட்டு (பக்.32) டாக்டர். உ.வே.சா நூல்நிலையம் 1982 இல் வெளியிட்ட மூவரையன் விறலிவிடு தூதின் பிற்சேர்க்கை என மூன்றிடங்களில் இது அச்சாகி உள்ளது. முன்னால் குறிக்கப்பெற்ற தமிழில் வண்ணப் பாடல்கள் என்னும் நூலில் (பக்.159-160) இதைப் பற்றித் தரப்பெற்றுள்ள செய்திகள் சரியானவை அல்ல. இவ்வளவு சுவடிகளும், அச்சுப் பதிப்புகளும் இருப்பதால்தான் இதில் நிறையப் பாடபேதங்கள் தோன்றியுள்ளன. அச்சு நூல்கள் மூன்றிலும் துறை கூறப்படவில்லை. 1982ஆம் ஆண்டுப் பதிப்பில் வண்ணக் குழிப்புக்கூட இல்லை.மூன்றில் மாறன் அச்சுக்கூடப் பதிப்பு நன்றாக உள்ளது.

இந்த வண்ணத்தின் நடை மிகவும் கம்பீரமானது.பாட்டுடைத் தலைவனாகிய மூவரையனைத் திருமாலாகவே காட்டுகிறார். மூவரையன் என்பது ஒரு பட்டப்பெயர் போலும். திருவேங்கடநாத மூவரையன் மைத்துனன் ஆகிய பொன்னரிய மூவரையன் என்பவனே இச் சிற்றிலக்கியத்தின் பாட்டுடைத்தலைவன். இவனுடைய தந்தையின் பெயர் இரங்கணன்; தம்பியின் பெயர் ரங்கன். சாந்தை, வீரசோழன் ஆகிய ஊர்ப்பெயர்களும், களவேள்வி என்னும் நாட்டின் பெயரும் இடம் பெற்றுள்ளன. என்றாலும் தெளிவான வரலாற்றாய்விற்குத் தேவையான செய்திகள் மிகக் குறைவே.

பெண்கலையைத் தலைவன் வேண்டல் என்பதைவிடக் கலவியை விளக்கல் என்றே புதுத்துறையாகக் கூறலாமோ எனத் தோன்றுகிறது. களவியலின் இயற்கைப் புணர்ச்சியில் தலைவனின் இத்தகைய பேச்சு மிக விரசமானதுதான். பதினேழாம் நூற்றாண்டில் குறுநிலத் தலைவர்களின் இலக்கிய ரசனை புலவர்களை இவ்வாறு பாட வைத்தது போலும்.

# 9. மூவரையன் வண்ணம்

## மதிலைப்பட்டிச் சிற்றம்பலக் கவிராயர்

### தலைவன் வேண்டல்

தனதன தத்த தான தானன தனத்த தந்த
தனதன தத்த தான தானன தனத்த தந்த
தனன தந்த தந்ததான தனன தந்த தந்ததான
தனன தந்த தந்ததான தனன தந்த தனதனா
(தொ) தனதாந்த தனதான தாத்தனா.

வெளிவரு[1] பச்சை மாலை வாடின தொடைக்கி சைந்த
புதுவையில் வைத்த கோதை நாயகி கருத்து கந்து
விழியு கந்து தந்ததாரில் அகம்உ கந்து[2] இன்சொல்வாணி[3]
தமிழ்உ கந்து, பண்டசோதை முலைஉ கந்த தயவினான்;
எவரைந டத்தி னாலும் ஆதர வுபெற்றி ணங்கி
அவரவர் மட்டி லேத ராதரம் நடத்து நண்பன்
இடையில் வந்த டைந்துளோரும் முதல்இ னங்க லந்துளோரும்
இரும ருங்கி ருந்துவாழ நடுவி ருந்த வளமையான்;[4]
வெறுமைப டைத்த வீடு பாலொடு புசிக்கில் அந்த
மகிமைந மக்கு வீறு வீறென வளர்த்த கொண்டல்;
வெடுவெ டென்ற வன்சொல்ஓசை[5] கனவினும்பி றந்திடாது
வெகுர சம்பி றந்தவாயில் நகைபு ரிந்த லலிதவான்;
இகல்வேந்தர் தொகுசேனை மூர்க்கவான் 1

விரிகடல் வட்டம் ஏழு தீவும்அ திரத்து ரங்க
வடகன வட்டம் ஏறி, வாளர சரைத்த டிந்து,[6]
வினைஅ ரண்பி டுங்கி, நாகம் முடிஅ லைந்து லைந்துபோக
வலம்இ டந்தி ரும்பிஆடும் பவுரி கொண்ட லகரியான்;[7]
மலையும்எ திர்த்த வேளை ஓர்மச கம் ஒக்கும் என்று
மனதுப லத்து வீர சாதனை செலுத்து சிங்கம்;
வடக லிங்கர் வங்கர்சீனர் குகுதர் கொங்கர் கங்கர்சேரர்[8]
வகைவி ளங்க வந்தராசர் தொகைவி ளங்கு கொலுவினான்;

1.ஒளிவரு எனவே சில சுவடிகளிலும் அச்சுப் புத்தகங்களிலும் உள்ளது, இரு சுவடிகளில் மட்டுமே வெளிவரு என்று உள்ளது. இதுவே மோனைக்குப் பொருந்துகிறது. 2. தந்து தேறலருளுகந்த 3. பஞ்சபாணி 4. நிலமையான் 5. வெடுவெடென்று 6. துறந்து, பிடுங்கி 7. கொண்டல் கிரியினான் 8. அஞ்சவோலை.

விசயம கட்கு மூர லாய்[1]மலர் கள்மட்ட லர்ந்த
தளவுதொ டுத்த மாலை தோளில்இ டும்உக்ர துங்கன்;
விசிறு தென்றல் மன்றல்வீச, கவரிநின்ற லம்ப, நூறு
பரிசை சென்று தண்ட, ராச பவனி[2] வந்த சிவிகையான்;
இசைதாங்கு கவிமாலை சூட்டினோன். (2)

எளியவ ரைப்ர தாப ராசர்ள னநட்ட தன்றி[3],
வலியவ ரைப்பி சாச ராய்[4]உழ லவிட்ட வென்றி
எழுசி லம்பி னுங்குலாவு[5] விருது[6], தண்டை யொன்றுபாத
சிறுச தங்கை ஒன்று[7] தாயர் அணியும் உந்தி[8] அணியும்மால்;
மதுரம்மி குத்த பாகு சாரம தனிற்சி[9] றந்த
பொருள்அறி நற்ப்ர தாப நூல்நவில்[10] தமிழ்ப்ர சங்கி;
மனிதர் என்றி ருந்தலோபர்.குடிதி றம்பு வஞ்சர்காண
உலகம் எங்க ணும்தியாக பிரப லஞ்செய் புகழினான்;
எழுதரி யிட்ட நாள்வெள் ஏடேழு துசட்டம் மிஞ்சி
நவரச மிட்ட ஓலை மேல்வரி யில்இட்ட நண்பன்;
இனிய நன்கு ணன்; சுபாவ பரிச ணங்கள் இன்பமேரு;
வினைந லங்க னந்தராசு நிறையில் நின்ற பெருமையான்
மகிழ்சாந்தை மணவாளன் ஆட்கொள்வோன் (3)

இரசித சித்ர கூட மாளிகை முகப்ப டர்ந்த
பகலவன் ஒற்றை ஆழி தோரணம் நிரைத்த[11] கம்ப-
மிடைத வழ்ந்து பஞ்சபாணி குடைஇ தென்றி யம்பவானில்
இரவு வந்த திங்கள் போல விடியல் வந்து[12] நிலவுகால்,
வரி அளி தொட்டி லாடு தாமரை முகப்பில்[13] வந்து
சுரிமுகம் நெற்றி மீது நாளும்அ டிபட்டு நொந்து
வயவு கொண்ட பண்டிஓசை[14] குமுகு மொன்று தொண்டைஊது,
வளைகி[15] டந்த லம்பிஏரி மடைதி றந்த நெடியகால்
இருகரை முத்து வீசும் வீரைந கரைப்பு ரந்த
திருமலை முத்து வீர மூவரை யன்மைத்து னன்!பொன்
இமய முங்கு லுங்க மீறு[16] புயன்இ ரங்க ணன்கு[16] மாரன்
இணையில்[18] ரங்கன் அங்கண்[19] ஆன தமையன் எங்கள் பொனரியான்[20]
வளம்ஓங்கு களவேள்வி நாட்டிலே (4)

1.மாலினா 2. கண்டராசர் பணிய 3.ராசரை நடத்துமன்றி 4.ப்ரசாதராய் 5. எழில் சிலம்பு நின்றுலாவு 6.இறுகு 7. அன்றி 8. அங்க்ரி 9. பாகசாரமறியச் 10. நூல் பல 11. நிறுத்து, மறுத்த 12. விடிய வந்த 13. நெருக்கி 14. யூடு 15. வளர் 16. வீறு 17. புயமணிந்திடுங் 18. இளைய 19. ணெங்கண் 20. புணரியான்.

ஒளிவிடு முத்த டீபெ ணேஉன துபற்சி வந்த
பவளமும் ஒத்தி ராத டீஉன்இ தழுக்கு; வஞ்சம்
உடைய மிஞ்சு நஞ்ச டீகண்; இனிய மென்க ரும்ப டீசொல்;
அழகு தந்த மந்த காசம் உயிரை உண்ட எமனடீ[1]
சிறுபிறை ஒப்ப டீசெ வாள்நுதல்; மணத்த கந்த
பொடிஇடு செப்ப டீபொன் ஆபர ணம்இட்ட கொங்கை ;
செறிசெ றிந்த விந்தை யான செருகு[2] கொண்டை மஞ்ச டீ இன்[3]
இசைமு ழங்கும் எண்புள் ஓசை குமுறுசங்கம் மிடறடீ;
உதரத லத்தின் மீது[4] ரோமவ ரைசிற்றெ றும்பு
சரியும்ஒ ழுக்க டீ[5]; உள் ஈரம யம்அற்ற வம்பி!
உனது நெஞ்சி ரும்ப டீ; மின் இடைது வண்ட கொம்ப டீ மெல்
அடிகள் பஞ்சு பஞ்ச டீ என் மனது பந்த மெழுகடீ;
சுகிவேண்டில் எனைவார மாக்கடீ (5)

உடையைநெ கிழ்க்க வோ? கணாடிநி ழல்ஒத்தி லங்கும்
அரவப டத்தை மூட வோ? துடி துடிக்கு தென்கை ;
உபய மென்கு றங்கில் மாரன் அபிந யந்தொ டங்கவோ? மெல்
விரல்அ ரும்பு கொண்டு நாபி மலர்வ ளைந்து குடையவோ?
செவிமட லுக்கு ளேஎன் நாவின்நு னி[6]இட்ட ளைந்து
புளகம்எ ழுப்ப வோ?ப லால்இரு கதுப்பை மென்று
திரள்ப ழங்க கனிந்த கோவை இதழ்வி ளிம்பை உண்க வோ? சொல்;
அணிஇ லங்க னங்க ராச கலைந கங்கொ டெழுதவோ?
உடலைஇ றுக்க வோ?செ வேதலை கொளக்கொ டுங்கை[7]
ஒருகுகொ டுக்க வோ?க ணே! உன்மு கம்முத்த ரும்பி
ஒழுகு தென்று கொஞ்ச வோ? உ னுடன்ம கிழ்ந்து கெஞ்ச வோ? சொல்;[8]
புளகி தஞ்செ றிந்து[9] மேவ கரிக ரங்செய்[10] தணையவோ?
துடை[11] யேந்தி மடிமீதில் ஏற்றவோ? (6)

நளினமு கத்தின் மோக சேவையும் அதற்கி சைந்த
குழையும்அ ழைக்கு மே![12] பொன்[13] மேனிப தறித்தி யங்கி
நழுவு[14] தொங்கல் விண்ட பூவை அளக பந்தி சிந்து மே! வெள்[15]
வளைநெ ரிந்து[16] முன்கை நீல வளைஉ டைந்து சிதறுமே!

1. நமனடீ 2. சொருகு 3.உன் 4.மீறு 5. சரிரமெழுக்கடீ 6. முனை 7.மலைகளொத்த கொங்கை 8. செய் 9. கரணமென்று செங்கை 10. நா.... பதஞ்செய் 11. கொடை 12.அளிக்குமே 13. உன் 14. நடுவு 15. பொன் 16. நெருங்கி

முழுமணி ரத்ன மாலை சீன மணியுட்க லந்து
சுவடும்[1] றைக்கு மே!ம லாடுச மயத்தில்[2] அங்கு
முலைமு கங்கு லுங்கு மே! செம் மதிமு கந்து லங்கு மே![3] பொன்[4]
அழகு[4] தந்த[5] குந்த னோலை குழைஇ றங்கி உருளுமே!
நடுமணி பத்தி பாயும்! ஆடும்ஒ ருசுட்டி தொங்கல்!
அகலிய கொப்பும் ஆடு மே! இசை மறைக்கி[6] ணங்கி
நடனம் மிஞ்சு கொஞ்சு[7] காலில் இருசி லம்ப லம்பு மே![8] நம்[9]
இருவர்[10] இன்பம் இன்று காண விழிஅ னந்தம் அமையுமே!
மிகமூண்ட மனதாசை மூட்டுமே" (7)

நயனம்இ ழுத்து[12] மூடி நாசியில் உயிர்ப்பி ணங்கி
விரலைம டித்து வாயில் ஊதிஉ றும்இச்சி ணுங்கில்
நயமு டன்பி ணங்கி[13] லீலை புரியும் அந்த ரங்க மோடி
நினைய நெஞ்சு நொந்து[14] வாட இழைம ருங்குல் குழையுமே![15]
பலபட[16] உச்சி மீதி லேசட சடச்ச டென்று
விழுபதி னெட்டு மேள தாடனம் அனைத்தும் மிஞ்ச,[17]
திரள்ப னங்கு ரும்பை யான[18] கனத னம்பி துங்கி மார்பில்
நெரிய,[19] நெஞ்சு நைந்து சோர,[20] உதையில் மிஞ்சி கழலவே[21]
இருதலை ஒத்த காம மாசலம் மடைத்தி றந்து
நெடுகவி ரித்த பாயில் ஏரிஅ ணையிற்ப ரந்து
நறும ணங்க லந்த போதில் உயிர்இ ரண்டும் ஒன்ற தாக[22]
பரம இன்பம் வந்து மூடும்[23] கலவி இன்பம் இனிதுகாண்
விதிதோன்றில் அநுபோகம் வாய்க்குமே (8)

## தொங்கற்றாழிசை

இகல்வேந்தர் தொகுசேனை மூர்க்கவான்
இசைதாங்கு கவிமாலை சூட்டினோன்
மகிழ்சாந்தை மணவாளன் ஆட்கொள்வோன்
வளம்ஓங்கு களவேள்வி நாட்டிலே
சுகிவேண்டில் எனைவார மாக்கடீ;
துடை ஏந்தி மடிமீதில் ஏற்றவோ?
மிகமூண்ட மனதாசை மூட்டுமே!
விதிதோன்றில் அநுபோகம் வாய்க்குமே!

1. சுவரை 2. குழையத்தில் 3. குலுங்குமே 4. மெய் 5. அளவு 6. கந்த 7. அதுமறை, சதுமறை 8. குஞ்சிமிஞ்சு 9. கொஞ்சுமே 10. நல் 11. உபரி 12. மூட்டுதே 13. அடைத்து 14. சிணுங்க 15. நொந்து நொந்து, நொந்து கொண்டு 16. குழையவே 17. படபடென (இப் பாடம் சந்தப்பிழை) 18. மலிந்து பொங்க (இப் பாடமும் சந்தப்பிழை. எனினும் இவற்றையே அச்சு நூல்கள் கொண்டுள்ளன) 19. திகழ் பழங்குழம்பி யாடு 20. உதைய 21. துஞ்சுபோது நகரவே 22. அமளியெங்குமண்ட.... 23. கொண்டுவாடி.

# 9. மூவரையன் வண்ணம்

இவ் வண்ணத்தில் இறைவணக்கம் இடம்பெற வில்லை. பாட்டுடைத் தலைவனாகிய மூவரையனையே திருமாலாகக் கூறித் தொடங்கி விடுகிறார். வெளிவரு, நம் எதிரிலே காட்சிப் பொருளாக வருகின்ற; பச்சை - திருமால் போன்றவன், காண்க பொன்கட் பச்சை, சிவந்த உடம்பினை உடைய காமனே, பச்சை என்பது பிரத்தியும்நன் என்னும் வடமொழித் திரிபு (பரிபாடல் 3, 82 பரிமேலழகர் உரை) ; வைணவம் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும்அந்தக்கரணங்கள் நான்கிற்கும் உபாசனா தெயவங்களாக முறையே பிரத்யும்நன், அநிருத்தன், சங்கருடணன், வாசுதேவன் என்னும் நால்வரைக் கூறி இவர்களைத் திருமாலின் வியூகங்கள் என்று வழங்கும்;

"உரைதரு சிறப்பு வாய்ந்த மனம்முத லாக ஓங்கு
கரணம்நான் கினுக்குஉ பாசு னேசர்நற் காம தேவன்
அருமணி புரைவண் ணத்த அநிருத்தன் அனந்தன் செய்ய
மரைமலர்ச் செங்கண் வாசு தேவன்ஆம் மரபின் மன்னோ"

(செவ்வைக்குடுவார் பாகவதம் 634)

மாலை - திருமாலுடைய, இரண்டன் உருபு ஆறன்பொருளில் வந்தது. "எச்சனைத் தலையைக் கொண்டு செண்டடித் திடபம் ஏறி" (திருவிசைப்பா 4 - 9) என்புழிப்போல; வாடின - தான் அணிந்து கொண்டதால் வதங்கிய, தேவர்களுக்கு அணிந்த மாலை வாடா எனினும் ஆண்டாள் மனிதநிலையில் நின்று விரும்புகிறாளாதலின் வாடின தொடை என்கிறார்; இது "தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன சூடும்இத் தொண்டர்களோம்" என்னும் பெரியாழ்வார் வாக்கை (நாலாயிரம் திருப்பல்லாண்டு 9) நினைந்து கூறியது; புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூர்; வைத்த - வசித்த; கோதை நாயகி - ஆண்டாள்; "பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவையர்கோன் பட்டன் கோதை" (நாச்சியார் திருமொழி 3 - 10); கருத்து உகந்து - உள்ளத்தால் விரும்பி; விழி உகந்து - அழகைக் கண்டு எம்பெருமானுக்கு ஏற்றது என மகிழ்ந்து; தந்த தாரில் - சூடிக் கொடுத்த மாலையில்; இறைவனின் வாடின மாலையைப் பெறவிரும்பி ஆண்டாள் அவருக்கு உயர்ந்த மாலைகளை அளித்தார் என்பது கருத்து, அதனைத் திருமால் அகம் உகந்து ஏற்ற வரலாறு வெளிப்படை ; இன்சொல் வாணிதமிழ் - இனிமைமிக்க சொற்களாலாகிய மொழியாகிய தமிழ்; பண்டு - (கண்ணனாகத் தோன்றிய) முற்காலத்தில்; அசோதை - யசோதை, நந்தகோபன் மனைவி, கண்ணனின் வளர்ப்புத்தாய்; தயாவினான் - கருணை உடையவன்; உலகில் தீயசக்திகளை ஒழித்துப் பூபாரம் தீர்க்கப் பிறந்தான் கோபாலன் ஆதலின் தயாவினான் என்றார். இவ் வண்ணத்தின் தலைவனை வண்ண ஆசிரியர் கண்ணனாகவே காண்கிறார்; பெற்று இணங்கி; அவரவர் மட்டிலே - அவரவர்களுக்குத் தகுந்தபடி; வந்து அடைந்துளோர்; முதல் இனம் கலந்துளோர் - தொடக்கத்திலிருந்தே தன்னோடு சேர்ந்திருப்பவர்கள்; இரு மருங்கு - இருபுறமும்; நடு இருந்த - நடுவுநிலை வகிக்கின்ற ; வெறுமை படைத்த வீடு - வறுமையால் ஒன்றுமில்லாமலிருந்த இல்லங்கள்; பாலொடு புசிக்கில் - உயர்ந்த பசும்பாலோடு உண்ணுமளவு வசதிகள் நிரம்பினால்; வீடு

ஆகுபெயராக வீட்டிலுள்ளாரை உணர்த்துகிறது; அந்த மகிமை நமக்கு வீறும் வீறு என - அந்தப் பெருமையே அரசனாகிய தனக்கு மிக்க புகழ் அளிப்பதாகும் என்று; வளர்த்த கொண்டல் - இரட்டுறமொழிதலாக வறியவர்களைச் செல்வர்களாக உயர்த்திய மேகம் எனவும் அப்புகழை வளர்த்துக் கொள்ளும் முகில் எனவும் கொள்க ; ரசம் - இனிய சொற்கள்; லலிதவான் - மென்மையானவன்; அன்பர்கட்கு இனியவன் ஆனால் பகைவர்க்கு மூர்க்கன் என்றபடி.

2. துரங்கம் - மனம் ; கனவட்டம் - குதிரை ; வட - கடிவாளம் இட்ட; மனோ வேகத்தில் செல்லும் வாய்வடம் இட்டபரி; வாள் அரசர். படைக்கலம் ஏந்திய பகைமன்னர் ; வினை அரண் - போருக்குரிய மதில்; நாகம் - உலகைத் தாங்கும் பாம்பு, ஆதிசேடன்; அலைந்து உலைந்து; பவுரிகொள்ளல் - கழன்று ஆடுதல், "தொந்தமி டும்பல் கவந்தம்நி வந்தொரு சுழியற் பவுரிகொள" (மீனாட்சியம்மை பிள்ளைத். தால்.7); லகரியான் - வீரவெறி மிக்கவன். முன் மூர்க்கவான் என்றதைப் போல ; மசகம் - கொசு; எதிர்க்கும் மலையையும் கொசுவாகக் கருதும் மனோதிடம் வாய்ந்தவன்; வகை விளங்க - தாங்கள் இன்னார் என்பது தெரியும்படி அடையாளச் சின்னங்களுடன்; விசயமகட்கு மூரலாய் - வெற்றித் திருவினுடைய புன்னகையைப் போன்று, நான்கன் உருபு ஆறன்பொருளில் வந்தது "உருவவெஞ் சிலையினாற்குத் தம்பிஇஃது உரைக்கும்" (சிந்தாமணி 1889) என்புழிப்போல, ஆதல் உவமப் பொருட்டு, "தூண்டா விளக்கொளியாய் நின்றாய்" (திருவரங்கக் கலம்பகம் 17) என்புழிப்போல. மட்டலர்ந்த தளவு மலர்கள் தொடுத்த மாலை என இயையும், மட்டு அலர்ந்த - தேன் நிறைந்து மலர்ந்த ; தளவு - முல்லை; உக்ரதுங்கன் துங்கஉக்ரன் என மாறுக, மிகுந்த வேகத்தை உடையவன்; விசிறு - வீசுகின்ற; மன்றல் - நறுமணம் ; கவரி - சாமரை; நின்று அலம்ப; நூறு - பல என்ற அளவில் ஆட்சி; பரிசை - காணிக்கைகளை; தண்ட - சேகரிக்க; ராசபவனி - அரசஉலா; கவிமாலைச் சூட்டினோன் எனற்பாலது வண்ணம் நோக்கி வல்லினமெய் கெட்டது, சூட்டினை உடையவன் அதாவது சூட்டப்பெற்றவன் என்றபடி.

3. ப்ரதாப ராசர் - பெருமைமிக்க தலைவர்; நட்டது அன்றி - நிலைநிறுத்திய தோடல்லாமல்; பிசாசராய் - பேய் பிடித்தவர்போல; எழு சிலம்பு - ஏழு மலைகள், அவையாவன: கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, விருது - புகழ்; நட்டதன்றி விட்ட வென்றி (யால்) குலாவு விருது என்க; இப் புகழால் கண்ணனுக்கு இணையானவன் என அடுத்துக் கூறுகிறார்; உந்தி - கால்விரலில் அணியும் மோதிரம்; தாயர் அணியும் தண்டை சதங்கை உந்தி அணியும் மால் என்க; முதல் அணியும் பிறவினைப் பொருளில் வந்தது; தாயர் - கோசலை முதலியோர்; மால் - இராமன், இராமனை நிகர்த்தவன் என்றவாறு; மதுரம் - இனிமை; பாகுசாரம் அதனில் - வெல்லப்பாகின் பக்குவத்தில்; மனிதர் என்று இருந்த லோபர் - (மனிதத்தன்மை சற்றும் இல்லாமல்) தம்மை மானிடர் என்று சொல்லிக் கொண்டு திரிபவர்களும்; குடி திம்பு வஞ்சர் - தான் தோன்றிய குலத்தின் பண்பிற்கு மாறுபட்டு நடக்கும் பொய்யர்களும்; பிரபலத்தியாகம் செய என மாறுக ; தியாகப் பிரபலம் எனற்பாலது வண்ணம் நோக்கி வல்லினமெய் கெட்டது; எழுது அரியிட்ட நாள் - அரிச்சுவடி கற்கத் தொடங்கும் அந்தத் தினத்திலேயே, இன்று அரிச்சுவடி என்பதை முன்னர் அரிவரி என

வழங்கினர்; வெள் ஏடு - பதப்படுத்தப் பெற்று நூல்கள் எழுதுவதற்குத் தயாராகச் செப்பம்செய்து வைக்கப்பெற்ற பனையோலைக் கட்டு, வெண்புத்தகம், வெள்ளோலை எனப்படும். "அரியணை மீது வெண்புத் தகத்தினை அமைத்து மேலால் வரியிவர் புத்த கத்தை வைத்து" (தணிகைப்புராணம் 9 - 164) "வெற்றிவேல் மன்னவரும் வெள்ளோலை கொண்டெழுதும் பற்றினரை எள்ளார் பரிந்து" (மனுநெறித் திருநூல் - பொருள் - எழுத்து 7) சட்டம் மிஞ்சி - வழக்கத்திற்கு மாறாக ; இட்ட நவரசம் - என மாறுக, விரும்பப்படுகின்ற ஒன்பான் சுவைகளை உடைய இலக்கியங்களை, நவரசம் - ஆகுபெயர்; வரியில் இட்ட - எழுதிய, முன்காட்டிய தணிகைப் புராண மேற்கோளில் வரியிவர் புத்தகம் என்றது இது; மிகச் சிறு வயதிலேயே உயர்ந்த நூல்களைப் படித்தவன் என்பது கருத்து; சுபாவ - இயல்பாகவே, செயற்கையாக அல்லாமல்; பரிசனங்கள் - தன்னைச் சூழ்ந்தவர்களுக்கு; இன்ப மேரு - மகிழ்ச்சியைத் தருவதில் நிலையானவன்; வினைநலம் - செயல்திறமை; கனம் - மாண்பு; தராசு நிறையில் - துலாக்கோல் போன்ற ஒரு நிலைமையில் ; வினைநலம், கனம் இரண்டோடும் இல் உருபினைக் கூட்டுக; நின்ற - நிலைத்த; மகிழ் சாந்தை மணவாளன் - சாந்தை என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள (அழகிய) மணவாளர் எனப்பெறும் திருமால், "ஆழி தணவாத சாந்தைச் சதுரகிரிச் செங்கண் மணவாளர் தாளில் அன்பு வைத்தோன்" (மூவரையன்விறலி. 42 - 43) என்றும், "இனிய வளங்கொண்ட கண்ட நாட்டில் ஒரு சாந்தை நன்னகரில்" (மேற்படி. 55) என்றும் இந்த ஊர் கூறப்பெறுகிறது; ஆட்கொள்வோன் மணவாளனால் ஆட்கொள்ளப் பெற்றவன்.

4. இரசித - வெள்ளியாலமைந்த, வெண்மையான; பகலவன் ஒற்றை ஆழி - சூரியனுடைய ஒற்றைச் சக்கரத்தையுடைய தேர், "வானில் செல் ஆழி ஒன்றே கொளும் ஏழ்பரித் தேர்உள்ளானே" (ஞாயிறு ஆயிரம் 110) நிரைத்த தோரண கம்பமிடை என மாறுக; நிரைத்த - வரிசையாக நிறுத்தப்பெற்ற; கம்பமிடை என்புழிப் பன்மைவிகுதியும் சாரியையும் கெட்டன ; பஞ்சபாணி குடை - ஐந்து மலர்க்கணைகளை உடைய காமனின் குடையாகிய முழுமதி; சூரியன் மாடங்களின் வெள்ளியில் பட்டுச்சந்திரன்போல் ஒளி வீசுகிறான் என்றவாறு; இது பஞ்சபாணி குடை என்று இயம்ப நிலவுகால் வீரை நகர் என முடிக்க; வரிஅளி - தன்மேல் கோடுகளைப் பெற்ற வண்டுகள், "தேன்வாய வரிவண்டே" (நாலாயிரம் பெரியதிருமொழி 3 - 6- 4); சுரிமுகம் - நத்தை; தாமரைப்பூ ஆடுவதால் நத்தைக்கு அடிபடுகிறது; வயவுகொண்ட பண்டி - கருப்பமுற்ற வயிறு; தொண்டை ஊது வீரைநகர் என முடிக்க; வளை - சங்கு; அலம்பி - தளும்பி; கால் - வாய்க்கால்; வீரை - சேது சமத்தானத்தைச் சேர்ந்த வீரசோழன் என்னும் ஊர், இது மதுரைக்குக் கிழக்கே உள்ளது. இவ்வூர் மூவரையன் விறலிவிடுதூதில், "அடுத்த சுகப்பளிக்கு மாடம் துணைத்தணைத்த கிள்ளைக்கு உகப்புஅளிக்கும் தென்வீரை" "பொறபமைந்த தென்வீரை", "புகழே படர்ந்தேறும் வீரைப்பதி", "நெடுஞ்சிகர வீரை" (27 - 28, 52 - 53, 423, 449) எனப் பாராட்டப் பெறுகிறது. திருமலை முத்துவீர மூவரையன் - மதுரைத் திருமலை நாயகருக்குக் கீழ் வீரசோழன் என்னும் ஊரில் இருந்த தலைவன், இவன் இயற்பெயர் திருவேங்கடநாதன் என்பதும் வினைதீர்த்தானின் மைந்தன் என்பதுவும், "தென்வீரை மேவும் திருவேங் கடநாதன் முன்வீரை போற்றவரும்

மூவரையன்'' ''ஞாலம் விளைக்கின்ற கீர்த்தி வினைதீர்த்தான் அன்பு வளர்க்கின்ற செல்வ மதலை'' (மூவரையன் விறலிவிடுதூது 53, 52) என்பனவற்றால் அறியலாகும். இங்கு மேற்கோளாகக் காட்டப்பெறும் விறலிவிடுதூது இந்தத் திருவேங்கட நாதன்மீது இதே மிதிலைப்பட்டிச் சிற்றம்பலக் கவிராயர் பாடியதாகும்; இவ்வண்ணத்தின் தலைவன் திருவேங்கடநாத மூவரையனின் மைத்துனன் ஆன பொன்னரியான் மூவரையான் ஆவான்; இரங்கண்ணன் - பொன்னரியான் மூவரையனின் தந்தை ; ரங்கன் - பொன்னரியானின் தம்பி; அம் கண் ஆன - அழகிய கண்ணைப் போன்ற ; பொன்னரியான் எனற்பாலது வண்ணம் நோக்கிப் பொனரியான் என நின்றது; இலட்சுமிநாராயணன் என்பதன் தூயதமிழ் வடிவே இப் பெயர்; பேரூர்ச் சாந்தலிங்க அடிகளார் திருமடத்துச்சுவடியில் இந்த வண்ணத்தின் தலைப்பே ''பொனரியான் வண்ணம்'' என்றுதான் எழுதப்பட்டுள்ளது; களவேள்வி நாடு - பாண்டி நாட்டுச் சிறுநாடுகளுள் ஒன்று, வீரை, நாமுனூர், சாந்தை முதலிய ஏழு ஊர்களை உடையது, பாண்டியனொருவன் முற்காலத்தில் ஒரு சோழனைக் கொன்று களவேள்வி செய்ததால் பெயர் பெற்ற நாடு, இது காட்டு நாடு எனவும் கூறப்பெற்றது. ''பரிந்தது காணா முன்ஓர் பாண்டியன் சோழற் காய்ந்து பெருங்கள வேள்வி செய்த பீடுடைக் காட்டு நாட்டுள் உரங்கொள்ஏழ் ஊர்கள் தம்மில்'' ''எழிலிகால் ஊன்றிப் பெய்யும் இருங்கள வேள்வி நாட்டு மொழிகுவர் அவன்ஊர் நாம்முன் எனலின்நா முன்னூர் என்றே'' (திருவாலவாயுடையார் திருவிளையாடல். 44: 54, 57) எனவும் மூவரையன் விறலியில் 423, 504 ஆம் கண்ணிகளில் பெயர் மாத்திரமும் குறிக்கப்பெற்றுள்ளது.

5. அடி பெணே உனது பல் முத்து; மந்தகாசம் - புன்னகை; செவ் வாள் நுதல் - செம்மையான ஒளிமிக்க நெற்றி; கந்தபொடி - வாசனைத் தூள், வண்ணம் நோக்கி மெய் கெட்டது; செருகு கொண்டை - அள்ளிச் சொருகப்பெற்ற கூந்தல், மஞ்சு - மேகம்; ஓசை குமுறும் மிடறு சங்கம் என மாறுக; சங்கு போன்ற கழுத்து; உதர தலம் - வயிறாகிய இடம்; ரோம வரை - மயிரொழுங்கு; உள் ஈரமயம் அற்ற - மனதில் அன்பே சற்றும் இல்லாத; வம்பி - அண்மைவிளி இயல்பாயிற்று; நெஞ்சு இரும்பு;

''வல்லிரும்பும் கல்லும் வயரம்ஓவ்வொன் றுக்குஇளகும்;
புல்லிருந்து வீதி புறப்படினும் - வல்லமையால்
எப்படிச்சொன் னாலும் இளகாது உமதுமனம்'' (வருணகுலாதித்தன் மடல் 325 - 326)

பஞ்சுபஞ்சு - அடுக்குச்சொல் மிக்க மென்மையைச் சுட்ட வந்தது; பந்தமெழுகு - திப்பந்தத்தில் காட்டிய மெழுகு, மெத்த உருகுகிறது என்றபடி ; சுகி வேண்டில் - இன்ப நுகர்ச்சியைப் பெறவிரும்பினால்; வாரம் ஆக்கு - உன் உரிமையாக்கிக் கொள்; ''வாரத்தை யான் கேட்க மாதத்தை ஏன் தந்தீர்'' என்பான் காளமேகம் (சித்திரமடல் 117)

6. மெல்லிய உடைக்குள்ளே இருப்பது கண்ணாடியில் தெரியும் பிம்பம்போலக் காட்சி தருகிறதாம்; என் கை; குறங்கு - துடை; நாபிமலர் - கொப்பூழாகிய பூ, உருவகம்; நுனி இட்டு அளைந்து; பலால் பல்லால்; கதுப்பு - கன்னம் - அணி இலங்கு - அழகு விளங்குகின்ற ; அனங்கராச கலை - காமகலை; நகங்கொடு எழுதவோ - நகக் குறி வைக்கவோ - என் செவே

தலைகொள - நன்றாகத் தலையைச் சாய்த்துப் படுக்க ; கொடுங்கை ஒருகு கொடுக்கவோ - கைகளை மடக்கிச் சாய்மானமாகத் தரவோ; கணே - கண்ணே; முத்து அரும்பி - நித்திலம் போன்ற வேர்வைத் துளிகள் தோன்றி; கரிகரம் - கலவிலீலைகளுள் ஒன்று.

7. நளின - தாமரைமலர் போன்ற; குழை - காதணி; தியங்கி - சோர்ந்து; தொங்கல் விண்ட பூ - சரம் உதிர்த்த மலர்; அளகபந்தி - கூந்தல்; வெள்வளை - சங்கால் ஆகிய வளையல்; சீனமணி - சீனமுத்து என்னும் ஒருவகைச் செயற்கை முத்து; சுவடு மறைக்குமே - ரத்னமாலையும் சீனமணியும் கலந்து தனித்தனியே அடையாளம் காணமுடியாமல் அசையும்; மலாடு - மலாடுகின்ற; குந்தனோலை மணிகள் இழைக்கப்பெற்ற காதணி, குந்தனவோலை என்பதன் தொகுத்தல் விகாரம் ; குழை - செவி; நடுமணி, பதக்கத்தின் நடுவிலே உள்ள இரத்தினம்; பத்திபாயும் - கதிர் பரப்பும்; தொங்கல் சுட்டி என மாறுக, தொங்குகின்ற நெற்றிச்சுட்டி; அகலிய - அடங்காத (கலைந்து அலைகின்ற); கொப்பு - கொண்டை; இசைமறை - காந்தர்வ வேதம் எனப்படும் இசைக்கலை; மிக மூண் மனது - மிக்க காமத்தீ பற்றிய உள்ளம்; ஆசை மூட்டுமே - மேலும் அதிகமாக விருப்பத்தை உண்டாக்கும்.

8. நயனம் - கண்கள்; மூடி - இன்ப மிகுதியால் விழிகள் சொருகுதல்; உயிர்ப்பு - பெருமூச்சு சிணுங்கில் - கொஞ்சலில்; பிணங்கி - ஊடல்காட்டி; அந்தரங்க மோடி - நமக்கு மட்டுமே தெரியும் வேடிக்கை ; இழை மருங்குல் - நூலைப்போல் மெலிந்த இடை; பதினெட்டு மேளம் - பதினெட்டு வகையான தோற்கருவிகள்,

"பணவம் திண்டிமம் தக்கை இடக்கை
திமிலை கண்டிகை கண்டை குறடு
பணைசிந் தூரம் பாண்டிகம் பீலி
கரடிகை துடிகை கடுவை ஊமை
சகடை கிடுகு பல்வகைப் பறையே" (பிங்கலம் 1529)

தாடனம் - கைகுவித்துத் தலையில் தட்டுதல்; பனங் குரும்பையான - பனங்காய்களைப் போன்ற ; உதையில் - தலைவி காலை வீசுவதால், ஐந்தன்உருபு மூன்றன்பொருளில் வந்தது; மிஞ்சி - கால்விரலில் அணியும் வெள்ளியணி; மா காமசலம் என மாறுக, கரைகளை உடைய - வண்ணம் நோக்கி வல்லினமெய் விரிந்தது; அணை ஏரியில் என மாறுக, கரைகளை உடைய ஏரியைப்போல, இல் - உவமஉருபு; காண் - முன்னிலை அசை ; விதி தோன்றில் - நல்லூழ் இருந்தால்.

எனக்கு நல்விதி இருந்தால் இன்பநுகர்ச்சி கிட்டும். நீ அன்புகாட்ட வேண்டும் என்று தலைவன் வேண்டுகிறான்.



# 10. நெல்லைநாதர் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இவ் வண்ணம் தஞ்சைச் சரசுவதிமகாலில் 619, 702 ஆம் எண்ணிட்ட ஓலைச்சுவடிகளில் உள்ளது. அவர்களால் 1969 இல் வெளியிடப் பெற்ற வண்ணத்திரட்டிலும் இது இடம் பெற்றுள்ளது (பக். 23) சுவடி, பதிப்பு இரண்டிலும் துறைக் குறிப்போ வண்ணக் குழிப்போ கொடுக்கப்படவில்லை.

இவ் வண்ணத்தின் துறையும் தலைவன் வேண்டல்தான். ஆனால் அடுத்து வருகின்ற 7 வண்ணங்களிலும் தலைவன் தான் மடல் ஏறுவதாகக் கூறுகிறான். அகத்திணை மரபில் இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம் ஆகிய இரண்டிற்குப் பிறகுதான் தலைவன் தோழியிடம் மடலைப் பற்றிப் பேசுவான். தலைவன் தலைவியிடம் நேராக இதைக் கூறுவது பொருத்தமில்லைதான். பிற்கால வண்ண ஆசிரியர்கள் இவ்வாறு அகப்பொருள் அமைதியை ஆழமாகச் சிந்திக்கத் தவறிவிட்டனர் என்பதே உண்மை. இவ் வண்ணத்தின் எட்டாம் கலையின் தொங்கலில்தான் மடல் பற்றிய பேச்சு வருகிறது. இது, “அருள்புரிதல் நன்றதாகும் உடனே” என்பது போல இருந்தால் துறை தலைவன் வேண்டலாகவே அமையும்.

இந்த வண்ணத்தின் நடை மிகச் சிறப்பாக உள்ளது. சிறிய சிறிய தொடர்களும், வினாக்களும் நல்ல ஓட்டத்தைத் தருகின்றன. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவராகிய சிவபிரானின் பெருமைகள் கூறப்படுகின்றன. திருநெல்வேலித் தலச்செய்தி ஒன்று இடம்பெற்றுள்ளது. பொதுவாக நான்காம் கலை ஒன்றில்தான் தலத்தின் இயற்கைவளம் புனைந்துரைக்கப்படும். இவ்வாசிரியர் மூன்று, நான்கு ஆகிய இரண்டு கலைகளில் ஊர்ச்சிறப்புக் கூறுகிறார். வேயின் முத்தர், வடிவாம்பிகை என இறைவன், இறைவி திருநாமங்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

பெண்கலையில் கிளவித்தலைவனின் பேச்சு இலக்கிய நயம் மிகுந்ததாகவும் விரசமில்லாமலும் உள்ளது. நல்ல பெருந்தன்மை மிக்கவனாகக் கிளவித்தலைவன் படைக்கப்பட்டுள்ளான்.

# 10. நெல்லைநாதர் வண்ணம்

## தலைவன் வேண்டல்

தனனதான தனதனா தனனதான தனதனா
தானதத்த தானதத்த தானதத்த தானனா
(தொங்கல்) தனனதன தந்ததான தனனா.

ஒளியுமாகி இருளுமாய், அருவுமாகி வெளியுமாய்,
நேமிவெற்பு மாகிவட்ட (வானமுற்று) மாகியே,
பகலுமாகி இரவுமாய், இரவியாகி மதியுமாய்
நாகம்எட்டு மாகிமற்றநாகம்எட்டு மாகியே,
உயிருமாகி உடலுமாய், அறியும்ஞான விழியுமாய்,
வேதவித்து மாகி (யுற்ற ஆதிவத்து) மாகியே,
எவையிலும்நி றைந்துலாவு சிவனார் ; (1)

உரகம்நாணி வரைவிலாய், ஒருமுராரி பகழியாய்,
மாபுரத்தை நீறெழுப்ப வேநகைக்கும் ஈசனார் ;
விடையில்ஏறு பரமனார்; மிடறுநீல நிறம்உளார் ;
கானகத்து வேடன்எச்சி லேபுசித்த வாயினார்;
உழைஉலாவி வருகையார்; மறலிவீழ உதைசெய்வார்;
வீரபத்ர காளிவெட்க வேநடித்த தாளினார்;
அறுகினொடு திங்கள்சூடு சடையார்; (2)

தெளிமையான நதியும்வாரி அலைகள்மீறி உதறவே,
தாமரைத்த டாகம்முட்ட வேகுழப்பி மாதரார்,
மடுவில்மூழ்க, அளியினால் இசைகள்பாடும் அளிஎலாம்
பூஎறிந்த சாதிபுக்கி ராதெழுப்பும்; நீடுதாள்
சிறுநெல்ஆன வயல்எலாம் (கழையின்) வேலி அதிரவான்
மீதுடுக்கள் போலமுத்த மேகொழித்த கோடலே
வயல்மடைவ ரம்பினூடு தளியே (3)

செறியநீரில் முழுகியே, கரையில்ஏறி, அருகிலே
போய், வரப்பி லானநற்ப லாவைஎட்டி வீ(ழவே),
கதலிவாழை முறியவே, கமுகுபாளை சிதறவே,
வால் அடித்து, வாளை எற்றியேகுதிக்கும் வாவிசூழ்
திருநெல்வேலி இறைவனார்; கரியவேழ உரியினார்
பால்கவிழ்க்க வேகழித்த வேயின்முத்தர் ஆயினார்;
வடிவுடைய மங்கைபாகர் மலைமேல் (4)

முளரி மேவும் அரிவையே! மதனலீலை வனிதையே
ராசகர்ப்ப மே!மறுப்ப டாதபத்ம ராகமே!
தொளைபடாத பவளமே! கடைபடாத வயிரமே!
நீலரத்ன மே!விலைப்ப டாதவச்ர மாலையே!
மு(டிவிலா)த ரசனையே மதுரசார வசனையே!
காமனுக்கும் மோகம் முற்றும் மோகனப்ர தாபமே!
பரிமளவ சந்தமாதர் அரசே! (5)

முருகுகோவை அதரமோ! தரளரேகை முறுவலோ!
கீறுபொட்டு நாமமிட்ட வாகுநெற்றி சாபமோ!
(சலதி) வேலை இகலியே கலகவேலை முடுகியே
பூசலிட்டு மாயமிட்ட (பார்வை) அக்க சாலையோ!
முலைகள்ஈடு கலசமோ! கிரணமாரன் மகுடமோ!
கோம (ளத்த தான) சக்ர வாளவட்ட மேருவோ!
துவளும்இடை வஞ்சியோ! (பு கலுவீர்;) (6)

எளியபேரை அறிகிலீர்; விரகதாபம் ஒழியலீர்;
மேனிசுற்றி வேர்வைநிற்க ஆலவட்டம் வீசவோ?
அளகபாரம் வகிரவோ? அலதுபாதம் வருடவோ?
பாதரட்சை யேசுமக்க வோ? அடப்பம் ஈயவோ?
(இரு)கையார வளையிடோ? அடிமைஒலை எழுதவோ?
கோபம்விட்டு வாரபட்ச மாய்அணைத்து வாழுவீர்;
தினையளவும் நெஞ்சில் (ஈரம்) இலையோ? (7)

எதிர்இலாத மமதையோ? மதனராசர் சலுகையோ?
பூதலத்தி லேஒருத்தர் கேள்வியற்ற வாசியோ?
பொழுதுவீழும் அளவுமே மதிஉலாவு பொழுதிலே
யான்ஒருத்த னேதனித்தி ராமுழுக்க வாடவோ?
(இனி) விசாரம் விடுவனே ; இதெனமாயம் அரகரா!
நீர்இருக்க நான்இருக்க நாள் (வியர்த்த) மாகுமோ?
(படம்) எழுதி மன்றில்ஊர்வன் மடலே, (8)

இவ் வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை.

# 10. நெல்லைநாதர் வண்ணம்

## குறிப்புரை

1. ஒளியும் ஆகி இருளும் ஆய் - இறைவன் தன் அடியார்களால் மிக எளிதில் உணரத்தக்கவனாக இருப்பினும் மெய்யன்பு இல்லாதவர்கட்கு மிகவும் அரியவனாக (காணமுடியாத இருளாக) இருக்கிறான். "கரவாடும் வல்நெஞ்சர்க்கு அரியானைக் கரவார்பால் விரவாடும் பெருமானை" (தேவாரம் 4-7-1); அருவும் ஆகி வெளியும் ஆய் - இறைவன் கணங்களுக்குப் புலப்படாத அருவமாக இருப்பதோடு வெளிப்படையாகக் காணப்படுகின்ற உருவமாகவம் உள்ளான், "அருவமும் உருவமும் ஆனாய் போற்றி" (திருவாசகம் 4 - - 193); நேமி வெற்பும் ஆகி - உலகைச் சூழ்ந்துள்ள சக்ரவாள கிரியாகி, இதனால் இறைவன் உலகமாக இருக்கிறான் என்பது கூறப்பட்டது; வானம் - ஆகாயம், வானம் முற்றும் என்றது அண்டங்கள் அனைத்தையும்; இரவி சூரியன்; நாகம் எட்டு - 1 எண் திசை யானைகள், இவை ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்ரதீபம் என்பனவாம்; 2. எண் திசைப் பாம்புகள், இவை அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன் என்பனவாம்; வேத வித்து - வேத முதற்பொருள்; ஆதிவத்து - எல்லாவற்றிற்கும் முதன்மையான பொருள்; எவையிலும் என்புழிச் சாரியை கெட்டது.

2. உரகம் - பாம்பு (வாசுகி); நாணி - வில் நாண்; வரை - மலை (மேரு); ஒரு முராரி - ஒப்பற்ற திருமால், முரன் என்னும் அசுரனின் பகைவன் என்பது சொற்பொருள்; பகழி - அம்பு; மா புரத்தை - வலிமைமிக்க திரிபுரங்களை ; நீறு எழுப்பவே - சாம்பராக்க; முப்புரமெரித்த வரலாறு வெளிப்படை ; விடை - எருது; மிடறு - கழுத்து; கானகத்து வேடன் எச்சில் புசித்தது கண்ணப்ப நாயனார் வரலாறு; உழை - மான், மறலி - இயமன், உதைத்தது மார்க்கண்டேயருக்காக ; காளி வெட்கியது நாட்டியப் போட்டியில் தோற்ற போது; அறுகு - அறுகம்புல்.

3. வாரி அலைகள் - கடல் அலைகள், மகளிர் குளத்தில் குதித்து விளையாடுவதால் ஏற்படும் அலைகள் கடல் அலைகளைப் போல உள்ளதாம்; முட்டவே - முழுவதையும்; அளியினால் - நிறையத் தேன் கிடைப்பதால்; அளி எலாம் - வண்டுக் கூட்டங்கள் யாவும், எழுவாய்; பாடும் - பாடுகின்ற, பெயரெச்சம், பூ எறித்த - மலர்கள் ஒளிர்கின்ற ; சாதி புக்கு- மரங்களைச் சென்றடைந்து; இராது - ஓரிடத்தில் சும்மா இருக்காமல்; எழுப்பும் - எழும்பும் என்பதன் வலித்தல் விகாரம், வண்ணம் நோக்கியது, திரிந்து கொண்டே இருக்கும் என்றபடி; நீடுதாள் - நீண்ட தண்டினை உடைய; சிறு நெல் ஆன - சன்னமான நெற்பயிர்கள் உண்டாகின்ற; கழையின் வேலி - கரும்பாகிய வேலி, விளங்கும் என முற்றுவினை அவாய்நிலையாகக் கூட்டி முடிக்க; அதிர வான் - ஒலிக்கு இடமாகிய ஆகாயம்; உடுக்கள் - விண்மீன்கள்; கோடல் - மரவ மலர்; மடை வரம்பு - கால்வாய்க்கரை; தளியே - தள்ளி, இடைக்குறை, ஏகாரம் அசை, நெருங்கி என்றவாறு.

4. நீரில் செறிய முழுகியே என மாறுக; கதலி வாழை - வாழையில் ஓர் வகை; கமுகுபாளை - பாக்கு மரத்தின் பாளை, ஆறன்தொகை; வாளை - வாளை மீன், எழுவாய்; வாளை முழுகியே, ஏறி, போய், வீழவே எட்டி, முறியவே, சிதறவே, வால் அடித்துக் குதிக்கும் வாவி என்பது முடிபு; வேழ உரியினார் - யானைத் தோலை உடையாக உடையவர் ; பாற்குடம் சுமந்து செல்லும் இராமக்கோன் என்னும் அடியாரைச் சிவபெருமான் மூங்கில் வடிவில் இருந்து நாள்தோறும் இடறச்செய்து, அதனால் பாலபிஷேகம் பெற்று, சினங்கொண்ட அடியாரால் வெட்டுண்டு பிறகு அவருக்குக் காட்சிதந்த வரலாறு நெல்லைத் தலபுராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

"வேய்ஈன்ற முத்தர்தமை வெட்டினா னேஇடையன்
தாய்ஈன்ற மேனி தயங்கவே - பேயாகேள்!
எத்தனைநாள் என்றே இடறுவான் பால்குடத்தை?
அத்தனையும் வேண்டும் அவற்கு" (தனிப்பாடல்)

வடிவுடைய மங்கை - திருநெல்வேலி அம்பிகையின் திருநாமம்.

5. முளரி மேவும் அரிவை - தாமரையில் உள்ள திருமகள், அரிவை என்பது பருவம் சுட்டமால் பொதுப்பொருளில் வந்தது; ராச கர்ப்பமே - மன்னன் கருவில் தோன்றியவளே; மறுப்படாத - (மணிகளில் கூறப்படும்) குற்றங்கள் ஏதும் இல்லாத ; தொளை - துவாரம்; கடைபடாத - சாணை தீட்டப்பெறாத ; விலைப்படாத - விலைமதிக்க முடியாத ; வச்ரமாலை - வைரச்சரம்; ரசனை - சுவை ; மதுரசார - கொடிமுந்திரிப் பழத்தைப்போல் இனிமைமிக்க; வசனையே - மொழிகளைப் பேசுபவளே ; காமனுக்கும் என்புழி உயர்வு சிறப்பும்மை ; மோகம் முற்றும் - ஆசையை அதிகரிக்கும், முற்றுவிக்கும் எனப் பிறவினையாக ஆட்சி; மோகனப்ரதாபம் - கவர்ச்சியால் பெற்ற பெரும்புகழ், ஆகுபெயராகப் புகழ் உடையவளை உணர்த்திற்கு; பரிமள - நறுமணம் மிக்க ; வசந்த - வாசனைத்தூளைப் பூசிக்கொண்டுள்ள, இனிப் பரிமள வசந்த என்பதனை ஒருபொருட் பன்மொழி எனினுமாம்.

6. முருகு - அழகிய ; கோவை - கொவ்வைப்பழம்; அதரம் - உதடு; தரள ரேகை - முத்துக்களாலான வரி, மூன்றன் தொகை ; கீறுபொட்டு - எழுதப்பட்ட திலகம், வினைத்தொகை, நாமமிட்ட - திருமண் சாத்திய என்னும் சிறப்புப்பொருள் தராமல் பொதுவாக நெற்றியில் குறியிட்ட என்னும் அளவில் நின்றது; வாகு - அழகிய ; சாபம் - வில்; சலதி வேலை - சமுத்திரத்தை. ஒருபொருட் பன்மொழி; இகலி - போரிட்டு ; கலக வேலை - போருக்கு உரிய ஈட்டியை ; முடுகி - துரத்தி; ஏகாரங்கள் எண்ணுப்பொருளன ; பூசலிட்டு - காண்பாரை வருத்தியும்; மாயமிட்ட - மயக்குகின்ற ; பார்வை - கண்கள்; அக்க சாலை - உலோகங்களை உருக்குமிடம், உன் பார்வை எதற்கும் அசையாத என் உள்ளத்தையும் உருக்குகின்றதே என்பது கருத்து. ஈடு - ஒன்றற் கொன்று இணையான ; மாரன் கிரண மகுடமோ என மாறுக ; கிரண - ஒளிவீசுகின்ற ; மகுடம் - கிரீடம், "பூமேவு வச்சிரவேள் சூடா மணிமகுட மாம்கனகக் கச்சறவே விம்மும் கனதனத்தான் (வாட்போக்கி உலா 348 - 349) கோமளத்ததான - மென்மையான ; சக்ரவாள மேரு - சக்கரவாள மலையைத் தன்

மூன்றாம் தாழ்வரையாகக் கொண்ட மேருமலை ; வட்ட மேரு - கற்பாங்கான மேரு ; கோமளத்தான மேரு - இல்பொருள் உவமை. "கோமள வெற்பினை ஒத்த தனத்தியர்" (திருப்புகழ் 227); வஞ்சி - வஞ்சிக்கொடி.

7. எளிய பேரை - எளியவனான என்னை என்பது கருத்து; அறிதல் உதவுதலை உணர்த்தி நின்றது. "ஆவது அறிவார்ப் பெறின்" (நாலடி. 73) என்புழிப் போல ; ஒழியலீர் - ஒழிக்க மாட்டீர் எனப் பிறவினையாக ஆட்சி; ஆலவட்டம் - விசிறி; அளகபாரம் - கூந்தல்; வகிரவோ - தலை உச்சியில் இருந்து நெற்றி வரை முடியை ஒழுங்காகப் பிரித்துவிடவோ ; அலது - அல்லது, இடைக்குறை ; பாதரட்சை - செருப்பு; அடப்பம் - வெற்றிலைபாக்குப் பை; ஈயவோ - பையைச் சுமந்துகொண்டு உம் பின்னேயே திரியும் அடைப்பைகாரன் ஆகவா; "செழுந்தாளிற் சேவிக்க வோ, - விழவோ, திண்கவரி வீசவோ - பாவிக்கோர் ஊழியத்தைப் பாலிப்பீர்" (சித்திரமடல் 134 - 135); வார பட்சம் - அன்பு, ஒருபொருட் பன்மொழி; ஈரம் - அன்பு.

8. எதிர் இலாத - இணையற்றவள் என்பதால் ஏற்பட்ட ; மமதை - இறுமாப்பு ; சலுகை - சிறப்பு உரிமை ; பூதலம் - உலகம்; கேள்வியற்ற வாசியோ - கேட்பாரில்லாத காரணமோ; பொழுதுவிழும் அளவும் - (இங்கு) இரவுநேரம் முடியும்வரையிலும்; தனித்து இரா முழுக்க வாடவோ; இனி - (மடல் மாஏறி உனைப் பெற முடிவு செய்து விட்டதால்) இனிமேல்; விசாரம் - கவலை ; "மோனமே பண்ணி முனிந்திருந்தால் வீணிலே போனநாள் மீண்டும் வரப் போகுதோ" (வருணகுலாதித்தன் மடல் 360); படம் எழுதி - உன் உருவத்தை ஓவியத்தில் தீட்டி; மன்றில் - தெருவில்.

நீ அணைத்து வாழாவிட்டால் நான் மன்றில் மடல் ஊர்வேன் எனத் தலைவன் கூறுகிறான்.



# 11. திருவொற்றியூர்த் தியாகராசர் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்படாத இந்த வண்ணம் எதிராஜ முதலியாரின் விஜய வருட (1893) வண்ணத்திரட்டு (பக்.71) ,மாறன் அச்சுக்கூடத்தின் 1926 ஆம் ஆண்டின் வண்ணத்திரட்டு (பக்.7) ஆகிய இரு புத்தகங்களில் உள்ளது. இரண்டிலும் வண்ணக் குழிப்பு இருந்தபோதிலும் துறைக் குறிப்பு கொடுக்கப் பெறவில்லை. இரண்டும் இதற்கு இராகம், யமுனா கல்யாணி தாளம் - ஆதி என இசைக் குறிப்புகளைத் தந்துள்ளன.

தலைவன் தலைவியை வேண்டலாகிய இத்துறையில் மடலைப் பற்றிய பேச்சு வருகிறது. எட்டாவது தொங்கலில்தான் இது இடம்பெறுகிறது. இது, ''அணைய வராவிடில் மனதுவாடுமே'' என்பது போல அமைந்தால் அகப்பொருள் அமைதி சிறக்கும்.

இதன் நடை நல்ல கம்பீரமாக இருக்கிறது. ஆண்கலை சிவபெருமானாகிய திருவொற்றியூர்த் தியாகராசரின் பெருமைகளை விவரிக்கிறது. தலத்துச் செய்திகள், இறைவன் இறைவி திருப்பெயர்கள், தலமரம், ஏழு விடங்கத் தலங்களைப் பற்றிய குறிப்பு யாவும் கூறப்படுகின்றன.

பெண்கலையில் கிளவித்தலைவனின் பேச்சு நாகரிகமாக இல்லை. காதற் பிரபந்தத்தில் வரும் தலைவன்போல விரசமாகப் பேசுகிறான். இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு அகத்திணை மரபில் இடம்பெறும் 'அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தல்' என்னும் துறைப்பொருள் கலவிக்கு முன்பே ஏற்றபெற்றி மாற்றி அமைக்கப் பெற்றுள்ளது பொருத்தமாக உள்ளது.

# 11. திருவொற்றியூர்த் தியாகராசர் வண்ணம்

## தலைவன் வேண்டல்

தானனதந்தந் தனந்தத்தந் தனத்தத்தா தனத்தானன
தானனதந்தந் தனத்தத்த தானதனதத்த
தனதானதான தனதானதான
தனதானதான தனதானதான
(தொ) தனதனதானன தனனதானனா

சீர்உலவும்திங் களும்கட்டும் கடுக்கைப்பூ வும்மிக்கானப -
கீரதியும்செஞ் சடைக்கற்றை மீதில்அணிகர்த்தர்;
சிறுபாலன்மீது பொருகாலனார்மெய்
சிதைவாகமோதி உதைவீ சுபாதர் ;
வானவர்நெஞ்சம் கலங்கிச்சஞ் சலித்துக்கூ வும்அப்போதையில்
ஆலம்உகந்துண் டுயிர்ப்பிச்சை ஈயும்ஒரு சித்தர்;
வடவாலநீழல் அடியார்கள்தேற
மறைகூறியாளும் உபதேசநாதர்;
தேடிவருந்தும் குழந்தைக்கன் புவைத்துக்காய் பசிக்காகிய
பால்அலைபொங்கும் கடற்பட்ச மாகிஅருள் அத்தர்;
தெளிவானசோதி ஒளிதான் அறாத
திருநீறுமேவு திருமேனியாளர்;
வடிவுடைநாயகி மருவுபாகனார் (1)

சேகரசந்த்ரன் குலுங்கக்கிண் கிணிக்கொத்தா ட,முத்தாடஅ-
னேகவிதம்துந் துமிஉள்ளது. சத்த மாக,இசைபெற்ற
செயதேவதேவ செயலோகநாத
எனவேதகோடி துதிபாடிஆட,
வாசவனும்கஞ் சனும்தைக்கும் படைச்சக்ரா யுதத்தோனொடு
வானவருந்தம் கையிற்கொட்டி ஆட, ஒருபக்கம்
மலர்வாழ்கல்யாணி அயிராணிவாணி
வருசோபனாதி யுடன்ஆட, மேவு
தேர்முசுகுந்தன் பொருந்திக்கும் பிடத்தப்பா மல்இப்பூமியில்
ஏழுவிடங்கந் தனிற்சுற்றி யாடிமகிழ்இட்ட
திருநீழல்மீது க்ருபையாகிவாழ்வு
திறமானசேவை தரும்ஆடலாளர்;
வரியரவாடிய நெடியபூணினார். (2)

நாரியர் கொஞ்சும் பெதும்பைச்சங் கிலிக்குக்கா தலித்தேமயல்
ஆகிவருஞ்சுந் தரர்க்கொக்க ஓதிஅவளுக்கு
நலமார்கனாவி னிடையே, " கொள் ஆணை
மகிழ்வாயிலேகொள் " எனஓதுபோது,
மூதுரையின்கொண் டிடுஞ்சத்யம் புரட்டிப்போ னவற்கேவிழி
நாள்சிலசென்றங் களித்திட்ட சீலர்; தமிழ்கற்ற
முனிபார்வைகாண உமையோடுகூடி
முதுசேவைஈயும் மணவாளலீலர்;
நாளும்முழங்கும் ப்ரசங்கச்செந் தமிழ்க்குக்தூ தரைப்போல்ஒரு
வேசிதரும்பெண் பிளைக்கிச்சை பேசுவசனத்தர்,
நறைமாலைசூடி மறைமாலைபாடி
நகுமாலையான சிரமாலையாளர்;
மழுமறிமான் இவை நிலவுபாணியார் (3)

நாகரிகந்தங் கரம்பைச்செம் பழத்தைத்தா றொடித்தேவெடி
வாளைகள்எங்கும் குதிக்கச்செய் சாலிமுடியிட்டு
நடுமாதரார்கள் நிழலாடஆட,
நடைநீரில்ஓடு கயல்ஓடியாட,
வாசனைமண்டுஞ் சுகந்தச்சண் பகத்துச்சோ லையிற்கோகிலம்
மோகவசந்தன் படைக்கொத்த காளம்என நித்யம்
வழுவாதுகூவ, அழகாய்எநாளும்
மணம்மாறிடாத மணிமாடவீதி
நாமகளும்சென் றுவந்திக்கும் புதுப்பொற்றா மரைப்போதுறை
பூமகளும்கொண்ட டிடப்பெற்ற தூயதிருவொற்றி
நகர்ஆளும்ஈசர்; புகழ்சேர் உலாசர்;
நழுவாதநேசர் தொழுதியாகராசர்
மணிவரைமீதினில் இலகுமாதரீர் (4)

மாரன்நெடுந்தண் டிறங்கிச்சண் டையிட்டக்கால் முதற்பாளையம்
ஆகிவரும்பெண் களிற்சித்ர மே! தனிமைநிற்கும்
வகைஏது? வேறு மிகைஏது; கூறு;
மயிலேசொலாடு; குயிலே! மண்மீது
சூர்இலவம்பஞ் சினும்பொய்க்கும் பதத்தைத்தா ழவைத்தீர்! அது
தான்எனதங்கந் தனைப்பிய்க்கு மே! இனிஉமக்கொர்
துணைகாணும் நானும்; இணைகாணும்; மேனி
தொடவேணுமோசொ லிடவேணும்நீரும்; (5)

வாரும்; இரும்; கண் டுசந்திக்கும் படிக்குத்தான் அடுத்தீர்;ஒரு
கோடிதவம்தந் திடத்தக்க தோ? பரிமளிக்கும்
மலர்வாயைநாடும் அளிபோலநாடி
வரும்ஏழையேன்முன் அமுதூறல்போல
ஒருமொழியாகிலும் இனிதுபேசுமே (5)

வாழைஇளந்தண் டினுஞ்சட்டம் கொழித்துக்கா மனுக்காலய
தோரணகம்பங் களுக்கொப்ப தாகியதுடைக்குள்
வளராதபோதென் உயிர்தேறுமோகொல்?
உலைவாயில்ஏறு மெழுகாம்இவேளை
பாவிஅனங்கன் செயுங்கொட்டந் தணித்துத்தா பரிப்பீர்; இனி
வேறொருதஞ்சம் பெறப்பெற்றி லேன்; அயன்வ குத்த
படிவாசியோ? என் விழிவாசியோ? உம்
உடல்வாசியோ? மெல் இடைபோனதேது?
வாடிவணங்குந் துரும்புக்குஞ் சிறுத்துப்போம் இடைக்கோ இரு
பாரதனங்கொண் டசைப்பிக்கி றீர்; நடை நடக்கில்
மலர்போலும் மேனி குழைவாம்; ஐயோ!என்
மடிமீதுவாரும்; முகசேவைதாரும்;
உனியவர்[1] பேரினில் வெகுளிவேணுமோ? (6)

ஆரமுதின்செங் கரும்பைத்துண் டமிட்டுக்கோ துவிட்டாடிய
பாகமதும்பின் குமட்டச்சொல் வீர்! உரைகொடுக்கில்
அதுசேதமோ? எ னுடன்வாதமோ? எள்
அளவாகினாலும் இளகாததேது?
வாய்உமிழுந்தம் பலம்கற்கண் டதைச்சற்றே யளித்தால்வெகு
நாளளவுதொண் டுமக்குச்செய் வேன்; உமதுகிட்ட
வரவோ? கைலாகு தரவோ? பெணே! ச
மதியானவேலை யிடில்ஏதுமோசம்?
ஆரம்அணிந்தங் கதம்பச்சந் தனத்தைப்பூ சிவைத்தால் முலை
யானைமதம்பின் பிடிக்கெட்டு மோ? அதுபிடிக்க
அடியேன்இதோகை நகம் ஆர்குடோரி
யதுபோடவேணும்; இதமாக வேணும்;
அது[2] பொழுதேயதை அறியலாகுமே (7)

1. இனியவர் 2. இது

ஆய்வளையுந்தொங் கலும்கொப்பும் பதக்கத்தோ டு[1] முத்தாரமும்
மேகலையும்சங் கிலிக்கொத்தும் மாலையும் மன்இட்ட
அடையாளமாக உடன் ஆடுமாதர்
அறியாமலேகை புனைவேன்; அலாது
சோடுகிளம்பும் பசும்பொற்குன் றினுக்குக்கீ ழிடத்தே, ஒரு
நாகதலம்கண் (டுவப்பிற்கை)[2] யாடி, ஒருமித்த
சுகம்ஆர்புள்ஓசை இருநாலும்ஆட,
விழிவேல்கள்ஆட, எழில்வேர்வைஆட,
ஆகம் இரண்டும் குலுங்கப்பம் பரத்தைப்போ லவொத்தாடிய
கேளியில்என்றன் சமர்த்தைக்கை பாரும்மனதுக்குள்;
அதன்மேல் என்வேலை வெளியாகும்; நீரும்
அதைநாடநாட எனைநாடுவீர்; மெய்,
அதுவும் இலாவிடின் மடலைஈயுமே (8)

(இவ்வண்ணத்தில் தொங்கற்றாழிசை நன்கு அமையவில்லை.)

1. பதக்கச் சோடு 2. டதனிற்கை

# 11. திருவொற்றியூர்த் தியாகராசர் வண்ணம்

## குறிப்புரை

1. கட்டும் கடுக்கைப் பூ - தொடுக்கப்படும் கொன்றை மலர், பிறவினைப் பொருள்; மிக்கான -மேன்மை உடைய ; பகீரதி - கங்கை ; கர்த்தர் -தலைவர்; சிறுபாலன் - மார்க்கண்டேயர்; காலனார் - இயமன், ஆர்விகுதி இகழ்ச்சிக் குறிப்பு; மெய் - உடல்; பாதர் - திருவடிகளை உடையவர்; வரலாறு வெளிப்படை ; அப்போதையில் -அந்நேரத்தில்; ஆலம் - ஆலகால விடத்தை ; உகந்து உண்டு ; வட ஆல் நீழல் - ஆலமரத்தின் நிழலில்; வடஆலம் - ஒருபொருட் பன்மொழி, முன்னது வடசொல்; அடியார்கள் - சனகாதி நால்வர்; மறை ஆகுபெயராக வேதத்தின் முடிந்த முடிபான மெஞ்ஞானத்தைச் சுட்டுகிறது; குழந்தை - வியாக்கிரபாத முனிவரின் மகனாகிய உபமன்யு; குழந்தைக்கு அன்பு வைத்து; சிவபிரான்; வரலாறு:- வியாக்ரபாதர் வசிஷ்டர் தங்கையை மணந்து உபமன்யுவைப் பெற்றார். பிள்ளைப் பேற்றிற்காக வசிட்டர் இல்லத்தில் இருந்ததால் குழந்தை காமதேனுவின் பாலைக் குடித்து வளர்ந்தது. சில மாதங்களில் வியாக்ரபாதர் வீட்டிற்கு வந்த உபமன்யுவுற்குப் பசும்பால் கிடைக்கவில்லை இறைவன் பாற்கடலையே அளித்தார். இவ்வரலாற்றின் விரிவைக் கோயிற்புராணத்தில் காணலாம். பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான் (சேந்தனார் திருப்பல்லாண்டு 9) அறாத - நீங்காத ; வடிவுடைநாயகி - வடிவுடையம்மை, திருவொற்றியூர் இறைவியின் திருநாமம், வடிவுடைய மங்கையும் தாமும் எல்லாம் வருவாரை எதிர்கண்டோம் (தேவாரம் 6-45-6)

2. சந்த்ரசேகரன் என மாறுக, பிறைசூடி; துந்துமி - உடுக்கை ; லோகநாத - உலகத்தின் தலைவரே, விசுவநாதா; கோடிவேதம் என மாறுக, கோடி பல என்ற கருத்தில், அனந்தா வை வேதா என்பது பழமொழி; வாசவன் -இந்திரன்; கஞ்சன் - தாமரைப் பீடத்துப் பிரமன்; தைக்கும்படை ஆகிய சக்ராயுதம் என்க ; வானவரும் - தேவர்கள் அனைவரும்; கல்யாணி - திருமகள்; அயிராணி - சசிதேவி ; வாணி - கலைமகள்; சோபனாதியுடன் - மங்கலப்பாடல் முதலியவற்றுடன்; தேர் மேவு முசுகுந்தன் என மாறுக ; விடங்கம் - உளியால்.செதுக்கப்படாத திருமேனி, இவை சப்த விடங்கத்தலம் என்னும் ஏழு தலங்களில் உள்ளன. அவையாவன :- திருவாய்மூர், திருநாகைக்காரோணம், திருநள்ளாறு,திருமறைக்காடு, திருக்காறாயில், திருவாய்மூர், திருக்குவளை ; இந்த ஏழு தலங்களிலும் இறைவர் தியாகராஜர் எனப்படுவார். தியாகராஜர் என்பது திருமாலால் வழிபடப் பெற்ற சோமாஸ்கந்த மூர்த்தி; திருமால் இதனை இந்திரனுக்கு வழங்க அவன் பூசித்து வந்தான்; இந்திரன் வலாசுரனுடன் போரிட்டபோது உதவிக்கு வந்த முசுகுந்த சக்ரவர்த்தி அவ்விக்கிரகத்தைக் கேட்டான். கொடுக்க மனம் வராமல் வேறுவேறாக ஆறுமுறை புதிய சோமாஸ்கந்த மூர்த்தங்களைச் செய்து கொடுத்தான். இறுதியில் திருமால்பால் பெற்றதையும் வழங்கினான். மூலத்தியாகராசர் திருவாரூரிலும் ஏனைய வடிவங்கள் மற்ற ஆறு ஊர்களிலும் தாபிக்கப் பெற்றன. இறைவன் பெயர் தியாகராசர் ஆதலின் பெயரொப்புமை கருதி விடங்கத்தலத்திலும் சுற்றி ஆடி ஒற்றியில்

எழுந்தருளியதாகக் கூறுகிறார்; மகிழ்இட்ட - மகிழமரம் ஏற்படுத்திய, மகிழநிழற்கீழ் என்றபடி; இது தலமரம்; வரி அரவு - கோடுகளை உடைய பாம்பு; பூணினார் - ஆபரணர்.

3. பெதும்பை - பருவம் சுட்டாமல் பெண் என்ற அளவில் வந்தது; சங்கிலி நாச்சியார் வரலாறு வெளிப்படை ; ஒக்க ஓதி - அவருக்கு ஏற்றபடி சொல்லி; மகிழ்வாயிலே -மகிழடியில்; அங்கு - அசை ; தமிழ்கற்ற முனி -அகத்தியர்; அகத்தியருக்குத் தேவியோடு காட்சி வழங்கிய வரலாறு பல தலங்களில் கூறப்படுகிறது. வேசி தரும் பெண்பிள்ளை என்றது பரவை நாச்சியாரை ; வரலாறு வெளிப்படை, நறைமாலை சூடி - நறுமணமிக்க மாலைகளை அணிபவர்; மறைமாலை பாடி - வேதங்களாகிய பாமாலைகளாலே பாடப்பட்டவர், சிரமாலை - பிரம கபாலங்களைக் கோத்த மாலை ; பாணியார் - கைகளை உடையவர்.

4. நாகரிகம் தங்கு - அழகிய அல்லது செழிப்பான என்ற கருத்தில் ஆள்கிறார் போலும், பொருத்தம் ஆய்விற்குரியது; அரம்பைச் செம்பழத்தை - செவ்வாழை கனியை, செவ்வரம்பை என மாறுக ; தாறு ஒடித்தே - குலைகள் முறியும்படி; செய் - வயலில்; சாலி முடியிட்டு நடு - நெல் நாற்றுமுடிகளை நடவு செய்யும்;

நீரில் நடை ஓடு என மாறுக ; மண்டும் - நிறையும்; சுகந்த சண்பகத்துச் சோலை - நறுமணமிக்க சண்பக மரங்கள் நிறைந்த பொழிலில்; மோக வசந்தன் -ஆசையை எழுப்பும் காமன்; படைக்கு ஒத்த காளம் - சேனைக்குத் தகுந்த சின்னம் (என்னும் இசைக்குழல்); நித்யம் - நாள்தோறும்; கலைமகளும் வந்திக்கும் திருமகள் என்க, திருமகள் மாமியார் ஆதலின் வணங்குகிறாள் எனப் புராணமரபிலும், "இங்கு இவை நீ மொழிந்த எலாம் வறியமொழி; செல்வம்உளார் எங்குஉற் றாலும் அங்குஅடைவர் அனைவர்களும் தம்வயிறு வளர்த்திடுவான்; அறைவ உறுகாகமும் அடையும் எனல் போலப் பொருள் உளர்பால் எய்துவாரே உறுகாகமும் அடையும் எனப்போலப் பொருள் உளர்பால் எய்து வாரே யாவும் பொங்குறு செல்வர்க்கு அரிய பொருள் உண்டோ? பிடி அனத்தைப் புவியில் வீசில் எங்கு (கங்காதரச் செழியன் திருவாணி வாது 48) என உலகியல் நோக்கியும் கூறினார்; வாளைகள் குதிக்க(வும்), நிழல் ஆட(வும்), கயல் ஆட(வும்), கூவ (வும்) பெற்ற தூய திருவொற்றி நகர் எனவும், தனித்தனி இயையும்; உலாசர் - உல்லாசர்,இன்பமயமானவர், இன்பதனை எய்துவார்க்கு ஈயும் அவர்க்கு உருவம் இன்பகனம் ஆதலினால் இல் "(திருவருட்பயன் 73) எனச் சாத்திரமும், உல்லாச நிராகுல யோக இதச் சல்லாப விநோதனும் நீ அலையோ " (கந்தரனுபூதி 2 ) எனத் தோத்திரமும் கூறுவது இதுவே ; நழுவாத நேசர் தொழு - மாறாத அன்புகொண்டவர்களால் வணங்கப்படுகின்ற,பிறவினைப் பொருளில் ஆட்சி; மணிவரை - அழகியமலை ; மாதரீர் -பெண்ணே, பன்மை மரியாதை பற்றியது.

5. தண்டு இறங்கி - படையெடுத்து ; பாளையம் - படைவீடு; சித்ரமே - பேரழகியே ; சொல்ஆடு - பேசு; ஆர் இலவம் பஞ்சிலும் -(காய்கய்) வெடித்தால் பறக்கும் இலவம்பஞ்சைவிட ; பொய்க்கும் - மென்மையான, ஆட்சிப்பொருத்தம் விளங்கவில்லை; பதத்தை - கால்களை ; தாழ -கீழே ; அங்கம்தனைப் பிய்க்குமே ; அடுத்தீர் - நெருங்கினீர் ; பரிமளிக்கும் - நறுமணம்வீசும் ; அளி - வண்டு ; அமுதுஊறல்.

6. வாழையின் இளம்தண்டு ; சட்டம் கொழித்து - திருத்தம்பெற்று அல்லது முழு எழிலையடைந்து ; காமனுக்கு ஆலய தோரண வாழைத் துடையினாள் ( வருணகுலாதித்த மடல் 51,52); இ வேளை - இப்போது; அனங்கன் - உடல் இல்லாதவனாகிய மன்மதன்; கொட்டம் தணித்து - தீமையைக் குறைத்து; தாபரிப்பீர் - தாங்குவீராக; அயன் - பிரமன் ; வகுத்த படிவாசியோ - படைத்தவிதம் காரணமோ; என் விழி வாசியோ - என் கண்ணேறு பட்டதால் இளைத்துப் போய் விட்டதோ; உடல் வாசியோ - உடம்பின் அளவோ? இடை (காணாமல்) போனது ஏது? வணங்கும் -வளையும்; இடைக்கோ - இடையையோ, நான்கன் உருபு இரண்டன் பொருளில் வந்தது, பூங்கழலான் அடிக்கு எய்துகேன் (சிந்தாமணி 1711) என்புழிப்போல ; உனியவர் - உம்மையே எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவர்.

7. அமுதின் - அமிர்தத்தைப்போல் சுவைமிக்க, இன் உவம உருபு, கோதுவிட்டு - சக்கையை நீக்கிவிட்டு; பாகும்அதும் - வெல்லப்பாகும், அது பகுதிப்பொருள் விகுதி; பின் -உம் உரையைக் கேட்ட பிறகு; குமட்ட - தெவிட்டும்படி; தம்பலம் - வாயிற் குதப்பிய வெற்றிலைபாக்கு; வெகுநாள் அளவும் தொண்டு உமக்கு; ஆரம் - முத்துமாலை ; அம் கதம்ப - அழகிய வாசனைப் பொடிகள் சேர்க்கப் பெற்ற ; மதயானை என மாறுக ; குடோரியது - அங்குசம்; நகிலாகிய யானையை நகமாகிய அங்குசத்தால் அடக்க வேண்டும் என்றவாறு,

"கை அமர்ந்த கூரிநகம் என்னும் குடோரியிட்டு நான்ஏற
வீரமுலை யானையைஎன் மேல்விடீர்." (சித்திரமடல் 101)

8. கொப்பு - ஒருவகைக் காதணி; முன்இட்ட அடையாளமாக என்றது மெய்யுறு புணர்ச்சிக்கு முன்பு தலைவியின் ஒப்பனை எவ்வாறு இருந்ததோ அவ்வாறே என்ற கருத்தில்; தலைவியின் வேறுபாட்டைத் தோழிகள் கண்டுபிடிக்க இயலாதபடி பார்த்துக்கொள்வேன் என்கிறான்; அகப்பொருட் கோவைகளுள் இயற்கைப் புணர்ச்சிக்குப்பிறகு அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தல் என ஒரு துறை உண்டு; அதில் கூறப்படும் செய்தி இங்கு முன்னால் கூறப்படுகிறது;சோடு -இரட்டையாக ; நாகதலம் - பாம்புப்படம் போன்ற உறுப்பு உள்ள இடம்; சுகம் ஆர் - இன்பம் தரும்; ஒத்து ஆடிய- மனங்கலந்து விளையாடிய ; கேளியில் - லீலையில் ; நீர் இணங்காவிடில் மடல் ஊர்வேன் என்கிறான்.

# 12. மயிலைச் சிங்காரவேலன் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இவ் வண்ணம் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூல்நிலையத்தில் டி.371 ஆம எண்ணிட்ட சுவடியில் உள்ளது. சுவடியில் இதன் தலைப்பு சுப்பிரமணியர் வண்ணம் எனப் பொதுவாக உள்ளது. வண்ணக் குழிப்போ துறைக் குறிப்போ கொடுக்கப்படவில்லை.

தலைவன் வேண்டல் துறையில் மடலுக்கு இடம் இல்லை. ஆனால் எட்டாம் தொங்கலில் தலைவன் மடலைப் பற்றிப் பேசுகிறான். இதனைப் "பலபலவும் ஏன்இனிஎற் கருளுமே" என்பதுபோல எப்படியாவது துறைக்கேற்ப அமைத்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்.

இவ் வண்ணத்தின் நடை மிகமிகச் சாதாரணமானது. வண்ணப் பாடல்களில் ஒவ்வொரு கலையும் தனித்தனியாகப் பொருள் முடிபு பெற்று அங்கங்கேயே முடிந்துவிட வேண்டும். தொங்கலை அடுத்த கலையோடு கூட்டுமாறு அமைத்தால் இந்த யாப்பின் கட்டுக்கோப்பு குலையும். இவ் வாசிரியர் நான்காவது தொங்கலை ஐந்தாவது கலையோடு தொடருமாறு யாத்துள்ளார். அதே போல மூன்றாம் கலையில் மயிலைப் பதியினான் எனக் கூறிவிட்டுத் தலவளம் கூறும் நான்காம் கலையில் தணிகையைப் புனைந்துரைக்கிறார். இதனால் இவ் வண்ணம் எந்தத் தலத்திற்குரியது எனத் தீர்மானிப்பதில் சிக்கல் ஏற்படுகிறது. நான்காம் கலையில் சிங்கார செஞ்சேவகன் என வருதலாலும், தொண்டைநாட்டு முருகத் தலங்கள் அனைத்திலும் தணிகையை இணைத்துக் கூறுவது வழக்கு ஆதலாலும் இவ் வண்ணம் மயிலைக்குரியதாக இப் பதிப்பாசிரியரால் கொள்ளப்படுகிறது.

சொல்லாட்சியிலும் சமணர் கோலாகலன், புலவி போன்றவை பொருத்தமா என்பது சிந்தனைக்குரியன. ஒரே பொருள் திரும்பக் கூறப்படுகிறது. பொதுவாகக் கூறுமிடத்து இது ஒரு மிகச் சாதாரணமான வண்ணம்.

# 12. மயிலைச் சிங்காரவேலன் வண்ணம்

## தலைவன் வேண்டல்

தனதனா தானனந் தனதனா தானனந்
தனதனா தானனந் தனதனா தானனந்
தானனந் தானனந் தானனந் தானனந்
தானனந் தானனந் தானனந் தானனந்
(தொ) தனனதன தானதனத் தனதனா

செகணதீ தோகிணங் செகணதீ தோகிணஞ்
செகணதீ தோகிணஞ் செகணதீ தோகிணந்
தீதிமிந் தோதிமிந் தீதிமிந் தோதிமிந்
தீதிமிந் தோதிமிந் தீதிஎன் றேஎழும்
சதியொடே தாளமுந் குமுறவான் நீலமும்
பனகபா தாளமுங் ககனமா கோளமுஞ்
சாகரஞ் சூழ்தரும் பூமியுஞ் சேயபங்-
கேருகன் றானமுங் கேசவன் றானமும்
திகிரிபோ லேசுழன் றுழலவே, ஆயிரஞ்
சிரபணா சேடனுங் கொடியமா சூரனுந்
தேகம்நொந் தே,குலைந் தே, விழுந் தேகிடந்
தே, மறந் தே,மனந் தேய,வந் தேநடம்
புரியும்ஒரு கானமயிற் பரியினான் (1)

திசைஉளோர் யாவருங் கதறியே கூவ, வெம்
ப்ரளயகா லாதியின் தொனியிதா மாம்எனும்
தேவருங் கூவ, முன் சாகரங் கூவவுங்
கார்இனம் கூவவும் கூவுசெஞ் சேவலங்
கொடியினான்; மாபெருங் கெடியினான்; ஆவினன் -
குடியினான்; நேயர்சந் தடியினான்; ஆணைமின்
கோதைதன் காவலன்; கானசங் கீதன்; எங் -
கோன்; அலங் காரவங் காரசிங் காசனன்;
சிவன்மகா தேசிகன்; பிரமனார் தேசிகன்;
பரமஞா னோதயன்; பொருவிலா மேனியன்;
தேடிவந் தேஅயன் றானுமிந்த் ராதியுஞ்
சேகரஞ் சூடுசெம் பாதபங் கேருகன்;
புனிதன்முரு கேசன்இசைப் புலவர்கோன் (2)

சகலமா லோகமுந் தனதுகோ லேசெலுங்
கரியமா சூரனுஞ் சியமுகா சூரனுந்
தாருகன் றானும்வெஞ் சேனையுஞ் சூழவந்-
தேபெரும் போரில்வெங் கூளியுங் காளியுங்
கொடியமா பூதமுங் குறளிவே தாளமும்
பசிஎலாம் ஆறிவந் தசையுணா தேபெருங்
கூகைகொண் டாடநின் றாடவுந் தானனந்
தானவென் றேபதம் பாடவும் போர்செயுஞ்
சமரகோ லாகலன்; சமணர்கோ லாகலன்;
கருணையீ ராறுசெங் கமலா லோசனன்;
தாமமிண் டாறிரண் டானதிண் டோளினன்;
சூழவண் டார்கடம் பான்; அரும் பாவலன்
சரவணப வான்மயிலைப் பதியினான் (3)

தழையவே சாலிபைங் கழையைநே ராய்எழுங்
கழனிசேர் வாளையுஞ் சினைவரால் தானும்மந்-
தாரமும் பூகமுஞ் சூதமுந் தாழையுந்
தாவமென் கோகிலங் கூகுஎன் றேமதன்
படைஎலாம் வாரும்என் றிறையுமா சோலையும்
கமலைசேர் வாவியுஞ் சிலையின்மீ தேதினம்
பானலம் போதரும் பாய்எழுந் தேயிரண்-
டோடும்ஒன் றேதருங் கேணியுஞ் சேர்வுறும்
தணிகைவே லாயுதன்; குமரவேள்; நாயகன்;
சருவதே வாதிபன்; குறவர்மான் நாயகன்;
தாருகன் காலன்என் றேவரும் (பேர்பெறும்)
சூரசங் காரசிங் காரசெஞ் சேவகன்;
தடவரைமி னே!தவளக் கரியினான் (4)

ககனமீ தோஅயன் பதியின்மீ தோசிவன்
கயிலைமீ தோநெடுங் கடலின்மீ தோசொலுங்-
காணும்எங் கேபிறந்தீர்? அணங்கே அருங்
காவில்இங் கேவருங் காரியந் தான்மொழிந்
தருளுவீர்; வேள்வணங் கிரதியே! மாமதன்
குளிகையே! (கூடஅங் குறுவதோர்) தோழிஎங்-
கே? சொலும்; தேவர்இந்த் ராணியும் போல்இருந்-
தீர்; நடந் தீர்கடுந் தூரம்வந் தீர்,பசுங்

கனகமே! மாகரும் பிரசமே! ராகசம் -
பிரமமே! மோகசெம் பவளமே! வேள்அலங்-
காரபண் டாரசம் பாரமும் பூவையும்
பாவையுந் தோகையும் போலஇங் கேவருந்
துரைவனிதை யேதெரியப் புகலுமே (5)

கலசமோ, மாமதன் கிரிடமோ, மேருவின்
சிகரமோ பாரகொங் கைகள்?மகா பார்வையும்
காமன்அம் போ?பரந் தாமன்அம் போ?கொடுஞ்
சூரன்அம் போ? கொலுங் காணும்; மென் கேசமுந்
திருகுகா ரே!பதம் பதுமம்நே ரே!செழுந்
திருவும்நீ ரே அணங் கரசியா ரே!மருங்-
கினம்என் றேஅறிந் தேயிருந் தேயும்இங்-
கார்அணிந் தார்கள்சிந் தூரமுந் தார்களும்?
கதலிதா னோகுறங் கிணைகள்?மே னாளில்எந் -
தனதுபூ சாபலம் பழுதுபோ மோ?கொடுங்
காதல்கொண் டேதுவண் டேன் வருந் தாமருந்
தானசஞ் சீவியும் போலவந் தீர்;மதன்
சுரதகுரு வே!அடிமைத் தொழில்செய்வேன் (6)

புகலும்நீ டேவலுந் தலையிலே சூடிவந்-
தடியனேன் ஊழியம் பலசெய்வேன் ஓதியின்
பூவணிந் தே, அரும் பூஷணந் தான்அணிந்-
தே, தினம் தாள்தொழும் தாசன்என் றே,பதஞ்
சரதமா வீடதென் றருகிலே மேவவுந்
தயவுபா ரீர்;மதன் கலதிபா ரீர்;இனந்
தாமதந் தானும்இங் கேன்?உம்வம் போ?படுஞ்
சாசனந் தானும்இந் தாரும்இந் தாரும்;வெம்
புலவிதீ ராமல்இந் தடவிலே வீண்எனும்
பொழுதிலே வாலிபம் பழுதுபோ னால்நறும்
பூமணம் போலும்அன் றோ திரும் பாதுகண்
டீர்செழும் பாயலின் காமசம் போகமும்;
பரிவுசெயும்; வேறொருவர்த் தெரிகிலேன் (7)

புரியும்மா மாதவந் தவிருமோ வாய்திறந்-
தருளுவீர்; ஈதுகண் கருணை ;பா ராமுகம்
போதும்;அன் பாகிஇங் கேதிரும் பீர்;விரும்-
பீர்;கரும் போஇரும் போமனந் தானும்?இங்
கெனதுமால் வாசகஞ் செவியில்ஏ றாதவஞ்-
சனையும், மா ராசதங் களும்விடீர்; (நீர்) சொலும்;
கேவலம் பாவிசந்த் ரோதயங் காயவுந்
தேகம்நொந் தேன்;மதன் சாடிவந் தான்;அவன்
பொருவிலா லேவிடுங் கொடியபூ வாளியின்
தொகையைநூ றாயிரம் புகலலா மோ! நமன்
போலமந் தானிலந் தானும்வந் தாவியுஞ்
சூறைகொண் டேசெலும்! பாவம்எங் கேசெலும்?
பனையின்மடல் ஊர்வதினிச் சரதமே. (8)

(இவ் வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை).

# 12. மயிலைச் சிங்காரவேலன் வண்ணம்

## குறிப்புரை

1. சதி- நாட்டியத்தில் பயன்படுத்தப்படும் சொற்கோவைகள், தாளச்சதி; தாளம் ஆகுபெயராகத் தாளவாத்தியங்களை உணர்த்திற்று; நீலவானமும் என மாறுக ; பனக பாதாளம் - பாம்புகள் வாழ்கின்ற கீழ்உலகம்.

"அணிதிகழ் அவனி யின்கீழ் அதலம்நல் விதலம் நாக
மணிதிகழ் கதலம் வண்மை மருவிய தராத லம்தான்
இணையறு மகாத லம்சீர் இலகிய ரசாத லம்சேர்
பணிதிகழ் பாத லம்பேர் பகர்உலகு ஏழுஉண் டன்றே"

(செவ்வைச்சூடுவார் பாகவதம் 1334)

ககன மா கோளம் - பெரிய அண்ட கோளம்; சாகரம் -கடல்; சேய பங்கேருகன் தானம் - செந்தாமரையில் வீற்றிருக்கும் பிரமனின் இடமாகிய பிரமலோகம்; கேசவன் தானம் - திருமாலின் வைகுந்தம்; திகிரி - சக்கரம்; ஆயிரம் சிர பணா சேடன் - படத்தைப்பெற்ற ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடன்; சூரன் - சூரபதுமன்; கானமயில் - முல்லை நிலத்திற்குரிய மஞ்ஞை, சாதியடை.

" ஆதார பாதலம் பெயரஅடி பெயரமூ தண்டமுக டதுபெயரவே
ஆடரவ முடிபெயர எண்திசைகள் பெயரஎறி கவுட்கிரி சரம்பெயரவே
வேதாள தாளங்க ளுக்கிசைய ஆடுவார் மிக்கப் ரியப்படவிடா
விழிபவுரி கவுரிகொண் டுளமகிழ விளையாடும் விஸ்தார நிர்த்தமயிலாம் "

( மயில்விருத்தம் 3)

2. ப்ரளய கால ஆதியின் - பேரூழி நேரத் தொடக்கத்து, காலாதி தீர்க்கசந்தி; தொனி - ஒலி; இது ஆம் ஆம் எனும்; அடுக்குத்தொடர் அச்சத்தின் பொருட்டு; கார் இனம்- மேகக் கூட்டம்; கெடியினான் - புகழ்மிக்கவன்; ஆவினன்குடி - திருப்பழனி அடிவாரத்தில் உள்ள திருத்தலம்; நேயர் -சந்ததி அடியார்களாகிய மக்கட் கூட்டம்; ஆனைமின் கோதை - தெய்வயானை யம்மை ; தன்- ஆறாம் வேற்றுமைச் சொல்லுருபு; எம் கோன் - எங்கள் இறைவன்; அலங்கார - அழகிய நவமணிகளாலும் மலர்களாலும் ஒப்பனை செய்யப்பெற்ற எனினும் ஆம்; வங்கார - பொன்னாலாகிய ; சிங்காசனன் - அரியணையில் அமர்ந்துள்ளவன்; சிவன் மகாதேசிகன் - சிவபெருமானின் சிறப்புடைய குருநாதர், சாமிநாதன்; பிரமனார் தேசிகன் - அயனைக் குட்டிச் சிறையிட்ட அரசன்; பரம ஞானோதயன் - பரஞானத்தின் எல்லையிலே தோன்றும் பரம்பொருள், ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்து உச்சியின்மேல் அளியில் விளைந்ததுஓர் ஆனந்தத் தேனை (கந்தரலங்காரம் 8) என்பார் அருணகிரிநாதர். பொருவிலா மேனியன் - ஒப்பற்ற திருமேனியழகர்; அயன்தானும் இந்த்ராதியும் - உம்மைகள் சிறப்பும்மைகள்; சேகரம் சூடு -தம் தலையில் அணிந்து கொள்ளும், தண்டனிடும்; பாத பங்கேருகன் - திருவடித் தாமரைகளை உடையவன்; இசைப் புலவர்கோன் - திருஞானசம்பந்தராகத் தோன்றி நாளும் இன்னிசையால் தமிழ் வளர்த்தவர், இனிப் புகழ்மிக்க கவிஞர்களுக்கெல்லாம் தலைவன் எனினும் அமையும்.

3. சகல - எல்லா; லோகமும் - உலகங்களிலும்; கோல் - செங்கோல், ஆட்சி; கரிய - அரக்கர்களைக் கரிய நிறத்தினர் என்பர்; சிய முகாசூரன் - சிங்கமுகாசுரன், சூரபதுமனின் தம்பி; சியம் - சீயம், குறுக்கல் விகாரம், வண்ணம் நோக்கியது.

தாருகன் - தாரகாசுரன், சிங்கமுகனுக்கு இளையவன்; பொரும் - போரிடும்; கூளி - பேய்களுள் ஒருவகை ; குறளி -மாயாசாலம் புரியும் பேய்; வேதாளம்-பிசாசு; ஆறிவந்து ஆடவும்எனத் தனித்தனி இயையும்; அசை உணாதே - தமக்குரிய இரையையும் சாப்பிடாமல்; கூகை - கோட்டான்கள் ; பதம் -இசைப்பாடல்; சமர கோலாகலன் - போரில் பெருவிருப்புள்ளவன் சமணர் கோலாகலன் - சமணர்களை வென்றவன் என்ற பொருளில் ஆள்கிறார் போலும், பொருட்பொருத்தம் சிந்தனைக்குரியது; ஈராறு செங்கமல மாகருணை லோசனன் என இயையும்; லோசனன் - விழிகளை உடையவன்; தாமம் மிண்டு - மாலைகள் நெருங்கிய ; ஆறு இரண்டு ஆன ; வண்டு ஆர்; கடம்பான் - நீப மாலையை அணிந்தவன் ; மயிலைப்பதி - மயிலாப்பூர்.

4. சாலி தழையவே பைங் கழையை நேராய் எழும் கழனி என இயையும்; சாலி - நெற்பயிர்; பைங்கழை - பசிய மூங்கில்; கழனி - வயல்; வாளை, வரால் - மீன் வகைகள்; மந்தாரம் - முள்முருக்கமரம்; பூகம் -பாக்குமரம்; சூதம் -மாமரம்; தாழை - தென்னைமரம்; கோகிலம் -குயில்; மதன்படை - மகளிர்; இரையும் - கூவும்; குயில் மன்மதனின் காளம் ஆதலில் படை எலாம் வாரும் எனக் கூவுகிறது. மைக்கோகி லக்காளமும் (திருவிரிஞ்சைப் பிள்ளைத்தமிழ் - சிறுபறைப்.4); வாளையும் வரால்தானும் தாவ கோகிலம் இரையும் சோலையும் என்க ; கமலை - திருமகள்; வாவி - குளம்; சிலை -மலை ; பானலம்போது அரும்பாய் எழுந்தே ; பானலம்-கருங்குவளை ; திருத்தணித் திருக்குளத்தில் நாள்தோறும் மூன்று குவளைமலர் மலரும்,இச் சிறப்பால் இம்மலை காவிகிரி எனப்படும். வெறிவீசு காவி மலர்மூன்று நாளும் விரியும்வி லங்கல் விமலன் (திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி 20); கேணி - குளம்; நாயகன் - தலைவன் ; குறவர்மான் நாயகன் - வேடுவர் குலத்தின் வள்ளி மணாளர்; தாருகன் காலன் - தாரகாரி, தாரக அசுரனைக் கொன்றவன்; சிங்கார செஞ்சேவகன் - அழகும் செம்மையும் உடைய வீரன், திருமயிலை முருகப்பெருமானின் திருநாமம் சிங்காரவேலர் என்பதாகும்; தடவரை மினே - பெரிய மலையில் வாழும் மின்னலைப் போன்றவளே ; தவளக் கரியினான் - வெள்ளை யானையாகிய ஐராவதத்தை உடைய இந்திரன்; பொருள் ஐந்தாம் கலையில் தொடர்கிறது.

வண்ணத்தில் தொங்கல் அடுத்த கலைக்குச் செல்லுதல் இந்த யாப்பின் கட்டுக்கோப்பிற்கு இழிவுதரும். இத் தொங்கலை தகைமைமிகு மாமயிலைக் கிரிமினே என்பது போல (எவ்வாறாவது) நிறைவு செய்திருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்.

5. ககனம் - (இந்திரனுக்குரிய) வானுலகிலோ; சொலுங்காணும் - காணும் முன்னிலை அசை ; காவில் - சோலையில்; வேள் - மன்மதன்; தேவர் இந்த்ராணி -தேவேந்திரனின் மனைவி; பசுங்கனகம் - பைம்பொன்; கரும்பு இரசம்; ராக சம்பிரமம் - இன்னிசையின் நிறைவு; மோக - மிகுந்த ஆவலையுண்டாக்கும், வேள் - மன்மதனின்; அலங்கார பண்டார - அழகிய

கருவூலத்திலுள்ள ; சம்பாரம் - பண்டங்கள் ; பூவை - நாகணவாய்ப்புள் ; பாவை - சிலை ; தோகை - மயில்; துரைவனிதை - அரசர் குலப்பெண்.

6. கலசம் - செம்பு; மகா - அழகால் பெருமை பெற்ற ; பரந்தாமன் - திருமால், குறிப்பாக இங்கே இராமபிரானைக் குறித்தது, இராமபாணமோ; கொலும் - கொல்கிறது. திருகு கார் - (வானில் ) திரிகின்ற மேகம்; பதம் - பாதங்கள்; பதுமம் நேரே - தாமரையையே ஒத்தன, ஏகாரத்தைப் பதுமத்தோடு கூட்டிப் பிரிநிலையாக்குக ; அணங்குஅரசி - மங்கையர்க்கரசி; மருங்கு ஈனம் - இடை மெலியது; இங்கு ஆர் சிந்தூரமும் தார்களும் அணிந்தார்கள்; அணிந்தார்கள் பிறவினைப் பொருளில் ஆட்சி;கதலி - வாழைத்தண்டு; குறங்கு இணைகள் - இரு துடைகள்; மேல் நாளில் -கடந்த காலத்தில்; பழுதுபோமோ - வீணாகுமோ, ஆகாது என்றபடி; வருந்தா மருந்து - வருந்தாததற்குக் காரணமான மருந்து எனக் காரணகாரியப் பொருட் பெயரெச்சம்; சஞ்சீவி -உயிர் காப்பாற்றும் ஒரு மூலிகை ; மதன் சுரத குருவே - மன்மதனுக்கும் புணர்ச்சிக் கலையைப் போதிக்கும் ஆசானே.

7. நீடு ஏவலும் ; அடியனேன் வந்து தலையிலே சூடி; ஓதி - கூந்தல்; பூஷணம் - அணிகலன்கள்; பதம் சரத மா வீடுஅது -உம் பாதமே நிலையான பெருமைமிக்க முத்தி; பதம் வீடுஅது என்று தினம் தாள் தொழும் தாசன் என்றே ; ஏவலும் தலையிலே சூடி வந்து, பூ அணிந்தே, பூஷணந்தான் அணிந்தே, அடியனேன் பல ஊழியம் செய்வேன் என்பது முடிபு; அருகிலே மேவவும் -என்பக்கத்தே வருவதற்கும்; மதன்கலதி - மன்மதனால் உண்டாகும் கேடு, மூன்றன்தொகை ; படும் சாசனம் -அடிமைப்பட்டேன் என்பதற்கான பத்திரம்; புலவி -இதன் நேர்பொருள் ஊடல்; இத்துறை முதல் சந்திப்பில் தலைவன் தலைவியை இரந்து பின் நிற்றல் ஆதலின் ஊடல் எனற்கே இடம் இல்லை, இங்கு அன்பின்மை என்ற அளவில்கொள்க ; இந்த அடவிலே - இவ்விதமாக, அடைவு என்பதன் போலி; பாயல் - படுக்கை ; உம்மையன்றி யாரையும் அறியேன்.

8. பேசினால் தவம் கலைந்துவிடுமோ என்றவாறு. மால் வாசகம் - ஆசைமிக்க மொழிகள்; ராசதம் - இங்கு பிடிவாதம்; கேவலம் - மட்டிலும், சந்திரன் உதித்த அளவிலே வெப்பத்தால் வருந்தேன் என்றபடி; பொருவில் -போர்புரியும் சிலை, வினைத்தொகை; பூ வாளி- மலர்க் கணை; நமன் - இயமன்; மந்தானிலம் - தென்றல்; தானும் -தான் பகுதிப்பொருள் விகுதி; ஆவி - உயிரை ; சூறைகொண்டே -கொள்ளையிட்டே ; இந்தப் பழி உம்மைத் தவிர வேறு யாரைச் சென்று அடையும் என்றபடி; பழி உம்மையே சாரும் என்பது கருத்து.

இத்தொங்கலையும் பலபலவும் ஏன்இனிஎற் கருளுமே என்பது போலத் துறைக் கருத்து பொலியுமாறு அமைத்திருந்தால் சிறப்பு.

# 13. விட்டலராயச் சோழகன் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இவ் வண்ணம் தஞ்சைச் சரசுவதி மகாலில் டி.357, 619, 702, எண்களிட்ட மூன்று சுவடிகளில் உள்ளது. மகாலின் 1969 ஆம் வருட வண்ணத்திரட்டுப் பதிப்பிலும் இடம்பெற்றுள்ளது (பக் .12) ஆனால் எங்கும் துறையைப் பற்றிப் குறிப்போ வண்ணக்குழிப்போ கொடுக்கப் பெறவில்லை.

இந்த வண்ணத்திலும் எட்டாவது தொங்கலில் மட்டும் அகத்திணை மரபின் சிறப்பிற்குப் பொருந்தமில்லாமல் மடல் கூறப்படுகிறது. இத் தொங்கலை, அன்பினால் அருள்புரிதல் நீதியே என்பது போல அமைத்திருக்கலாம்.

இதன் நடைமிடுக்கா உள்ளது. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவனின் கல்வியும்,வீரமும், பெரிதும் பாராட்டப் பெறுகின்றன. என்றாலும் வரலாற்றுக் குறிப்புகள் இடம்பெறவில்லை. பெண்கலையில் கிளவித்தலைவனின் பேச்சு காதல்பிரபந்தத்தில் இருப்பதைப் போலத் தான் உள்ளது. இத்தகைய வண்ணங்களில் இடம்பெற்றுள்ள தலைவனின் பேச்சைக்கொண்டு தலைவியை வகைப்படுத்த வேண்டுமானால் அவளைச் சாமானியா நாயகி என்றுதான் கொள்ள வேண்டிவரும். ஆனால் அப்போது மடல் எவ்வாறு வரும் என்பது விடையற்ற வினா.

அகப்பொருள் அமைதியை மறந்துவிட்டுப் பார்த்தால் இந்த வண்ணத்தின் கட்டுக்கோப்பு மிடுக்காவும் சுவையாகவும் உள்ளது.

# 13. விட்டலராயச் சோழகன் வண்ணம்

## தலைவன் வேண்டல்

தனதன தான தனதன தான
தனனத் தனனதத்த தனதத்த தான
தனனா தத்தன தனனா தத்தன
தனனா தத்தன தானத்தானன
(தொங்கல்) தந்தனா தனனதன தானனா

தெரிதமிழ் ஆசு கவிவல பேரை
இருபக் கமும்இருத்தி மதுரித்த[1] நூல்கள்
சிலகூ றச்சொலி அதிலே நற்பொருள்
பெறவே செப்பும்உ லாவைக்கோவையை
வளமடல் தூது பரணிகள் நாலு
கவியைப் பொருள்தெரித்தும், அதுமட்ட லாது
மறையோர் செப்பிய திருஞா னக்கலை
வடநூல் துய்ப்பவன்; ராகத்தேழ்இசை
தெரிமட மாதர் நடனவி நோத
பரதத் துறுவிலட்ச ணம்உரைத்து[2] லோகத்
திசையார் முத்தமிழ் மிடிதீ ரப்பொருள்
திரளா கத்தரு த்யாகக்கார்முகில்
கண்டன்(நேர்) ரணதிலகம் ஆயினோன் (1)

திரைகடல் போல வெகுபடை கூடி
இடியொத் தகுழல்சுட்டு வருதுட்ட ராசர்
திரளா கக்குதிரை யொடே கட்டிய
சிலைவாள் பட்டயம் யானைக்கோடற,
நடுவுடல் மார்பு கிழிபட, மூளை
சிதறித் தலைவெடிப்ப, வெகுரத்த மாரி
நதியா டக்கழு குகள்ஆ டக்கொடி
நிழலா டப்[3]பிணம் ஆடக்காளிகள்
சிலபல ஆட, வயிரவி ஆட,
அலகைத் திரள்களிப்ப, மகபத்ர காளி
திரி சூலத்துடன் நடமா டத்தச
ரதரா மற்கிணை யாகப்போரினில்[4]
வென்றுமா ரதர் பணிய மீளுவோன். (2)

1. மதுரச்சொல், 2. பரத்துடனிலக் [illegible] 3. [illegible] 4. போர்தனில். [illegible] 5. [illegible]

பொருசிலை வீரர் வடுகர்கர் நாடர்,
துளுவர்க் கர், இசைசுற்றும் துரைமக்கள் சேனை
புடைசூ ழச்சிவி கைகள்சூ ழப்புகழ்
நலவே ழத்திரள் சூழத்தாரைகள்
முருடுத டாரி[1] தவில்குழல் நாத-
சுரம்மத் தளம்முழக்க வருகெட்டி மேளம்
முதலா கப்பல வகைசே வித்திட,
முனைரா வுத்தர்கள் சூழப்பாடகர்
புலவர்கள் சூழ, மறையவர் சூழ,
இலகித் தளதளத்த முலைவட்ட மாதர்
பொனின்ஆ லத்திகள் திரளா கக்கொடு
வரமா லட்சுமி சேரப்பாரினில்
துங்கமா தவம்மருவு பாரிவேள் (3)

புதுமதி வீறு குலைஇள நீர்கள்
திரளத் தெனைமரத்தை யும்ஒடித்து (வாளை)
புனல்ஓ டைக்குளில் விளையா டச்செறி
புயல்ஏ றித்தவழ் பூகப்பாளைகள்
(பெருகொரு) காதம் வழுமணம் வீச,
*விளைநெற் கதிரின்முத்தை இரைகொத்த நாரை
பெருவா ழைப்பழ மடல்வீ ழக்க (வை)
கிளைமா விற்கனி சோலைக்கேசொரிமீ
புவனையில் ........................................
வரிசைப் புகலிவெற்பில் வருசட்டை நாதர்
புழுகா ரச்சொரி இருதாள் அர்ச்சனை
புரிவோன் விட்டல ராயச்சோழகன்
அம்பொன்மா மணிவரையின் மீதிலே (4)

மரகத மே! பொன் மணிஒளி யே! மன் -
மதனுக் குமுடிவைக்க வருசித்ர மே! பெண்-
மணியே! இச்சைகொள் நிதியே! அற்புத
மடவா ருக்கர சே! முத்தே! நவ
உருவசி யே! தெய்விகரதி யே! நவ
உயிருக் குயிர்அளித்த குணரத்ன மே! என்
உடலே! முக்கனி ரசமே! சர்க்கரை
உருவே! புத்தமு தே! நற்காமுகர்

1. மலாரி *சோழகரின் சொந்த ஊரைப் பற்றிய குறிப்பு இங்கு இடம்பெற்றுள்ளது. சுவடியில் விடுபாடு.

வசிகர மே! நல் மடஅன மே! என்
மனதிற் குடியிருக்க வருதத்தை யே! கண்
மணியே! வச்சிர மணியே! கற்புர
மணமே! (பத்மி)னி யே! சக்ராதிபர்
மண்டலீ கர்முடிஅபி ஷேகமே! (5)

மலர்தர வோ? கை வளையிட வோ? கை
மடிவட் டுவஅடப்ப மதுகட்ட வோ? என்
மடிமேல் வைத்துடன் உறவா டித்தினம்
மணிவாய் முத்திகொ டோர்முத்தாகிய
அரமனை வாசல் அவசர கார
மணியத் துறைசெலுத்து வதுகற்ற மாணி
அலவோ? கொப்பினை இருகா துக்கிட
(வரவோ? இட்டிட வோ) பொற்பாடகம்
மணிவிரல் நோக? வரும்இரு தாளில்
மணல்பட் டதுதுடைத்து நுதல்பொட்டி டோ? மை
மயிர்கோ திக்குழல் சொருகோ? நெற்றியில்
முதிநா மத்தைஇ டோ? கைக்கேசுழல்
மஞ்சாய மரைகவரி வீசவோ? (6)

இருபது கோடி யுகம்ஒரு நாளை
இரவிற் றனிமைஎப்ப டிபொறுக்க லாகும்?
எதிர்வா ரைப்பொரு தனபா ரத்தினில்
எனைஆழ் வித்தருள்;[1] ஈரத்தேன் அமு-
தொருதுளி சாறு தரையில்வி ழாமல்
பருகக் கிளியவெற்றி லைமடித்து வாயில்
ஒருபா திசுருள் அடியே னுக்கென
உதவீர்; எத்தனை நாளைக்காகிலும்
எனதுயிர் வாழ்வு நவரச மோகம்
இருவர்க் கும்இனியொக்கும்; ஒருமெத்தை மீதில்
இதமா கப்பண விடைபா லிக்கினும்
இமையோர் சொர்க்கமும் லோகத்தேவரும்;
என்றுதான்[2] மனதுதுயர் ஆறுவேன்? (7)

1. வாழ்வித்தருள் 2.நான்

எழுதிய சாய மதுவெளி றாமல்
எழுபத் தொருபொனுக்கு விலையிட்ட சேலை
இடுதூ வட்டஅல் குலில்நே ரிட்டதில்
இழையா கத்தவ மேபெற்றேன்இலை;
அடிமையு மாக எழுதுவன் ஓலை,
அடிமைக் கொளும்உமக்கும் இதுபுத்தி காணும்
அடியேன் இப்பொழுதறியாமற்செயும்
அடியேன் இப்பொழுதறியாமற்செயும்
அபசார ரப்பிழை நீர்இப்பொபொறும்;
இதெனவி சாரம்? இதெனஉ பாயம்?
எவரைச் சொலிவெறுப்பன்? விரகத்தில் மூழ்கும்
எளியே னுக்கொரு தொழில்நீர் கற்பியும்;
இலையா கிற்பிணை[1] தேசத்தேஇலை;
மன்றிலே மடல்எழுதி ஊரவோ?

(இவ்வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை)

1. பயன்

# 13. விட்டலராயச் சோழகன் வண்ணம்

## குறிப்புரை

1. தெரிதமிழ் - ஆராயப்படுகின்ற தமிழ், வினைத்தொகை ; ஆசுகவி -பிறர் கொடுக்கும் பொருள், அடி, பா, அணி முதலியவற்றைக் கொண்டு உடனே செய்யுள் இயற்றவல்லவன், "அரியபொருள் அடிபா அணி யானதுகொ டுத்துமற் றொருவர்பா டென்னவே அறைகுவோன் ஆசுகவியாம்" (பிரபந்த தீபிகை 98); இரு பக்கமும் - தன் வலது இடது புறங்களில்; மதுரித்த -இனிமையான, மதுரம் என்னும் பண்படியாகப் பிறந்த வினை; உலா கோவை வளமடல் தூது,பரணி தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகள், பின்மூன்றுடனும் இரண்டன் உருபு கூட்டுக ; நாலு கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய நான்குவகைக் கவிதைகள்; தெரித்தும்- தெரிவித்தும், விளக்கிக் கூறுவதோடு; திருஞானக்கலை ஆகிய வடநூல் என்றது ஆகம உபநிடதங்களை ; விநோத நடனம் எனமாறுக, அழகிய கூத்து ஆகிய என்றபடி; பரதத்து உறு விலட்சணம் - பரதக்கலையிலுள்ள சிறப்பை ; லோகத்து -உலகில்; இசை ஆர் முத்தமிழ் - புகழ் பொருந்தியதும் இயல் இசை நாடகம் என மூன்றாகப் பகுக்கப் பெற்றதுமாகிய தமிழ்; மிடி- வறுமை ; கண்டன் - வீரன். இப்பெயர் சோழ மன்னர்களுக்குச் சிறப்புப் பெயராக வழங்கியதை "களினுடைக் கண்டன்" , மானபரன் கண்டன்; (பெருந்தொகை 1479, 1488 இரண்டாம் குலோத்துங்கன்), கண்டன் அயிராபதம்" போன்றனவற்றால் அறியலாம், "கண்டனை மேதியாள் காந்தனை (இராச இராச சோழன் உலா 257, 359) (இரண்டாம் இராசராசன்)" கண்டன் என்றது சிறப்புப் பெயர்.இதனை இயற்பெயர் என்று மயங்காதொழிக (தக்கயாகப் பரணி 549 உரை) என்பதும் இங்கு நினைவு கூரத்தக்கது; நேர் உவம உருபு; கண்டன்நேர் - சோழனுக்கு நிகரான ; ரண திலகம் - போரில் சிறந்தவன்.

2. குழல் சுட்டு - பீரங்கியால் சுடுதலைச் செய்து; பீரங்கி வெடிப்பதற்கு இடியோசை உவமை, நெருப்பிற்கு மின்னலும் ஆம்; கட்டிய சிலை - நாணால் இழுத்துக் கட்டப்பெற்ற வில்; வாள் பட்டயம் - ஒளி வீசுகின்ற உடைவாள், ஒரே பொருள் தரும் இரு சொற்களில் ஒன்றை அடையாக்கியது மொழிநயம்; கோடு - கொம்பு, தந்தம்; கொடி - காகம்; மா ரதர் -மகா ரதர்,பதினோராயிரம் தேர்களை உடைய பெருவீரன்;

"தவனமொடும் அலகைநட மிடவீ ரபத்திரர்கள்
அதிரநிண மொடுகுருதி குடிகா ளிகொக்கரிசெய்
தசைஉணவு தனின்மகிழ விடுபேய் நிரைத்திரள்கள் பலகோடி
திமிதமிட நரிகொடிகள் கழுகா டரத்தவெறி
வயிரவர்கள் சுழலஒரு தனிஆ யுதத்தைவிடு
திமிரதின கர! அமரர் பதிவாழ் வுபெற்றுலவு முருகோனே"

(திருப்புகழ் 225)

3. துளு வர்க்கர் -துளுவ இனத்தவர்; சிவிகை - பல்லக்கு; வேழத் திரள் -யானைத் தொகுதி; தாரை,முருடு, தடாரி, தவில் -தாள வாத்திய வகைகள்,குழல் -புல்லாங்குழல்

அல்லது குழலாகிய நாதசுரம் எனினும் ஈண்டைக்குப் பொருந்தும்; நாதசுரமும் தவிலும் முழக்குவதன் பெயர் கெட்டிமேளம்.எனவே, மற்றொன்று சின்னமேளம் என உண்டு என்பது பெறப்படுகிறது; ராவுத்தர்கள் - குதிரைப் பாகர், பெரும்பாலும் இசுலாமியர்; பாடகர்- வாய்ப்பாட்டுப் பாடுவோர்; தளதளத்து இலகிய வட்டமுலை மாதர் என இயையும்; மா லட்சுமி சேர - (இவ்வளவு சிறப்புக்களைப் பெறுமாறு) திருமகளின் பெருங்கருணை பொருந்த, லட்சுமி ஆகுபெயராக லட்சுமி கடாட்சத்தை உணர்த்தியது; துங்க -உயர்ந்த ; பாரிவேள் - பாரி வள்ளலைப் போன்ற அரசியல் தலைவன்.

4. புது மதி வீறு -அப்போதுதான் உதித்துள்ள சந்திரனைக் கீறுகின்ற, வானளாவிய என்றபடி; புனல்ஓடை - நீர் நிரம்பிய குளம்; ஓடைக்குளில் தெனை மரத்தையும் ஒடித்து வாளை விளையாடவும் என்பது முடிபு; செறிபுயல் - அடர்ந்த மேகம்; பூகப் பாளை - பாக்குமரத்தின் பாளை; வழுமணம் - இளங்காய்களுக்குரிய வாசனை, வழுக்கை மணம்; விளைநெல் - நன்றாக விளைந்த நெல்; நெல் முத்தை நாரை இரையாகக் கொத்தவும் என்பது முடிபு; கவை கிளை மா -சிறுகொம்புகளையும் பெருஞ்சினைகளையும் பெற்றுள்ள மாமரம், கவைகிளை -உம்மைத் தொகை ; சோலைக்கே - சோலையின்கண், புவனை -பாட்டுடைத் தலைவனாகிய சோழகனின் ஊர், இது திருவிடைமருதூருக்கு அருகில் உள்ள திருபுவனம். இவ்வூரைப் பற்றிய ஒரு பழையவெண்பா வருமாறு;-

"அடைஎன்பார் தள்என்பார் அன்பொன் றிலாமல்
புடைஎன்பார் தங்கடைக்கே போகோம் - கொடைஎன்றால்
முந்துஞ்சோ மாபுவனை முன்னவனே நின்கடைக்கீழ்"
வந்துஞ்சோ மாதலான் மற்று. (தமிழ்நாவலர் சரிதை 131)

வரிசை - மதிப்பிற்குரிய ; புகலி - சீகாழி; சட்டை நாதர் - சீகாழி ஆலயத்தில் இரண்டாம் மாடியில் உள்ளவர் (எனவேதான் புகலிவெற்பு என்றார்). மாவலியிடம் மூன்றடி நிலம் கேட்டுப் பெற்ற திருமால் செருக்குற்றுத் திரிந்தார். அப்போது வடுகர் திருமாலை மார்பில் அறைந்து வீழ்த்தினார், திருமகள் தாலிப்பிச்சை வேண்ட மீண்டும் உயிர்ப்பித்தார்.எழுந்த அரி தம் தோலையும் எலும்பையும் அணியவேண்டினார். வடுகரும் தோலைச் சட்டையாக அணிந்து என்பைக் கதாயுதமாகக் கைக்கொண்டார். எனவே சட்டைநாதர் எனப்படுகிறார். புழுகு -புனுகு ; வெள்ளிக்கிழமைகளில் இரவில் புனுகு சாத்தப்படுகிறது; இருதாளில் புழுகு ஆரச் சொரிதலாகிய அர்ச்சனை புரிவோன் என்க ; அர்ச்சனை - வழிபாடு; அம் - அழகிய ; பொன் - ஒளிமிக்க ; மா - பெரிய ; மணி - இரத்தினங்கள் நிறைந்த.

5. முடி வைக்க - கீரிடம் சூட்ட ; மடவாருக்கு -மங்கையர்கட்கு ; வசிகரம் - தன்வயப்படுத்துபவள் ; தத்தை - கிளி ; பத்மினி - நால்வகை மகளிருள் மிக உயர்ந்தவள், இவள் இலக்கணமாவது;-

செண்பகநி றத்தினாள்; கூவிளங் கொங்கையாள்;
செய்யமலர் வாசம்உடையாள்;
செயமதுர வாக்கினாள்; பொய்யுரைசொ லாதவள் ;
செந்திருத னக்குநிகராள் ;
நண்பாக வேஅமரர் பெரியோர்த மைப்பணிவள்;
நவில்இடை சிறுத்திடும் வெண்துகில்உ டுப்பள் ; நல்
அல்குல்தா மரைநேரினாள்;
வண்மைபெறு சுரதநீர் கோகனக வாசமாம்;
மான்அனைய காட்சி உடையாள்;
மாதுரிய கனிஉண்பள்; எட்பூவின் நாசியாள்;
மாஇரவி சாயாமுனம்
கணமேனும் கண்படாள் பதுமினிப் பண்பதாம் (கயிலாசநாதர் சதகம் 87)

சக்ராதிபர் - ஆணை செலுத்தும் அரசர், மண்டலீகர் -ஒரு பேரரசின் கீழ் உள்ள ஒரு நிலப்பரப்பின் ஆளுநர்; ஆட்சியாளர்களால் மிகவும் பாராட்டப்பெற்றவன் என்பது கருத்து.

6. கை - சிறிய ; மடி வட்டுவ -இடுப்பில் செருகிக்கொள்ளும் பையில் உள்ள ; அடப்பம் அது- வெற்றிலை பாக்கை, அது பகுதிப்பொருள் விகுதி; கட்டவோ - (சுண்ணாம்பு தடவி நறுமணப் பொருள்களை உள்ளே வைத்துச் )சுருளாகக் கட்டித் தரட்டுமா ; மணிவாய் முத்தி கொடு- அழகிய வாயில் முத்தம் கொடுத்து ; ஓர் முத்து ஆகிய - ஒப்பற்றுச் சிறப்பெய்திய ; அவசரகார - ஆலோசனைக்குரிய, வண்ணம் நோக்கி வல்லினமெய் புணர்ந்து கெட்டது ; மணியத்துறை செலுத்துவது - அதிகாரம் செய்வது ; மாணி - பிரமசாரி ; அரமனை வாசல்,மணி அ துறை, மாணி முதலியன சிலேடைவகையால் இடக்கரடக்கற் பொருள் பயப்பது காண்க, காதல் என்னும் சிற்றிலக்கியத்தில் தலைவன் வேண்டும்போது இவ்வாறு இரட்டுறமொழிதலாக அமைப்பது மரபு; கொப்பு - ஒருவகைக் காதணி; பொற் பாடகம் -பொன்னால் செய்யப்பட்ட ஒருவகை அணி, காலில் அணிவது, நுதல் -நெற்றியில்; பொட்டிடோ - பொட்டு இடவோ என்பதில் உடம்படுமெய்யாகிய வகரம் தொக்கது, பின்வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க ; மை - கரிய குழல் -கூந்தலைச் சுருட்டிமுடிக்கும் தலை ஒப்பனை ; குழல் சொருகோ - சுருட்டிமுடித்துச் செருகவோ ; முதி - சந்திரகிரணம் போன்ற, முதீ என்பதன் குறுக்கல் விகாரம் ; கைக்கே சுழல் -கையினிடத்தே சுழலுகின்ற ; மஞ்சுஆய - அழகிய மரைகவரி - கவரிமானின் உரோமத்தால் செய்யப்பெற்ற சாமரை.

"செய்ய நுதலில் திலகக் குறிஎழுதிக்
கையில்நிலைக் கண்ணாடி காட்டவோ? -பையவந்து
தண்டரளக் கொம்பெடுத்துத் தாழ்குழற்குச் சாத்தவோ?
கண்டவர்கண் ணேறு கழிக்கவோ? - கண்டையொடு
பாடகமும் இட்டுப் பதம்பணிய வோ? கரத்தில்
சூடகமும் தோள்வளையும் சூட்டவோ?" ( தாயுமானவர் மடல் 231-233)

7. எதிர்வாரைப்பொரு -1. எதிரில் வருபவர்களின்( பார்வையில் போர் செய்வது போல) மோதுகின்ற ; 2. (அசைவுகளைத் தடுத்து) மாறுபடுகின்ற கச்சினைப் பிதுக்கிக் கொண்டு ; கிளிய - கிள்ளிய, இடைக்குறை ; இதமாக - இனிமையாக ; பணவிடை - 1. ஒரு வராகனில் ஒன்பதில் ஒரு பங்கு மதிப்புள்ள நாணயம், 2. இடைப்பணம் என மாற்றி அரையின்கண் உள்ள பாம்புப்படம் போன்ற கடிதடம் என்க ; இமையோர் சொர்க்கமும் லோகத்தே வரும் -1. தேவர்கள் வாழும் வானுலகமும் இந்த உலகத்திற்கு வந்துவிடும். 2. (இமை ஓர்) ஒளி வீசுகின்றதும் ஒப்பற்றதுமாகிய நகில்களும் பார்வைக்கு வரும் ; பணவிடை நாணயம் அறம்புரிந்தால் சொர்க்கலோகம் கிடைக்கும்; அவ்வாறே இடைப்பணம் கொடுத்தால் நகில்களும் பார்க்கக் கிடைக்கும்; என்றுதான் - எந்நாளில்.

8. எழுதிய சாயம் -( புடவைக்கு) ஏற்றப்பட்ட நிறம்; தலைவி உடுத்தியிருக்கும் சேலையின் மதிப்பு எழுபத்தொரு பொன்; இடு - புனையப்பெறும்; தூ வட்ட அல்குலில் - சுத்தமானதும் வட்டவடிவமுள்ளதுமாகிய இடுப்பில்; நேரிட்டதில் -புனையப்பெற்ற புடவையில்; இழையாக - (நான்) ஒருபட்டு நூலாக அமைய;ஓர் இழையாய் இருந்திருந்தாலாவது அவளைத் தழுவியிருக்கலாம் என்றபடி; ஓலை - சாசனம்; அடிமைக்கொளும் - தொண்டனாக ஏற்றுக்கொள்ளும், சந்தம் நோக்கி வல்லின மெய் தோன்றியது; இது புத்தி- இச் செயலே அறிவுடைமை ; இப்போது அறியாமல் செயும் அபசாரப்பிழை -(தகாத சொற்களைக் கூறியதாகிய) தகுதியற்ற நடத்தையாகிய தவற்றை ; விசாரம் -கவலை ; உபாயம் - (கவலை தீர) வழி; பிணை - (மனைவியாக) கட்டிக் கொள்ளுதல், உம்மைத்தவிர வேறு புகல் இல்லை எனினுமாம்; மன்றிலே - தெருவில்.



# 14. குன்றக்குடி வேலவர் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இவ்வண்ணம் தஞ்சைச் சரசுவதி மகாலின் 1864 ஆம் எண்ணிட்ட சுவடியில் உள்ளது.எதிராஜ முதலியாரின் விஜய வருட (1983) வண்ணத்திரட்டு (பக்.44) மாறன் அச்சுக்கூடத்தின் 1926 ஆம் ஆண்டைய வண்ணத்திரட்டு (பக்.48) ஆகிய இரண்டு புத்தகங்களிலும் இதன் பெண்கலை மட்டும் உள்ளது. எதிராஜரின் பதிப்பில் இராகம் புன்னாகவராளி என்ற குறிப்பும், மாறன் மதிப்பில் அதோடு ஆதிதாளம் என்பதுவும் கொடுக்கப்பட்டுள்ளன. மூன்றிடங்களிலும் வண்ணக் குழிப்பு உள்ளது. எதிலும் துறைக்குறிப்பு இல்லை.

தலைவன் வேண்டலாகிய இத் துறையின் கிளவித்தலைவன் பேச்சு மிக விரசமாக இல்லை.ஆனால் தலைவியைப் பார்த்து, இந்திர சால விந்தைகள் உன்தொழிலோ? உன் வீடு தஞ்சமடீ! என்றெல்லாம் பேசுவது அவள் சாமானியா நாயகியோ (விலைமகள்) எனக் கருத இடம்தருகிறது. எட்டாம் கலையின் இரண்டு துள்ளல்களில் மடல் விரிவாகப் பேசப்படுகிறது. இவற்றால் இதன் அகப்பொருள் அமைதி கறைபடுகிறது.

இந்த வண்ணத்தின் நடை மிக இனியது. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவராகிய முருகப்பெருமானின் பெருமைகள் அழகாகப் பேசப்படுகின்றன. குன்றக்குடியில் பாயும் ஆற்றின்பெயர் தேனாறு என்ற குறிப்பும் உள்ளது. இந்த வண்ண ஆசிரியர் அருணாகிரிநாதரின் வாக்கில் நல்ல ஈடுபாடுடையவர் என்பது தெளிவாக விளங்குகிறது.

பெண்கலையில் தலைவன் பேச்சு காதற்பிரபந்தத் தலைவனைப் போல இருந்தாலும் மிக விரசமாக இல்லை. ஓசை நயமும் சொல் எழிலும் சிறப்பாக உள்ளன.

# 14. குன்றக்குடி வேலவர் வண்ணம்

## தலைவன் வேண்டல்

தானதந்தனனா தன தானதந்தனனா தன
தான தந்தன தானதந்தன
தான தந்தன தந்தனதான
(தொ) தானான தானதன தானனா

தேவகுஞ்சரியார் மலர் நீபமஞ்சரியார் புவி
தேட ருஞ்சதுர் வேத மந்திர
ரூபர் ஐங்கரர் தன்றுணையாளர்
சூடகங்கையினார் ஒரு சூனமங்கையினார் கவி
தூதர் அம்பிகை பாகர் சங்கரர்
நாக கங்கணர் தந்தருள்பாலர்
சேவலங்கொடியார் திரு ஏரகங்குடியார் நிறை
சீத சந்த்ரமு கார விந்தம்ஓர்
ஆறுகொண்டப ரங்கிரிவாசர்
தேனாறு சூழுமலை நாதனார் (1)

தேவர்அன்புடையார் வெகு பூதவன்படையார் வலு
தீரன் என்றுசொல் சூரன் நெஞ்சுப-
கீர்எ னும்படி சென்றடர்கோபர்
வேதசிந்தனையார் வளி பாதவந்தனையார் மக
மேரு வும்புடை சாய வன்சிறை
வீசி வந்தரு ளும்பரியாளர்
தீவரம்புரியார் தரை மாவலம்புரியார் சசி-
தேவி மங்கல நாண்நெ கிழ்ந்துவி -
டாமல் அன்றுபு ரந்தகுமாரர்
தேர்ஏறி மீனமதி ஊருவார் (2)

ஆவல்கங்கையிலார் மன தூடுசங்கைஇலார் மணின்
ஆசை யும்பொனின் ஆசை யும்பெணின்
ஆசை யுந்தணி உம்பர்கள்நேயர்
ஆறிரண்டுகணார் இரு கூறிரண்டுபெணார் பொருள்
ஆதி அந்தம்இ லாமல் நின்றருள்
வேத தந்த்ரசு யம்பிரகாசர்
ஆசைவஞ்சரியார் அவ ரூடுசஞ்சரியார் அடி-
யார்நி னைந்திடும் வேளை வந்தெது

வேணும் என்றுபு ரந்திடுசீலர்
வானோர்கள் சேனைபதி காவலார் (3)

ஆடிடங்களிலே பெரி யோர்மடங்களிலே மதில்
ஆலயங்களில் வீதி மண்டப
மாகிடங்களின் முன்றிலி லேசெய்
கோபுரங்களிலே நிறை பூமரங்களிலே அருள்
கூறும் அந்தணர் மாட பந்தியில்
வாச நந்தவ னங்களி லேசெய்
ஆர்வரம்பினிலே அதில் ஊர்பரம்பினிலே புனல்
ஆரும் நந்துகள் ஊரும் இங்கிதம்
மேவு குன்றையில் நின்றருள் வேலர்
மாயூர நாமகிரி மீதிலே (4)

பூவருந்திருவே மத னார்தொழுங்குருவே அநு -
போக புஞ்சம தாக வந்திளை
யோர்ம யங்கவ ருங்கிளியேஎன்[1]
ஆசையின்கனியே உயிர் போலவுந்தனியே எனை
ஆள வந்தக ணே!அ ணங்கர-
சே!இ ணங்குவ தென்று?வில் வேள்செய்
பூசல்கண்டனையே மதி சூறைகொண்டனையே அநு-
பூதி தந்தடி யேனை யுங்குடி
ஊழி யங்கொள நன்றிதுவேளை
ஏனோபெ ணேமனதி லாததே ? (5)

போகரஞ்சகியே அறி யாவஞ்சகியே பழி
போடுவன்பழி பாரி என்றுனை
யாவ ருங்சொல நிந்தனைஏறும்
லாடசங்கிலி போல் மயல் மூளவும்பலிபோல் முலை
நாடும் மஞ்சளின் வாடை சந்தன
வாடை என்றலை மண்டையினூடு
போய்உறுஞ்சுதடீ! வசை ஊர் அறிந்ததடீ! அடி
போடி! மிண்டுசெ யாது பஞ்சணை
மீது கந்து[2] க லந்தணையாமல்
ஏதேது தாமதம் இ தாகுமோ? (6)

1.பெண் 2. வந்து

கோபம்என்சொல் அடீ! மனம் நீடுவன்கல்அடீ! வலு
கோரம்; உன்பெரு மோகம் வந்துநெ-
யாய்நி ரம்பஎன் நெஞ்சது காமன்
ஓமகுண்டம் அடீ! இது தான்ஓர்கண்டம்அடீ! இனி
ஊமை கண்டக னாவில் நெஞ்சுட -
னேபு லம்பலி டும்[1] படி ஏது
கூடல்கண்டிலையே மொழி ஏதும்விண்டிலையே ஒரு
கோடி கும்பிடு போட நின்றுப -
ராமு கஞ்செய்தி டும்பழி[2] பாவம்
நான்ஒவி டேன்உயர்சை யோகமே (7)

கோவையின்கனிவாய் மொழி கூறுநன்கனிவாய் அநு-
கூலம் ஒன்றுஇ லாமல் இந்திர
சால விந்தைகள் உன்றொழிலோ? உன்
வீடுதஞ்சம்அடீ! இது வேபிரபஞ்சம்அடீ! சன-
மேநி றைந்தஉ ளூரில் இங்கிது
கேள்வி உண்டுயர் வெம்பனை கோடி
கோடிஉண்டடியோ! தெரு வீதிஉண்டடியோ! புனை
கோல என்புவி பூதி கண்டவர்
பேயன் என்றிட மன்றினில்ஏறி
நாணாமல் ஊர்வன்மடல் நாளையே (8)

## தொங்கற்றாழிசை

தேனாறு சூழுமலை நாதனார்
தேர்ஏறி மீனமதி ஊருவார்
வானோர்கள் சேனைபதி காவலார்
மாயூர நாமகிரி மீதிலே
ஏனொபே ணேமனதி லாததே?
ஏதேது தாமதம் இ தாகுமோ?
நானோவி டேன்உயர்சை யோகமே ;
நாணாமல் ஊர்வன்மடல் நாளையே.

1. புலம்பி விடும்படி 2. செய் குறும்பென

# 14. குன்றக்குடி வேலவர் வண்ணம்

## குறிப்புரை

1. தேவகுஞ்சரியார் - தெய்வயானை யம்மையை உடையவர்; நீபமலர் மஞ்சரியார் என மாறுக, கடம்பமலர் மாலையை அணிந்தவர்; புவி - இடவாகு பெயராக உலகில் உள்ள மக்களை உணர்த்திற்று; சதுர் வேத மந்திர ரூபர் -நான்கு மறைகளாகிய மந்திரங்களையே தன் வடிவாகப் பெற்றவர். வேத மந்த்ரசொ ரூபா நமோநம (திருப்புகழ் 104); ஐங்கரர்தன் துணையாளர் - ஐந்து கைகளை உடைய விநாயகப் பெருமானுக்கு இளைய சகோதரர்; சூட கங்கையினார்- சடையில் கங்கையாற்றை உடையவர்; சூனம் அம் கையினார் - மான் ஏந்திய அழகிய கரர்; கவி தூதர் - சுந்தரமூர்த்தி நாயனாருக்காகப் பரவை நாசியார்பால் தூது சென்றவர், இந் நாயனாருடைய கவிதைகளை இறைவன் மிக விரும்பியதாலேயே தூது சென்றார் ( அடியார் என்பதற்காக மட்டும் அன்று) என்ற கருத்தில் கவிதூதர் சிவப்பிரகாசரும்,

"படியிலா நின்பாட்டில் ஆரூர! நனிவிருப்பன் பரமன் என்ப
தடியனேன் அறிந்தனன்வான் தொழும்ஈசன் நினைத்தடுத்தாட் கொண்டும் அன்றித்
தொடியுலாம் மென்கைமட மாதர்பால் நினக்காகத் தூது சென்றும்
மிடியிலா மனைகள்தொறும் இரந்திட்டும் உழன்றமையால் விளங்கு மாறே"

(நால்வர் நான்மணி மாலை 3)

என்றது இது கருதியே ; நாக கங்கணர் -பாம்புகளைக் கைவளையல்களாக அணிந்தவர்; கங்கையினாரும் அங்கையினாரும் தூதரும் பாகரும் சங்கரரும் கங்கணரும் ஆகிய சிவபெருமான் தந்தருள் பாலர் என்பது முடிபு; திருஏரகம் - ஆறுபடை வீடுகளுள் ஒன்றாகிய சுவாமிமலை, இன்றைய ஆய்வாளர்கள் எப்படிக் கூறினாலும் கௌமாரர்களுக்கு ஏரகம் சுவாமிமலையே ; நிறை சந்த்ர, சீத சந்த்ர எனத் தனித்தனிக் கூட்டுக, முழுமதி குளிர்ந்த மதி; பரங்கிரி வாசர் - திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ளவர்; தேனாறு - குன்றக்குடித் தலத்திற்கு வடகிழக்கே ஓடும் நதி, வானா டேழ்நா டும்புகழ் பெற்றிடு தேனா றேசூழ் துங்கம லைப்பதி (திருப்புகழ் 317).

2.பூதவன் படையார் - பூதகணங்களாகிய வலிமை மிக்க சேனையை உடையவர்,

" இந்த வண்ணமாம் சாரதப் படையினர் ஈண்டித்
தந்தம் வெஞ்சமர்த் தலைவர்க ளோடுசண் முகன்பால்
வந்து கைதொழு தேத்தியே இறுதிசேர் வைகல்
அந்த மில்புனல் அண்டம துடைத்தென ஆர்த்தார் " (கந்தபுராணம் 1-19-11)

சென்று அடர் கோபர் - படையெடுத்துப் போய்ப் போரிடும் அளவு சினத்தை உடையவர்; வேத சிந்தனையார் - நான்மறைகளால் ஆராயப்படும் பரம்பொருள்; வளி பாத வந்தனையார் - வள்ளி நாச்சியாரின் திருவடிகளைக் காதலாற் பணிபவர், பணியா எனவள் ளிபதம் பணியும் தணியா அதிமோ க!தயா பரனே (கந்தரநுபூதி 6) புடை சாய -ஒரு பக்கமாகச் சாயும்படி; வன் சிறை வலிமை மிக்க இறகுகளை; பரியாளர் - வாகனத்தை உடையவர், மயில்வாகனர்,

"குசைநெகி ழாவெற்றி வேலோன் அவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்து
அசைபடு கால்பட் டசைந்தது மேரு ; அடியிடஎண்
திசைவரை தூள்பட்ட ; அத்தூளின் வாரி திடர்பட்டதே" (கந்தரலங்காரம் 11)

தீவரம்- இரட்டுறமொழிதலாகப் பெருஞ்சினம், கொடுமை ஆகிய இருபொருள்களையும் கொள்க ; புரியார் - விரும்பமாட்டார், கருணை உள்ளவர்கட்கே அருள்வர் என்றவாறு ; மா தரை என மாறுக; மா தரை வலம்புரியார் - பெரிய உலகத்தை ஒருநொடியில் வலமாக வந்தவர். இது மாங்கனி பெறுவதற்காக ; வரலாறு வெளிப்படை; சசிதேவி - இந்திராணி; மங்கலநாண் - தாலி ; அன்று - முற்காலத்தே ; புரந்த -சூரனைக் கொன்று இந்திரன் உயிரைக் காப்பாற்றிய சசிதேவி மாங்கல்ய தந்துரட்சாபரண, " வெள்ளி மலை எனவே கால்வாங்கி நிற்கும் களிற்றான் கிழத்தி கழுத்திற்கட்டு நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி" (கந்தரலங்காரம் 21,77) குலிசாயுதத் திந்த்ராணி மாங்கல்ய தந்துரட் சாபரண இகல்வேல் விநோதன் (மயில் விருத்தம் 1) என்னும் அருணகிரியாரின் திருவாக்கின் எதிரொலி இது; மீனமதி - (சூரியன் மீனராசியில் இருப்பதால் இப்பெயர் பெற்ற) பங்குனி மாதத்தில், குன்றக்குடியில் பங்குனி உத்திரம் சிறப்பு.

3. ஆவல் கங்கை இலார் - (இறைவன் மீதுள்ள) விருப்பத்தில் எல்லை இல்லாதவர்களும், கங்கு - எல்லை, ஐ - இரண்டன் உருபு ; சங்கை -ஐயம், இறைவன் தம்மை ஆட்கொள்வானோ மாட்டானோ என்னும் சந்தேகம்; மணின் - மண்ணின்; தணி - (மூவாசைத் தீ) ஆறிவிட்ட ; தணி என்னும் சொல்லாற்றலால் ஆசைத்தீ என்பது பெற்றாம்; உம்பர்கள் - உயர்ந்தோர், கள் விகுதிமேல் விகுதி; இரு கூறு- (வலது இடது ஆகிய ) இரண்டு பக்கங்களிலும் ; இரண்டு பெணார் - வள்ளி தெய்வசேனை ஆகிய மனைவியரை உடையவர்; பொருள் - பொருட் சிறப்புடையதும்; ஆதி அந்தம் - முதலும் முடிவும், உம்மைத்தொகை ; வேதம் தானே தோன்றியதும் அழிவற்றதும் ஆகும் என்பது கருத்து ; வேத தந்த்ர - வேதமாகிய நூலில், இனி உம்மைத்தொகையாக்கி வேத ஆகமங்களின் கண்ணே எனினுமாம்; சுயம்பிரகாசர் -தானே ஒளிரும் தூய ஒளிமயமான பரம்பொருள்; யார் ஆசை வஞ்சர் அவரோடு சஞ்சரியார் - எவர் பேராசையும் வஞ்சகமும் உடையவர்களோ அவர்களோடு வசிக்காதவர்.

"யகரம் ஒழிந்த ஈற்றுஒற்று எதனொடும்
யகரஉயிர் மெய்வரில் இகரம்இடை தோன்றும் "
(ஏழாம் இலக்கணம் 70)

என்னும் விதிப்படி வஞ்சர் யார் வஞ்சரியார் ஆயிற்று; "வந்து எது வேணும் என்று;" அடியவர் இச்சையில் எவைஎவை உற்றன அவை தரு வித்தருள் பெருமாளே (திருப்புகழ் 732); சேனைபதி - படைக்கும் ஊருக்கும், உம்மைத்தொகை ; 1. வானோர்கள் சேனைக் காவலார் -அமரர் குறைமுடித்து உதவு சேனாபதிப் பெருமாள் (முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் - காப்பு3)2. வானோர்கள் பதிக் காவலார் - தேவேந்த்ர லோகங்காத்த பெருமாளே (திருப்புகழ் 1160) ;

4. மண்டபம் ஆகு இடங்களின்; முன்றிலிலே - முற்றத்தில்; மாடபந்தி - மாடி வீடுகளின் வரிசை ; வாச -நறுமணம் மிக்க ; நந்தவனங்களில்- பூஞ்சோலைகளில்; செய் ஆர் வரம்பு - வயல்களிற் பொருந்திய வரப்பு; ஊர் -பரந்துபட்ட ; பரம்பினில் - விசாலமான இடங்களில்; ஏகாரங்கள் அனைத்தும் எண்ணுப்பொருளன ; புனல் ஆரும் -நீரில் வசிக்கும்; நந்துகள் - சங்குகள் ; ஊரும் - தவழ்ந்து திரியும்; இங்கிதம் மேவு - இனிமை பொருந்திய ;குன்றை - குன்றக்குடி ; மாயூர நாம கிரி -மாயூரம் எனப் பெயர் பெற்ற மலை ; பிரமனின் வாகனமாகிய அன்னப் பறவையும், திருமாலின் கருடனும் மயிலுக்கு வேகமாகப் பறக்கும் திறமை இல்லை என இகழ்ந்ததாகக் கேள்வியுற்ற மயில் அவற்றை விழுங்கிவிட்டது.முருகன் இரண்டையும் கக்கும்படி ஆணையிட்டார். அடியார்களுக்கு இடையூறு செய்த பிழைக்காக மயிலை மலையாக ஆகும்படிச் சபித்தார், அம் மலையே மயூரகிரி, சிகிமலை,சிகண்டி மலை தோகைமலை, மயில்மலை என்றெல்லாம் பரியாயப் பெயர்களில் சொல்லப்படும் குன்றக்குடி.

இவ் வரலாற்றின் விரிவை மயூரகிரிப் புராணத்தில் காண்க ; "வானாடு புகழ்நாடு தேனாறு புடைசூழும் மாயூர கிரிமேவும் பெருமாளே" (திருப்புகழ் 374)

5. பூவரும் -தாமரையில் தோன்றிய ; அநுபோக புஞ்சம் அது ஆக வந்து - இன்பம் துய்த்தலின் திரண்ட வடிவமாய்த் தோன்றி; தனியே- தோழியர்கள் யாரும் இல்லாமல்; கணே-கண்ணே ; அணங்கு அரசே -மகளிருக்குத் தலைவியே, காதல் துன்பம் தருவதில் தலைசிறந்தவளே எனினும் ஆம்; இணங்குவது - எனக்கு உடன்படுதல்; என்று - எந்நாள்; வில்வேள் -(கரும்பு) வில்லினை உடைய மாரன்; பூசல் - கலகம்; மதி சூறை கொண்டனையே- என் அறிவைக் கொள்ளை கொண்டு விட்டாயே ; அநுபூதி தந்து -உன்னோடு கூடுவதாகிய அநுபவத்தை அளித்து; குடிஊழியம் கொள -குலத்தோடு அடிமையாகக் கொள்ளுவதற்கு; பெண்ணே ! இது வேளை அடியேனையும் அநுபூதி தந்து நன்று குடிஊழியம் கொள மனதுஇலாதது ஏனோ என்பது பொருள் முடிபு; முன்பு மதனார் தொழும் குரு என்றதற்கேற்ப அநுபூதி, குடிஊழியம் கொள்ளல் என்னும் உபதேச பரம்பரைச் சொற்களைப் பெய்தார்.

6. போக ரஞ்சகி -இன்பம் துய்ப்பதில் விருப்பம் உள்ளவள் ; யாவரும் உனைப்பழிகாரி என்று சொலப் பழிபோடுவன் என இயையும்; லாட சங்கிலி - ஒருவகைத் தாக்கணங்கு போலும்; மஞ்சளின் வாடையும் சந்தன வாடையும் மண்டையினூடு புலிபோல் போய் உறுங்சுதடீ என இயையும்; வசை- தலைவனின் காதலால் தோன்றிய அலர்; மிண்டு - பிடிவாதம்; பஞ்சணைமீது உகந்து கலந்து அணையாமல்; இது ஆகுமோ.

7. என் -ஏன்; சொல்- கூறுவாயாக ; வன்நீடு கல் என மாறுக, வன்மை மிகுந்த பாறாங்கல்; வலு- மிகுதியான ; கோரம் -அச்சத்தைத் தருகிறது; நெயாய் - நெய் ஆக ; ஓமகுண்டம் -வேள்வி செய்யும் பள்ளம்; கண்டம் - விபத்து; கனாவில் - கனவைப் போல ; புலம்பலிடும்படி - இரங்கிக் கொண்டிருக்குமாறு; ஏது - எதற்காக ; கூடல் கண்டிலை, காணல் உரிய செயலில் ஈடுபடல் என்னும் பொருட்டு; விண்டிலை - பேசவில்லை ; போடவும் என உம்மை விரிக்க ; நின்று - (இருந்த இடத்திலேயே) நின்று கொண்டு; பராமுகம் செய்திடும் பழிபாவம்; பராமுகம் - அசட்டை ; நான் உயர்சையோகமே ஓவிடேன்; சையோகம் - கலவியை ; ஓவிடேன் - விட்டுவிட மாட்டேன்.

"இந்நேரம் என்சொல் இரங்குவீர் எப்படியும்
மின்னே உமைக்கலந்து மேவாமல் போவேனோ" *(கூளப்ப நாயக்கன் காதல் 210)*

*8.* கோவையின் கனிவாய் - கொவ்வைப் பழத்தைப் போன்ற வாய்; நன்மொழி கனிவாய்க் கூறு என இயையும்; கனிவாய்- அன்பாக ; அநுகூலம் -விரும்பும் காரியம் கைகூடுதல்; எதிரில் காட்சிதந்துவிட்டுக் கைகளில் சிக்காததால் இந்திரசால என்கிறான்; உன்தொழில் இந்திரசால வித்தைகளோ என ஓகாரத்தை மொழி மாற்றுக ; பிரபஞ்சம் - உலகம் ; உளூரில் - உள்ளூரில்; கேள்விஉண்டு - கேட்பார் உளர்; பனை கோடி உண்டு - நிறையப் பனைமரங்கள் உள, இது நான் பனங்கருக்கை வெட்டிவந்து மடல் ஏறுவேன் எனும் குறிப்பு.

" புயலாகும் வெள்ளப் புணையா வனப்புயத் தாருவினம்
கயலாகும் கண்ணி! பலஉண்டு காண்; கடற் காசினியோர்க்
குயலாகும் காவற் குலோத்துங்க சோழன் உறந்தைமின்னார்
மயலாகும் வெள்ளப் புணைபெண்ணை யேஎன்னும் மாநிலமே"

(குலோத்துங்க சோழன் கோவை *129);*

புனைகோல - போட்டுக்கொள்ளும் வேடமாக ; என்பு விபூதி - எலும்பு மாலைகளையும் திருநீற்றுப் பூச்சையும், உம்மைத்தொகை ; பேயன் - 1.பேய் பிடித்தவன், 2. பேய்களோடு ஆடும் சிவபிரான்; கண்டவர் பேயன் என்றிட(வும்) நாணாமல் மன்றினில் ஏறி நாளையே மடல்ஊர்வன் என்பது பொருள் முடிபு.

# 15. செவ்வந்திநாதர் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இந்த வண்ணம் பேரூராதீனத்தில் உள்ள 166ஆம் எண் சுவடியில் முழுமையாகவும், 147ஆம் எண் சுவடியில் குறையாகவும் உள்ளது. சுவடியில் வண்ணக்குழிப்பும் மடலூர்வேன் எனல் எனத் துறைக் குறிப்பும் எழுதப் பெற்றுள்ளன.

இந்த வண்ணம் மற்றவற்றிலிருந்து ஒரு பெரிய வேறுபாட்டைக் கொண்டுள்ளது. பொதுவாக முதல் நான்கு கலைகள் பாட்டுடைத் தலைவனையும் அவனுடைய ஊரையும் பாராட்டும் ஆண்கலையாகப் புறப்பொருள் அமைதியுடன் அமையும். எஞ்சிய நான்கு கலைகளில் மட்டும் அகப்பொருள் துறை இடம்பெறும். ஆனால் இதில் முதல் இரண்டு கலைகளே ஆண்கலை. தொடர்ந்து வரும் ஆறுகலைகளும் பெண்கலை. இப்பதிப்பாசிரியர் அறிந்தவரையில் இத்தகைய வண்ணம் இது ஒன்றுதான்.

இதன் நடை மிகவும் மிடுக்கு வாய்ந்தது. முதல் கலையில் பாட்டுடைத் தலைவராகிய சிவபிரானின் பெருமைகள் திரிசிரபுரத் தலச்செய்திகளோடு கூறப்படுகின்றன. இரண்டாவது கலையில் இயற்கைச் சிறப்பு இடம் பெற்றுள்ளது. ராசகம்பீரநாடு, சிரகிரி, உறையூர் ஆகிய இடப்பெயர்களும் தாயுமானவர், செவ்வந்தி நாதர் ஆகிய இறைவன் பெயரும், மட்டுவார் குழலி என்ற இறைவியின் திருநாமமும் குறிக்கப் பெற்றுள்ளன.

ஆறு கலையளவு நீண்ட தலைவனின் கூற்று காதற்பிரபந்தத்தில் வரும் தலைவனைப் போலவே உள்ளது. மெய்யுறு புணர்ச்சியைச் சிலேடை வகையால் சொன்னாலும் விரசமாகத்தான் உள்ளது. எட்டாங் கலையின் இறுதிப் பகுதியில் மடலைப்பற்றிய பேச்சு வருகிறது. ஓசைநயம் மிக்க சிறு தொடர்களாலான விளிகளில் நல்ல சொல்லின்பம் விளைகிறது.

# 15. செவ்வந்தி நாதர் வண்ணம்

## தலைவன் வேண்டல்

தானனந் தனதான தானனந் தனதான
தானனந் தனதான தானனந் தனதான
தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தய்யந்ததான
(தொ) தத்தனா தனதான தனனா

நாவலன் பணியால்மி னாரிடந் தனி நேமி-
யோன் அறிந் தறியாத பாதபங் கயம் நோவ
இருகால்ந டக்கும்ஒரு சிவன்;வேளை நெற்றியில்
விழியால்எ ரித்துயிரொ டுய்யென்றசோதி
ஆனநன் றுடையார்; பொன் வாசிகண் டவர்;கால
காலர்;அண் டகடாகம் ஆளவந் திடுசூரன்
விழவேல்எ டுத்தவனொ டிபமாமு கத்தனையும்
மகிழ்வோடு பெற்றவர்;தம் மெய்யன்பர்மீது
நாளும்அன் புடையார்; கல் யாணசுந் தரசோழன்
ராசமங் கையர்ஆவி வாடுமுன் செலுநாதர்;
ஒருபூவி னுக்கரிய உறையூர்அ ழித்தசிவன்
மலர் ஆச னத்தயனை வெல்லுஞ்சர்வேசர்
மட்டுவார் குழல்பாகம் உறைவார் (1)

நாகிளங் கமுகூடு தாவிவிண் தொடுகாவின்
மீதடர்ந் தகலாவில் வாளையும் படமோத
சுளையோடு நித்திலமும் இழையோட, மெத்தவளை
வளையோட, மைக்குருகு செய்யெங்கும்ஓட
வாவியங் கண்உலாவி நீர்இலங் கிடு(வாச)
வாரிசந் (தரு) தேன்உ ணாமல்வண் டுகள்ஓட,
வலைகார ரைக்கறுவி வயலாள ரைக்கறுவி
வளர்சேனை யைக்கறுவி நில்லென்றுவாளை
நாளுமஞ் சில்உலாவு ராசகம் பிரநாடர்;
மாதுளம் புகழ்தாயு மானசங் கரதேவர்;
பணிநாதர்; மிக்கசிர கிரிநாதர்; பத்தர்இரு-
தயநாதர்; முத்திதரு செவ்வந்திநாதர்
சிட்டர்பால் அருள்நாதர் வரைமேல் (2)

மாவிளங் குயிலே! பொன் ஆனபைங் கிளியே!மி-
னார்தொழுந் திருவே!என் ஆவியின் துணையே!பெண்
அரசே!இ னிக்கும் ஒரு (கனியே!க ணைக்கவரும்)
(எழிலால்)செ கத்தைவிலை கொள்ளும் பெணே!வி-
நோதசம்ப் ரமமே!ஓ யாரமின் கொடியே!ச-
லாபஇங் கிதமே!உ லாசரஞ் சிதமே!பெண்
மணியே!ர திக்கணியும் அணியே! எ னக்கிருகண்
மாரன்இங் கிதமே!பு ராரிகங் கணமே!மு-
ராரிவங் கணமே!வி வேகமங் கையரே!பெண்
அமுதே! (த மிழ்க்கவிதை நலமே!)ச சிக்கும்ஒரு
முத்துமோ கனமே!என் உயிரே! (3)

மாதவம் புரிகாவில் நீவரும் படி(யாக-
வே) சிதம் பரசேவை யான்முனஞ் செய்தபேறு!
இனியார்எ னக்கொருவர் சரியே!உ மைத்தரிச-
னைசெய்தேம கிழச்சிஎன துள்ளங்கொளாது;
பூமடந் தையுமோமுனாள் அறிந் ததுதான்;வில்
வேள்மடந் தையுமோஇவ் ஊர்அறிந் ததுதான்;நல்
நுதல்ஆர்தி லொத்தமையும் அறிவேன்;உ மக்கிணைகள்
இலை; ஈது சத்யம்!இது வையங்கள்மீது
மால்எனுஞ் சொல்எலாம் உம் மால்அறிந் ததுதான்;என்
ஆசைஎன் பலநீர்;என் ஆவிஎன் பதுநீர்;என்
உயிராகி உற்றசக லமும் நீர்;எ னக்கரிய-
தினிஏது ரைக்கில்;இது மெய்யென்றுகாணும்
மற்றுநான் இதம்ஓத அறியேன் (4)

ஆவிநொந் தடியேன்ஐ யோஎனும் பழியாவர்
மேல்வருஞ் சொலும்;ஈது தேசம்மிஞ் சுரைகாணும்;
உமையார்வ ரச்சொனவர்? விளையாடி டச்சொனவர்?
இனியார்பொ றுப்பர்மயல்? நில்லும்பெணே!உம்
ஆணைநின் றிடும்;மாரன் ஆணைநின் றிடும்;வேள்மின்
ஆணைநின் றிடும்;நீர்என் ஆணைநின் றிடும்;வாரும்;
இருவோர்வ ழக்குவகை அறவேணும் இப்பொழுது;
அடியேன்உ மக்கடிமை; அல்லென்றபோதென்
ஆசைவம் பலஓர்வில் மாரனின் சடைபோஉ -
ளீர்;உம்வஞ் சகமோ?கல் ஆனநெஞ் சகமோ? இது
எனபாவம்? மெத்தவசம் அலமோகம்? இத்தனைக-
டினம்ஏது மக்குமனம்? உள்ளன்புவேணும்;
நிற்கிறீர் மடிமீதில் இருமே; (5)

ஆடல்வெஞ் சிலைவேடன் (வாச) அம் புகள்பாயும்
ஆவிவெம் புது;மேனி யேவெதும் புதையோ!இது
அடியேன்அ டுத்தவிஷ கடிநேரம்; இப்படிக-
டினமாய்இ ருப்பதிது பொய்யென்றுநாணும்;
ஏழைஇந் திரசாலம், மாமயெந் திரசாலம்,
ஆனதந் திரவாதம், வீறுமந் திரவாதம்,
ரசவாத வித்தைமுதல் அறிவேன்;உ மக்குவெளி
விடுவேன்;எ னைப்புணரும் மெய்யன்பினோடும்;
ஆடிவந் தவர்வாது பாடிவந் தவர்கோடி
கோடிபொன் பெறவேதி யாகம்இங் கிதமாக
அருள்வீர்;எ னக்குமது துடையேல்அ ரைப்பணமும்
உதவாதி ருப்பதென? சொல்லும்பெணே!என்?
இப்பரா முகம்ஏது புகழ்வீர்; (6)

பாவலன் தமியேன்உம் மீதுமஞ் சரிகோவை
மாலையும் சொலுவேன்;அ லால்நிதம் பமதான
அரவாட மிக்கபெரு விரல்ஊணி, முத்திதர
விளையாடு சித்தன் எனை விள்ளென்றுகேளும்;
மேரிலும் பெரிதான வீறுகொங் கைகளான
மாமதம் பிடியானை மீதில்அங் குசமாமன்
உகிரால்அ ழுத்தி, ஒரு கையிலேஅ டக்கி,இரு
துடையால்நெ ருக்கி,நிலு நில்லென்றும்ஏறு
பாகன்;மங் கலமோக மாகவந் திடும்நாக-
ரீகம்மிஞ் சியவாகன்; ஆசைபொங் கல்குல் ஆன
ரதம்ஏறி, அர்ச்சுனனு டையபாகன் வெட்க, வெகு
விதமாய்ந டத்துவனை மெய்யென்றுபாரும்;
ரௌத்தன்நான் ஒருசாரி வரவோ? (7)

பாரில்வெஞ் சிலைவேள்தன் ஆகமஞ் சொலவேவ-
ழாமலும் பயில்வாய டாஎனும் பரிவாக;
அரைமாநி லத்தைஉழ அடையோலை கட்டளைசெய்-
தருள்வீர்;அ ளித்தருள வில்லங்கம்ஏது ?
ஆயிரம் பெயர்ஏவ லாளர்உண் டவரூடு
யானும்ஒன் றெனவோ?உம் ஆசையங் கடலான
மதவேள்அ ரிக்குவிறல் மலையாக நட்டமுது
கடைவேன்;அ திற்பெருகு வெள்ளங்கள்ஆறு

பாயஅங் கதுகால்கள் ஊறிஎங் கணும்ஓடும்;
(கூறும்)அந் தரபூசை காதில்மந் திரம்ஓத
இதுவேவ குத்தகணம் அபிஷேகம் முத்திபெறு
நிருவாண திட்சைபெற; அல்லென்றபோது
வெட்டுவேன் ஒருகோடி பனையே.

(இவ் வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை)

# 15. செவ்வந்திநாதர் வண்ணம்

## குறிப்புரை

1. நாவலன் - சுந்தரமூர்த்தி நாயனார்; மினாரிடம் - பரவை நாச்சியாரிடம்; தனி நேமியோன் - ஒப்பற்ற சுதரிசன சக்கரத்தை உடைய திருமால்; அறிந்து - ஒருமுறை தாமரை மலர்களால் அருச்சிக்கும்பொழுது அறிந்தும்; அறியாத - மற்றொரு முறை ஏனமாகச் சென்று தேடியபோது காணமுடியாததுமான, இரு வரலாறுகளும் வெளிப்படை ; இருகால் - இருமுறை ; ஒரு சிவன் - ஒப்பற்ற சிவபெருமான் ; இருகால் ஒருசிவன் முரண்தொடை ; பரவைமனை மீதிலன்று தூது சென்ற வரலாறு வெளிப்படை ; வேளை - மன்மதனை ; எரித்து உயிரொடு உய் என்ற சோதி; பார்வதி திருமணத்தில் இரதி தேவியின் வேண்டுகோளின்படி இறைவன் காமனை உயிர்ப்பித்தார்,

"எரிபுனை நமது நோக்கால் இறந்தநின் உடலம் நீறாய்
விரைவொடு போயிற் றன்றே வேண்டினள் இரதி; அன்னாட்கு
உருவமாய் இருத்தி ஏனை உம்பரோ டிம்பர்க் கெல்லாம்
அருவினை யாகி உன்றன் அரசியல் புரிதி என்றான்" (கந்தபுராணம் 1 - 10 - 89)

நன்றுடையார் - செவ்வந்தி நாதரின் திருப்பெயர்களுள் ஒன்று

"நன்றுடை யானைத் தீயதி லானை நரைவெள்ளேறு
ஒன்றுடை யானை உமையொரு பாகம் உடையானை
சென்றடை யாத திருவுடை யானைச் சிராப்பள்ளிக்
குன்றுடை யானைக் கூறஎன் உள்ளம் குளிரும்மே" (தேவாரம் 1 - 98 - 1)

நன்றுடையான், தீயதில்லான் என இத்தலத்திலுள்ள இரண்டு தீர்த்தங்களும் வழங்கப்படும், "நன்றுடையானையும் தீயதில் லானையும் நற்றிருத்தம் என்றுடை யானைச் சிராமலை யானை" (சிராமலைக் கோவை 172); பொன்வாசி கண்டவர் - திருவீழிமிழலையில் அப்பருக்கும் ஞானசம்பந்தருக்கும் முறையே வட்டம் தரவேண்டாத நாணயத்தையும், கழிவு பிடிக்கப்படும் நாணயத்தையும் வழங்கியதைக் கருதுகிறார் போலும் ; கால காலர் - இமயனை உதைத்து அழித்தவர், திருக்கடவூர் நிகழ்ச்சி வெளிப்படை ; அண்ட கடாகம் - உலக உருண்டையின் மேல் விதானம்; இபமா முகத்தனையும் - யானைமுக விநாயகரையும்; கல்யாணசுந்தர சோழன் வரலாறு விளங்கவில்லை ; உறையூர் அழித்த வரலாறு:- சாரமா முனிவர் என்பார் சூரவாதித்த சோழன் ஆட்சிக்காலத்தில் நாகலோகத்திலிருந்து செவ்வந்திமலரைக் கொண்டு வந்து திரிசிரகிரியில் நந்தவனத்தில் பயிரிட்டு, நாள்தோறும் தாயுமானவப் பெருமானுக்கு அணிவித்து வந்தார். இவனுக்குப் பிறகு வன்பராந்தக சோழன் என்பான் பட்டத்திற்கு வந்தான். இவன் காலத்தில் ஒரு பூவாணிகன் தினந்தோறும் சாரமாமுனிவரின் சோலையில் செவ்வந்தி மலர்களைத் திருடி அரசனுக்குக் கொடுத்து வந்தான். அரசன் இந்தத் திருட்டை அறிந்தும் தடுக்கவில்லை. அரசனுக்கு இரு மனைவியர். இருவருக்கும் திருடப்பட்ட செவ்வந்தி மலர்களை அரசன் கொடுத்து வந்தான். மூத்தவள்

பட்டத்தரசியாகிய புவனமாதேவி என்பாள் இறைவனுக்கே உரிய மலரைத் தான் சூடப் பயந்து இறைவனுக்கே அணிவித்து வந்தாள். இளையவள் தானே சூடி மகிழ்ந்தாள். சாரமா முனிவர் மன்னனிடம் முறையிட்டும் அவன் கேட்காததால் இறைவனிடம் முறையிட்டார். இறைவன் சினங்கொண்டு உறையூரை மண்மாரி பெய்யச் செய்து அழித்தார். மூத்த அரசி மட்டும் உயிர் தப்பினாள்.

இதன் விரிவைச் செவ்வந்திப் புராணத்தில் காண்க. "செவ்வந்திக்காக உறந்தையின் மண்மாரி சீறிவிடுத் தெவ்வம் துடைத்த சிராமலைச் செல்வன்" (அ.க. பிள்ளையின் திரிசிராமலைக் கோவை 13); மலர் ஆசனத்து அயனை - தாமரைத் தவிசினை உடைய பிரமதேவனை; பிரமனை வென்றதாவது:- திருமாலும் அயனும் இறைவனின் அடிமுடி தேடிய காலையில் பிரமன் முடியைக் கண்டதாகப் பொய்யுரைத்தான்; அதனால் விளைந்த பாவத்தைத் திரிசிரா மலையில் செவ்வந்தி நாதரை வழிபட்டே தீர்த்துக் கொண்டான். மட்டுவார் குழல்- இத்தலத்தில் இறைவியின் திருநாமம் மட்டுவார் குழலி என்பதாகும். "சீர்பூத்த தார்மட்டு வார்குழல் பாகர் சிராமலைவாழ் தார்பூத்த கொன்றை அணிதாயுமானவர்" (சிராமலைக் கோவை - பழையது - காப்பு).

2. நாகுஇளம் - ஒருபொருட் பன்மொழி; விண்தொடுகா - வானளாவிய சோலை ; படமோத - படுமாறு மோத ; மோதச் சுளை எனற்பாலது வண்ணம் நோக்கி இயல்பாகப் புணர்ந்தது; இழையோட - கலக்க; மெத்த வளை - மிகுதியான சங்குகள்; வளை ஓட - தாம் வாழும் பொந்துக்குள் விரைவாகச் செல்ல ; மைக்குருகு - நீர்ப்பறவை ; செய் - வயல், வாவியம்கண் - குளத்தில், அம்சாரியை; வாச வாரிசம் - மணமிக்க தாமரை ; வலைகாரர் - மீன்பிடிப்பவர்; வயலாளர் - உழவர்; ராசகம்பிரநாடர் - திருச்சிப் பகுதி முன்நாளில் இப்பெயரால் விளங்கியதை அருகில் உள்ள வயலூரைக் குறிப்பிடுமிடத்து அருணகிரிநாதர்,

"ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதேம னோகர
ராஜ கம்பிர நாடாளு நாயக வயலூர" ( திருப்புகழ் 104 )

எனக் கூறுவதாலும் அறியலாம்; மாது உளம் புகழ் ஆன சங்கரதேவர் - இரத்தினாவதியாக பெண் உள்ளத்தால் போற்றும் அன்னையுமாகிய சிவபெருமான். இவ் வரலாறு வருமாறு: - முன்னொரு காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் இரத்தினகுப்தன் என்னும் பெருவணிகன் ஒருவன் இருந்தான். அவன் தன் மகள் இரத்தினாவதி என்பவளைத் திரிசிராமலையில் இருந்த தனகுப்தன் என்பவனுக்குத் திருமணம் செய்து கொடுத்திருந்தான். உரிய காலத்தில் இரத்தினாவதி கருவுற்றாள். பேறுகாலம் நெருங்கியது. உதவிக்கு வரவேண்டிய கடப்பாடுடைய தாய் காவிரியில் ஏற்பட்ட பெருவெள்ளம் காரணமாகப் புகாரிலிருந்து வர இயலவில்லை. இரத்தினாவதியின் சிவபக்தியின் காரணமாக இறைவனே அவளுடைய தாயின் வடிவத்தில் வந்து சில நாள் தங்கி வேண்டிய உதவிகள் செய்தார். ஆற்றில் வெள்ளம் வடிந்து உண்மைத்தாய் வந்த பிறகு இறைவர் தம் உண்மை உருவத்தைக் காட்டி மறைந்தார். இதனால் செவ்வந்திநாதர் தாயும் ஆனவர் எனச் சிறப்புப்பெயர் பெற்றார். பணி நாதர் - நாகங்களுக்குத் தலைவர், ஆதிசேடன் செவ்வந்தி மலர்களைச் சாரமா முனிவருக்குக் கொடுக்க அவை

நாள்தோறும் அணிவிக்கப் பெற்றன; சூரவாதித்த சோழனுக்குத் தன்மகள் காந்திமதியையும் தான் வழிபடும் இலிங்கத் திருமேனியையும் சேடன் வழங்கினான்; செவ்வந்திநாதருக்கும் நாகலோகத்திற்கும் உள்ள இத் தொடர்பு பற்றி பணிநாதர் என்றார், விரிவைச் செவ்வந்திப்புராணத்துட் காண்க ; சிட்டர்பால் - நல்லவர்களுக்கு, ஏழன்உருபு நான்கன் பொருளில் வந்தது, ''மண்மேல் விளக்காய் வரத்தில் பிறந்தாள்'' (சிந்தாமணி 24) என்புழிப்போல.

3. மினார் - மின்னார், மின்னலையொத்த அழகிய மகளிர்; கணைக் கவரும் - விழிகளைக் கவருகின்ற ; செகத்தை - உலகை ; விநோத சம்ப்ரமம் - மகிழ்ச்சியின் நிறைவு; சலாப - சல்லாப; இங்கித சலாபமே என மாறுக, இடத்திற்கும் காலத்திற்கும் மிகப் பொருந்தும்படி உரையாடுதல், இங்கு செயலையே கருத்தாவாகக் கூறியது உபசார வழக்கு; உலாச ரஞ்சிதம் - பெருமகிழ்ச்சியைத் தருகின்ற இன்பப்பொருள்; ரதிக்கு அணியும்; அணி - ஆபரணம்; ப்ரதாப - வெற்றியை உடைய ; மாரன் இங்கிதம் - மன்மதனின் அடையாளமாக உள்ளவள்; புராரி - முப்புரங்களை எரித்த சிவபிரான்; அவன் கங்கணம் என்றது பாம்பை, அது நாகமாணிக்கத்தை உணர்த்திற்று; முராரி - முரன் என்னும் அசுரனை அழித்த திருமால்; வங்கணம் - நட்பு; சசிக்கும் ஒரு சசி - திங்களுக்கும் ஒரு சந்திரன்; எனக்கும் என்பதிலுள்ள உம்மையைப் பேரெழில் வாய்ந்த உனக்கு இணையாகத்தக்க தகுதியில்லாதவனாகிய எனக்கும் என்று இழிவு சிறப்பாகக் கொள்ள வேண்டும்; தலைவி தூய கற்புடையவள் ஆதலின் இவ்வும்மை எச்ச உம்மை அன்று.

4. தலைவி வருதற்கு அச்சோலை மாதவம் செய்துள்ளது என்கிறான், புரிகா - வினைத் தொகை,

குழற்கீதச் சொல்லீர் குளிர்காவில் இந்த
நிழல்செய்த மாதவமோ நின்றீர் (சித்திர மடல் 78)

சிதம்பர சேவை - தில்லைத் தலம் தரிசித்தவர்களுக்குச் சித்தாந்த முத்தியைத் தரவல்லது. அவ்வாறே தலைவி தன்னைத் தரிசித்த தலைவனுக்கு உலகாயத முத்தியைத் தரவல்லவள் என்பது குறிப்பு; பூ மடந்தையுமோ - மலர் மகளோ எனின்; வேள் மடந்தை - இரதி; திலொத்தமை - திலோத்தமை, சந்தம் நோக்கிய குறுக்கல் விகாரம்; வையங்கள் மீது - உலகியற் பொருள்களின் மேல்; மால் - (எனக்கு ஏற்பட்ட) ஆசை ; எனக்கு உலக இன்பங்களில் நாட்டம் ஏற்பட்டதே உன்னால்தான் என்கிறான்; எனக்கு அரியது இனி ஏது; ஒப்பு: "பெண்ணார் அமுது முயன்றெய்து மாறு பெறப்பகுந்தேம்; விண்ணார் அமுதும் முயன்றெய்த லாம்இனி மேதினிக்கே" (குலோத்துங்க சோழன் கோவை 19); இதம் - கேட்பவர்களுக்கு உவகை தரும் சொற்கள்.

5. யாவர்மேல் வரும் என்னும் வினா உம்மேல் வரும் என்னும் குறிப்பினது; மிஞ்சு உரை - மிகுதியாகப் பரவும் பழிமொழி; வேள்மின் - இரதி; அல் என்றபோது - என் அன்பை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால்; ஓர் என்றது ஒப்பற்ற என்ற பொருளில்; சடைவே - செய்யும் துன்பத்தை, ஏகாரம் அசை ; உளீர் - உள்ளீர், கருதுவீராக ; மெத்த மோகம் வசம் அல என இயையும்; வசம் அல - பொறுக்கும் தரத்ததன்று; இருமே - இரும்.

6. ஆடல் - வெற்றியையும்; வெம் - கொடுமையையும் பெற்ற ; சிலை வேள்தன் - வில்லை உடைய காமனின்; உடையானுடைய பண்புகள் கருவியின் மேல் ஏற்றிக் கூறப் பெற்றன ; வாச அம்புகள் - மணமிக்க மலர்க்கணைகள்; வெதும்புது ஐயோ ; விஷ கடி - கௌரி பஞ்சாங்கப்படி விஷநேரம் எனக் குறிக்கப்படும் தீய காலம்; கடி நேரம் - ஒரு பொருட் பன்மொழி; விஷம் கடி இரண்டும் வடமொழியாதலின் விஷகடி என இயல்பாகப் புணர்ந்தன; இது பொய் என்று நாணும் - உமக்கும் என் மீது ஆசை இருக்கிறது. விருப்பம் இல்லாததுபோல நடிப்பது பொய், இந்த வஞ்சகத்திற்காக நீர் வெட்கப்பட வேண்டும் என்கிறான், இவ்வெட்கம் காதல் பற்றிய எழில்நாணம் அன்று, பொய்ம்மை ஒழுக்கம் பற்றிய இழிநாணம்; மயெந்திர சாலம் - மயேந்திரசாலம் என்பதன் குறுக்கல் விகாரம்; ரச வாதம் - மதிப்பில் தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த கனிமங்களாக மாற்றுதல்; வெளி விடுவேன் - கற்றுத் தருவேன் என்பது கருத்து; எனக்கும் அது துடையேல் - எந்தனுக்கும் அவ்வாறு தியாகம் அருள்வதை விட்டுவிடாதீர்; அரைப் பணமும் - ஒரு ரூபாயில் எட்டில் ஒரு பங்கு தொகையையும்; (சில இடங்களில் 4 பணம் ஒரு ரூபாய், ஆனால் வேறு சில இடங்களில் 8 பணம் ஒரு ரூபாய், இங்கு 4 என்று கொண்டு உரைக்கப் பெற்றது.) இதே வாக்கியம், எனக்கும் உமது துடைஏல் அரைப்பணமும் உதவாது இருப்பது என எனப் பிரிந்து, தொடைகளைப் பொருந்தியதும் இடையின்கண் உள்ளதும் பாம்புப்படம் போன்றதுமான உறுப்பை அளிக்காதது ஏன் எனவும் பொருள் தருகிறது; ஒப்பு ; "இக்காரிகையைப் பணிவுற் றரைப்பணம் நாம்இரப் போம்;மறுப் பாள்எனிலோ அணிசொற் கனமும் தனமும் படைத்தாட்கிங் காம்இழிவே" (அ.க. பிள்ளையின் திரிசிராமலைக் கோவை8); பராமுகம் - அசட்டை செய்தல்.

7. மஞ்சரி, கோவை, மாலை - சிற்றிலக்கிய வகைகள்; நிதம்பம் அது ஆன - அது பகுதிப்பொருள் விகுதி, ஆதல் உவமைப் பொருட்டு; ஊணி - ஊன்றி, பேச்சு வழக்கு, சித்தன் எனை - சித்தனாகிய எந்தனை ; விள் என்று - சொல்லச் சொல்லி; மேரிலும் - மேருவிலும் எனற்பாலதில் உகரம் தொக்கது; அங்குசம்ஆ மன் - யானைத் தோட்டி போலப் பொருந்திய; உகிரால் - நகத்தால், உகரம் தொக்கது; அங்குசம்ஆ மன் - யானைத் தோட்டிப் போலப் பொருந்திய ; உகிரால் - நகத்தால்,

"கைஅமர்ந்த, கூரிநகம் என்னும் குடோரியிட்டு நான்ஏற
வீரமுலை யானையை என் மேல்விடீர்" (சித்திரமடல் 101)

மங்கல மோகமாக - திருமண விருப்பத்தோடு; வாகன் - அழகன், உனக்குத் தக்கவன் எனினுமாம்; அர்சுனனுடைய பாகன் - பார்த்தசாரதி, கண்ணபெருமான், பாகனும் என உயர்வுச் சிறப்பும்மை விரிக்க; கண்ணபிரான் பற்பல மகளிரை மருவிய இன்பக்கலை வல்லுநர்; நடத்துவனை - நடத்துபவனாகிய என்னை, வினையாலணையும் பெயர்; மெய் என்று - என் சொற்கள் உண்மையே என்னும் நம்பிக்கையோடு, ஐயம் வேண்டாம் என்றபடி; ரௌத்தன் - இராவுத்தன், குதிரைப்பாகன்; சாரி - சவாரி, குதிரை ஏறிச் செல்லுதல்.

8. வேள்தன் ஆகமம் - காம சாத்திரம், "மதனாகமத்தின் விரகாலே" (திருப்புகழ் 230); சொலவே - உபதேசிக்க ; வழாமலும் - மரபு தவறாமல், உம் அசை ; 'அடா பயில்வாய்' எனும் என்பது முடிபு; எனும் - என்று சொல்லும்; அரை மா நிலம் - ஐம்பது குழி வயல், மா என்பது

ஒருவேலியில் இருபதில் ஒருபங்கு அல்லது நூறு குழி; அடையோலை - அடகு வைக்கும் சாசனம்; கட்டளை செய்து - அறக்கொடையாக்கி, அன்னதானக் கட்டளை, தெப்பத்தேர்க் கட்டளை என்பது போல; அரை மாநிலம் என்னும் தொடர் இடையின் கண்ணுள்ள சிறந்த இடம் எனப் பொருள்தந்து வேறு பொருளும் பயக்கிறது. ஒப்பு: "சூலூர்ஆ லத்தூருக் கப்பால் குளத்தூரில் அரைமா நிலம் கொடுத்தால்" (சென்னிமலையாண்டவர் காதல் 399); வில்லங்கம் - தடை, இச்சொல் நிலம், வீடு போன்ற சொத்தின் உரிமை தொடர்பான உரையாடல்களில் இடம்பெறுவதாகும். நீ அடையோலை செய்ய வில்லங்கம் இல்லை என்றவாறு; அரி - கடல்; விறல் - வலிமை ; நட்டு அமுது; கால்கள் - 1. வாய்க்கால், 2. பாதம்; கால்கள் எங்கணும் ஊறிஓடும் என்க ; கூறும் அந்தர பூசை - சிறப்பித்துச் சொல்லப்படுகின்றதும் இரகசியமானதுமான வழிபாடு; காதில் மந்திரம் ஓதல் - மிக மெதுவாக மூலமந்திரங்களை உபதேசம் செய்தல்; அபிஷேகம் - ஒரு குரு தன் சீடர்களிற் சிறந்தவரைத் தனக்கு அடுத்தவராக நியமித்துப் புனிதநீராட்டுதல்; முத்திபெறு - வீட்டுப்பேற்றை அடைவதற்குரிய; திட்சை - தீட்சை என்பதன் குறுக்கல் விகாரம், தீட்சை என்னும் சடங்கு சமயம், விசேஷம், நிர்வாணம் என மூன்று, இவற்றுள் நிர்வாணம் மிக உயர்ந்ததும் வீட்டின்பம் தருவதும் ஆகும்; அபிஷேகம் திட்சை ஈரிடங்களிலும் எண்ணும்மை விரிக்க ; பூசைக்கும், ஓதவும், அபிஷேகமும் தீட்சையும் பெறவும், இதுவே வகுத்த தருணம் என்பது பொருண் முடிவு ; கூறும் அந்தரபுசை பிறர்அறியாமல் கூடுதலையும், காதில் ஓதுதல் அந்தச் சமயத்தின் உரைகளையும், அபிஷேகம் ஒருவரில் மற்றவர் மூழ்குதலையும், முத்திபெறுதல் முத்தங்களைப் பரிமாறிக் கொள்வதையும், நிர்வாண தீட்சை அத்தகைய காட்சி வழங்குதலையும் குறித்தன ; இல்லென்றபோது - என் வேண்டுகோளுக்கு உடன்படாத போது, மறுத்தால் என்றபடி; பனை வெட்டுவது மடல் ஏறுவதற்காக.



# 16. திருக்கழுக்குன்றம் வேதகிரிநாதர் வண்ணம்

ஆசிரியர் பெயர்அறியப்பெறாத இவ்வண்ணம் சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் டி. 371 ஆம் எண்ணிட்ட சுவடியில் உள்ளது அதில் வண்ணக் குழிப்போ துறைக் குறிப்போ தரப்பெறவில்லை.

இந்த வண்ணத்தின் நடை மிடுக்காக உள்ளது. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவராகிய சிவபெருமானின் சிறப்புகளோடு திருக்கழுக்குன்றத் தலச் செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

பெண்கலையின் முதற் கலை (ஐந்தாவது) அழகாக உள்ளது. அடுத்த மூன்று கலைகளும் கலவி விளக்கமே. எட்டாவது கலையின் ஈற்றில் மடல் எழுதுவேன் என்பது வேறு. வண்ண ஆசிரியர்கள் எப்படியாவது மெய்யுறு புணர்ச்சியை விரிவாக விளக்க முயன்றுள்ளனர் என்பதற்கு இந்த வண்ணமும் ஒரு சான்று.

இப்புலவரின் சொல்லாற்றல் மிக இனியது.

# 16. திருக்கழுக்குன்றம் வேதகிரிநாதர் வண்ணம்

## தலைவன் வேண்டல்

*தந்ததன தானத்த தந்ததன தானத்த*
*தந்ததன தானத்த தந்ததன தானத்த*
*தானதன தானதன தானதன தானதன*
*தானதன தானதன தானதனதான*
*(தொ) தனனதன தானதத்தந் தானனா*

மண்டலம்எ லாம்விட்டு யர்ந்துமிக மேலிட்ட
குன்றைமலை மேல்இட்ட தும்பை,அறு கார்எட்டு
மாதிரம்அ ளாவுகதிர் மாமதி,ப கீரதி,ப -
ணாமுடிஅ ராஅணியும் நீடுசடையாளர்;
சந்திரனும் ஆதித்த னுந்தழலும் ஆரப்பொ -
ருந்துகணர்; ஆலத்தை உண்டருள்கி ரீவத்தர்
மான்,மழு,க பாலம்,உயர் சூலம்உறை பாணியர்;கு -
லாவும்அர வாபரணர்; சீறிஎதிராக
வந்துமதம் ஆலித்த தந்திஅத ளேமெய்க்கு -
டங்குபுரி வோர்; வெற்றி வெம்புலியின் மீதுற்று
கோலஉடை யாகஅணி வோர்;திருவெ ணீறுபுனை
மாகடவுள்; ஏர்கொடிய தானவிடையாளர்;
கயிலைமலை மேல்இருக்குஞ் சோதியார்; (1)

வன்பணியை நாண்இட்டு, கந்துமக மேருசி -
லம்புசிலை யாய்,அச்சு தன்பகழி யாய்முப்பு
ராதிபரை மாளவதை காரணவர்; மாமறலி
வீழஒரு காலில்உதை வோர்; விலினில்நீடு
செங்குவளை யேதொட்டு வந்தமத வேளைக்க-
டிந்தெரிசெய் தே,தக்கன் வன்றலையை வேள்விக்குள்
வீழஅரி வோர்;முதலை வாய்மகன்அ நாளில்வர-
வேஉதவும் ஈடில்தமிழ் வாணர்விடு தூதர்;
வண்புவியில் நால்எட்ட றம்புரிமி னாள்பொஈற்கு-
யம்புதைய மீதிற்கு ழைந்தவர்;முன் நாள்எ ச்சில்
வேடன்இட வேமகிழும் ஈசர்;வரு காளியுடன்
வாதுபுரி வார்;நரியை வாசியெனவீறு
கவுரியன்மு னேதுரத்துந் தீரனார்; (2)

கொண்டல்இடி கோளத்தி ணங்கிஅடி பூசிக்க
இந்த்ரன் அயன் மால்பக்தி அன்பர்அடி சேவிக்க
வாழ்பரம னார்; சகல பூதகண நாதர்; மறை
மாமுதல்;பொ யாதமெயர்; பாதம்முடிஆதி
அந்தமல ரோன்மிக்க விண்டுநனி தேடிப்ப-
ரிந்தும்மறை யேபுக்கி ருந்தஅர னார்; வட்டம்
ஆகும்எழு காதம்விரி வானதிட நீதிசிவ
ஞானம்மிக வேபரவு நாதர்; நடராசர்;
கும்பமுனி, நேசித்து வந்தமகள் பூசித்த
நந்திஉரு வானுக்கு கந்தசவி தாருத்ர
கோடிமிகு பூசையுட னேமறைகள் பேசிஉள
நேசம்அக லாதுதொழு தேசஒளியாளர்;
கழுகுதொழ வாழ்பதிக்கங் காளனார் (3)

குந்தம்உறை காவிற்செ ழுங்கதலி, தார்உற்றி -
டுங்கமுகு, நாரத்தை, தண்பனை,ப லா,கொக்கு,
நாவல்கனி, மாதளைகள் வீறு(கொள வே) மலர்கள்
பாதிரி,பு னாகம்,மகிழ், தாழை,கவி(கோடல்),
செண்பகம தார்பிச்சி, கொன்றை,முலை சேரச் சொ-
ரிந்தநறை தேன்உற்று கந்தவள மேலிட்டு,
மாபணிலம் மேவுகுள மீதில்நிறை வாய், மதகில்
ஓடி,நல சாலிவயல் பாயும்வளமான
குன்றைதனில் வாழ்சொக்கி மங்கைஉமை பாகத்தர்;
தொண்டர்பணி பாதத்தர்; புண்டரிக வாவிக்குள்
(மேவும் எழில் மாமலரின்) மீதுதரி கீதஅரி
மோதுசெறி தாதுபுரி வேதகிரிநாதர்
கனகமக மேருவெற்பின் சோலைசூழ் (4)

அண்டர்அமு தாரக்க ரும்புதனி தேனிற்கு-
ழம்பவைகள் கூடப்பி சைந்துதர வேசித்ர-
மாகமய னாரும்உயர் மேனிதர மேவுதிரு-
வே!இரதி யே!பெணர சே!சவியினால்வி-
ளங்குகொடி யே!உற்றி லங்கிடும்மி னே! அற்றி
மிஞ்சும்மணி யே!முற்றி கொஞ்சுகிளி யே!வெற்றி
கூவுகுயி லே!பெரிய தோகைமயி லே!நடைகு-
லாவும்அன மே!மகளி ரானபடைசூழும்
அன்பரசு மோகிக்கும் இன்பரச மே!நந்தி

வந்தவினை யேனுக்கு கந்ததுணையே! ரத்ன-
மே!தரள மே!பவள மே!கனக மே!இலகு
தீபஒளி யே! அனைவர் தேடஅரிதா
ரசகுளிகையே! உயிர்ச்சஞ்சீவியே! (5)

அந்தம்உயர் மாணிக்க முங்கதிர்கள் சூழ்வச்ர -
முங்குலவு நீளப்ப சுங்கனக மேடைக்குள்
மாளிகையி லே,நிலவு, காயவிடு சாளரம்அவ்
வாசலிடை வீசும்அகி லாகும்மணம்மேவு
தென்றல்வர வேசித்ர செம்பவள மாக்கட்டில்
மஞ்சமதி லே,மெத்தை சங்கிலிகள் ஏறிட்ட
பூவணையில் நாம்இருவர் கூடி,அள காடவியின்
மேல்மலரும் வேரும்மிக வேசொருகி,வாரி
அங்களப மேமிக்கு யர்ந்தமுலை மீதினிற்க -
தம்பமொடு சேருற்ற குங்குமப னீரிற்ச-
வாதொழுக வே,புழுகு பூசி,மெயில் ஈரம்உட -
னேபுலர வீசி,அரி தானபிளவோடு
சுருள்முறையி லேகடித்தன் பாகவே (6)

தண்டரள மே,உற்ற கண்டசர மே,வச்ர
குந்தனம்என் ஓலைத்த டம்,சவடி நூல்,கொப்பு
வாளி,குட மாமணிபொ னால்,பதும ராகம்இடு
காறை,வயி டூரியமென் மேல்வளைய (லோடு
சங்குநிரை யே,பொற்பின்) முன்கையினில், மூரிப்பெ-
ருங்கடக மே,ரத்ன கிண்கிணிக ளே,ஒட்டி-
யாணம்,உடு தாரம்,மணி ஆழிஇவை யேகழல,
ஓரிழைஓர் ஆயிரவ ராகன்எனலான
தந்திரமு மேபெற்ற செம்பொன்இழை பூஇட்ட
செந்துகிலை வீழக்க ளைந்திருக வேகட்டி
மேருஎனும் மாமுலைகள் மார்புருவிமுதுகில்
ஏற,நறை மேவுகுழல் ஆட,வளைஓசை
கலகலென வேமுழக்கம் பேசவே (7)

தந்தம்இதழ் மீதுற்ற ழுந்த,இரு தாளிற்சி-
லம்புதொனி யாகப்பு லம்ப,நக மேதைக்க
வே,அமுது தேன்மதுர மானகனி வாயின்இதழ்
ஊறல்இரு வோரும்முறை யாய்நுகர,ஆடி,
மிண்டும்வடி வேலொத்த கண்கள்வெகு வாகச்சி-

வந்துதர வே,முத்தி, தந்திடும்உ லாசத்தில்
நால்இருபு ள்ஆனகுர லாய்மிடறு கீதமிட,
நூலின்இடை யேதுவள, வேர்வைஎழில் (மேனி)
சஞ்சலம தாய்மெத்த வும்பதற) வேமுத் தில்
வந்தமுதம் மேவித்த தும்புதுளி யால்மட்டி-
லாதசுக மாய்அவச மானகளை யாகிஉடல்
சோரஎனை ஆளவரு வீர்;அலது நாளை
மடல்எழுது வேன்!இனிக்கண் பாருமே. (8)

(இவ் வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை)

# 16. திருக்கழுக்குன்றம் வேதகிரிநாதர் வண்ணம்

## குறிப்புரை

1. மண்டலம் - நிலஉலகம்; குன்றை மலை - திருக்கழுக்குன்றம் என்பதன் சுருக்கம்; இட்ட - விருப்பமுடைய ; ஆர் - ஆத்தி; எட்டு மாதிரம் - எண் திசைகள் ; கதிர் மா மதி - ஒளிக்கதிர்களையுடைய அழகிய பிறைச் சந்திரன்; பகீரதி - கங்கை ; பணாமுடி அரா - படத்தையுடைய பாம்பு ; குன்றைமலை மேல் இட்ட சடையாளர், தும்பை ..... அரா அணியும் நீடு சடையாளர் எனத் தனித்தனி இயையும்; தும்பை முதல் அரா முடிய ஆறிடத்தும் எண்ணும்மை கூட்டுக ; ஆதித்தன் - சூரியன்; தழல் - அக்கினி; கணர் - கண்ணர், இடைக்குறை.

"சுடர்மூன்றும் கண்மூன்றாக் கொண்டான்" (தேவாரம் 6 - 24 - 3)

ஆலம் - நஞ்சு; கிரீவத்தர் - கழுத்தை உடையவர்; பாணியர் - கைகளை உடையவர்; மான் முதலிய நான்கிடத்தும் எண்ணும்மை விரிக்க ; அரவு ஆபரணர் - பாம்புகளை அணிகலன்களாக அணிந்தவர்; மதம் ஆலித்த - மதநீரைப் பொழிந்த; தந்தி அதள் - கயாசுரனுடைய தோல், தந்தி - யானை ; பிரமனிடம் பெற்ற பல வரங்களின் செருக்கால் கயமுகாசுரன் மக்கள் எல்லோரையும் துன்புறுத்தியதோடு காசித் தலத்தையும் அழிக்கக் கருதினான்; எதிரேவந்த சிவபெருமானை விழுங்கிவிட்டான். உள்ளே சென்ற இறைவன் அவனைக் கிழித்து, அவனுடைய தோலைப் போர்வையாக்கிக் கொண்டார் என்பது வரலாறு.

"வேத னார்வரம் பெறுகயா சுரன்வியன் உலகம்
மோதி வாரணா சியும்தப முன்னிஅங்கு எதிர்ந்த
நாத னார்தமை விழுங்கினன்; நாதன்கீண்டு அதனைச்
சோதி மேனியில் போர்வையாக் கினர்சுரர் போற்ற"

(பேரூர்ப் புராணம் - கௌரிதவம்பரி. 136)

வெம்புலியின் மீது வெற்றி உற்று என இயையும்; தாருகாவனத்து முனிவர்கள் இறைவன் பிட்சாடனராகச் சென்ற போது சினந்து அபிசார வேள்வி செய்தனர். அதில் ஒரு கொடிய புலி எழுந்தது.

"எழுதரு புலியை நோக்கி ஈசனை முடித்தி என்றே
தொழுதனர் விடுப்ப ஆங்கே துண்ணென வருத லோடும்
அழல்விழிப் பரமன் நேர்போய் அங்கையால் உரித்து மற்றவ்
வுழுவையந் தோலை முன்னம் உடுத்தனன் தானை யொப்ப"

(கந்தபுராணம் 6 - 13 - 101)

ஏர் கொடி அது - அழகிய பதாகை, அது பகுதிப்பொருள் விகுதி; விடையாளர் - எருதினைப் பெற்றவர், எருதுக்கொடியை உடையவர்.

2. வன் பணி - வலிமை மிக்க பாம்பு, வாசுகி; கந்து - (பகைவரை) அழிக்கின்ற, பிறவினைப் பொருளில் ஆளப்பட்டது; மகமேருச் சிலம்பு - பெரிய மேருமலை ; சிலையாய் - வில்லாக ; அச்சுதன் - திருமால்; பகழியாய் - கணையாக ; முப்புராதிபரை - திரிபுரங்களுக்குத் தலைவர்களாகிய வித்யுன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் என்போரை ; திரிபுரமெரித்த வரலாறு வெளிப்படை ;

"நாண்என்றால் நஞ்சிருக்கும்; நாற்சாபம் கற்சாபம்;
பாணந்தான் மண்தின்ற பாணமே ; - தாணுவே!
சீராரூர் மேவும் சிவனே!நீ எப்படியோ
நேரார் புரம்எரித்த நேர்" (தனிப்பாடல்)

என்பான் காளமேகம்; மா மறலி - ஆற்றலில் பெரிய இமயன்; மார்க்கண்டேயருக்காகக் காலனை உதைத்தது வெளிப்படை; விலினில் - வில்லினில், இடைக்குறை, இன் சாரியை; செங்குவளை - மாரனின் ஐங்கணைகளுள் ஒன்று, பொதுவாகக் கருங்குவளையே (காவி) கூறப்படும், குறிப்பாகச் செங்குவளை என்றது புதுமை, இதன் செயல் கொல்லுதல் என்பர்.

"முழுநீலம் கொல்லும்மதன் அம்பின் குணம்" (இரத்தினச் சுருக்கம் 11)

மன்மதனை எரித்தது தெரிந்ததே ; தக்கன் - தட்சன்; தக்கன் தன் வேள்வியில் இறைவனை அவமதித்ததால் தலையிழந்தான்; தமிழ்வாணர் - சுந்தரர், இவர் கொங்குநாட்டுப் புக்கொளியூர் அவிநாசியில் முதலையுண்ட பாலனைச் சில்லாண்டுகள் கழித்து மீட்ட வரலாறு வெளிப்படை ; தூதர் - ஆரூரர் ஏவப் பரவை நாச்சியார்பால் சந்து சென்றவர் ; நால்எட்டு அறம்புரி மினாள் - முப்பத்திரண்டு அறங்களையம் செய்த காமாட்சியம்மை, பொற்குயம் - அழகிய நகில் ; புதைய - அழுந்தும்படி ; மீதில் குழைந்தவர் - திருமேனி நெகிழ்ந்தவர்; அறங்கள் முப்பத்திரண்டாவன ;

"தெய்வம்தென் புலத்தார் பூதம் மானிடம் பிரமம் என்றோர்
ஐவகை எச்சம் பூர்த்தம் துறந்தவர் மடங்கள் அன்பு
செய்யும்இல் வாழ்வார்க் கில்லம் மனைக்குப கரணம் தேம்பூப்
பெய்தமை தண்ணீர்ப் பந்தர் எங்கணும் பிறங்கு சோலை

இரப்பவர் குருடர் எவ்வ முற்றவர்ப் புரத்தல் வெந்நோய்
துரக்குநன் மருந்து தூவாய் மகவினை ஓம்பல் சுண்ணம்
பாரித்தபா கடையே எண்ணெய் பைம்புனல் குளிப்ப வேண்டும்
மருக்கிளர் துவர்க ளாகி மலரணை நிலன்ஆன் கன்னி

கடிமணம், விளக்கு, மாறாக் கடன்ஒழித் திடுதல், ஈசன்
அடியவர் விழைவ ஈகை, அக்கமா மணி, வெண் ணீறு,
படியிலாக் கடவுட் பூசை உபகர ணங்கள், பாசம்
கடிதரு வேத வாய்மைச் சைவநூல் புராணம் நல்கல்,

சிவபிரான் அடிக்கீழ் பத்தி செவியறி வுறுத்த லோடும்
உவகையின் அபயம் யார்க்கும் வழங்குதல் உள்ளிட் டோதும்
நவையிரி அறம்எண் நான்கும்" (காஞ்சிப்புராணம் - தழுவக் குழைந்த. 138 - 141)

சிவபெருமான் இறைவி தழுவக் குழைந்து நகிற்சுவடேற்ற வரலாறு வெளிப்படை; வேடன் - கண்ணப்ப நாயனார், வரலாறு வெளிப்படை ; வாது - நடனப்போட்டி, சிவபெருமான் திருவாலங்காட்டில் காளியோடு கூத்தியற்றி இளைப்புற்றுக் குளிர்ந்த கதலிவனமாகிய திருக்கழுக்குன்றத்திற்கு வந்து இளைப்பு நீங்கினார் என்பர்.

"சாற்றும் வடவனத்தில் ஆடித்தனதிளைப்பு
மாற்றும் கதலி வனத்தினான்" (திருக்கழுக்குன்றத்து உலா 20)

வாசி - குதிரை ; கவரியன் - பாண்டியன், மணிவாசகர் வரலாறு வெளிப்படை.

3. கொண்டல் இடி - மேகங்களில் தோன்றும் அசனி; கோளத்து இணங்கி - நிலஉலகில் பொருந்தி, பூமியில் இறங்கி; பூசிக்க - இத்தலத்தில் இடி வழிபட்டதாக வரலாறு.

"முக்காலும் பூசித் திடிவலம்சூழ் போதுவது" (திருக்கழுக்குன்றத்து உலா 150, 151)

இந்திரன் வழிபட்டது - ஒரு வித்தியாதரனால் தான் விளையாடும் பந்தை இழந்த தெய்வமங்கை ஒருத்தியின் வேண்டுகோளால் இந்திரன் அதைத் தேடிச் சென்று கயிலாயத்தே கிடக்கக் கண்டான். இந்திரன் சிவபிரானை நோக்கிக் கோபத்துடன் திருடனே பந்தைத் தா என்றான். இக் குற்றத்திற்காக அவன் சிறையிடப்பட்டான். பிறகு வியாழனின் வேண்டுகோளால் இந்திரன் சிறைவிடப் பெற்று, தன் சிவநிந்தைப் பாவம் நீங்க இத் தலத்தில் வழிபட்டான். இது தலபுராண இந்திரச் சருக்க வரலாறு; அயன் பூசித்தது - தன் மனைவியருள் கலைமகளை மட்டும் நேசித்து நடுநிலைமை குன்றியதால் சாவித்திரியால் வேதங்களின் தனியுரிமை இழக்கும்படி சபிக்கப்பட்டார். இத் துன்பம் நீங்கத் திருமாலின் கட்டளைப்படி இத் தலத்தில் பூசித்து உய்ந்தார். இது தலபுராணச் சதுமுகச் சருக்க வரலாறு. மால் - திருமால் வழிபட்டது. ஒரு சமயத்தில் திருமாலால் துரத்தப்பெற்ற அசுரர்கள் பிருகுவின் மனைவியிடம் அடைக்கலம் புக்கனர். துரத்தி வந்த திருமால் புகலிடம் அளித்தற்காகப் பிருகுவின் மனைவியைக் கொன்றுவிட்டார். பிருகு முனிவர் சினந்து திருமாலுக்குப் பத்து பிறவிகள் ஏற்படுமாறு சபித்துவிட்டார். பெண்கொலைப் பாவமும், சாபமும் நீங்கத் திருமால் இத்தலத்தில் வழிபட்டார் என்பது தலபுராண நாராயணச் சருக்க வரலாறு.

"உசனகுலத்து ஆதி முனிபன்னி ஆவிக் கலைதொலைய
ஆதி அரிவந் தருச்சித்தோன்" (திருக்கழுக்குன்றத்து உலா 314)

பக்தி அன்பர் - சிவபக்திமிக்க அடியார்கள்; பூசிக்கவும் சேவிக்கவும் வாழ்பரமனார் என்க; சகல பூதகண நாதர் உயிர்க்கூட்டங்கள் அனைத்திற்கும் தலைவர், பசுபதி; மறை மா முதல் - மாமறை முதல் என மாறுக, வேதகாரணர்; பொயாத மெயர் - இத் தலத்தின் இறைவன் திருநாமங்களுள் ஒன்று.

"தையல் விரைந்து தமரோடும் பொய்யாத
மெய்யன் திருமுன்னர் வீழ்ந்தெழுந்தாள்" (திருக்கழுக்குன்றத்து உலா 395)

பாதம் முடி - அடியும் சிரமும், உம்மைத் தொகை ; ஆதி - முற்காலத்தே ; அந்த மலரோன் - அழகிய தாமரையில் உள்ள பிரமன், உலகறிசுட்டு எனினும் ஆம் ; மிக்க விண்டு - புகழ்நிறைந்த திருமால் ; பாதம் முடி, மலரோன் விண்டு - எதிர்நிரல் நிறை ; பரிந்து தேடியும் என மாறுக, வருந்தித் தேடியபோதும்; மறையே புக்கிருந்த - காணப்படாமல் ஒளிந்திருந்த ; அடிமுடி தேடிய வரலாறு வெளிப்படை ; எழுகாதம் - *"இந்த வேதாசலஞ்சூழ் எல்லை யேழரைக் காதத்தும்"* (திருக்கழுக்குன்றத்து உலா 327) வண்ணப்புலவர் பின்னம் அரையை விட்டுவிட்டு முழு எண்ணாக எழு காதம் என்கிறார் ; கும்பமுனி - அகத்திய முனிவரும் ; நேசித்து வந்த மகள் - சிவபக்தி செய்து ஒழுகிக் கொண்டிருந்த பெண் ஒருத்தியும், இத் தலத்தில் சிவபக்தி மிக்க கணிகை ஒருத்தி வாழ்ந்திருந்தாள். அவள் நாள்தோறும் கழுகாசல மாலை என்னும் துதிநூலைப் பாடிக் கோவிலில் வழிபட்டு வந்தாள். ஒரு நாள் பெருமழை பெய்ததால் ஆலயம் செல்ல முடியவில்லை. அவள் இறைவனை நோக்கித் தன் வீட்டு முற்றத்தில் காட்சி வழங்கலாகாதோ என ஒரு செய்யுளால் வேண்டினாள். இறைவன் காட்சியளித்தான். இவ்வரலாற்றைக் காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் இயற்றிய க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் சிறுபறைப் பருவம் இரண்டாம் பாடலில் காண்க,

"தொலையா வினைமுற்றப் பாட்டொன்று வேட்டோர் கணிகை
மனைமுற்றத் தேவந்தான் வந்தான்" (திருக்கழுக்குன்றத்து உலா 108, 109)

பூசித்த நந்தி - வழிபட்டுச் சென்ற நந்தியம் பெருமானும், இவர் இருமுறை வந்து வழிபட்டார் என்பது வரலாறு. "நந்தி இருமுறை போய் வந்தித்தோன்" (திருக்கழுக்குன்றத்து உலா 2), நந்தி சிவநிந்தை செய்த கருடனை வருத்தியபோது சிவபிரான் அவனை விட்டுவிடச் சொன்னார். இறைவன் கட்டளையை மீறியதால் பாவம் சேர்ந்தது. இதனைப் போக்கிக் கொள்ள இத்தலத்தில் வழிபட்டார். இது தலபுராணக் காடுச் சருக்க வரலாறு. பிறகு ஒரு முறை கோலோகத்தில் காமபரவசராயிருந்து, இறைவனால் கோபிக்கப்பெற்று, இப்பதியில் தவம் செய்து தூயர் ஆனார்.

"பின்னும்ஒரு கால்நந்தி கோஉலகில்
  கோப்புணர்ச்சி பிரியான் வைக
மன்னுணர்ந்து முனிந்துநீ மாநிலத்தில்
  ஏகெனஅம் மறைக்குன் றேகி
நன்னெறிகள் எனப்பலவும் சனகன்முதல்
  மாதவரால் நவிலக் கேட்டுத்
தொன்னெறியின் அருச்சனையும் தவமும் இழைத்
  தரனுழைபோய்த் தொழுது வாழ்ந்தான்"
(திருக்கழுக்குன்றப் புராணம் - நந்தி தவச். 63)

உரு - பெரிய ; வானுக்கு உகந்த - ஆகாயத்தை விரும்புகின்ற, நான்கன் உருப இரண்டன்பொருளில் வந்த உருபுமயக்கம் சவிதா - சூரியனும், பன்னிரு சூரியர்களும் இத் தலத்தில் வழிபட்டனர் என்பது வரலாறு ; ருத்ரகோடி - கோடி ருத்திரர்களும், உலகத்தை வருத்திய அசுரர்களை எல்லாம் சிவபெருமானிடத்துத் தோன்றிய கோடி உருத்திரர்கள் கொன்றொழித்து, அப் பாவம் நீங்க இத் தலத்தில் வழிபட்டுப் பேறடைந்தனர்.

*"ஓதும்அத் தலத்தில் கோடி உருத்திரர் தமைப்பூ சித்தது*
*ஆதலின் புவியிற் பெற்ற ததற்குருத் திரகோ டிப்பேர்"*

(திருக்கழுக்குன்றப் புராணம் - வேதகிரிச். 10)

மிகு பூசை என்பது பூசனைக்குரிய பொருள்களின் மிகுதியைக் குறித்தது ; நேசம் அகலாது என்றதால் மனம், மறைகள் பேசி என்றதால் வாக்கு, தொழு என்றதால் காயம் ஆகிய மூன்று கரணங்களும் கூறப்பெற்றன. மிகுந்த பொருள்களோடு மூன்று கரணங்களாலும் ஈடுபட்டு வழிபட்டனர் என்றவாறு; கும்பமுனிமுதல் ருத்ரகோடிவரையான ஐந்திடத்தும் எண்ணும்மை தொக்கன ; தொழு ஒளியாளர் - தொழப்படும் ஒளியாளர் எனச் செயப்பாட்டு வினையாக ஆட்சி ; தேசஒளி - ஒரு பொருட் பன்மொழி; கழுகு தொழ வாழ் பதி - சம்பு, ஆதி என்னும் முனிவர் இருவர் கழுகுகளாக வந்து வழிபடுமாறு சிறந்து விளங்கும் தலம் திருக்கழுக்குன்றம், *"சம்புஆதி யாம்இரு சீர்முனிவர் வந்துஇரு கங்கம்அ தாய்த்தொழுவோன்"* (திருக்கழுக்குன்றக்கோவை 46) கங்காளன் - முழு எலும்புக் கூட்டைத் தோளில் தாங்கியவர், ஒருகாலத்தில் செருக்குற்ற திருமாலைக் கொன்று அவருடைய எலும்புக்கூட்டைத் தோளில் சிவபெருமான் போட்டுக் கொண்டார்,

*"கருங்கடல் வண்ணன் வெள்விடை ஆகி*
*அடிகள் தாங்கிய உதவிக் காங்கவன்*
*முழுஎன்பு சுமந்த கழுமுட் படையோய்"* (திருவாரூர் நான்மணிமாலை 29 : 6 - 8)

என்பார் குமரகுருபரர்.

4. குந்தம் - குருந்தமரம், மாணிக்கவாசகர் இத்தலத்தில் திருப்பெருந்துறைத்தரிசனம் பெற்றமை பற்றி (திருவாசகம் 30 ஆம் பதிகம்) இம்மரம் முதலில் கூறப்பட்டது; கதலி - வாழை, இது இத் தலத்தின் தலவிருட்சம், *"கடல் ஒலியதான மறைதமிழ்கள்ஓது கதலிவனம் மேவு பெருமாளே"* (திருப்புகழ் 324); தார் - பழக்குலை; கமுகு - பாக்குமரம்; கொக்கு - மாமரம்; புனாகம் - புன்னாகம், புன்னை, இடைக்குறை ; கவிகோடல் - வளைந்துள்ள காந்தள், வினைத்தொகை, "காந்தள் கன்மிசைக் கவியும் நாடற்கு" (குறுந்தொகை 185) செண்பகம் அது - அது பகுதிப்பொருள் விகுதி; ஆர் - ஆத்தி; முலை - முல்லை, இடைக்குறை; நறை - மணமிக்க; தேன் உற்று உகந்த வளம்மேலிட்டு ; மா பணிலம்மேவு குளம் - சங்க தீர்த்தம், இதில் வலம்புரிச் சங்கு தோன்றியதால் காரணப்பெயர், "வலம்புரி சங்குறு தீர்த்தத்து" (திருக்கழுக்குன்றக் கோவை 82) சாலி - நெல்; தேன் வளம் மேலிட்டு, நிறைவாய், ஓடிப் பாயும் வளமான என்பது முடிபு ; குன்றை - திருக்கழுக்குன்றம்; சொக்கி மங்கை உமை - மலை சொக்கச் நாயகி எனப்பெயர் பெற்ற பார்வதி, "திருமலைச் சொக்கி பாகன்" (திருக்கழுக்குன்றப் புராணம் - தலவிசிட்டச். 22) புண்டரிக வாவி - தாமரைக்குளம்; தரி - வசிக்கின்ற ; அரி - வண்டு; தரி

அரி, கீத அரி என இயையும்; செறி தாது - அடர்ந்த மகரந்தம்; மோதுகின்ற செறிதாது; வேதகிரி - இத் தலத்தின் மற்றொரு பெயர், "வேதகிரி மூதூர் வைகும்" (திருக்கழுக்குன்றப் புராணம் - பாயிரம் 10).

5. அண்டர் அமுது - தேவாமிருதம்; ஆரக் கரும்பு - முத்துக்களைத் தோற்றுவிக்கும் கரும்பு; தனி - ஒப்பற்ற; அவைகள் - அமுது, கரும்பு, குழம்பு ஆகியவற்றை ; சித்ரமாக - பேரழகுடன் ; மயனாரும் - தெய்வத்தச்சன், இசைநிறை உம்மை ; சவி - அழகு; மினே - மின்னலைப் போன்றவளே, உவம ஆகுபெயர்; அற்றி - அத்ரி, மலை ; முற்றி - (காதல்) முதிர்ந்து, வண்ணம் நோக்கி இயல்பாகப் புணர்ந்தது, தொகுத்தல் விகாரம்; வெற்றி கூவு குயிலே - மன்மதனின் வெற்றியை முழக்கும் குயிலே, *"சின்னம் இசைபூங்குயில்"* (உபயமான சங்கிரகம், செந்தமிழ் 29) மகளிரான படை சூழும் அன்பரசு - பெண்களாகிய சேனையை உடைய காமன்; நத்தி வந்த - விரும்பி அடைந்த; வினையேனுக்கு உகந்த ; தரளமே - முத்தே; அனைவர் - எல்லோரும், முற்றும்மை தொக்கது; இரச குளிகை - தாழ்ந்த கனிமங்களைப் பொன்னாக்கும் உருண்டை ; உயிர்ச் சஞ்சீவி - உயிரைப் பிழைக்க வைக்கும் சஞ்சீவி என்னும் மூலிகையே, விளி.

6. அந்தம் உயர் - அழகுமிக்க ; வச்ரம் - வயிரம்; நீளமேடை என இயையும்; சாளரம் - ஜன்னல்; சித்ர - சிற்பங்கள் செதுக்கப்பெற்ற ; கட்டில்மஞ்சம் - இருபெயரொட்டு; சித்ரமஞ்சம், பவளமஞ்சம், மா மஞ்சம் என இயையும்; பூவணை - மலர்கள் பரப்பிய படுக்கை, அழகிய படுக்கை எனினும் ஆம் ; அளகாடவி - கூந்தலாகிய காடு, வடமொழி தீர்க்கசந்தி; வேர் - வெட்டிவேர் ; அம்முலை, களபமே மிக்கு உயர்ந்த முலை ; களபம் - வாசனைச் சாந்து; கதம்பம் - வாசனைப் பொடி; குங்கும பனீரில்; - குங்குமப்பூ சேர்க்கப் பெற்ற பன்னீரில்; சவாது - ஜவ்வாது; புழுகு - புனுகு; மெயில் - மெய்யில், உடம்பில், இடைக்குறை ; பிளவு - பாக்குத்துண்டு; சுருள் - வெற்றிலைச் சுருள்; முறையிலே - இன்பம் மிகுவதற்குரிய நெறியிலே; கடித்து அன்பாகவே,

7. தண் தரளமே - குளிர்ச்சியான முத்துமாலையும்; கண்ட சரம் - கழுத்தில் அணியும் பொன்மாலை ; வச்ர குந்தனம் என் - வைரம் இழைக்கப் பெற்றதாகிய ; தட ஓலை என மாறுக, பெரிய காதணி, வைரத்தோடு போன்றது; சவடி - உட்கழுத்தில் அணியும் அட்டியல்,

"மங்கை வரிக்கழுத்தை மறைத்தார் சவடிஇட்டு"

(குமாரலிங்க வேந்தன் காதல் - 152)

கொப்பு - ஒருவகைக் காதணி

"துலங்கிவரும் மேற்காதில் சோதியன்ன கொப்பும்இட்டு"

(கொடுமணல் கந்தசாமி காதல் - 152

வாளி - ஒருவகைக் காதணி

"கொப்பிட்டு வாளியிட்டுக் கொந்தளப்பொன் ஓலையிட்ட"

(குமாரலிங்க வேந்தன் காதல் - 147, திருவல்லைக் கந்தர் காதல் -9. கூளப்ப நாயக்ன் காதல் - 140)

குடநூல், மாமணி நூல், பொன்நூல் என இயையும், பெரிய மணிகள் இழைக்கப் பெற்றதும் பொன்னாலாகியதும் வளைந்துள்ளதுமாகிய சங்கிலி, மாமணிப் பொனூல் எனற்பாலது வண்ணம் நோக்கி இயல்பாக நின்றது; காறை - மணிகளிழைத்த ஒருவகை மேற்கை யணி,

"சத்துமணிக் காறை சரிசரியாய்க் கைக்கணிந்து"

(கொடுமணல் பொன்னையன் காதல் 166)

சங்கு நிறை - சங்கு வளையல்; பொற்பின் - அழகிய ; மூரிப்பெரும் - ஒரு பொருட் பன்மொழி; கடகம் - ஒருவகைக் கையணி; ரத்ன கிண்கிணி - மணிகள் இழைக்கப்பெற்ற சதங்கை என்னும் காலணி,

"கிளிபொரு கிளவியாள்பொற் கிண்கிணி சிலம்போடார்ப்ப"

(நைடதம் - மணம்புரி. 52)

உடுதாரம் - அரைஞாண்,

"பொன்னின் உடுதாரம் பொற்சிலம்பு பொற்சதங்கை"

(திருவல்லைக்கந்தர் காதல் 12)

ஆழி - மோதிரம். தண்டரளமே முதல் ஆழி இவையே வரையுள்ள ஏகாரங்கள் எண்ணுப்பொருளன. ஓர் இழை - புடவையின் ஒரு நூல்; வராகன் - சுமார் மூன்றரை ரூபாய் மதிப்புள்ள ஒரு நாணயம்; தந்திரம் - சேலை நூல்; செம்பொன் இழை பூ இட்ட - பொற்சரிகையால் பூவேலை செய்யப்பெற்ற. வீழக் களைந்து - நிலத்தில் விழும்படியாக அவிழ்த்தெறிந்து; முலைகள் மார்பு உருவி முதுகில் ஏற,

"சிலை உரு அழிதரச் செறிந்த மார்பில்தன்
முலைஉருவின என முதுகை நோக்கினாள்" (கம்பர். பால. உண்டாட்டும். 62)

நறைமேவு குழல் - வாசனையைப் பெற்ற கூந்தல்.

8. தந்தம் - பற்கள். இதழ்மீது - உதடுகளின் மேல்; தாளில் - கால்களில்; நகமே தைக்கதே - நகக் குறிகள் பதியவும், முதல் ஏகாரம் அசை, பின்னது எண்ணுப்பொருள். அமுது தேன் மதுரமான - அமிழ்தத்தையும் தேனையும் போல் இனிமையான, இது இதழூறலுக்கு அடை ; ஆடி - புணர்ந்து; மீண்டும் - இளமை மற்றும் எழிலின் செருக்கைக் காட்டுகின்ற, இது கண்களுக்கு அடை ; முத்தி - முத்தமிட்டு, கொஞ்சி எனினும் ஆம்; உலாசத்தில் - இன்பமிகுதியால்; நால் இரு புள் ஆன குரலாய் - எட்டுவகையான பறவைகளின் நலியைப் போன்று,

"குமுதவாய் அமுதத்தை நுகர்ந்திசை பொருகாடை
குலம்புறா மயில் குக்கில் சுரும்பினம்
வன்பதாயுதம் ஒக்கும் எனும்படி
குரல்விடா" (திருப்புகழ் 336)

மிடறு - கழுத்து; நூலின் இடை - நூலிழையைப் போன்று மெலிந்த இடுப்பு; சஞ்சலமதாய் - இன்பத்தவிப்போடு; மேனி பதறவே வேர்வை முத்தில் வந்து என இயையும். முத்தில்: இல் உவம உருபு, "இரவை மருப்பில் திரிந்து மறிந்து வீழ்தாடி" (கலித்தொகை 15:5-6) என்புழிப் போல. மட்டு இலாத - எல்லையற்ற. அவசமான களையாகி - இன்பப் பரவசத்தால் களைப்படைந்து. அலது - அவ்வாறு ஆட்கொள்ள வராவிடில்; இனி - இவ்வளவும் கூறிய பிறகாவது; கண்பாரும் - அருள் செய்வீர் என்பது கருத்து.



# 17. பழனிமலை முருகக் கடவுள் வண்ணம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்ற இந்த வண்ணம் பழனித் திருவாயிரத்தில் இடம் பெற்றுள்ளது. பழனித் திருவாயிரத்தின் முதற்பதிப்பு 1915இல் திருவாமாத்தூர்க் கௌமார மடாலயப் பதிப்பாக வெளிவந்துள்ளது. இரண்டாம் பதிப்பு 1973 இல் பழனி தேவஸ்தானப் பதிப்பாக வந்தது. 1980 இல் மாதை மடாலயம் வெளியிட்ட வண்ணமஞ்சரியிலும் இடம்பெற்றுள்ளது (பக்.6)

இவ் வண்ணத்தின் துறை கலவி மகிழ்தல் என்பதாகும். வண்ணங்களிலேயே மிகமிக அதிகமாகப் பாடப்பெற்றது. இத் துறையே. இந்த வண்ணப் பெருந்திரட்டிலும் ஏறக்குறைய சரிபாதி இத்துறை சார்ந்தனவே. வண்ணத்தின் கலவி மகிழ்தலில் கற்புள்ள காதலியை இயற்கைப் புணர்ச்சியாக மருவுதல் (குறிஞ்சி), விலைமகளைத் தோய்தல் ஆகிய இரண்டுமே இடம்பெற்றுள்ளன. பின்னதே எண்ணிக்கையில் அதிகம். இங்கு, தலைவன் வேண்டலை அடுத்துக் குறிஞ்சிக் கலவி மகிழ்தல் மட்டுமே அகரவரிசையில் தரப்படுகிறது. கற்பில் ஊடல் நிமித்தமான மருதத்தில் பரத்தை பேசப்படுவதால் அத்தகைய வண்ணங்கள் பின்னால் உரிய இடத்தில் இடம்பெறும்.

வண்ணத்தில் இயற்கைப் புணர்ச்சி அல்லது விலைமகள் கூட்டம் எனத் தெளிவாகக் குறிப்பிடப்படுவதில்லை. படிப்பவரே நுட்பமாக உணர்ந்து கொள்ள வேண்டும். சில வண்ணங்களில் இதை உறுதியாகக் கூறமுடியாமலும் போகலாம்.

களவில் இடம்பெற்றுள்ள கைக்கிளை, இயற்கைப் புணர்ச்சி என்னும் இரு கிளவிகளின் சேர்க்கையே இந்த வண்ணத் துறையாகும்.

“ஒடுங்கீ ரோதி ஒண்ணுதற் குறுமகள்
நறுந்தண் ணீரள் ஆரணங் கினளே ;
இனையள் என்றவட் புனையள வறியேன்
சிலமெல் லியவே கிளவி
அணைமெல் லியல்யான் முயங்குங் காலே” (குறுந், 70)

எனச் சங்கப் பாடல்களில் மிளிரும் இத்துறை அகப்பொருட் கோவைகளில்

சொற்பால் அமுதிவள் யான்சுவை என்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நான்இவள் ஆம்பகுதிப்
பொற்பார் அறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில் வெற்பில்
கற்பா லியவரை வாய்க்கடி தோட்ட களவகத்தே. (திருக்கோவையார் 8)

என்பதுபோல இடம்பெற்று, பிற்கால வண்ணங்களில் மெய்யுறு புணர்ச்சியை மிக விரிவாக விவரிப்பதாக மாறிவிட்டது. பிற்கால இலக்கியப் புரவலர்களின் ரசனையே இந்த வீழ்ச்சிக்குக் காரணமாகலாம்.

வண்ணச்சரபம் சுவாமிகளின் இந்த வண்ணம் தமிழின் தலைசிறந்த வண்ணங்களுள் ஒன்று ஆகும். இவரின் வண்ணங்கள் அனைத்துமே தரமானவைதாம். ஆண்கலையின் முதல் மூன்றில் ஆறுமுகப் பெருமானின் சிறப்புகள் கூறப்படுகின்றன. நான்காவது கலை பழனியப்பதியைப் புனைந்துரைக்கிறது.

பெண்கலை காட்சி, ஐயம், துணிவு, குறிப்பறிதல், புணர்தல், புகழ்தல் ஆகிய துறைகளை உள்ளடக்கியுள்ளது. அதிக விரசமில்லாமல் மரியாதையுடன் அமைந்துள்ளது. பெண்கலை பேச்சு நடையில் மிக இயல்பாக அமைந்துள்ள கவனிக்கத்தக்கது.

ஆண்கலையின் பெருமித நடையையும் பெண்கலையின் எளிமையையும் இவ் வண்ணங்களில் தெளிவாகக் காணலாம்.

இதில் இடம்பெற்றுள்ள தலைவி நவோடா நாயகி ஆவாள். இவட்கு இலக்கணமும் இலக்கியமும் வருமாறு:

"விலகாத தமதுபெரு வெட்கத்தால் உளக்குறிப்பை வெளியாக் காமை
பலபேத நூதனஆ பரணாதி களின்மேன்மேல் படரும் ஆசை
மலர்கோப சமயமதில் மருதஅமு தெனும்மிருது வார்த்தை இன்ன
குலநீதி தனைக்காக்கும் குவளைவிழி நவோடைகளின் குணங்கள் ஆகுமே"

"கரத்தாற் பிடிக்கினும் பூவணை சேர்க்கினும் கட்டிமெள்ள
உரத்தால் அணைக்கினும் தான்புறம் செல்ல உடன்விரையும்
தரத்தால் இரதம் சிதரா தமைக்கில் தழுவிடலாம்
வரத்தால் உயரும் சுகவனர் வெற்பின்இம் மாதினையே" *(சிங்கார ரச மஞ்சரி 13.14)*

# 17. பழனிமலை முருகக்கடவுள் வண்ணம்

## வண்ணசரபம் தண்டபாணி சுவாமிகள்

### கலவிமகிழ்தல்

தனதன தத்தந் தனந்தந் தனனா தனந்தன
தனதன தத்தந் தனந்தந் தனனா தனந்தன
தத்தனாதன தந்த தனதன
தத்தனாதன தந்த தனதன தனதன
தனன தனதன தனதன ....
தனன தனதன தானதானன
(தொ) தனனதன தனதான தனதனா

அருள்வலி மிக்கொன் றிடுஞ்சங் கரனார்; கருங்குயில்
அனையள்இ டப்பங் குறுந்தொந் தம்உளார்; நினைந்தவர்
அட்டகாசம்ம லிந்து தகுவர்கள்
வெட்கும்வாழ்வுபொருந்த அருள்பவர்;
அகிலம் உதவிய விதியும் அவனைமுன்
அருளும் அரியுமெண் ஆர்வர்பாலகன்
மகபதி அச்சந் தவிர்ந்தின் புறவே நெருங்கிய
அசுரர்க ளைக்கொன் றிடுந்திண் புயவேள்; பெருங்கடல்
மத்திமாமரம் ஒன்று பிளவுப-
டச்செய்தேபுகழ் கொண்ட சரவணன்;
வரதம் உறுகர மலரும் அபயமொ-
டினைய வருகுகன்; மாறில் சேவகன்;
அதிரதர் மெச்சுந் திறம்கொண் டரனார் மனம்புணர்
மகளிர்வ யிற்றின் கண்வந்தஞ் சிலையோ டிலங்கிய
அத்தவீரர்கள் ஒன்ப தின்மரும்,இ -
லக்கவீரரும் அண்ட முடுகள்
அதிர நகுபல கணரும் வளைதர
உலவு பெருமையன்; ஆறுமாமுகன்;
அருணகிரி கவியாவும் அணிகுவான்; 1

அமலவி ளக்கம் பெறுஞ்சிந் தையினோர் குலந்தினம்-
வழிபட நிற்கின் றவன்;செங் கனிவாய் திறந்துதன்
அப்பன்மாமனம் இன்ப முறுமொழி
செப்பினான்;உயர் கும்ப முனிவனும்,

அனைய முனிவரர் பலரும் மகிழ்வுற
ஒருமெய் நுவல்குரு வானசாரணன்;
மகிழமல லர்ப்புங் கவன்றன் படையோ டெதிர்ந்துசெய்
சமரில்இ ளைக்கின் றபண்பென் றும்இலான் ; அவன்கொளும்
மச்சகேதன வென்றி கவர்வழு-
திக்குழாமதில் மிஞ்சும் அடல்பெறும்
வயவன் எனவரு குமரன்; அடியவர்
துயரம் முழுதடும் மானம் மேயவன்;
அகிலம் அனைத்துந் தரும்பங் கயவே தியன்சிகை
உலையஇ டிக்குங் கரங்கொண் டபிரான்; வணங்கிடில்
அற்பர்வாசல்பு குந்து, மறுகும-
வர்க்கும்வேணவ ரங்கள் அருள்பவன்;
அசர சரம்முழு மையினும் நிறைதரு
கருணை யினன்; அணி ஆடும் ஊர்பவன்
அசலம்முழு தரசாள்கை உடையகோ 2

பருமணி மொய்க்குங் கலன்பொங் கமுளான்; நடுங்கொரு
புலவன்உ யக்குன் றடுஞ்செம் புகழான்; நிறந்திகழ்
பற்பமோடரன் அம்ப கமதருள்
அக்கமாலிகை யுங்கொள் பவரது
பகைவர் குடிகெட வடவை முகமுறும்
அழல தெனவரு பார கோபன்; ஓர்
மரகத வெற்பென் றிலங்குஞ் சிகிமீ திவர்ந்து,பல்
உலகினி டத்தும் புகுந்திண் டிறலோன்; மதம்பொழி
மத்தகாசலம் ஒன்றும் உடையவன்;
அச்சு தாதியர் நம்பிமொழிதரு
மகிமை யினன் ; இணை தவிரும் அழகினன்;
வனசை மருமகன்; மாசி லாமணி;
பதிதர்ம னக்கண் கள்முன்சென் றவிரான்; இறைஞ்சினர்
செலும்வழி முற்றும் புகும்பண் பொழியான்; நெடுங்கதிர்
பத்துநூறுபு ணர்ந்த இரவிவி
யக்கும்வேலன்; இ ரண்டு குணம்உறு
பதினெண் விழிஇறை ; வணிகமகள்கரம்
உதவும் ; முருகன்; அபார வீறுறு
பருவமதி நிகர்சேவல் குலவுசேய். 3

பகல்மதி யுற்றங்குவந்து செலுமே! பெருஞ்சினை
முகிலினம் முற்றும் பொதிந்தின் புறுமே; அருந்தவர்
பக்தியோடுப ணிந்து துதிகள்மு-
ழக்கி ஆர்வம் லிந்து குதி கொள்வர்;
பகடு முழுமையும் வதைசெய் சிலை பெறும்
எயினர் குடிவரு பாவை மார்சிலர்
வளையணி கைக்கண் கவண்கொன் டவராய். விளைந்தற
முறுகுதி னைத்தண் புனந்தங் கிடுவார் குறிஞ்சியின்
மற்றோர்சாரல்இ ணைந்தி டரியவ
ளப்பம்மேலிடும் நன்று முழுதுறும்
மருத நிலம்இதன் அடிமை எனஅரு
கணையும்; அமரர்தம் வான மேல்எழு
பரிசுறும்; மிக்கன் புறுந்தொண் டர்எலாம்; மணங்கமழ்
கமலம லர்க்கன் பினன்தங் கியதேர் பெருங்கயல்
பற்றும்வீதிஇ ரண்டி னிடைசெல்இ
ரட்டைமாதம்வ ரும்பொன் விழவிடை
பணிகள் அதிபதி சொலினும் அசைவரு
பெருமை குலவல்சு பாவ மாம்உயர்
பழனிமலை யடிவார மனதிலே 4

தெருள்முனி வர்க்கங் கசன்றன் கணையால் வருந்துயர்
உணரஉ ணர்த்துங் கவின்கொண் டவிர்வாள்; இருண்டொரு
சிக்குறாதுநெ ருங்கு குழலினள்;
வட்டமாமதி என்ற முகி; இரு
சிலையை நிகர்நுதல்; குமுத மலரிடை
தரள மணிநிரை சேரும்வாய் நகை ;
விரகம்வ ளர்க்கும் பெருங்குன் றுகள்போல் எழும்தனம்
முதலஉ றுப்பொன் றினும்பங் கம்இலாள்; மதன்படை
வெற்றிமாதரின் முந்தும் இயல்பினள்;
சப்தசாகரம் ஒஞ்சும் விழிவலை
விபுதர் முதலினர் மனமும் அனல்படும்
மெழுகில் உருகிட வீசுமோகினி;
திகழ்பணி மொய்க்கும் பசுங்கொம் பனையாள்; அயன்தரும்
இருதகு வர்க்கொன் றிடும்பெண் கொடிபோல் வரம்பெறு
சித்தர் யாரும் மறைந்து திரியவ

னத்தொர்மான்என நின்ற நிலையது
தெரிய உடன்உளம் உருகும் மயல்கொடு
துணியும் நினைவொடு தேவரூர் புகழ்
திருவனையள் அருகேகி உருகியே 5

செகம்அறி யச்சந் ததந்தொண் டுசெய்தே, மகிழ்ந்துன
தடிமைஎ னக்கெஞ் சியுங்கும் பிடுவேன் நலங்கிளர்
சித்தசாகமம் விண்ட படிகல
விச்சலாபம்வ ழங்கி அருள் ஒரு
தினையின் அளவுமெ உரிமை இலள் என
விசன முறும்மொழி சீறிஓதிடல்
வெருளஉ ருத்தங் கெழுஞ்செம் புலிபோல் வளம்பெறு
மலையம லைத்தென் றலுந்துன் றியதால் மெலிந்தனன்
வெட்டும் வாளில்ஒ துங்கி எனதுயி
ரைப்பொலாமத னன்கை யுறவிடல்;
விதிகை வரைதரு பொறியின் இசைவிலை
யனில்என் எதிர்தன் மேவுவாய்அலை ;
திருகுகு ணத்திண் டுமிண்டிங் குசென்யேல் புணர்ந்தபின்
அதிகம யக்கங் கொடுன்பின் திரிவேன்; மயங்குறு
சித்தமூடதி வஞ்ச நினைவுப
டைத்துளாய்அதை உன்றன் விழிகொடு
தெரியும்; நிசம்அறி கிலைஎ னதுபழி
கொடிது; முலைபுனை சேலை ஓவியொர்
சிறிதருள்செய் எனஓதி மறுகினேன் 6

உருவசி வெட்கும் திறம்தங்கும்மினாள்; புரிந்தபல்
கபடபி ணக்கங் களின்துன் பெளிதோ! சினந்தவள்
ஒத்துநான்உனை என்றும் அறிகிலன்;
இற்றைநாள் இதென் வம்பு மொழிகிறை?
உனது சிறளமும் எனது குலம்உறும்
விடர்முன் வெருளுறும் ஊழ்வ ராதுகொல்?
வினையைநி னைத்தென் பயன்? புந் தியிலேன் இவண்தனி
வரல்பிழை; பற்றுங்குணங்கொண் டுளையோ? சொலுந்தொறும்
மெத்தமேனிந டுங்கு துனதுப-
லத்தினால்இசை வின்றி அணைவைகொல்?
விழிமுன் உனையல தொருவர் இனமொழி
சொனவர் இலை;பல வேசி மாரிடை

உழலொரு துட்டன்கொல்? என்றுஞ் சொலினாள்; சிவந்தமெல்
உதடுலர் பெட்பும் குளம்புன் பனிவேர் வரும்பலும்
உட்குரோதமில் நண்பை எளிதுதெ
ரித்தலால், அடி லண்டி வருகெனும்
உரையொ டதரம துரமும் முலையுறு
திறமும் உளபடி ஓர்வ தாயினன்
ஒருமைபடு மனதோடு சருவினாள்; 7

உணர்வைநெ கிழ்த்துந் திறங்கொண் டுளமோ கமிஞ்சிடு
கரிகரம், மற்றைந் தொடுங்கண் டுசெய்தே, கரும்புகொ
டுத்தம்நாளும்மு யன்ற களிமதன்
உற்றஆதனம் என்ற மணியின
துருசி தருமுக ரதமும் அவள்உடல்
உருக இனிதுசெய் தூறும் நீர்நசை
மிளிர அணைத்தும் புணர்ந்தங் குறுபோ தெதிர்ந்தவள்
உனையும்அ டக்குந் திறங்கண் டதனால் வியந்தனன்;
வெட்கம்ஓர்அணு இன்றி அவண்நிகழ்
வித்தைகோடிவி ளம்பி டரியன ;
விரதம் வெகுபிற விகளில் முயல்பயன்
எனவும் மடிவில்வி ணாடர்ஓதினர்;
உரகம்நி கர்க்குங் குணங்கொண் டிடுவாள் தளர்ந்துபின்
இசைவுடன் நட்புஞ் செயும்பண் புறலால் அனங்கன்உள்
உட்கிநாணஉ வந்த வெயர்வைநன்
மெத்தையாதிந னைந்து வெளியினும்
உததி வரைசெலும் நதியில் ஒழுகியது
உடலொடு யிர்அனை யோம் அ நாள்முதல்;
உறுகலவி அநுராகம் உயர்வதே. 8

## தொங்கற்றாழிசை

அருணகிரி கவியாவும் அணிகுவான்
அசலமுழு தரசாள்கை உடையகோ
பருவமதி நிகர்சேவல் குலவுசேய்
பழனிமலை யடிவாரம் அதனிலே,
திருவனையள் அருகேகி உருகியே,
சிறிதருள்செய் எனஓதி மறுகினேன்;
ஒருமைபடு மனதோடு சருவினாள்;
உறுகலவி அநுராகம் உயர்வதே.

# 17. பழனிமலை முருகக் கடவுள் வண்ணம்

## குறிப்புரை

1. அருள் வலி, - தெய்வீக அருளின் வலிமை ; மிக்கு ஒன்றிடும் - மிகுதியாகப் பொருந்தியுள்ள ; கருங்குயில் அனையவள் - நிறத்தாற் குயிலினைப் போன்ற உமையம்மை, அல்லது கருமையைக் குயிலுக்கு மட்டும் அடையாக்கிக் குயில்போன்ற இனிய மொழியினள் எனினும் ஆம், சாதிஅடை; வில்வவனம் போன்ற சில சிவத்தலங்களில் இறைவியின் திருநாமமே குயிலம்மை அல்லது கோகிலாம்பா ஆகும்; தொந்தம் - தொடர்பு; அட்டகாசம் உலகவழக்கில் இச்சொல் தீயோர் புரிகின்ற மிகைகளைச் சுட்டினாலும் இதன் பதப்பொருள் பெரிய சிரிப்பு என்பதே, இங்கு மிகுந்த உவகை என்னும் பொருளில் ஆட்சி ; தகுவர் - அசுரர்; விதி - பிரமன்; அரி - திருமால்; எண் ஆர்வர் - மதித்து ஆவலுடன போற்றும் தலைவர் ; ஆர்வருடைய பாலகன் என்க, ஆறன்தொகை; மகபதி - இந்திரன்; வேள் - முருகப் பெருமான்; மாமரம் ஒன்று - ஒரு மாமரத்தின் வடிவில் நின்ற சூரன்; வரதம் - வேண்டியதை அருள்வேன் என்பதனைச் சுட்டும் வரத முத்திரை ; அபயம் அஞ்சற்க எனும் முத்திரை; மாறு இல் - இணையற்ற; சேவகன் - வீரன்; அதிரதர் - பெருவீரர், அர்த்தரதர், சமரதர், மகாரதர். அதிரதர் என்பது வீரர்களின் நான்கு படிநிலை ஆகும். அரனா மனம் புணர் மகளிர் வயிற்றின்கண் வந்த வரலாறு : உமையம்மையாரின் காற்சிலம்பிலிருந்து சிந்திய ஒன்பான் மணிகளினின்றும் ஒன்பது வீரர்களைப் பெற்றனர். அந்த நவவீரர் வருமாறு : வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரன், வீரமகேசன், வீரபுரந்தரன், வீரராட்சசன், வீரமார்த்தாண்டன், வீராந்தகன், வீரதீரன், நகு- மகிழ்வுடைய; பல கணர் - அமரர் முதலிய பதினெண் கணத்தார் நகு; கணர், பல கணர் எனத் தனித்தனி இயையும்.

2. அமல விளக்கம் - தூய மெய்யறிவு; தன் அப்பன் மாமனம் - தன்னுடைய தந்தையாரின் பெரிய உள்ளம்; இன்பமுறு மொழி என்றது பிரணவத்தின் பொருளை ; கும்பமுனிவன் - அகத்தியர் ; ஒரு மெய் - ஒப்பற்ற உண்மை, ஞானோபதேசம்; சாரணன் - அறிஞன்; மகிழமலர்ப் புங்கவன் - மகிழம்பூ மாலையணிந்த மன்மதன், "வெல்லும் மதவேள் மார்பினிலே விளங்கும் மாலை இலஞ்சி...." என்பது உவமான சங்கிரகம். (30) அவன் படை என்றது மகளிரை ; காமனுக்கும் மீன்கொடி உரியது, பாண்டியர் கொடி அது என்பது வெளிப்படை, "அல் கரி, கால் தேர், கிளி மா, ஆழி முரசு, இந்து குடை, பொற்குயில் சின்னம், தாழம்பூவாள், மீனக்கொடி, பெண் தானை, அன்றில் களம், மகிழ் தார், மல்லிகைபடிக்கம், வேனில் விழா, சோலை படைவீடு" என்பது நாமதீப நிகண்டு (58); வழுதிக்குழாம் - பாண்டியர் குலம்; வயவன் என்றது உக்கிரகுமார பாண்டியனை ; மானம் - வலிமை, பெருமை எனினும் ஆம்; பங்கய வேதியன் - தாமரை மலர் இருக்கையை உடைய பிரமன்; சிகை உலைய - குடுமி வருந்த, "கமலத்தனை மணிக்குடுமி பற்ற மலர் சித்திர கரத்தலம் வலிப்ப பலகுட்டி நடனங்கொள்வேளே" (திருப்புகழ் 207); மறுகுமவர்க்கும் - கலங்குகின்றவர்களுக்கும், இழிவு சிறப்பும்மை ; வேண - வேண்டிய, "அடியவர் இச்சையில் எவையெவை உற்றன அவை தருவித்தருள் பெருமாளே" (திருப்புகழ் 732); அசர சரம் - நிலைத்திணை இயங்குதிணைகள்;

ஆடும் ஊர்பவன் - மயிலே அன்றி ஆட்டுக்கடா வாகனத்தையும் உடையவர்.

"நவையில்சீர் முனிவர் தேவர் நயப்பநா ரதன்என் றுள்ளோன்
புவிதனில் வந்து முற்றப் புரிந்தனன் முன்னர் வேள்வி
அவர்புரி தவத்தின் நீரால் அன்றுதொட் டமல மூர்த்தி
உவகையால் அனைய மேடம் ஊர்ந்தனன் ஊர்தி யாக". ( கந்தபுராணம் 1-15-25 )

3. பருமணி - பெரிய இரத்தினங்கள்; நடுங்கு ஒரு புலவன் உயக் குன்று அடும் செம்புகழ் - ஒரு பூதத்தால் மலைக்குகையில் அடைத்து வைக்கப்பட்ட நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடிய உடனே அவர் உயிர் பிழைக்கும்படி மலைக்குகையைப் பிளந்த கீர்த்தி,

"அப்பொழுது நற்கீரன் தமிழ்மாலை இளையோன்என் றறைந்து சூட்ட
செப்பரிய குடமுனிவற் குபதேசம் செலுத்தும்ஒரு செஞ்சொ லாளி
இப்பொருப்பில் அடையாளம் கலியுகத்தோர் கண்டிடவேல் எறியப் பாறை
ஒப்பறநே ரேகிழித்தங் கிருபிளவாய்ப் பிளந்திடவே உவப்பின் வந்தான்".
( திருப்பரங்கிரிப்புராணம் நற்கீரன் சருக்கம். 13)

இனிப் புலவன் என்பதற்குத் தேவனாகிய இந்திரன் எனவும், குன்று என்பதற்குக் கிரவுஞ்சகிரி எனவும் உரைப்பினுமமையும். "வானோர் ஏனோரும் அங்கட் புவனியும் வெங்கட் கொடியவராலே வாடாமே அன்றிற் பெயரிய குன்றைப் பொரும் அதி வீரா". ( திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ் - தாலப். 10): பற்பம் - திருநீறு ; அம்பகமதருள் அக்கம் - கண்களில் தோன்றிய மணி, உருத்திராக்கம்; வடவை முகமுறும் அழல் - கடலின் அடியில் குதிரை முகத்தோடு உள்ளதாகக் கருதப்படும் ஒரு தீ, அது - பகுதிப் பொருள் விகுதி; பாரகோபன் - கொடிய சினத்தை உடையவன்; மரகத வெற்புச்; பச்சை மணி மலை; சிகி - மயில்; மத்தக அசலம் - மத்தகத்தை உடைய மலை போன்ற யானை, இல்பொருள் உவமையாகுபெயர், முருகப்பெருமானுக்கு யானையும் ஓர் ஊர்தியாகும், "பிணிமுக ஊர்தி ஒண் செய்யொனும்", (புறம். 56), "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி", (முருகு. 247), முருகப் பெருமானின் யானைக்குப் பிணிமுகம் என்று பெயர். அச்சுத ஆதியர் - திருமால் முதலிய தேவர்கள்; நம்பி - விரும்பி; வனசை - மலர்மகளாகிய இலக்குமி; பதிதர் - குணத்தால் இழிந்தோர்; இறைஞ்சினர் - அடியார், "மாசர்க்குத் தோணொணாதது; நேசர்க்குப் பேரொ ணாதது" (திருப்புகழ் 342); கதிர் - கிரணம் ; பத்துநூறு ஆயிரம், பல என்ற பொருளில் ஆட்சி; இரண்டு குணம் உறு பதினெண்விழி - வலது கண் சூரியன், இடது கண் சந்திரன் இவை பன்னிரண்டும் அறக்கருணையாம் பண்பின, நெற்றிக்கண் ஆறும் தீ, இவை மறக்கருணை உடையன ; வணிகமகள் கரம் உதவும் முருகன் - முருகப்பெருமான்மீது பெரும் பக்தி கொண்ட அம்மையார் ஒருவர் எப்போதும் முருகா, முருகா என்று உச்சரித்துக்கொண்டே இருந்தார். இதனைத் தவறாகக் கருதி, ஐயம்உற்ற அவர் கணவர் சினம்கொண்டு அம்மையாரின் கையை வெட்டி வீழ்த்தினான், இறைவன் திருவருளால் அந்தக் கை உடனே பழையவண்ணம் வளர்ந்து நிரம்பியது, அந்த அம்மையாருக்கும் இயற்பெயர் மறைந்து முருகம்மை என்ற பெயரே நிலவுகிறது; பருவமதி - முழுவளர்ச்சி பெற்ற திங்கள், சேவலின் வெண்மைக்கு உவமை, "பவுரணைநன் நாளில்முழு மதியனைய சேவல்ஒலி" (பழனித் திருவாயிரம் பாதாரவிந்த வகுப்பு - 62 ஆம் கலை)

4. சினை - மரக்கிளைகள்; முகிலினம் - மேகக்கூட்டம்; பகடு - ஆண் விலங்குகள், யானை எனினுமாம்; சிலை வில் எயினர் குடி - வேடர் குலம்; கைக்கண் - கரத்தில்; அறமுறுகு - நன்றாக விளைந்த ; குறிஞ்சி - மலைப்பகுதி; மற்றோர் சாரல் இணைந்திடு, வளப்பம் மேலிடும், நன்று முழுதுறும் ஆகிய மூன்றையும் தனித்தனியே மருதநிலத்தொடு கூட்டுக ; மருதநிலம் - வயல்சார்ந்த பூமி; அமரர்தம் வானம்மேல் எழு பரிசுறும் - வானளாவி இருக்கும்; தொண்டர் எலாம் மிக்கு அன்புறும் - அடியார்களால் மிகவும் நேசிக்கப்படும், கமலமலர்க்கு அன்பினன் - தாமரைப் பூக்களை விரும்பும் சூரியன்; கயல் பற்றும் வீதி இரண்டும் - மகரராசியில் செல்லும் தை மாதமும் மீனராசியில் செல்லும் பங்குனி மாதமும், தைப்பூசமும், பங்குனி உத்திரமும் பழனியில் பெருவிழாக்கள்; பணிகள் அதிபதி - அரவரசன், ஆதிசேடன்; சுபாவம் ஆம் - இயற்கைப் பண்பாகப் பெற்ற.

5. தெருள் முனிவர் - அறிவுத்தெளிவை உடைய முனிவர்களுக்கும், இதனை வினைத்தொகையாக்கினும் அமையும், உயர்வுசிறப்பும்மை தொக்கது; அங்கசன் - மாரன்; முகி - முகத்தினள்; குமுதமலர் இதழ்களுக்கும் முத்துக்கள் பற்களுக்கும் உவமை ; வாய்நகை - உம்மைத் தொகை ; நிரனிறை ; தனம் - நகில் ; முதல - முதலிய ; பங்கம் - குறைவு; சப்த சாகரம் - ஏழு கடல்கள், கண்களுக்குக் கடல் உவமை - "மலை கடல் நிகராகிய விழிகொடு வலைவீசிகள்" (திருப்புகழ் 455); ஓஞ்சுதல் - நாணுதல், இங்கு உவமைப் பொருள் ; விழிவலை (யை) விபுதர் முதலினர் மனமும் உருகிட வீசும் மோகினி என இயையும்; பணி - அணிகலன்கள்; பணிமொய்க்கும் கொம்பு - இல்பொருள் உவமை ; அயன்தரும் பெண்கொடி., இரு தகுவர்க்கொன்றிடும் பெண்கொடி எனத் தனித்தனி இயையும், இவள் திலோத்தமை ; இரு தகுவர் - சுந்தன் உபசுந்தன் என்னும் இரு சகோதரர்கள். நிகும்பனின் மக்கள், தவத்தால் பல வரங்களைப் பெற்று உலகை வருத்தினர், திருமால் ஆணைப்படிப் பிரமன் திலோத்தமையைப் படைத்து இவர்கள் முன் அனுப்ப அவளை அடைய விரும்பித் தமக்குள் பொருது மாண்டவர் ; சித்தர்கள் தாம் இத் தலைவியைக் கண்டால் நிறையழிந்து பெற்ற வரங்களை இழந்து விடுவோம் என அஞ்சி மறைந்து திரிகின்றனர் என்க, தற்குறிப்பேற்றம்; மறைந்து திரிய, பெண்கொடி போல (வும்), மானஎன (வும்) நின்ற நிலை என்க; துணியும் நினைவு - (கண்டது காட்சி, யாரோ என ஐயுற்றது ஐயம், அடுத்துத்துணிவாகிய) மானிட மங்கையே என உறுதி செய்துகொண்டு அணையும் கருத்து; திரு அனையள் - திருமகளை நிகர்த்தவள்;

6. சந்ததம் - எப்போதும்; சித்தச ஆகமம் - மன்மதனின் நூல், காமசாத்திரம், தீர்க்கசந்தி; கலவிச் சலாபம் - புணர்ச்சியால் விளையும் இன்பம், மூன்றன்தொகை ; வெருள - அஞ்சும்படி; உருத்து - சினந்து ; மலையமலை - பொதியை துன்றியதால் - நெருங்கியதால்; தென்றலுக்குப் புலி - "மலயக் குன்றில் குலமா முழையில் குடிவாழ் தென்றற் புலியே" (கம்பர். கடிமணப் 7); வாளில் - வாளைப்போன்று ; விதி - பிரமன்; வரைதரு பொறி - எழுதப்பெற்ற எழுத்து, தலையெழுத்து; திருகுகுணம் - வஞ்சனை; அதிவஞ்ச நினைவு - (உண்மையில் தலைவன்மாட்டுக் காதல் உண்டாயிருப்பினும் வெளியே காட்டாமல் மறைக்கும் ) பெரிய ஏமாற்றும் எண்ணம் ; விழிகொடு தெரியும் - (பொதுநோக்கிலிருந்து வேறுபடுத்தி)

சிறப்புநோக்கால் அறிந்துகொண்ட, இது குறிப்பறிதல் ; ஓவி - நீக்கி; மறுகினேன் - உளம்கசிந்து வேண்டினேன்.

7. கபட பிணக்கம் - (கூடலுக்கு இசையாதவள் போல்) வஞ்சனையாகக் காட்டும் மாறுபாடு, வண்ணம் நோக்கி இயல்பாயிற்று; மொழிகிறை - மொழிகிறாய்; விடர் - காமிகள்; புந்தியிலேன் அறிவற்றவளாகிய யான், வினையாலணையும் பெயர், எழுவாய்; பற்றும் - வலிதிற் கையகப்படுத்தல், பலாத்காரம்; இனமொழி - இத்தகைய வார்த்தை ; குளம் - நெற்றி உதடு உலர்தல், நெற்றி வியர்த்தல் ஆகியன மகளிர் ஆசை கொண்டதைக் காட்டும்மெய்ப்பாடுகள்

"புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநயம் மறைத்தல் சிதைவுபிறக் கின்மையொடு
தகுமுறை நான்கே ஒன்றுஎன மொழிய" (தொல். மெய்ப்பாட்டியல் 13)

என்னும் மெய்ப்பாடுகள் ஈண்டு இடம்பெற்றுள்ளன ; லண்டி - பிடிவாதக்காரி, இங்கு வசையாக இல்லாமல் பெருவிருப்போடு அழைப்பதாக நின்றது; உரையொடு அதர மதுரமும் முலைஉறு திறமும் உள்ளபடி ஓர்வதாயினன்; அதர மதுரம் - உதடுகளின் இன்சுவை; திறம் (இனிய) தன்மை ; ஓர்வதாயினன் - உள்ளபடி உணரத் தொடங்கினேன்; சருவினாள் ; கொஞ்சி விளையாடினாள்.

8. கரிகரம் - புணர்ச்சி விளையாடல்களுள் ஒன்று; மற்ற ஐந்தாவன - காமாயுதம், காமமருந்து, மதனாங்குசம், மதனபதாகை, மதனமத்திகை ; இவற்றின் விரிவைக் கொக்கோகம் ஆறாம் அத்தியாயத்தில் காண்க ; கரும்பு - கரும்புவில்; உத்தம் - யுத்தம், போர் ; களி - செருக்கினை உடைய ; மதன் உற்ற ஆதனம் - மதனாலயம், அல்குல்; முகரதம் - நாவாற் சுவைத்தல் ; ஊறும்நீர் - காமநீர்; நசை - ஈரம்; அங்கு உறுபோது எதிர்ந்து அவள்; திறம் - உபரிசுரதத்தின் வல்லமை விளம்பிடரியன - விளம்பிடவரியன எனற்பாலது தொகுத்தல் விகாரம் பெற்றது; விரதம் - நோன்பு; மடிவுஇல்-சாவு அற்ற; உரகம் நிகர்க்கும் குணம் - பாம்பைப் போல் சீறுதல், சினம் ; உள்உட்கி - மனத்தில் அஞ்சி ; உததி - கடல்; அநுராகம் - பெருவிருப்பம்;.

# 18. குன்றக்குடிக் குமரவேள் வண்ணம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்ற இந்த வண்ணம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனப் பதிப்பாக 1968 ஆம் ஆண்டு வெளியான குன்றக்குடிக் கலம்பகம் முதலிய பிரபந்தத் திரட்டில் இடம் பெற்றுள்ளது. 1980 ஆம் ஆண்டின் வண்ணமஞ்சரியிலும் தொகுக்கப் பெற்றுள்ளது (பக் 15)

இது சிறந்த ஓசையும் நயமான சொற்கட்டும் விழுமிய பொருளும் கொண்ட உயர்ந்த வண்ணம். ஆண்கலையில் பாட்டுடைத் தலைவராகிய முருகப்பெருமானின் பெருமைகள் அழகாக விளக்கப்படுகின்றன. நான்காவது கலையில் குன்றக்குடித் தலத்தின் வளம் கூறப்பெறுகிறது.

பெண்கலையில் காட்சி, ஐயம், துணிவு, குறிப்பறிதல், வறிதுநகை தோற்றல், இரந்து பின்னிலை நிற்றல், முன்னிலையாக்கல், புணர்தல், புகழ்தல் ஆகிய துறைகள் அடங்கியுள்ளன. இந்தப் பெண்கலையும் ஓரளவு மிடுக்கானதே, தலைவன் தலைவியை முன்னிலைப்படுத்தும் பகுதியைவிடக் கேட்போரிடம் கூறுதல் மிகுதியாதலின் பெருமித நடைபெற்றது.

இவ் வண்ணத் தலைவியைச் சுரதப் பிரியா நாயகி எனலாம். அவளுடைய இலக்கணமும் இலக்கியமும் வருமாறு.

"அவனிமிசைக் கலவிநயப் பவள்சுரதை என்பர்".

"தடமுலை தொட்டிதழ் உண்டணைத் தாடை தனையகற்றிப்
படர்குழல் கோதித்தன் வாண்முகத் தைப்பதி பார்த்தஉடன்
சுடர்எழல் காண்பன் எனநீலப் பூஞ்செவி தோகையினால்
மடவரால் எங்கள் சுகவனர் வெற்பின் மறைத்தனளே" (சிங்கார ரச மஞ்சரி 19, 21)

# 18. குன்றக்குடிக் குமரவேள் வண்ணம்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

### கலவிமகிழ்தல்

தானன தத்தந் தனந் தானன
தானன தத்தந் தனந் தானன
தானன தத்தந் தனந் தானன
தானன தத்தந் தனந் தானன
தனதன தான தத்த தனதன தான தத்த
தனதன தான தத்த தனதன தான தத்த
தானதந்தத் தனத்தன தானன
தானதந்தத் தனத்தன தானன
(தொ) தனனதன தனதான தந்தனா

ஆரணம் மெச்சும் பரன்; கோதறும்
ஆகமம் முற்றும் பகர்ந் தோன்;அலர்
பூவில்இ ருக்கின் றவன் கோஎன
ஓர்தலை யைக்கொண்டிரந்தோன்; அலை
கடல்நடு வேவிரித்த பணியணை மீதுறக்க
முறும் நெடுமால் வழுந்தும் இருகழலானன்; நித்தன்;
ஆதிஅந்தத் தடக்கம்இ லாதவன்;
மான்அணிந்திட் டகைக்கரு ணாகரன்;
ஈடில்எ ழுத்தைந் தையுங் கூறிடும்
நேயர்க ளுக்கன் பன்; எண் டோளொடும்
ஈமம திற்சென் றுநின் றாடிய
பூரணன்; இக்கொன் றுடன் போர்பொர
வரும்மதன் ஆகம்முற்றும் நொடியினில் நீறுபட்டு
விழவிழி யால்எரித்து மகிழ்சிவ யோகி; அத்தன்;
ஆனைஒன்றைச் செகுத்தத ளாகிய
போர்வைகொண்டுட் களித்தம னோகரன்;

ஆலநி ழற்கண் புகுந் தேஒரு
நால்வர்க ளுக்குஞ் சுகஞ் சேர்அநு
பூதிஅ ளிக்கும் பெருந் தேசிகன்;
ஆலமி டற்றந் தணன்; கூர்விழி
உமைமண வாளன்;எட்டு வகைஉரு வாகிநிற்கும்
ஒருபொரு ளானகத்தன்; மதிஅணி கோடிரத்தன்;

நீடுகொன்றைத் தொடைத்திரு மார்பினன்;
வீறுசங்கக் குழைச்செவி வானவன்;
அமலனது தவம்மீற வந்தசேய் 1

ஆறுமு கப்புங் கவன்; தோகையில்
ஏறிந டத்துங் குகன்; காசறும்
நாரதன் அச்சங் கொளுஞ் சீரொடு
தீயில்உ தித்தண் டர்அங் கோலிட
வருதகர் வாகனத்து முருகன்;வி ணோர்துதிக்கும்
அரசிவர் ஆணையிற்செய் பவனிவி நோதன்; வெற்றி
வேல் உறுங்கைச் சமர்த்தன்;ம காரத
வீரர்கெஞ்சித் தொழத்தகும் நாயகன்;
மாயையி னைக்கண் டு,முன் காசிப
மாமுனி சித்தந் தளர்ந் தே,பதி-
னாயிர லட்சந் தரங் கால்தொழும்
மோகமி குத்தன் புடன் சேரலின்
விதிவலி யோடுதித்த அவுணர்கள் மூவர்க்கும்
ஒருநம னாம்எனச்சொல் பெருமைகு லாவுசித்தன்;
வானமங்கைக் குரித்துறு காவலன்;
ஏனலின்கட் குறக்கொடி மோகனன்;
ஆகுலம் முற்றுந் தவிர்ந் தேபர
ஞானவி ளக்கங் கொளுஞ் சீரியர்
யாவர்களுக்கும் துணிந்தே உயர்
தாரக நுட்பம் பகர்ந் தாள்பவன்
அதிகவி லாசமுற்ற கடல்களை யேநிகர்த்த
தமிழமு னாள்அளித்த குறுமுனி நாதன்மெச்சு
சீல,விந்தைக் குணத்துவி சாகன்;அ -
கோரவிஞ்சைச் செபத்தர்முன் நேர்பவன்;
அறிவரிய விளையாடல் கொண்டவேள்

வாரண முற்றிந் திரன் சேனையுள்
ஆர்வம்மி கத்திண் பெறுந் தானவர்
தானைந டுக்கஞ் சுமந் தோலிட
ஓர்இரு பக்கங் களின் பேரொலி -
யொடுகுகு கூவெனச்செய் தொனிமலி கேதனத்தன்;
அருணையி னூடுதித்த துணையுட லான்ஒருத்தன்

ஓதுசந்தத் திருப்புக ழானம
தாணிதுன்றிச் சிறப்புறு மார்பினன்;
வீரம்மி குக்குங் கொடும் பேய்மக -
ளால்மிகும் அச்சங் கொளும் பாவலன்
ஆண்மைஒ ழித்தங் கவன் பாடிய
பாடலி னைப்பைங் கடம் போடணி
தருகும ரேசன்; இச்சை வழிதிகழ் ஆடலிட்டு
மலைதொறும் வாழும்அத்தன்; ஒருபதி னாறுருக்கொள்
ஏகன்; இன்சொற் றமிழ்க்கிழி வோதிடும்
மூடநெஞ்சத் தரைக்கடி வார்துணை ;
மாழைவ ரைக்கன் றகம் போய்அடி
தாழஅ டிக்கின் றசெண் டாயுதன்;
ஏழுபொ ருப்பும் பிளந் தேஒரு
மாநதி யைத்தந் திடுஞ் சேவகன்;
எனதுக னாவிடத்தில் ஒருமொழி யானதைப்பல்
தடவைவி டாதுசெப்பி யருளிய தேவன்;அக்கும்
நீறும்மிஞ்சத் தொடுத்தணி வார்எம
வாதையின்றிப் பெறக்கதி ஈபவன்;
விமலமன தினர்தேட நின்றகோ 3

வானைஅ ளக்கும் பசுஞ் சோலையி -
னூடுகு திக்குங் குரங் காயிரம்
மாரன்மி கச்சிந் திடுந் தேமலர்
வாளியி னிற்சிந் தைநொந் தேவரும்
மயல்வெறி யாடல்முற்றி, உவகையொ டாடலிட்டு,
மதுநிறை வானபுட்ப வகைமுத லாயவற்றை
வீசிஅம்பொற் பதித்தரு மீதினும்
மேவி,உம் பர்க்குவப்புற ஆடிடும்;
ஆணவம் முற்றுந் தவிர்ந் தேடணை
மூவகை யிற்றொந் தமும் போய்அபி -
மானம்மு தற்சங் கடங் கோடியும்
நீறுப டக்கண் டுபொன் போல்மனம்
ஒளிர்பெரு வாழ்வுமிக்க முனிவரும், ஓகைபெற்ற
களிபகர் சீர்படைத்த புலவரும், மாநிலத்தை
ஆளும்வென்றித் தனிக்குடை வீரரும்,
நாளும்வந்துட் களிப்புற நீடிடும்;

மாசறு பொற்குன் றமுன் பாம்மலை
யாவினு மிச்சம் படுஞ் சீர்கொளும்;
யாவர்வி ருப்பம் பெறும் போகமும்
ஈயும்வ னப்பொன் றிடுந் தேவையில்
வணிகர்மு னாஉரைக்கும் அளவறு கோடிபத்தர்
வழிபட லால்வளப்பம் மிகும்ஒரு கோயிலுள்ள
தாகும்; என்சொற் கவித்தொடை யாதிய
சூடுகுன்றக் குடிக்கிரி மேல்வளர்
விடலைதிரு வருள்போலும் மங்கையாள் 4

நாரண னுக்கின் பமுந் தோள்வலி
யாதிய பெட்புந் தருஞ் சீரொடு
மார்பில்இ ருக்கின் றபெண் பாவையும்,
நாவினி டத்தம் புயன் றோய்தரும்
வனிதையும், வானகத்து மகபதி நேயமிக்க
சசிமுத லாய்உரைக்கும் விழிஇமை யாதுபற்பல்
கோடிஇன்பம் பெருக்குறு மாதரும்
நாணுறும்பொற் புடைக்கிளி போல்பவள்;
கார்முகில் வெட்குங் கவின் தோய்குழல்,
மாமலர் ஒக்கும் பொலன் கூர்முகம்,
வாள்என வெட்டுந் திறஞ் சேர்விழி,
வீழிஉ கக்கும் பழம் போல்இதழ்,
கமுகது போல்அவிர்ச்சி தருகளம், மாரனுக்கும்
அவன்மனை யாளினுக்கும் மணிமுடி நேர்வனப்பு
மீறுகொங்கைத் துணைப்பொலி வாதிய
கோலம்மிஞ்சப் பொறுத்துள கோமளம்;
நாகரி கத்தந் திரந் தேர்பவள்;
பாலொடு கற்கண் டினுஞ் சீரிய -
தாம்மொழி சற்றன் பொடும் பேசியும்
மோகம்வி ளைத்தங் கசன் சேனையுள்
அதிபதி யாம்எனச்சொல் பெருமைகொள் வாள்; அளப்பில்
மதகலை யாவினுக்கும் உரைதெரி வாள்; மிகுத்த
தோதகங்கற் றிருப்பள்; மாதவர்
தாமும்வந்தித்திடத்தகும் மோகினி;
குமரியர்கள் அரசான பண்பினாள். 5

நான்அவ ளைக்கண் டுடன் போய்,இரு
தாளும்நி லத்தொன் றிடுஞ் சீர்முதல்
ஆவன வற்றின் திறங் காணுத
லால்மனித தப்பெண் களின் சேகரம்
எனமிகும் ஆவலுற்று மயல்வெறி ஏறிடப்பல்
உதடுட னேபிடிக்க உடலம்எ லாம்நடுக்கம்
ஆகிநெஞ்சத் திடுக்கம தோடிரு -
வாறுமின்றித் தவித்திடும் வேளையில்
மாதுரி யத்திங் கிதம் பேசிய
தோழியர்கள் முற்றும் பிரிந் தேதனி -
யானத னைக்கண் டுள்அஞ் சாதெனை
நாடியும் வெட்கும் குணம் போல்ஒரு -
விதநகை யோடுநிற்கும் நிலையையும், வேர்வைகொட்டும்
நுதலையும் நாடி, இச்சை வழிமுடி வாம்எனக்பொடு,
ஆர்வம்மிஞ்சித் "திருக்கனி வாய்மொழி
கூறவுஞ்சற் றிரக்கம்இ லாததென்?"
நாணம்இ ருக்கின் றதென் றால்என
தாருயிர் நிற்கின் றதன் றாகும்;மெய்;
காமர சத்தின் சுகந் தான்அறி -
யாய்;அது கைப்பன் று;பின் தோணிடும்;
எனதுக ணே; பழிப்பில் மதனகு டாரியொத்த
பதுமினி யே;பழுத்து வரும்அமு தே;உனக்கொர்
ஆள்எனுஞ்சொற் பொறுத்தலை வேன்;எனது
ஆவிஉன்றற் கடைக்கல மாம்;அடி!
கொடுமைதவிர்" எனவேநெ ருக்கலால் 6

நீரணி பொற்பொன் றிடுந் தாழ்சடை
நாதன்அ டுக்கின் றஅன் றோடிய
பாவைஎ னக்கொஞ் சமுந் தோணலு
றாததி ருட்டன் புடன் போயினள்
"இதுசரி யோ? உனக்கென் மனதைவி டாதுகைக்கொ
டுரிமையி லார்களொத்து விலகுவ தேது? சற்று
வாடி! அஞ்சப் பெடைக்கிணை யாம்நடை
போதும்! என்சொற் குருக்கம்உ றாததென்?
மோகம்மி குக்கின் றதந் தோ!பழி
சாரும்எ னக்கண் டுநின் றோர்தரம்
நான்உனை முத்தங் கொடுன் தோள்அணை

வாகிடு மட்டின் றிசைந் தால்என
குறைபடு மோஉனக்கும் அதுசுக மேஎனச்சொல்
வதுபிழை யோ?சுகித்த பிறகறி வாய்;தனித்த
வேளைஇந்தப் படிக்கெனை நீவிடல்
நீதம்அன்றொப் பெ"னச்சொலி வாடலும்,
நீலியும் வெட்குந் தரஞ் சேர்பவள்
கோபம்மி குக்குங் குணம் போல்" ஒரு
காலும்உ னைக்கன் டதுண் டோ?"என
ஏசினள்; அச்சந் தவிர்ந் தாள் எனும்
நிலைமையி னோடுகிட்டி, அளவறும் ஆணையிட்டுன்
அடிமைஎ னாவுரைத்து, விழ, உட னேமகிழ்ச்சி
மீறிஅங்கைத் தொடிக்குலம் ஒலிட
ஓடிவந்துற் றடுத்துற வாகினள்;
இமயம்நிகர் முலைமார்ப முந்தவே 7

நேயம்வ ளர்த்தங் கசன் றான்அட
நீஎன மெச்சும் பதம் பாடினள்;
"சோகம்ஒ ழிக்குங் குகன் சீர்மிக
வாழி"எனக்கும் பிடும் போதமொ-
டிதழ்கவுள் மார்புநெற்றி முலைமுத லாயவற்றின்
உறுசுவை தேறிமுத்தர் பகர்தரும் நூல்உரைத்த
வாறமுந்தக் டித்தத னோடுகிர்
யாவையும்பொற் புறப்பதி வாதல்செய்
தேகம யத்தொன் றிடும்பேரறி -
வாளர்எ னச்சிந் தைஒன் றாய்மிகு
தாடனம் இட்டம் புயந் தேர்பணி
தேன்உறு தட்டென் றிடுஞ் சீர்திகழ்
கடிதடம் ஆம்உறுப்பு முதலிய தேறி,இச்சை
மணியதன் மீதிருக்கும் மதனனும் நாணிஅச்ச -
மோடுகெஞ்சித் தொழப்பல வாகிய
லீலையுஞ்சித் திரப்படி யேசெயும்
நேரம திற்கண் சிவந் தோர்மயல்
போல்எதி ரிட்டங் கசைந் தாடிய
பேதைக முத்தெண் புளின்சீறொலி
யோடுகு குக்குங் குகுங் கூஎன

எழுதலின் ஆகம்முற்றும் வெயர்வைகு லாவமிக்கு
மதசல நீர்வரத்தும் ஒருசம மாகஇச்சை
நோயும்மங்கிச் செலத்தரு மாமலர்
தூவிஉம்பர்த் தலத்தினர் பேசிட
இனிதுபெறும் அநுபோகம் இன்பமே 8

## தொங்கற்றாழிசை

அமலனது தவம்மீற வந்தசேய்
அறிவரிய விளையாடல் கொண்டவேள்
விமலமன தினர்தேட நின்றகோ
விடலைதிரு வருள்போலும் மங்கையாள்
குமரியர்கள் அரசான பண்பினாள்
கொடுமைதவிர் எனநான்நெ ருங்கலால்
இமயம்நிகர் முலைமார்ப முந்தவே
இனிதுபெறும் அநுபோகம் இன்பமே.

# 18. குன்றக்குடிக் குமரவேள் வண்ணம்

## குறிப்புரை

1. ஆரணம் - வேதம்; கோது அறும் - குற்றமற்ற ; பூவில் இருக்கின்றவன் - பிரமன்; இரந்தோன் - பிச்சை ஏற்றவர்; வழுத்தும் - துதிக்கின்ற ; ஆதி அந்தத்து அடக்கம் - முதல் முடிவு என்னும் எல்லை ; ஈடுஇல் - இணையற்ற ; ஈமம் - சுடுகாடு; இக்கு ஒன்றுடன் - ஒரு கரும்பு வில்லேந்தி; ஆகம் - உடல்; அத்தன் - உயர்ந்தவன்; அதள் - தோல்; நால்வர். சநகர், சநந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் பிரமபுத்திரர்கள்; பெருந்தேசிகன் - உயர்ந்த குருநாதன், தட்சிணாமூர்த்தி; ஆல மிடற்று அந்தணன் - நஞ்சுண்ட கண்டனாகிய வேதியன்; எட்டுவகை உரு - ஐம்பூதங்கள், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் அஷ்டமூர்த்தம்; கத்தன் - தலைவன்; கோடிரம் - கோடீரம், சடை, வண்ணம் நோக்கிக் குறுகியது; பரன் முதலாக வானவன் ஈறாகக் கூறப்பெற்ற அமலன் என்க ; அது - ஆறன் உருபு.

2. புங்கவன் - கடவுள்; தோகை - மயில்; காசு அறும் - குற்றமற்ற ; தீயில் உதித்து அண்டர் அங்கு ஒலிட ; அண்டர் - தேவர்கள்; தகர் - ஆடு; விணோர் துதிக்கும் அரசு - தேவேந்திரன்; இவர் ஆனை - (அவன்) செலுத்தும் ஐராவதம்; மகாரத வீரர் - மிகப்பெரும் வீரர்கள், பதினோராராயிரந்தேர்களுடன் போர் புரிபவர்; அவுணர்கள் மூவர் - சூரபதுமன், சிங்கமுகாசுரன், தாரகாசுரன்; நமன் - இயமன்; வானமங்கை - தேவலோகப் பெண்ணாகிய தேவசேனை ; ஏனலின்கண் - தினைப்புனத்திலுள்ள ; ஆகுலம் - கவலை ; தாரக நுட்பம் - பிரணவத்தின் சூட்சுமமான பொருள்; குறுமுனிநாதன் - அகத்தியர்; சீல - கருணைப் பண்புமிக்க ; அகோர விஞ்சை - (பாவத்திற்கு) மிகவும் அச்சத்தை உண்டாக்கும் மந்திரம், இங்கு ஆறெழுத்து; அறிவரிய - நம் அறிவால் அளவிட்டு உணரமுடியாதது.

3. வாரணம் உற்று - கோழி பொருந்தியிருந்து; ஆர்வம் மிகவும் ஓலிடவும் என ஈரிடத்தும் எண்ணும்மை விரிக்க ; திண்பெறும் - வலிமைமிக்க ; தானை - படை ; தொனி - குரல் ; கேதனத்தன் - கொடியை உடையவன் ; அருணை - திருவண்ணாமலை ; துணை உடலான் - மனிதன், கிளி என்று இரு மேனிகளைப் பெற்ற அருணகிரிநாதர்; மதாணி - பதக்கம்; "உரைபெற வகுத்தருணை நகரினொரு பக்தனிடும் ஒளிவளர் திருப்புகழ் மதாணிக்ருபா கரன்" (வேடிச்சி காவலன் வகுப்பு 6) பேய்மகள் - கற்கிமுகி; பாவலன் - நக்கீரர்; ஆண்மை - அகந்தை; ஒழித்து அங்கு அவன் பாடிய ; பாடலினை - திருமுருகாற்றுப்படையை ; மலைதொறும் - குறிஞ்சிக்கிழவனாகப் பல குன்றிலும் அமர்ந்த; பதினாறு வடிவம் - சக்திதரர், ஸ்கந்தர், சேனாபதி, சுப்ரமணியர், கஜவாகனர், சரவணபவர், கார்த்திகேயர், குமாரசாமி, சண்முகர், தாரகாரி, சேனானி, பிரமசாஸ்தா, வள்ளி கல்யாண சுந்தரர், (சோமாஸ்கந்தர்) பாலர், கிரவுஞ்ச பேதனர், மயூர வாகனர் என்னும் தியானத்திற்குரிய கௌமார மூர்த்தங்கள், இவற்றுள் சிலவற்றை வேறுவிதமாகக் கூறுவதும் உண்டு, இதன் விரிவைத் தணிகைப்புராணம், அகத்தியன் அருள்பெறு படலம் 64-79 ஆம் விருத்தங்களிற் காண்க ; ஏகன் - பல வடிவங்களை ஏற்றாலும் ஒருவனே, இவனே ஒப்பற்ற பரம்பொருள்; தமிழ்க்கு இழிவோதிடும்

மூடநெஞ்சத்தர் - ஒப்பு: "தமிழ்ச் சுவை அறியாத் தெய்வம் உளதுஎனில் அஃதுணர் அலகையில் தாழ்வுஎனல் அறமே" தமிழ்மொழிக்கு உயர்மொழி தரணியில் உளதுஎனில் வெகுளியற்று இருப்போன் வெறும்புல வோனே" (அறுவகை இலக்கணம் 672, 705) மாழை வரை - பொன்மலை, மேரு; செண்டாயுதன் - செண்டு என்னும் படைக்கலத்தை உடையவன்; இவ்வரலாறு வருமாறு; - கோள்நிலை மாறுபாட்டால் உக்ரகுமார பாண்டியனின் ஆட்சிக்காலத்தே மழை பொய்த்தது. அரசன் இறைவனிடம் மழைவரம் வேண்டினான். கடவுள் மன்னனின் கனவில் ஒரு சித்தராகத் தோன்றி, "கால வித்தியாசத்தால் இப்போது மழை வழங்குவது அரிது; மேருமலையின் குகையொன்றில் ஏராளமான பொற்குவியல் உள்ளது; அம்மலையின் செருக்கு நீங்குமாறு நீ அதனைச் செண்டால் அடித்து உனக்குத் தேவையான அளவு பொன்னை வாரிக் கொள்" என்றான். உக்ரகுமார பாண்டியன் அவ்வாறே செய்தான். பழைய திருவிளையாடல் அரசன் அந்தணரை இகழ்ந்ததால் மழைவளங் குன்றியதாகக் கூறும்; இதனை பின்பற்றும் கடம்பவனப் புராணம் கூறுவதாவது: "அந்தணரை இகழ்ந்திடுமோர் வழுதி தாங்கும் அவனியுளோர் மழையின்றி வருந்தல் கண்டிங்கு எந்துசெய்வேன் எனக்கனவில் ஈசன் எய்தி, இருஞ்செண்டால் மேருவைச்சென் றுணர்த்தி வேண்டுமைந்துதனந் தறித்தெடுத்துன் கயலுமிட்டு வந்தவரை வாழ்வித்தி யாகம் ஓங்கக் கந்தரவான் பொழியுமெனச் சொன்ன செய்து, காலமழை பொழிதரப்பல் ஊழி வாழ்ந்தான்" (இலீலாசங்கிரக அத்தியாயம் 61) உக்கிரகுமாரன் முருகப்பெருமான் அம்சம்; கனவில் செப்பியது: "யான்முற் பிறப்பில் எவனோநன் கியம்ப வேண்டும் எனக்கேட்டேன்; வான்முத் தனைய நகைவரிசை வயங்க மகிழ்வுற் றருணகிரி தான்முற் றிலும் நம் பெனச்சொன்னான்; தனிவீ டடைந்தான் எனத்தவரும் வேன்முத் தமிழ்வா ணரும்பிறரும் விளம்பு கின்றா ரே? என்றேன்;" அந்தப் படிதான் எனச்சிறிதாங் கதட்டி உரைத்தான்; துயிலகன்றேன்;" (குருபர தத்துவம் - முற்பிறப்பு உணர்த்திய. 7-8) முருகன் இச்செய்தியைப் பலமுறை தனக்குக் கூறியதாகச் சுவாமிகள் பல இடங்களில் கூறியுள்ளார்; அக்கு - உருத்திராக்கம்; கதி - வீடுபேறு; விமல - தீய எண்ணங்களற்ற.

4. மது - தேன்; புட்பவகை முதலாயன - இலை, காய், கனி; மூவகை ஏடணை - தனம், தாரம், புத்ரன் என்னும் மூவாசைகள், அன்றி மண், பெண், பொன் என்னும் மூவாசைகள் எனினுமாம்; தொந்தம்- தொடர்பு, போர் என்றாலும் அமையும்; அபிமானம் - செருக்கு; சங்கடம் - துன்பம்; ஓகை - மகிழ்ச்சி, ஓகைபெற்ற புலவர், சீர்படைத்த புலவர் எனத் தனித்தனி இயையும், மாசறு பொற்குன்று - குற்றமற்ற இமயம்; மிச்சப்படும் - உயர்ந்த, "முழம் மிச்சமடி நான் உனக்கு" (திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு 189); வனப்பு - அழகு, இங்கே ஈகைச்சிறப்பு; தேவை - தேவகோட்டை; என்சொல் கவித்தொடை - இவ்வண்ணத்தின் ஆசிரியர் இத் தலத்தொடர்பாக இயற்றிய நூல்கள் வருமாறு; குன்றக்குடிக் கலம்பகம், திருப்புகழ்ப்பதிகம், முருகன் பதிகம், சிவபிரான் பதிகம், இக்கலவிமகிழ்தல் வண்ணம், ஆறு வகுப்புகள், படைவீட்டுப் பதிகம், படைவீட்டுத் திருப்புகழ் ஆக மொத்தம் 168 கவிகள்; விடலை - குமரன்.

5. பெண் பாவை - இங்கே திருமகள்; அம்புயன் - பிரமன்; வனிதை - இங்கே கலைமகள்; மகபதி - இந்திரன்; தேவர்களுக்குக் கண் இமைத்தல் இல்லை என்பது கவிமரபு, ஒரு செயலில் முனைந்து ஈடுபட்டிருக்கும்போது சற்றும் கண்ணிமைக்காமல் உழைக்கிறான் என்பது பேச்சு வழக்கு, இரண்டையும் சாதுரியமாக இணைத்துப் பேசுகிறார். மா மலர் ஒக்கும் பொலன் - தாமரையைப் போன்ற உயர்வு; வீழி உகுக்கும் பழம் - கொவ்வைக்கனி; அவிர்ச்சிதரு - விளங்கும்; மாரனுக்கும் .... துணைப்பொலிவு, ஒப்பு "தண்டெடுத்து வந்த தனுமாரன் - கொண்டலெனும் மடடவிழும் பூங்கோதை மாதுரதிக் குந்தனக்கும் இட்டஇணைக் கூடாரம் என்னலாம்" (வருணகுலாதித்தன் மடல் 93-94); பொறுத்துள - தாங்கியுள்ள, "அழகு சுமந்திளைத்த ஆகத்தாள்" (நளவெண்பா 79) என்புழிப்போல; கோமளம் - மென்மையானவள்; தோதகம் - வஞ்சகம்.

6. உடன்போய் - அருகேசென்று என்பது கருத்து; சீர் முதல் என்றது கண் இமைத்தல், வெயர்வை அரும்பல், மாலை வாடுதல் முதலியன ; மனிதப் பெண்களின் சேகரம் என உணர்ந்தது துணிபு, காட்சியும் துணிவும் கூறப்பட்டதால் இடைப்பட்ட ஐயம் ஓர்ந்து கொள்ளப்படும்; பல் உதடுடனே பிடிக்க - தலைவன் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்கொள்ள உதட்டைக் கடித்துக் கொள்ளுதல்; நெஞ்சத் திடுக்கம் - உள்ளத் துணுக்கம்; இருவாறும் இன்றி - அடைவோமா மாட்டோமா எனத் துணிய முடியாத நிலையில், மாதுரியத்து - இனிமையுடன்; இங்கிதம் - சூழலுக்கும் காலத்திற்கும் ஏற்ற இனியமொழி; தனியானதனைக் கண்டு உள்அஞ்சாது எனை நாடியும்; இச்சைவழி முடிவாம் என்றது குறிப்பறிதல், இதுவரை உள்ள பகுதி கைக்கிளையின் பாற்படும்; ஒருவித நகை - வறிது நகை தோற்றல் என்பர் அகப்பொருள் நூலார், "உள்ளம் மெல்லியற்குப் பிறிதேகொல் என்னும் பெருந்தகை தேறப் பெரிதுயிர்த்து வறிதே முறுவல்செய் தாள்தஞ்சை வாணன் வரையணங்கே" (தஞ்சைவாணன் கோவை 15) வேர்வைகொட்டும் நுதல் - "தலைமகன் தன்னை நோக்கியவழி உட்கும் நாணும் ஒருங்குவந்தடைதலின் வியர்பொறித்த நுதலள் ஆதல்" என்பார் பேராசிரியர். (தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல் 13 உரை;) திருக்கினவாய் .... கொடுமைதவிர் - இது இரந்து பின்னிலைநிற்றலும் முன்னிலையாக்கலும்; நீ நாணம் மிகுந்து அதன் காரணமாக என்னை ஏற்காவிடின் நான் இறந்துபடுவேன் என்பது கருத்து; கைப்பு அன்று - கசப்பானது ஆகாது, வெறுக்கத்தக்கதல்ல என்றபடி; பின் தோணிடும் - கூடியபிறகுதான் தெரியும்; கணே - கண் போன்றவளே ; குடாரி - அங்குசம், இங்கு ஆயுதப்பொது; மதனகுடாரி - மாரனின் படைக்கலம்; பதுமினி - இன்பநூலார் கொள்கைப்படி நால்வகை மகளிரில் மிக உயர்ந்தவள், மற்றவர் சித்தினி, சங்கினி, அத்தினி; ஆள் - வேலைக்காரன்; பொறுத்து அலைவேன் - ஏற்றுக்கொண்டு திரிவேன்.

7. நீர் - இங்கே கங்கை ; பொற்பு ஒன்றிடும் - அழகு பொருந்திய ; பாவை - இங்கே அங்கயற்கண்ணி, திக்குவிசயம் செய்த மீனாட்சி கயிலைப் போர்முகத்தில், "ஒற்றை வார்கழற் சரணமும் பாம்பசைத் துடுத்தவெம் புலித்தோலும் கொற்ற வாள்மழுக் கரமும்வெண் நீறணி கோலமும் நூன்மார்பும், கற்றை வேணியும் தன்னையே நோக்கிய கருணைசெய் திருநோக்கும் பெற்ற தன்வலப் பாதியைத் தடாதகைப் பிராட்டியும் எதிர்கண்டாள்" "கருத்தில்நாண்

மடன்அச்சம் கொண்டமைந்திடக்குனிதர மலர்ந்தபூங் கொம்பரின் ஒசிந்தொல்கிப் பண்டை அன்புவந் திறைகொளக் கருங்குழற் பாரமும் பிடர்தாழக் கெண்டை உண்கணும் புறவடி நோக்கமண் கிளைத்துமின் என நின்றாள்'' சிவபிரான் ஏழுநாளில் வந்து மணப்பதாகக் கூறினார். ''என்ற நாதன்மேல் அன்பையும் உயிரையும் உருத்தி ஆயம்சூழ மதுராபுரி அடைந்தனள்'' (திருவிளையாடற். திருமணப். 42, 43, 46) காதல்கொண்டும் காட்டிக்கொள்ளாமல் மதுரைக்குத் திரும்பியது ஈண்டுத் தொழிலுவமமாயிற்று; கைக்கொடு உரிமை இலார்கள் ஒத்து; அஞ்சப்பெடை - அன்னப்பேடு; சொற்கு உருக்கம்; பழி சாரும் எனக் கண்டு - கொலைப்பழி உண்டாகும் என்று உணர்ந்து; நின்று - இங்கேயே இருந்து; இன்று - இன்றைக்கு; நீ எனை விடல் நீதம் அன்று; (அணைய) ஒப்பு; நீலி - வஞ்சகத்திற் சிறந்த பழையனூர் நீலி, இவள் வரலாறு வெளிப்படை ; தொடிக்குலம் ஒலிட - வளையல்கள் ஒலிக்க; ஓடி வந்து உற்று அடுத்து உறவாகினள்.

8. பதம் - இசைப்பாடல்களுள் ஒருவகை, பெரும்பாலும் நாட்டியத்திற்குரியது; போதம் - மெய்யறிவு; இதழ் - உதடு; கவுள் - கன்னம்; முதலாயவற்றின் சுவைதேறி - சுவைத்தலுக்குரிய பதினோரிடங்களைச் சுவைத்து, அவற்றை, “ஒருகொடி இதழ்மற் றோர்கொம் பொளிநுதல் ஒருமான் கண்கள் ஒருகிளி நாஓர் மஞ்ஞை ஒண்கவுள் ஓர்மின் கண்டம் ஒருபிடி மார் போர் அன்னம் கையடி ஓர்பொன் கொங்கை ஒருகரும் பல்குல் ஓர்தேன் உந்திதந் தளிக்க உண்ணும்” (சீகாளத்திப் புராணம் - நான்முகச். 12) என்பதால் அறியலாம்; முத்தர் பகர் நூல் - முத்தியடைதற்குரியவர்களின் முதற் குருநாதராகிய நந்தியம் பெருமான் இயற்றிய காம சாத்திரம், இதனை, “அகப்பொருள் இலக்கணம் அம்பிகை பாகனும் பகவனும் நறைகமழ் மலர்உதிர் பொழில்மலி தமிழ்வரைப் புனிதமா தவனும் சீரிய புலமைத் திருவள்ளுவன்முதற் பலரும் கூறிடல் பார்மிசைக் கேட்டும் நாணுறாது இவ்வயின் நவில லுற்றனமே'' என்னும் அறுவகை இலக்கண நூற்பாவையும் (280) அதன் உரையையும் நோக்குக. அழுந்தக் கடித்து - (எட்டுவகையான) பற்குறிகளைச் செய்து; உகிர் யாவையும் பொற்புறப் பதிவாதல் செய்து - ஏழுவகையான நகக்குறிகளைப் பதித்து; ஏகமயத்து ஒன்றிடும் பேரறிவாளர் என - ஒன்றான முழு முதற்பொருளோடு (தனிப்பரம்) இரண்டறக் கலந்துவிடுகின்ற மெய்ஞானிகளைப்போல; சிந்தை ஒன்றாய் - பேதபாவமே இல்லாத ஒருமித்த கருத்துடன், இக்காரணத்தால் தான் இறைவனோடு இரண்டறக் கலக்கும் பேரின்பத்தை ஓரளவு விளக்கிக்காட்ட இலக்கியத்தும், நாட்டியத்தும் நாயகநாயகி பாவம் பயன்படுத்தப்படுகிறது; தாடனம் இட்டு - கைகளால் புடைத்தல்; ''உரமுதல் ஐந்தில் ஐம்பால் உணர்தொழில் முறையால் ஏற்பப் பொருவரு புணர்ச்சி வேளை புடைத்திடல் புடைப்பதாகும்'' (கந்தபுராணம் 5. 5-44) இது எட்டு வகைப்படும்; அம்புயம் - தாமரை ; தேர் - இரதத்தின் தட்டு; பணி - பாம்பின்படம்; தேன்உறு தட்டு - தேன்நிறைந்த பொன் தட்டம், இவையாவும் அல்குற்கு உவமைகள், “சிறுகீரை வித்துறு செம்பொற் றட்டமும் தேர்த்தட்டும் வாவியும் தேன்கூடும் மின்னார் கடிதடத்து உவமையாக் கழறினர் முன்னோர்'' (அறுவகை இலக்கணம் 569) மணி - “மணிசேர் கடிதடமுங் காட்டி” (திருப்புகழ் 63); சித்திரப்படியே - நாற்பத்தெட்டு வகையான கரண பேதங்களோடு,

"மதனநூல் தேறும் சிட்டர்கள் புணரும் பான்மை சித்திரக் கரணம் ஆமே" (கந்தபுராணம் 5-5-49); கண் சிவந்து ஓர் மயல்போல் எதிரிட்டு அங்கு அசைந்து ஆடிய பேதை ; கண்சிவத்தல்; "சங்கம் நெறியச் சிலம்பொலிப்பத் தடங்கண் சிவப்ப இதழ்விளர்ப்பத் திங்கள் நுதலின் வியர்வரும்பத் திகழ்புட் குரல்கள் மிடற்றொலிப்ப" (விநாயகபுராணம் - இந்திரன் சாபம்பெற்ற.17) சீறொலி - சீறுகின்ற ஓசை, சீற்காரம்; எண்புள் "அரிகுயின் மஞ்ஞை செம்போத் தனம்புறா காடை கோழிக் குரலென ஒலிசெய் வித்து" (சீகாளத்திப்புராணம் - நான்முகச்.18); எழுதலின் - உண்டாவதால்; தரு மா மலர் - தெய்வீக மரங்களின் சிறந்த பூக்கள்; பேசிட - புகழ்கூற.



# 19. திருப்போரூர் முருகர் வண்ணம்

புரவை அஷ்டாவதானம் சபாபதி முதலியார் அவர்களால் இயற்றப் பெற்ற இவ்வண்ணம் ஊ.புஷ்பரத செட்டியார் தம் கலாரத்னாகர அச்சுக்கூடத்தில் 1869 ஆம் ஆண்டு பதிப்பித்த வண்ணத்திரட்டில் உள்ளது. இப்பதிப்பில் துறைக்குறிப்பு இல்லை.

இவ்வண்ணம் மிகப் பெருமிதமான நடையை உடையது. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவனாகிய முருகப்பெருமானின் பெருமைகள் சிறப்பிக்கப் பெறுகின்றன. திருப்போரூர்த் தலச் செய்திகள கூறப்படுவதில் சில விளங்கவில்லை. இவ்வாசிரியர் தம் வழக்கப்படி மூன்றாம் தொங்கலில் தம் பெயரை ஆசிரிய முத்திரையாக அமைத்துள்ளார்.

பெண்கலை காட்சி, தலைவன் வேண்டல், வண்டோச்சி மருங்கணைதல், வறிதுநகை தோற்றல், முறுவற் குறிப்புணர்தல் ஆகிய துறைகளை உள்ளடக்கியுள்ளது. தலைவியின் எழில் மிடுக்கான சொற்களால் இலக்கிய நயத்தோடு கூறப்படுகிறது. கொஞ்சம்கூட விரசம் இல்லாத நல்ல வண்ணம் இது.

இந்த வண்ணத்தின் தலைவியைப் பிரகற்பா நாயகி எனலாம். (காண்க : முதல் வண்ணத்தின் அறிமுகம்)

# 19. திருப்போரூர் முருகர் வண்ணம்

## புரசை, அஷ்டாவதயனம் சபாபதி முதலியார்

### கலவி மகிழ்தல்

தாந்ததந்தந் தனதன தானத்தன தான
தாந்தந்தந் தனதன தானத்தன தான்
தனதந்தன தனதந்தன தனதந்தன தனதந்தன
தனதனதன தனதனதன தனதனதன தனதனதன
தனதனதன தனதனதன தானாதன தான
(தொ) தனந்தன தனாதனன தானனா

ஓங்கும்பொன் செறிகுவ டேறிப்புயல் தாரை
கான்றுந்துங் கடல்நிறை வாள்நித்தில மோடு
கழைதிண்கரி தரளங்களின்
ஒளிதுன்றிட நிலவுஞ்சுனை -
யுளகுவளைகள் இதழ்விரிமணம்
அமரர்கள்உல களவுறுபழ -
னியில்வருகுகன்; உயர்கஜமுக னார்சோதர ஆதி;
ஆய்ந்தன்பின் பரசிவ ஞானச்சுடர் வாளின்
ஈர்ந்தண்டும் பலபவ வேதைத்தரு வேரை
வயிரங்களை தருகிண்கிணி
விரவுந்துணை மலர்மென்பதம்
அலமரல்ஒழி இதயமதனில்
நிதம்ஒருமையின் அணுகுநர்தமை
உரிமையில்நனி பரவுதல்செயும் வேதாகம நாதன்
ஓர்ந்தஞ்சம் பயில்நடை யார்சித்ரஉ லாசம்
நேர்ந்தொன்றுஞ் சொலநிகர் தேவர்க்கும்ஒ ணாத
எழில்கொண்டுள குறவஞ்சியை
சுரர்இந்திரன் அருள்குஞ்சரி -
யுடன் உலகுயிர் உயும்வகைதிரு -
மணமதுபுரி அழகியபதி;
எவர்களும்அள வறிவரும்ஒரு தேஜோமய மான
அனந்தஅருணோதயசொ ரூபவேள் 1

ஊன்தின்றுந் தமதுயிர் பேணிக்கொலை நாடி
வீழ்ந்தங்கங் கிருளுடன் ஓடித்திரி கோர
உருவங்கொள்அ சுரவஞ்சகர்
குலம்என்பது முழுதும்பட
உணர்முனிவரர் அறிவினில்எழும்
அலகிலஒளி அனையதொர்கவின்
உலகினில்விரி வுறவிடும்ஒரு வேலாயுத சீலன்;
மூன்றென்றொண் சுடர்விரி சீர்பெற்றக ணாளர்,
தேன்துன்கொன் றையின்அணி மாலைப்புய நாதர்;
செகம்எங்கணும் அருளுந்திரி -
புரை அம்பிகை சிவசங்கரி
முழுமதிமுக பயிரவிபரை
கருணையின்உரு வளர்கயல்விழி
உமையவள்இம மலைஉதவிய மாதேவியொர் பாகர்;
ஊண்கந்தம் பலசரு காதிப்பொரு ளாக
ஆர்ந்தைந்திந் திரியமும் ஏவற்படி நேர
நிறுவுஞ்செய முனிஇந்திரர்
தொழும்அம்பரம் உறைசுந்தரர்;
உரைசதுமறை களும்முடிபிது
எனஉணர்வறு நவவடிவினர்;
ஒலிபரிபுர பதயுகம்உற வாய்நாடினர் வாழ
அமர்ந்தருள் தியாககயி லாசர்சேய் 2

தாங்குந்திண் புவிதிசை யானைத்திரள் வான -
மீன்தங்குந் குவடுயர் ஆசைக்கிரி ஏழும்
அலமந்திட அலர்அம்புஜ
பிரமன்புகல் குலஉம்பர்கள்
தலம்அசைதலும் மிகவெருவினர்
சரவணபவ சிவகுருபர
க்ருபைபுரிகென ஒலிகுரலிடு மாவாரண மீளி;
சூழ்ந்திங்கம் புவிபுனை நீலத்துகில் போல
நீண்டுந்துந் திரைஎறி ஓசைக்கட லூடு
மிளிருங்கதிர் உமிழ்சுந்தர
அருணன்பொலி வெனமிஞ்சிய
சுரர்உலகுடன் அகிலமும்மிகு
மரகதமணி நிழல்குலவிட
எழுபசியக லபவிரிசிறை மேல்நீடிஉ லாவ

தாண்டுந்திண் கழல்இணை மேலிட்டிடு சோதி
தோய்ந்தொன்றுந் தமனிய வீரக்கழல் நாதம்
உரும்அஞ்சஉ ருவியண்டசி -
கரமுந்தலை அதிரும்படி
தகுபணமுடி அரவரசனும்
மனவலிதளர் வுறவெகுநயம்
இயல்சதியுடன் நடமிடும்மயில் ஊர்மூஉல கேசன்;
தினம்பணி சபாபதிப ராவுவோன் 3

தாந்தந்தந் தனிமலம் ஓவச்சிவ யோக
மாங்குன்றின் புடைதச நாதப்பறை ஒல
மிடநின்றனர் வதியந்தணர்
செறிசெந்திலொ டுபரங்கிரி
தரைபுகழ்பழ முதிர்பொழில்வரை
அடியவர்துதி தணிகையும்நவில்
திருமலைசிவ கிரிஉறைமுதல் சீர்ஏரக வாசர்;
தூண்டும்புன் பவம்அற மூகைத்தவ ராசன்
ஈண்டுந்தன் பசிகெட நாடித்திரி மாலும்
முனம்அங்கொரு பகல்வந்துக -
ணுவஅந்தணன் இடுவெந்துயர்
தொலைவுறுநெறி ஒருநொடிவரை
பெறும்உயர்பதி பிரணவமது
நினைவரம்எவை களும்உதவிய பேறார்தல மான
சார்ந்தம்பங் கயவனம் ஆசைப்பெடை யோடு
தான்சொந்தங் கொடுபுணர் வாவிப்புடை சூழ
வரிதுன்றிய சிறைவண்டினம்
மதுஉண்டிசை முரலும்பொழில்
தரணியைஅள விடவளர்திரு
மணிநெடுமுடி முரஉறரிஎன
வளமலிசெய சுபகரம்நிறை போரூரினில் நீடு
செழும்ப்ரண வரூபமலை மீதிலே 4

தேங்கும்பைம் புனல்வளை பாரிற்பெரு வானில்
யாண்டுஞ்சென் றொருவரும் நேடக்கிடை யாத
அமிர்தந்தரு கிறஇன்சுவை
முழுதுந்தனி உருவங்கொடு

தெரிதரஇவண் எதிரினில்வர
அரியதொர்தவம் முனம்உளதென
எவர்களும்நினை பொருள்தருசினை நீள்தாருவின் நீழல்
போன்றிங்கென் றனைஇனி தாளத்தயை நீடி
வேண்டுஞ்சம்ப் ரமநய மாம்அற்புத மாக
வருசந்தன முகிழ்மென்கொடி;
மடவஞ்சியர் திரள்என்றிடு
புதுமைகொள்பல விதமலர்நடு -
வினில்நிறைமது இதழ்பொதுளிய
சததளம்இது எனும்மயில்இய லார்மோகவொ யாரி;
தேர்ந்தொண்கந் தமதவிர் போதிற்குளிர் தேறல்
கூர்ந்துண்பஞ் சுரவரி பாடிக்களி ஏறும்
இசைவண்டுசை வலமுந்தவழ்
முகிலுங்கரு மணலும்பொரு
செறிமுருகவிழ் குழலினில்அநு
தினம்மருவிடில் உளதொருபிடி -
யினும்மிகஅதி சிறுதுடிஇடை ; தாளாதது பாரம்
எனுந்தகை எணாமையும்ஓர் ஞாயமோ? 5

"தீண்டுங்கந் தரமிசை வாழ்பொற்குல மேரு
ஆய்ந்தஞ்சும் படிகனம் மேவிப்படர் தேமல்
திகழ்பொன்றனை அரவும்பொடி -
தனை நன்கதில் விரவும்படி
செருகினதென எழிலுடையது;
தடவிகடக ரடமதமழை
பொழிநெடுவலி உளகரிஇரு கோடாம்என வீறி,
வீங்குங்குங் குமமணம் வீசிப்பல் மாலை
பூண்கொண்டிங் கிதமொட்டு பூரித்தெழு மார்பில்
இடம்இன்றென வளர்தந்தெழில்
இளமைந்தர்கள் உளம்நைந்திட
விரைம்ருகமத களபமதணி
பரிமளபுள கிதவிகசித
வசிகரகன தனஅபிநய மானே! என மோடி?
சேர்ந்துன்செங் கனிஇதழ் உறற்றெளி தேனை
மாந்தும்பண் புறுகன யோகத்தினன் ஆக
உனைஅண்டினன்; இனிவஞ்சகம்
இலைஎன்றுபு னகைதந்தனை ;

செயவரிபர வியகுவளையை
நிகர்கடைவிழி அருள்புரி" என
உடல்அகம்நெகிழ் வுறஉருகிய தாரேஅறி வார்கள்?
இதம்பெறு விநோதம்அள வாகுமோ? 6

வாங்குந்தெண் டிரைதவழ் வேலைக்குள நாளில்
ஏய்ந்தின்பஞ் செயஎழு சீதச்சுவை ஊறு
சுதைஅண்டர்கள் உணவந்ததை
எவர்கண்டவர்? சொலில்என்பலன்?
மணிஇதழ்மலர் தனைஅணுகிய
அளிஎனவரும் எனதுடல்பர -
வசம்உறஅவள் தரும்அமிழ்துறழ் தேன்ஊறலெபோதும்;
ஊன்றுஞ்சிந் தனைமிக வாடித்தவ நேர்மை
பூண்டஞ்சுஞ் சிலர்அநு போகித்தறி யாமல்
நிலைஒன்றுள ததுகண்டனம்
எனவும்பக ருவர்; என்செய?
உவகையின்அவள் சொகுசுளம்ருது
கரமிசைதுயில் கொளுவதில்அவர்
இனிஅடைசுக மதுமிகஇனி தாமோ? பயன்ஏது?
வாய்ந்தம்புங் கருவிளை நீலத்தலர்பூவும்
ஏந்தும்பங் கயமும்ஓ வாமற்பிறழ் சேலை
முனியுங்குளிர் விழிகொண்டொரு
சிறிதென்புடை வரில், அங்கது
வசம்அலசொல ; உடல்புளகித -
முறும்; நிறைஅள விடல்அரிதரி -
தவள்புரிபல பலவிதமத லீலாவிதி யாவும்;
மனந்தனில் விடாதுணர லாவதோ? 7

மாந்தண்செந் தளிர்புரை மேனிக்குயர்வானில்
ஊர்ந்தின்றும் பயில்அர மாதர்க்கொழி யாத
ஒளிவந்ததை அறிகின்றலர்
எவர்உண்டிவண்? இதுகொஞ்சமொ?
வரிஅளிஇசை யிலும்அதிருசி
பெருகியஒரு மொழிஉரைசெய
அதுசகலமும் நொடியினில்வர வேதான்அருள் வாய்மை
பூங்கஞ்சம் பொலிஅயன் ஆதிப்பெரி யோர்கள்
தாம்பஞ்சங் கெடஅறி நீதித்திரு வாளர்

அபரஞ்சியின் இயல்பொங்கிய
இருபம்பரம் இகல்கொங்கைகள்
பொலனுறுபுய மிசைபதிவுற
அணுகுவள்இரு வரும்ஒருமயம்
எனஇறுகிட எனைஅணைகுவள் காமாதுரம் மீறி;

வாழ்ந்தென்றுந் திருஉற வேமெய்த்துணை கூடி
யான்தஞ்சம் பெறஒரு ஜாடைக்குற வாகும்;
மயல்மிஞ்சுவள்; குயில்கொஞ்சுவள்;
நிறைநண்பொடு நலமும்பெரு
மகிழ்வுறுசுக உருவமும்என
அனைவரதமும் நிலைபிரிவற
மனதிசைவொடு மருவுவள்இள மானாள்என தாவி;
வசந்தனும்அ வாவும்இது லாசமே.

## (தொங்கற்றாழிசை)

அனந்தஅரு ணோதயசொ ரூபவேள்
அமர்ந்தருள் தியாககயி லாசர்சேய்
தினம்பணிச பாபதிப ராவுவோன்
செழும்ப்ரணவ ரூபமலை மீதிலே
எனுந்தகை எணாமையும்ஓர் ஞாயமோ?
இதம்பெறு விநோதம்அள வாகுமோ?
மனந்தனில் விடாதுணர லாவதோ?
வசந்தனும் அவாவும்இது லாசமே.

# 19. திருப்போரூர் முருகர் வண்ணம்

## குறிப்புரை

1. குவடு - மலை உச்சி; புயல் - மேகம்; தாரை - மழை ; இங்கு நீர்த்துளி; கான்று உந்தும் - கக்கி வெளிப்படுத்தும்; புயலும் தாரையும் என உம்மைத் தொகை ; உந்தும் என்னும் பெயரெச்சம் நித்திலத்தைக் கொண்டு முடிந்தது; மேகத்தில் நீர்த்துளிகள் சேர்ந்து முத்துகள் தோன்றுகின்றன என்றும், இவற்றை விண்ணவர்கள் ஆகாயத்திலிருந்தே எடுத்துக் கொண்டு விடுவதால் நமக்குக் கிடைப்பதில்லை என்றும் கூறல் கவிமரபு.

தாராதரேஷு ஜாயேத மௌக்திகம் ஜலபிந்துபி;
துர்லபம் தன்மஹா ரத்னம் தேவைஸ்தன்னீயதேரம்பராத்

(ஸ்ம்ருதி ஸாரோத்தர ரத்னபரீக்ஷா)

மேகத்தில் தோன்றும் முத்தின் நிறம்: "கொண்மூ முத்தம் நீடுசெம் பரிதி அன்ன நிறத்தது" (திருவிளையாடல், மாணிக்கம் விற்ற. 55); கடல் நிறை வாள் நித்திலம் - கடலில் (முத்துச்சிப்பியில்) நிறையக் கிடைப்பதும் ஒளிமிக்கதுமாகிய முத்து; முன்காட்டிய தமிழ்ப்பாடல் இதன் நிறத்தை, "பேழ்பாய்க்கோடுகான் முத்தம் வெள்ளை நிறத்தன" என்கிறது; இப்போது சிப்பியில் தோன்றும் முத்துகளே அதிகமாகக் கிடைப்பதால் (இயற்கை முத்துக்களில்) கடல்நிறை நித்திலம் என்கிறார்; முன்னே காட்டிய வடமொழி நூலிலும் இக்கருத்து. "மௌத்திகம் சுக்திஜம் லப்யம். ஆகரேஷு கலௌ ந்ருபி;" என இடம் பெற்றுள்ளது; நித்திலமோடு அத்துச்சாரியை கெட்டது; கழை - மூங்கிலிற் பிறந்த முத்தின், மேற்காட்டிய பாடல் இதன் நிறத்தை, "கிளைமுத்து ஆலிப் பீடுசால் நிறத்து" என விளக்கும்; திண்கரி - வலிமைமிக்க யானையின் மருப்பில் தோன்றும் முத்தின்; வடமொழி ஹாலாஸ்ய மஹாத்ம்யம் இதன் நிறத்தை மஞ்சள் ( "கரிதந்தோத்பவம் பீதம்" ) எனத் தெரிவிக்கிறது; நித்திலம் என்பதைப் புயல்தாரை, கடல் இரண்டுடனும், தரளம் என்பதைக் கழை, கரி ஆகிய இரண்டுடனும் கூட்டுக ; துன்றிட - பொருந்தும்படி; நிலவும் - விளங்கும்; சுனை - மலையில் உள்ள குளம்; சுனையின் நிறத்திற்கு முத்துக்களின் நிறம் உவமை ; இனிக் கழை தின்கரி எனப் பாடங் கொண்டு மூங்கிலை உண்கின்ற யானை எனினுமாம் ; சங்கப் பாடல்களில் இவ்வாட்சி மிகுதி; கரி தரளம் இருசொற்களும் வடமொழியாதலின் இயல்பாகப் புணர்ந்தன; உலகுஅளவு உறு பழனி; கஜமுகனார் - யானை முகத்தை உடைய விநாயகர்; சோதர ஆதி - உடன்பிறந்தாராகிய முதற்பொருள்; ஆய்ந்து - நிலையானது எது நிலையற்றது எது என ஆராய்ந்து தெளிந்து; அன்பின் - பக்தியொடு; அண்டும் பலபவ வேதைத்தரு வேரைவயிர ஞானச்சுடர்வாளின் ஈர்ந்து என இயையும்; அண்டும் - வந்தடைகின்ற ; பவ வேதைத் தரு - பிறவியாகிய துன்பத்தைத் தருகின்ற மரத்தினுடைய, உருவகம் ; வேரை - மூலத்தை, பிறவிக்குக் காரணமான இருவினைகளை ; ஞானத்தை வாளாக உருவகித்தல் மரபு. "நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்" (திருமந்திரம் 2968), "அவிரோத ஞானச் சுடர்வடிவாள்" (கந்தர் அலங்காரம் 25): வயிரம் - அவ்வேரின் (இருவினைகளின்) பகைமையையும், இரண்டன் உருபும் எண்ணும்மையும் விரிக்க: களைதரு - நீக்குகின்ற ; கிண்கிணி விரவும் பதம், துணைப்பதம், மென்மலர்ப்பதம் எனத் தனித்தனி இயையும்;

அலமரல் - சுழற்சி; ஒருமையின் - மனமொழி மெய்களால் ஒன்றுபட்டு; வேதாமகம நாதன் - வேதங்களாலும் ஆகமங்களாலும் பரம்பொருளாகத் துணியப்பெற்ற தலைவன் ; அஞ்சம்பயில் நடை ஆர்சித்ர உலாசம் நேர்ந்து தேவர்க்கும் நிகர் ஒன்றும் ஓர்ந்து சொல ஒணாத எழில் கொண்டுள குறவஞ்சியை என இயையும்; அஞ்சம் - அன்னப்பறவை ; சித்ர உலாசம் நேர்ந்து - உலாசசித்திரம் என மாறுக, பேருவகையைத் தரும் அழகு பொருந்தி; குறவஞ்சி என்றது வள்ளிநாயகியை ; சுரர் இந்திரன் - தேவேந்திரன்; குஞ்சரி - தெய்வயானை ; உலகு உயிர் உயும் வகை - உலகத்தில் உள்ள உயிர்க்கூட்டம் அனைத்தும் இன்பங்களைத் துய்க்கும்பொருட்டு, "பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர் விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ" (திருவாசகம் 12-9), "போகியாய் இருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்" (சித்தியார் 30) என்பன இங்கே கருதத்தக்கவை பதி - தலைவன்; அளவு அறிவரும்; தேஜோமயமான - ஒளிமயமாகிய ; அனந்த அருண உதய சொரூப - கணக்கற்ற சூரியர்கள் ஒருங்கே உதித்தாற் போன்ற எழிலுடைய ; வேள் - முருகக்கடவுள்.

2. ஊன்தின்றும் தமது உயிர் பேணி, "தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறி தூன்உண்பான்" (திருக்குறள் 251), இழிவு சிறப்பும்மை ; வீழ்ந்து அங்கங்கு இருளுடன் ஓடித்திரி ; அசுரர்கள் இரவிலே அதிகம் நடமாடுபவர்கள், எனவே நிசாசரர் எனப்படுவர் ; உணர்முனிவரர் - பரம்பொருளை அறிந்த ஞானிகள் ; வேலால் உலகில் எழுகின்ற அறிவொளிக்கு முனிவர்களின் ஞானஒளி உவமை ; வஞ்சகர் குலம் என்பது முழுதும் பட(வும்) கவின் உலகினில் விரிவுற(வும்) விடும் ஒரு வேலாயுதம் என எண்ணும்மை விரியும் ; மூன்று - சூரியன், சந்திரன், நெருப்பு என்றும் மூன்று ; துன்கொன்றை - ததும்புகின்ற கடுக்கை மலர், வினைத்தொகை ; அணி - அழகிய ; பரை - அனைத்தையும் கடந்து நிற்பவள் ; கருணையின் உரு - கருணாம்பிகை; கயல்விழி - மீனாட்சி; ஊண் - உணவு; கந்தம் - கிழங்கு வகைகள் ; ஆர்ந்து தின்று; ஐந்து இந்திரியமும் - ஐம்புலன்களும்; செய முனி (புலன்களை அடக்குதலாகிய பெரும்பேரில்) வெற்றி பெற்ற முனிவர்களும்; இந்திரர் - இந்திரனை உள்ளிட்ட தேவர்களும், உம்மைத்தொகை, இனி முனி இந்திரர் என்பதை முனிவர்களின் தலைவர்கள் என உரைப்பினும் அமையும், முனீந்திரர் என வடமொழித் தீர்க்கசந்தி பெறாமல் தமிழ்வழி யகர உடம்படுமெய் பெற்ற புணர்ச்சி ; தொழும் சுந்தரர், அம்பரம் உறை சுந்தரர் எனத் தனித்தனி இயையும்; உரை சதுமறைகளும் - சொல்லப்படுகின்ற நால்வேதங்களும், உயர்வு சிறப்பும்மை முடிபு இது என உணர்வது - "வேத புருடனும் யாதுநின் நிலைஎனத் தேறலன் பலவாக் கூறினன் என்ப" (சிதம்பர மும்மணிக்கோவை 17-19-20); நவவடிவினர் - என்றுமே புதுமையான திருஉருவத்தை உடையவர், நவந்தருபேதமாக விளங்குபவர், அவையாவன ; பிரமன், திருமால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவம்; ஒலி பரிபுர - ஒலிக்கின்ற சிலம்புகளை அணிந்த, வினைத்தொகை ; பதயுகம் - திருவடியிணை ; உறவாய் - உரிமையொடு ; தியாக கயிலாசர் - திருப்போரூரில் இறைவன் திருப்பெயர்.

3. திண்புவி தாங்கும் திசையானைத்திரள் என மாறுக, திரளும் என எண்ணும்மை சேர்க்க ; வானமீன் - நட்சத்திரம்; குவடு உயர்; ஆசைக்கிரி - பெரிய மலைகள், ஏழாவன ; - கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம்; பிரமன்தலமும் புகல் குல

உம்பர்கள் தலமும் அசைதலும் என்க, பிரமலோகமும், சொல்லப்படும் பிற தேவர்களின் உலகங்களும் நடுங்க என்றபடி; வெருவினர் - (சூரனால்) அச்சமுற்ற தேவர்கள், வினையாலணையும் பெயர் ; வெருவினர் க்ருபை புரிக என ஒலி குரலிடு மீளி, மாவாரண மீளி என இயையும்; வாரண - சேவற்கொடியை உடைய ; மீளி - வல்லவன்; சூழ்ந்து இங்கு அம்புவி புனை நீலத் துகில்போல நீண்டு உந்தும் திரை எறி ஓசைக் கடலூடு; கதிர்உமிழ் - ஒளி வீசும்; சுந்தர அருணன் பொலிவு என - அழகிய கதிரோனின் எழிலுக்கு இணையாக, "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" (திருமுருகாற்றுப்படை 1-2); சுரர் உலகு - தேவலோகம்; அகிலம் - நிலஉலகம்; மரகதமணி நிழல் - பச்சை இரத்தினத்தின் ஒளி; கலப - தோகை ; தோய்ந்து ஒன்றும் ; தமனிய - பொன்னாற் செய்யப்பெற்ற ; நாதம் - (வீரக்கழலின்) ஒலி; உருவம் - இடி; அண்டசிகரமும் - வானின் உச்சியும்; பண முடி-படத்தையுடைய தலை ; அரவரசன்-ஆதிசேடன்; சபாபதி பராவுவோன்-சபாபதியாகிய என்னால் வணங்கப்படுபவன். இவ்வண்ணத்தின் ஆசிரியர் தன் பெயரை முத்திரையாக அமைக்கும் இயல்பினர்.

4. தாம் தம்தம் தனிமலம் ஓவ-ஒவ்வொருவரும் தனித்தனியே தன் ஆணவத்தை நீக்கிக் கொள்ளும்;பொருட்டு; சிவயோகமாம் குன்றின்புடை - சிவயோகம் என்னும் குன்றில், உருவகம்; தசநாதப்பறை ஓலமிட-மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் அறிகருவிகள் ஐந்தும், உபத்தம், கை, கால், குதம், வாக்கு என்னும் தொழிற்கருவிகள் ஐந்துமாகப் பத்து இந்திரியங்களாகிய வாச்சியமும் ஒலிக்கும்படி, புலன்கள்யாவும் ஒருமிக்க என்பது கருத்து; நின்றனர்வதி - நிலைத்து வாழ்கின்ற, முற்றெச்சம்; பழமுதிர்பொழில் வரை - பழமுதிர்சோலை மலை; தணிகை-திருத்தணி; சிவகிரி - பழனி; உறை முதல் - வசிக்கின்ற பரம்பொருள்; சீர் ஏரகம் - சிறப்புடைய சுவாமிமலை; மூகைத் தவராசன் முதலியவர்களைப் பற்றிய தலபுராண வரலாறுகள் விளங்கவில்லை. அ பங்கய அனம் - அழகிய தாமரையில் உள்ள அன்னப்பறவை; தான் சார்ந்து ஆசைப் பெடையோடு சொந்தங் கொடு புணர் வாவி என இயையும்; வரிதுன்றிய - கோடுகள் பொருந்திய ; மதுஉண்டு இசை முரலும்; தரணியை அளவிட வளர்-(பலிச்) சக்கரவர்த்தியால் வழங்கப்பெற்ற) உலகத்தை அளப்பதற்காகத் திருவிக்ரமனாக வளர்ந்த ; திருமணி நெடுமுடி முரஹரி - அழகிய இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற உயர்ந்த கிரீடத்தை அணிந்த திருமால்; இனித் திருமகளையும், கௌஸ்துபத்தையும், பெரிய கிரீடத்தையும் உடைய திருமால் எனினுமாம்; முரஹரி-முரன் என்னும் அரக்கனைக் கண்ணனாகக் கொன்றவன்; பொழிலுக்குத் திருமால் உவமை ; பொழில் முரஹரி என வளம்மலி போரூர், செயப் போரூர், சுபகரம்நிறைபோரூர் என இயையும் ; இத்தலத்துள்ள குன்றின் பெயர் பிரணவ மலை என்பதாம்.

5. பைம் புனல்-பசிய நீர், கடல்; நேட - தேடினாலும்; எவர்களும் நினை பொருள்தரு சினைநீள் தாரு - எல்லோருக்கும் அவர்கள் கருதியதை வழங்கும் இயல்புடைய நீண்ட கிளைகளை உடைய மரம், கற்பகம்; கற்பகத்தின் நீழல் தலைவியின் அன்பிற்கு உவமை ; போன்று இங்கு என்றனை இனிது ஆள தயைநீடி; வேண்டும் நய சம்பிரமம் ஆம் என மாறுக, விரும்பப்படும் இன்பத்தின் நிறைவு ஆகிய ; வருகும் - வரும்; தன முகிழ் மென்கொடி -

நகில்களாகிய அரும்பைப் பெற்ற கொடி போல்வாள் ; வஞ்சியர் திரள் என்றது தோழியர் கூட்டத்தை ; மதுநிறை சததளம், இதழ் பொதுளிய சததளம் எனத் தனித்தனி இயையும் ; சததளம் - தாமரை ; பொதுளிய - நெருங்கிய ; மயில் இயல் ஆர் மோக ஒயாரி - மயிலின் சாயலைப் பொருந்தியவளும் விருப்பத்தை உண்டாக்குபவளுமாகிய ஒப்பனையைப் பெற்றவள்; தேர்ந்து ஒண் கந்தம்அது அவிர் போதில்; தேர்ந்து - "கொங்கு தேர் வாழ்க்கை" (குறுந்தொகை 2); ஒண்கந்தம்அது - நறுமணம், அது பகுதிப்பொருள் விகுதி; போதில் மலர்களில்; தேறல்-தேன்; கூர்ந்து உண் - மிகுதியாகக் குடிக்கின்ற ; கூர்ந்துஉண் வண்டு, களிஏறும் வண்டு எனத் தனித்தனி இயையும்; பஞ்சுரம் - பாலைக்குரிய ஒரு பண்; வரி - இசைப்பாடல்; சைவலம்- பாசிக்கொத்து, இது கூந்தற்கு உவமை, "நின்திருக்கேசபாரத்தினொடு கிளர்சைவ லக்கொத்தெழ" (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், நீராடல் 1); கருமணல் - ஆற்றல் "யாற்றல் அன்ன கூர்தல்" (பெருங்கதை 4-11-54); செறி குழல், முருகு அவிழ் குழல்என்க ; முருகு அவிழ் - நறுமணம் விரியும்; உளது ஒரு பிடியினும்; அது பாரம் தாளாது எனும் தகை - அந்த இடுப்பு சுமையைத் தாங்கமாட்டாது என்னும் நிலை ; எணாமை-எண்ணாமை, கருதாது; தலைவியின் கூந்தலிற் படியும் வண்டுகளைத் துரத்துகிறசாக்கில் தலைவன் அவளை நெருங்கித் தீண்டுதலைக் கூறும் இத்துறை வண்டோச்சி மருங்கணைதல் அல்லது மெய்தொட்டுப் பயிறல் எனப் பெயர்பெறும்.

6. மிசைவாழ் கந்தரம் தீண்டும் பொற்குல என இயையும், மேலே உள்ள மேகத்தைச் சென்று தொடுகின்ற, அழகிய அட்ட குலமலைகளில் ஒன்றாகிய மேருமலை என்றபடி, வானளாவிய அழகிய மேரு; ஆய்ந்து - ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டு; அஞ்சும்படிக் கனம் மேவி; பொன்றனை அரவும்பொடிதனை - தங்கத்தூளை, தன் ஈரிடங்களிலும் பகுதிப்பொருள் விகுதி; செருகினது என ; என - உவம உருபு; தட - இடமகன்ற; விகட - அழகிய ; கரட - மதம் பாய்ந்த சுவடுகளில், இவை செவிகளின் அடிப்பகுதி; மதமழை பொழி, நெடு, வலிஉள என்னும் மூன்றும் தனித்தனியே கரி என்னும் சொல்லோடு இணையும் ; கரி- யானை ; கோடு - கொம்பு, இங்கே தந்தம்; வீறி - பருத்து; மாலைபூண்கொடு - மாலைகளையும் அணிகலன்களையும் பூண்டு, இரண்டன் உருபோடு எண்ணும்மை விரிக்க ; இடம் இன்று என வளர்தந்து, இளமைந்தர்கள் உளம் நைந்திட வளர்தந்து எனக் கூட்டுக ; வளர்தந்து - வளர்ந்து; விரை - நறுமணம்மிக்க ; ம்ருகமத களபம்அது - கத்தூரிச் சாந்து பரிமள - வாசனையுடைய ; புளகித - மகிழ்ச்சியைத் தருகின்ற ; விகசித-நன்றாக மலர்ந்த ; வசீகர - காண்பாரைக் கவர்கின்ற ; கன தன - பெரிய நகில்களை உடைய ; மேரு அஞ்சும்படிக் கனம் மேவி, பொன்பொடி செருகினதெனத் தேமல் படர் எழிலுடையது; இரு கோடாம் என வீறி மணம்வீசி, மாலை பூண்கொடு, பூரித்து, வளர்தந்து, களபமது அணி, பரிமள, புளகித, விகசித, வசிகர, கனதனம் என்பது பொருள் முடிபு. இக்கலையில் இதுகாறும் கூறப்பட்டவையனைத்தும் நகிலின் வருணனை ; இத்தகைய தனத்தைப் பெற்ற அபிநய மானே என இயையும்; மோடி என பிணக்கு ஏன்; சேர்ந்து உன்; ஊறல்தெளி தேனை ; மாந்தும் பண்புஉறு-குடிக்கும் தன்மை பொருந்திய ; கன யோகத்தினன் ஆக-பெரிய அதிருஷ்டத்தை உடையவன் ஆவதற்காக ; புனகை - புன்னகை ; செயவரி-செவ்வரி ; குவளையை நிகர் விழியின் கடை என்க ; புன்னகை

தந்தது வறிதுநகை தோற்றல் என்னும் துறை ; அகம் நெகிழ்வுற உருகியது என்பது முறுவற் குறிப்புணர்தல் என்னும் துறை.

7. வாங்கும் - அடிக்கின்ற ; வேலைக்குள் - பாற்கடலில் ; அநாளில் - பண்டைக் காலத்தில்; ஏய்ந்து - பொருந்தி; சீத-குளிர்ந்த ; சுதை - அமுது; அண்டர்கள் - தேவர்கள்; சொலில் - அந்த அமுதத்தைப்பற்றிப் பேசுவதால்; மணி இதழ் மலர்தனை - அழகிய உதடுகளாகிய பூவை, உருவகம்; அளி - வண்டு ; எனது உடல் பரவசம்உற - இன்பமடைய ; அமிழ்துஉறழ் - அமுதத்தைப் போன்ற ; ஊறலெ - ஊறலே, வண்ணம் நோக்கிய குறுக்கல் விகாரம்; ஊன்றும் சிந்தனை - தான் ஈடுபட்ட பொருளில் ஆழச்செல்லும் நினைவு; மிக வாடி - உடலை மிக ஒறுத்துக் கொணடு; அநுபோகித்து - துயத்து; நிலை - பேரின்ப நிலை ; கண்டனம் - யாம் உணர்ந்தோம்; என் செய - இத்தகைய வெற்றுரைகளால் பயன்என்? உவகையின் - மகிழ்ச்சியோடு; சொகுசுஉள - அழகிய ; ம்ருது - மென்மையான ; கரமிசை - கைகளில் ; இனி அடை சுகம் - இனிமேல் எப்போதோ கிடைக்கப்போவதாக நம்பப்படும் இன்பம்; "தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல் தாமரைக் கண்ணான் உலகு" (திருக்குறள் 1103) என்பதை நினைந்து கூறியது; வாய்ந்த அம்பும்-சிறந்த கணையும், தொகுத்தல் விகாரம்; கருவிளையாகிய நீலம் என்க ; அலர்பூவும் - பூக்கின்ற மலரும், வினைத்தொகை ; ஏந்துஅம் - மிக்க அழகு, ஏந்தெழில் என்புழிப் போல ; பங்கயம்-தாமரை ; ஒவாமல் - இணையாகாமல்; பிறழ் சேலை - அலைகின்ற சேல் மீன்களை ; முனியும் - சினக்கும்; அழகால் வெல்லும் என்பது பயன்; குளிர்விழி கொண்டு ஒரு சிறிது என்புடைவரில்; என்புடை - என்னருகே ; அங்கு அது சொல் வசம் அல என இயையும்; அவள்புரி பலபலவித மத லீலாவிதி யாவும் நிறை அளவிடல் அரிது அரிது என்பது முடிபு; விடாது உணரலாவதோ - முழுமையாக மனத்தாலேயே அறிய முடியுமோ, முடியாது என்றபடி, உணரவே இயலாத ஒன்றை எப்படிச் சொல்ல முடியும்?

8. மா, தண், செம் ஆகிய மூன்றும் தனித்தனித் தளிர் என்பதோடு இயையும்; (தலைவியின்) மாந்தளிர் புரை மேனிக்கு அரமாதர்க்கு ஒழியாத ஒளி வந்ததை அறிகின்றிலர் இவண் எவர் உண்டு என்பது முடிபு; ஒழியாத - நீங்காத ; இது கொஞ்சமோ - இம் மேனிச் சுகம் குறைவானதோ, அல்ல என்றபடி; வரிஅளி இசையினும் - வரிகளை உடைய வண்டுகளில் இனிய ஓசையைக் காட்டிலும்; பூங்கஞ்சம் - அழகிய தாமரை, கஞ்சப்பூ என மாறினும் ஆம்; அயன் - பிரமன்; அபரஞ்சி-புடமிட்ட உயர்ந்த பொன்; பம்பரம் இகல் - பம்பரத்தைப் போன்ற ; பொலன்உறு புயமிசை - உயர்ந்த தோள்களில்; பதிவுற - நன்றாகப் பதியும்படி; காமாதுரம் மீறி இறுகிட எனை அணைகுவள் என இணையும்; காமஆதுரம் - இணைவிழைச்சிற்கான ஆவல், வடமொழி தீர்க்கசந்தி; யான் திரு உறவே மெய்த்துணை கூடி என்றும் வாழ்ந்து தஞ்சம் பெற ஜாடைக்கு ஒரு உறவு ஆகும் என்பது முடிபு; தஞ்சம் பெற - பெருமையுற ; ஜாடைக்கு (எனக்கு) நிகருடைய ; நலமும் பெரு மகிழ்வும் உறுசுக உருவம் என உம்மையைப் பிரித்துச் சேர்க்க ; உடல் எழிலும் உள்ளத்து உவகையும் கொண்ட கிளியைப் போன்ற வடிவம்; எனது ஆவி (அணைய) இளமானாள் மருவுவள் என்பது முடிபு. இது உலாசம் - இந்த இன்பத்தை ; வசந்தனும் அவாவும் - மன்மதனும் விரும்புவான், உம்மை உயர்வு சிறப்பு.

# 20. திருவுருமாமலைக் கருணைக்கடல் வண்ணம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்ற இந்த வண்ணம் 1980 ஆம் ஆண்டின் வண்ணமஞ்சரியில் பதிப்பாகியுள்ளது (பக்.46)

இந்த வண்ணம் நல்ல ஓசையொழுங்கும், சொற்கட்டும், பொருட்பொலிவும் வாய்ந்தது. தய்யத்தாத்தான என்னும்யாத்தற்கரிய குழிப்பில் அமைந்துள்ள அழகிய சொல்லாட்சிகள் சுவைத்து மகிழத்தக்கவை. தொல்லைப் பார்ப்பான், கிள்ளைக்காத் தூணில், குல்லைத்தார் ஆகும், கள்வற்றாக் கூதளம், வெள்ளைக் கோட்டானை, அல்லற்றீர்த்தாளும், தெய்வச்சீர்க்கோவில், மையற்கோட்டாலை, கிள்ளிப் பார்த்தாலும், மல்லிட்டாற்போல போன்ற சொல்லாட்சிகள் மிக அருமையானவை. முருகப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட இவ் வண்ணத்தின் முதற்கலையில் சிவபெருமான் நன்கு சிறப்பிக்கப்படுகிறார். இரண்டு மூன்றாவது கலைகள் முருகன் புகழ் பாடுகின்றன. நான்காவது கலையில் மரபு பிசகாமல் திருஉருமாமலையின் வளம் கற்பனையோடு காட்டப்படுகிறது.

பெண்கலையில் காட்சி, தலைவன் வேண்டல், புணர்தல் ஆகிய துறைப் பொருள்கள் இடம் பெற்றுள்ளன. இலக்கிய நயம் மிகுந்து விரசமில்லாமல் இப்பகுதி அமைந்துள்ளது.

இதில் இடம்பெற்ற நாயகியை சுரதப்பிரியை எனலாம். (காண்க : 17 ஆம் வண்ண அறிமுகம்).

# 20. திருவுருமாமலைக் கருணைக்கடல் வண்ணம்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

### கலவிமகிழ்தல்

தனனத்தன தானன தந்தன தய்யத்தாத் தானதத்தன
தனனத்தன தானன தந்தன தய்யத்தாத் தானதத்தன
தந்தத்தா னானதன தந்தத்தா னானதன
தந்தத்தா னானதன தானதனதான
(தொ) தனனதனா தனதான தந்தனா.

கருணைக்கடல் ஆகிய சங்கரர்; தில்லைக்கூத் தாடும் உத்தமர்;
அருகிற்சிவ காமசு வுந்தரி சொல்லைக்கேட் டேநடப்பவர்;
கஞ்சப்பூ வாம்விழியை அம்பொற்றாள் மீதணியும்
நண்பற்கோர்ஆழியொடு காவல்அருள்ஈசர்;
விடையிற்றினம் ஏறிவ ரும்பரர்; தொல்லைப்பார்ப் பான்நடுத்தலை
கதறக்கவர் நீளந கம்திகழ் கைபற்றோட் டால்இரப்பவர்;
வெம்பிப்போ ராடும்நமன் மங்கிப்பா தாளமதில்
முங்கத்தா ளால்உதையும் வீறுடையநாதர்;
கயிலைக்கிரி மீதுறை புங்கவர்; பல்லிற்றீக் காடிருப்பது
கருதிப்புரம் நீறம கிழ்ந்தவர்; மெல்லப்பூப் போடும்மற்றொழில்
கண்டப்போ தேமதனை வென்றிட்டோர்; நால்வர்பகர்
செஞ்சொற்பா மாலையணி தோளுடையநாதர்;
சரபமதாம் விறலாளர் தந்தசேய் 1

கலகச்சம ணாதியர் தங்களை வெல்லப்போய்ப் பாடும்வித்தகர்;
அருணைக்கணி யாம்என வந்துயர் கிள்ளைக்காத் தூணில்உற்றிடு
கண்பெற்றோர் காவலவன் இந்தப்பார் பேசுபுகழ்
துன்றப்பேர் ஆடல்புரி கானமயிலாளன்;
வினையைச்சுடு வார்மனம் என்றலர் குல்லைத்தார் சூடும்உச்சியன்;
அருமைத்தமிழ் போலம ணம்கமழ் கள்வற்றாக் கூதளத்தொடு
வென்றிச்சீர் நீபமலர் குன்றைப்போ லேஇலகு
துங்கத்தோள் மீதுவடி வேல் அணியும் ஆதி;
கழலிற்குர வாரம்அ ணிந்தொரு கையிற்கூக் கூவெனத்தொனி
தருகுக்குட வாகைபு னைந்தவன்; வல்விற்போர்ச் சூர்இனத்தவர்
கன்றப்போய் நாய்நரிகள் மிஞ்சப்போ ராடிமகிழ்
துங்கத்தேர் வீரர்துணை காணரியசோதி;
சபலம்உளார் உணராத கந்தவேள்; 2

இருமைப்பிணி மாறவி ரைந்தருள் செய்கைக்கேற் றோன்; எ மைப்பெறும்
முருகப்பெரு மான்; ஒரு பைம்புனம் வவ்விப்போய்க் கானவப்பிடி
இன்பத்தேன் ஊறும்இதழ் உண்டெய்ப்பா றாமுன்ஒரு
கொம்புக்கார் ஆனைவரும் ஏதுஉணர்சாமி;
பவளக்கிரி யேநிகர் சுந்தரன்; எல்லைப்போற் றோனும்நற்பணி
மிகைதுற்றகு மாரன்; நலந்திகழ் கெர்வத்தோர்க் கேமனிற்றிகழ்
பண்புற்றோன்; ஆறுகவி கொண்டப்பால் ஓர்அலகை
பொன்றக்கூர் வேலைவிடு பான்மைஉளவீரன்;
இலகத்தகும் ஆயிரம் அம்பகம் மொய்பொற்பாற் காம்அடற்கரி
அருள்பொற்பிடி ஆகும்இ லஞ்சியம் எய்தற்காப் போர்விளைத்தவன்;
எண்டிக்கோர் சூழும்நவ கண்டத்தே நீடுபல
குன்றிற்போய் மீள்குரவன்; ஈரறுகையாளி;
சிரவணநூல் முழுதோத நின்றகோ; 3

எழிலித்திர ளோடுக லந்துறும் வெள்ளைக்கோட் டானைசிற்சில
பிளிறப்பல கோடிகு ரங்குகள் ஐயத்தாற் பாயும்அப்பொழி -
லின்கட்சே ணாடர்அவர் தங்கட்காம் மாதரொடு
கொஞ்சிச்சீ ராடும்எழில் ஏயும்; முனிவோர்கள்
பணிவெற்புடையாள்தருமைந்தன்,எம்அல்லற்றீர்த் தாளுமெய்ப்பொருள்
எனமெச்சிடும் ஓசைம லிந்துயர் தெய்வச்சீர்க் கோவில்சுற்றுநர்
பஞ்சப்பேய் மாறிஅருள் இன்பிற்சேர் வீறு, மிளிர்
சந்தப்பா வாணர்துதி பாடுவதுநீடும்;
இகல்மிக்குள வேடுவர் அம்புகள் எய்கைக்காற் றாதபுட் குலம்
மறைதற்கர ணாவள ருந்திணை மல்கிக்காற் றூறும்நற்புனல்
என்றைக்கா னாலும்வரு செம்புப்பேர் ஆறுதவு
கற்றைப்போ லேகுலவும் ஈடில்வளம்மேய
திருவுருமா மலைமேவும் நங்கையாள் 4

அருணப்பிர காசம்இ லங்கிய வல்லிக்கோப் பானசித்திரம்
மதனக்குறி காணவ ரைந்துள தொய்யிற்கீற் றார்புயத்தினள்
அண்டத்தூர் வாழும்அவர் உண்கைக்காம் ஆர்அமுதின்
மென்சொற்சேர் வாயினவள்; ஆலம்நிகரான
விழியுற்றவள்; யாழ்பொரு முன்கையில் வெள்ளிக்காப் பாதிஇட்டவள்;
முழுமைச்சசி போலுமு கந்தனில் முல்லைப்பூப் போல் நகைப்பவள்;
விந்தைக்கால்ஆழியினள்; பந்தைப்போ லேகுலவு
கொங்கைக்கோ லாகலமும், மேகலையும்மேவி
அழகுக்கிடம் ஆம்என நின்றவள்; கள்ளப்பேச் சால்உருக்கிடும்

விநயக்குண சீலம்மி குந்தவள்; மையற்கோட் டாலையைத்தரும்
அஞ்சப்பே டேஅனையள்; வஞ்சத்தீ மூளுகிற
நெஞ்சத்தாள்; வேளும்அறி யாதவெகுகாமி;
அரசிலைமேல் மனதேற முன்புபோய் 5

"அகிலத்தினி வேறொரு தஞ்சமும் இல்லைப்பார்த்து ஆவியிப்பொழு
துடலைப்பிரி யா்மல்இ ரங்கடி; ஒள்இக்காற் போர்விளைப்பவன்
அம்புக்கூ ரால்மிகவும் வெம்பிப்போ னேன்; அதொடு
தென்றற்றேர் மீதுருள லாலும்மெலிவாகி
வெருளுற்றனன்; ஈரம்உன் நெஞ்சினில் எள்ளுப்போற் றானும்வைத்திலை
இதுபக்குவ மானம டந்தையர் செவ்விக்கேற்காது; சற்றிதழ்
விண்டிட்டா யாகில்உயர் தந்தச்சீர் காணும்அதில்
இந்தப்பா டாறிஅளி மீறும்அடிபாவி;
அணிநித்தில மாலைஎன் நெஞ்சொடு புல்லச்சேர்த் தால்முலைத்துணை
பொதுளிக்களி கூரும்;ந கங்கொடு கிள்ளிப்பார்த் தாலும் உத்தமம்
அன்றிப்பாழ் ஆவது இலை ; கும்பிட்டேன் நூறுதரம்;
அந்தத்தேர் ஏறிவிளை யாடஇசைவாகி
அருள்புரிவாய் எனநான் நெருங்கலால் 6

ஒருபொற்பிடி போலஅ சைந்தெதிர் தள்ளிப்போய்க் காதல் அற்றவள்
எனநிற்பதும், மாரன்வி டும்கணை பையத்தாக் கா, மைபற்றிய
உண்கட்சோர் வாயதுவும், மஞ்சைப்போல் நீடுகுழல்
சங்கத்தால் ஆயவளை ஊறுதவிர்தானை
தளர்வுற்றதும், வாய்உலர் கின்றதும், வில்லைப்போற் காணும்நெற்றியின்
அருகிற்பனி போலஅ ரும்பலும் மெய்ம்மைச்சீட் டாம்எனக்கொடு,
தங்கப்பா வாய்!மதனன் அங்கச்சே னாதிபதி!
என்கைக்கா வா! இனிது தாடி இதழ்ஊறல்;
உனைவிட்டினி நான்அகல் கின்றலன்; எள்ளிச்சீ சீஎனச் சொலில்
மயல்முற்றிய போகர சங்கெடும்; உள்ளிப்பார்த் தால்உவப்புறும்;
ஓஞ்சப்போ மோ? எனலில் மங்கைக்கோ ஆகும்அவள்
கெஞ்சிக்கோ ணாமல்எதிர் ஓதிடும்நல்வேளை
இரதியினோடெழில்வேள்இ ணங்கல்போல் 7

உவகைக்கடல் மூழ்கிநி மிர்ந்தவள் மெய்யைச்சேர்த் தேஇறுக்கலொ
டிதழிற்சுவை தேறிமு கந்தபின் மல்லிட்டாற் போல்எதிர்த்தினி
தொன்றுக்கோர் நூறுவிதம் அன்பிற்சீ ராடிஉயர்
நந்திக்கோன் நூன்முறையில் ஊடிஇகழ்போது

சரணத்துணை மேல்விழ வுஞ்சிறு செல்லக்கூத் தாகிவிட்டது;
குணமிக்குற வேஅணையும் பொழு தல்லிப்பூப் போல் விரித்தது;
"சண்டிக்கோ மாளிஉனை யன்றிப்பார் மீதில்இலை"
என்றிட்டாள்; "ஆம்; இதுமெய் தானடி" எனாமன்
உலகத்துயர் மாமல ரின்கண்ஓர் மொய்யுற்றாற் போல் அணைத்தனன்;
இருதிட்டமும் நாடிம கிழ்ந்தனம்; வெள்ளப்போக் காமதப்புனல்
உந்தக்கூ கூகுஎன எண்புட்சீர் தோணியது;
முந்திச்சோ ராதுசரி ஓடிய நேரம்;
இனிதுறுமோர் சுகம்ஆர்உ ணர்ந்ததே ! 8

## தொங்கற்றாழிசை

சரபமதாம் விறலாளர் தந்தசேய்
சபலம்உளார் உணராத கந்தவேள்
சிரவணநூல் முழுதோத நின்றகோ
திருவுருமா மலைமேவு மங்கையாள்
அரசிலைமேல் மனதேற முன்புபோய்
அருள்புரிவாய் எனநான்நெ ருங்கலால்
இரதியினோ டெழில்வேள்இ ணங்கல்போல்
இனிதுறும்ஓர் சுகம்ஆர்உ ணர்ந்ததே.

# 20. திருவுருமாமலைக் கருணைக்கடல் வண்ணம்

## குறிப்புரை

1. கஞ்சப்பூ ஆம் விழியை - தாமரைபோன்ற கண்ணை ; நண்பர் - இங்கே திருமால்; ஆழி - சுதர்சன சக்கரம்; காவல் - காக்குந்தொழில்; "அலர்ஆ யிரம்தந்து வந்தித்து மால்ஆ யிரம்கரத்தால் அலரார் கழல்வழி பாடுசெய் தாற்கள வில் ஒளிகள் அலரா இருக்கும் படை கொடுத்தோன்" (திருக்கோவையார் 180) என்பதால் விழியளித்து ஆழியைப் பெற்றதையும், திருமாலின் கூற்றாகவே,

"முழுதுலகு அளிக்கும் ஆற்றல் முன்எனக் கீந்தாய்; பின்னர்
விழுமிய படைகள் ஈந்தாய்; வியத்தகு புதல்வர் ஈந்தாய்"

எனவரும் திருப்பேரூர்ப்புராணத்தால் (தென்கைலாயப்.28) காக்குந்தொழிலைப் பெற்றதையும் அறியலாம்; தினம் விடையில் ஏறிவரும் என மாறுக; தொல்லைப் பார்ப்பான்-மிகப் பழமையான காலத்தில் தோன்றியவனும் மறைகளை ஓதியவனுமாகிய பிரமன் ; பார்ப்பான் நடுத்தலையை (அவன்) கதறக் கவர் நீளநகம்திகழ் கைபற்று ஓட்டால் இரப்பவர் என்பது முடிபு; கை பற்று ஓட்டால்-கையில் தாங்கிய பிரமனின் மண்டையோட்டால்; ஒரு காலத்தில் திருமால் அயன் இருவரும் தம்முள் யார் பெரியவர் என வாதிட்டனர். சிவபிரான் அங்கே தோன்றினார். இவரைக் கண்டு திருமால் அஞ்சி மரியாதை செலுத்தினார். பிரமன் சிவபெருமானை எள்ளி நகையாடினார். சிவபெருமான் சினந்தார்; "உரிய காரிஅங்கு உதித்துஇகழ் உரைத்திடும் ஐந்தாம் பெரிய நீண்முடி நகத்தினால் கொய்துகை பிடித்தான்". "முனிவர் வானவர் தருக்கெலாம் முடித்தருள் கொடுப்ப நனிஉ லாய்உதி ரப்பலி நனந்தலைக் கபாலத்து இனிது வாங்கினன்" (திருப்பேரூர்ப் புராணம்-கௌதவம்புரி.119-120); பைரவர் சிவனுடைய அம்சமாதலின் அவருடைய செயல்கள் சிவபிரானுடையதாகவே கூறப்பெற்றன; நமன்-இயமன்; முங்க - மூழ்குமாறு; மார்க்கண்டேய முனிவருக்காக இயமனை உதைத்த வரலாறு வெளிப்படை ; புங்கவர் - கடவுள்; பல்லில் தீக்காடு இருப்பது; புரம்-முப்புரங்கள், வரலாறு வெளிப்படை ; மெல்ல பூ போடும் மல்தொழில் - மெதுவாக மலர்க்கணைகளை ஏவும் போர்முறை ; கண்டு அப்போதே; நால்வர் - சைவ சமயாசாரியர் ; பாமாலை - இங்கே தேவார திருவாசகங்கள் ; சரபம் - சிங்கத்தின் உடலும் எட்டுக் கால்களும் வாய்ந்த ஒரு பெரும் பறவை, இரணியனைக் கொன்றபிறகும் வெறியடங்காத நரசிம்மத்தை அடக்கிய சிவமூர்த்தி,

"மண்டு போர்இர ணியன்உயிர் குடித்தமான் மடங்கல்
அண்டர் யாரையும் மலைத்தலின் அதன்உயிர் குடித்துத்
துண்ட மாகிய சிரம்சிரத்து அணிந்துஉரி சுடுநெஞ்சு
உண்ட நாயகன் ஆக்கினன் உத்தரா சங்கம்"

(திருப்பேரூர்ப் புராணம்-கௌரி தவம்புரி. 137)

விறலாளர் - வலியவர்

2. வித்தகர்-இங்கே திருஞானசம்பந்தர்; அருணைக்கு அணியாம் என திருவண்ணாமலைத் தலத்திற்கு ஓர் அணிகலனைப் போன்று; கிள்ளை-கிளி வடிவினராகிய அருணகிரிநாதர்; கண்பெற்று ஓர் காவலவன் - இழந்த கண்பார்வையைத் திரும்பவும் பெற்ற ஒரு மன்னனாகிய பிரபுடதேவன்; இவ்வரலாறு வெளிப்படை. தூணில் உற்றிடு கான மயிலாளன், ஆடல்புரி கானமயிலாளன் எனத் தனித்தனி இயையும், ஆடல்புரி என்பது மயிலையன்று, பல திருவிளையாடல்களைப் புரியும் முருகப்பெருமானை; வினையைச் சுடுவார் மனம் என்று அலர் - இருவினைகளையும் நசிக்கச் செய்துவிட்ட அடியார்களின் உள்ளத்தைப் போன்று தூய்மையாக மலரும்; குல்லைத்தார் - வெட்சி மாலை ; உச்சியன் - சிரத்தினன்; கள்வற்றா-தேன் தீராத ; நீபம்-கடம்பு; கூதளத்தொடு நீபமலர் (அணி) தோள், இலகுதோள், துங்கத்தோள் எனத் தனித்தனி இயையும்; குரவு ஆரம் - குராமலர் மாலை, மணம்மிக்க மாலை எனினுமாம்; குக்குடம்-சேவல்; வாகை-வெற்றியைக் காட்டும் கொடி; கன்ற - தோல்வியுற்று வருந்தும்படி; துங்கத் தேர்வீரர்-மகாரதர்கள், பெருவீரர், இங்கே வீரபாகு முதலிய நவவீரர்; சபலம் - உலகியற் பொருள்களின் மீதுள்ள விருப்பத்தால் மனம் தடுமாறுதல்.

3. இருமை-இம்மை, மறுமை ; வவ்விப்போய் விரும்பிச் சென்று; கானவப் பிடி - குறவர் குலத்தில் தோன்றியவளும் பெண் யானையைப் போன்றவளுமாகிய வள்ளிநாயகி; இதழ்-உதடு; எய்ப்பு ஆறாமுன் இளைப்பை நீக்கிக் கொள்வதற்கு முன்பு; திருமணத்திற்கு முன்பு; ஒரு கொம்புக் கார் ஆனை - ஒற்றைக் கொம்பை உடைய கரிய விநாயகர்; பொதுவாக விநாயகரைச் செம்மை நிறமுடையவராகவே கூறுவர். இங்கே கார் ஆனை என்றது சாதிஅடை; "கணபதி கருநிறம் மேவலும்....உண்டுஎனச் சிற்சிலர் உரைத்தனர் உணர்ந்தே" (அறுவகை இலக்கணம் 540) என்றது மிகச் சிறுபான்மை ; வரும் ஏது - வரவழைக்கும் முயற்சி; எல்லைப் போல் - சூரியனுக்கு நிகராக ; பணி - அணிகலன்கன் ; ஏமன்- இயமன்; ஏமனில் திகழ் நலம் திகழ் பண்புற்றோன் என இயையும்; ஆறுகவி - ஆற்றுப்படை, திருமுருகாற்றுப்படை ; அலகை - கற்கிமுகி என்னும் பூதம்; பொன்ற - இறக்கும்படி; அம்பகம் - கண்; மொய் பொற்பாற்கு - நிறைந்துள்ள அழகராகிய இந்திரனுக்கு; அடல்கரி - வலிமைமிக்க யானையாகிய ஐராவதம்; பொற்பிடி - இங்கே தேவசேனை ; இலஞ்சியம் - இந்தச் சொல்லின் சரியான பொருள் விளங்கவில்லை, கந்தர் அலங்காரத்தின் இருபத்திரண்டாம் பாடலில் உமையாள் பயந்த இலஞ்சியமே என வருகிறது. இதற்குக் கொழும்பு திரு.மு. திருவிளங்கம் அவர்கள் சரவணபவர் எனப்பொருள் தருகிறார் (யாழ்ப்பாணப்பதிப்பு 1927). ஸ்ரீகாசி மடப்பதிப்பு நீர்நிலை போன்றவன் என்கிறது (1949). சாதுஸ்ரீ இரத்தின சற்குரு புத்தகசாலை வெளியிட்ட மெய்ப்பொருள் விளக்க விருத்தியில் களஞ்சியம் போன்றவன் என உரைக்கப்பட்டுள்ளது. இவ்வுரைகள் பொருத்தமானவை அல்ல. இலஞ்சியில் (நீர்நிலையில்) தோன்றியவன் இலஞ்சியன் ஆதல் வேண்டும்; அம்எனஅஃறிணை விகுதி ஏன்? இலஞ்சியத்திற்குக் களஞ்சியப் பொருள் எங்குமே கூறப்படவில்லை. அருணகிரிநாதரே திருப்புகழில் இச்சொல்லை, "இலஞ்சியில் வந்த இலஞ்சியம் என்று இலஞ்சிஅமர்ந்த பெருமாளே" (திருப்புகழ் 983) என ஆளுகிறார்.

நீர்நிலையில் தோன்றிய நீர்நிலையில் தோன்றியவன் என அருணகிரிநாதர் பயனின்றிப் பாடியிருக்கவே மாட்டார். இப் பதிப்பாசிரியர் பார்த்தவரை இலஞ்சியம் என்ற சொல் எந்த நிகண்டிலும், அகராதியிலும் காணப்படவில்லை. இலக்கிய ஆட்சிகளைத் தொகுத்து இதற்குப் பொருள் வரையறை செய்யப்பட வேண்டும். இப்போதைக்குப் பரிசு என வைத்துக் கொள்வோம்; எண்திக்கோர் சூழும்-எட்டுத் திசைப்பாலகர்களாலும் சுற்றிலும் இருந்து காக்கப்படுகின்றதாகிய ; நவகண்டத்தே-ஒன்பது கண்டங்களிலும், அவை : கிழக்கு விதேகம், மேல் விதேகம், வட விதேகம், தென் விதேகம், வடஇரேபதம், தென்இரேபதம், வட பரதம், தென்பரதம், மத்திம கண்டம் என்பன, இனிப் பரதகண்டம், குரு கண்டம், கிம்புருடம், இளாவிருதம், அரிவருடம், கேதுமாலம், இரமியம், பத்திராசுவம், இரணியம் என ஒன்பது என்பதும் ஒன்று, குன்றிற்போய் மீள் என்றது குன்றுதோறாடலையுடையான் என்றவாறு; குரவன்-குருநாதன்; ஈர்அறுகையாளி-பனிரெண்டு கைகளை உடையவன்; சிரவண நூல்-காதால் கேட்கப்படுவதாகிய வேதங்கள்; முழுதுஓத - எல்லாமும் போற்றித் துதிக்கும்படி, முற்றும்மை விகாரத்தால் கெட்டது; ''பண்டைய மறைபுகழ் தண்டையந் தாள்களும்'' (திருச்செந்திற் கலம்பகம் 5-14); நின்ற கோ-என்றும் அழிவற்று நிலைத்திருக்கும் பரம்பொருள்.

4. எழிலித் திரள் - மேகக்கூட்டம்; வெள்ளைக் கோட்டு - வெண்மையான தந்தங்களை உடைய ; பிளிற (யானைகள்) கத்த ; சேணாடர் - வானுலகினர் ; ஏயும் - பொருந்தும், முற்றுவினை ; முனிவோர்களால் பணியப்படுதல் வெற்புடையாள், மைந்தன் இருவருக்கும் பொருந்தும்; அல்லல் தீர்த்து ஆளும்; ஓசை - புகழ்; பஞ்சப் பேய் - வறுமையாகிய பிசாசு, உருவகம்; வீறு - பெருமையை ; மைந்தன் (அமர்) கோவில், ஓசை மலிந்து உயர் கோவில், தெய்வச் சீர்க் கோவில் என்க. (இந்தக்) கோவிலைச் சுற்றுநர் (வலம் வருபவர்) பஞ்சப் பேய் மாறி அருள் இன்பில் சேர் வீறு (பெருமையை) பாவாணர் பாடுவது நீடும் என்பது முடிபு; இகல்-பகைமை ; எய்கைக்கு - அம்பினால் எய்யப்படுதல் எனப் பிறவினைப் பொருளில் ஆட்சி; மறைதற்கு - ஒளிந்து கொள்ள ; அரணா வளரும் திணை மல்கி - பாதுகாப்பாக உயர்ந்த இடங்கள் நிறைந்து; காற்று - தென்றலும், எண்ணும்மை விரிக்க; ஊறும்நற் புனல், இங்கும் எண்ணும்மை விரிக்க ; என்றைக்கானாலும் (கோடை, பனி முதலிய பருவங்கள் எதுவாயினும்) எந்நாளிலும்; செம்புப் பேர் ஆறு - தாமிரவருணி, பொருநை நதி; கன்று - இங்கே இளங்கொடி, என்னை? ''பிள்ளை குழவி கன்றே போத்தெனக் கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே'' (தொல்.மரபு.24); திருவுருமாமலை - திருநெல்வேலியிலுள்ள குறுக்குத்துறை.

5. அருணப் பிரகாசம்-சிவந்த ஒளி; வல்லி-கொடி; சித்திரம் - ஓவியம்; மதனக் குறி காண - மன்மதனுடைய அடையாளமானது தோன்றும்படி; மன்மதனின் அடையாளம் என்றது கரும்பு வில்லை, மகளிரின் தோள்களில் சந்தனக் கீற்றால் கரும்பின் உருவத்தை வரைதல்: ''தெரிவேய்த்தோட் கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத்தற்கோ'' (கலித்தொகை 76-14); இது தொய்யில் எனப்படும்; தொய்யிற்கீற்று-பத்திக்கீற்று என்பார் அடியார்க்கு நல்லார். (சிலம்பு.1-2-69 உரை); ஆர் - பொருந்திய ; அண்டத்தூர் வாழும் அவர் - ஆகாயத்தில் உள்ள உலகமாகிய தேவலோகத்தில் வாழ்பவர். தேவர்கள்; உண்கைக்கு ஆம் அமுது, ஆர் அமுது

எனத் தனித்தனி இயையும்; அமுதின் என்புழி இன் உவம உருபு; ஆலம்-நஞ்சு; யாழ்பொருமுன்கை-"மூங்கில் புயம், யாழ்கை, பொன்னின்மலர் காந்தளொடு மாந்தளிரு மாமே" (பிரபந்தத்திரட்டு 176) "யாழ் எனும் முன்கையும்....நங்கையர்க்கு உரித்து" (அறுவகையிலக்கணம் 567); வெள்ளிக் காப்பு ஆதி-வெள்ளியாலான கடகம் முதலியவற்றை; முழுமைச் சசி-பூரண சந்திரன்; விந்தைக் கால் - வியப்பூட்டுமளவு எழில்மிக்க கால்; ஆர்-இங்கே மெட்டி; கோலாகலம் - ஆடம்பரம், இங்கே மிக்க பொலிவு; மேகலை - இடையணி; விநயக்குணம்-அடக்கப்பண்பு; குணசீலம் ஒருபொருட் பன்மொழி; மையல் கோட்டாலை-மோகத்தால் உண்டாகும் துன்பம், மூன்றன்தொகை ; அஞ்சப்பேடு-பெண் அன்னம்; வேளும்-உம்மை உயர்வு சிறப்பு; அரசிலை-அல்குல், உவம ஆகுபெயர், இடக்கர் அடக்கலுமாம், "அரைதனில் உடைதனை அவிழ்த்தும் அங்குள அரசிலை தடவியும்" (திருப்புகழ் 12); மனது ஏற - உள்ளத்தில் ஆசை மீற.

6. அகிலத்துஇனி முதல் அருள்புரிவாய் என்றதுவரை தலைவன் கூற்று, இது இரந்துபின்நிலை நிற்றல் என்னும் துறையின்பாற்படும்; அகிலத்து - உலகில்; பார்த்து-இல்லாத நிலையைக் கண்டு, வண்ணம் நோக்கிப்ப கரமெய் விரிந்தது என்க ; ஆவி-உயிர்; ஒள்இக்கால்-ஒளிமிக்க கரும்பு வில்லால்; அம்புக்கூரால்-கணைகளின் கூர்மையால்; மீது-என் மீது; வெருளுற்றனன்-அஞ்சினேன், ஈரம்-அன்பு; செவ்விக்கு-தகுதிக்கு; செவ்விக்கு ஏற்காமை-ஒப்பு; "பெண்மை பெற்றவர் தமக்கெலாம் பெருமகிழ்வு அளிக்கும் திண்மை பெற்றதோட் கணவர்தம் கலவியில் திளைத்தல் ஒண்மை;" (திருப்பேரூர்ப் புராணம்-கௌரி தவம்புரி.77) "கண்ணாரக் கண்டவுடன் காதலரைச் சோதல் பெண்ணார் முறைமை" (சென்னிமலையாண்டவர் காதல் 348); இதழ் விண்டிட்டால்-உதடுகளை விரித்தால், புன்முறுவல் பூத்தால்; தந்தச்சீர்-பற்களின் வரிசை ; இந்தப் பாடு- இப்போதைய பெரிய துன்பம்; அளி-அன்பு; அணிநித்திலமாலை-புனைந்துள்ள முத்துச்சரம், வினைத்தொகை ; துணைமுலை என மாறுக, இரு நகில்களும், முற்றும்மை விரிக்க ; பொதுளி-நெருங்கி; அந்தத் தேர் - அழகிய தேர்த்தட்டைப் போன்ற நிதம்பம், அடையடுத்த உவம ஆகுபெயர்; அந்த என்பதை நெஞ்சறி சுட்டு எனினும் அமையும்; தேர் ஏறி விளையாடல் - இடக்கரடக்கல்.

7. பொற்பிடி-அழகிய பெண்யானை; பையத் தாக்கா-மெதுவாகத் தாக்கி, செய்யா என்னும் வாய்பாட்டு எச்சம், சோர்வாயது என முடிந்தது; மை பற்றிய உண்கண்-பற்றியமையை உண்கண் என்க; மஞ்சைப் போல் - மேகத்தைப் போன்று; குழல்-கூந்தல்; சங்கம்-சங்கு, அத்து சாரியை ; ஊறுதவிர் தானை-குற்றமற்ற புடவை, இரட்டுறமொழிதலாகக் காண்பவர்கள் இவளுடைய முழுஎழிலையும் கண்டு மையலினால் இறந்துபடாமல் காக்கின்ற சீலை எனவும், நோக்குவாரின் கண்ணேறுபடாமல் காக்கின்ற கூறை எனவும் கூறினுமமையும்; பனிபோல் அரும்பல்-வியர்வைத் துளிகள்; இந்த மெய்ப்பாட்டைத் தொல்காப்பியர் "புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்" (தொல். மெய்ப்பாட்டு.13) என்பார்; மெய்ம்மைச் சீட்டு-அருகே நெருங்குவதற்குரிய உண்மையான அநுமதி, சீட்டு-பிற்கால வழக்கு; தங்கப்பாவாய் - பொற்சிலையே ; சேனாதிபதி-அண்மைவிளி

இயல்பு ; என் கைக்கா - என்னுடைய கைகளால் அணைக்குமாறு, கைக்கு எட்டும்படி; எள்ளி இகழ்ந்து; மயல்முற்றி-பைத்தியத்தன்மை அதிகரித்து, இன்பநெறி காமவெறியாக மாறி என்றவாறு; போகரசம் காதற்சுவை; உள்ளிப் பார்த்தால்-பிறகு இதை நினைத்துப் பார்த்தாலும், சிறப்பும்மை விரிக்க ; ஒஞ்சப்போமோ-மனதை வலிய அடக்கலாமா, தலைவியின் மெய்ப்பாடுகளால் அவளுடைய புணர்ச்சி விருப்பத்தை அறிந்த தலைவன் அவள் நாணத்தால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு தூர நிற்கிறாள் என்கிறான், இந் நிலையை,"பார்க்கவேணும் என்றுஎணுவேன் பார்க்கப் பயப்படுவேன்;

பொருந்தியவன் அண்டையிட்டுப் போகவுங்கால் வாராது:
திரும்பியவன் மேல்விழவும் சிந்தைமிக நாணும்காண்;
நான்வலியச் சென்றால் நமக்கீனம் என்றுஎணுவேன்;
தான்வலியச் சேரானோ தன்மார்பில் என்றுஎணுவேன்"

(சுந்தர் காதல்-அடிகள் 127-131;) என்பதைப் போன்ற இடங்களில் காணலாம். எனலில்-என்று கூறியதால்; கோ-அரசி; இணங்கல் - கூடுதல்.

8. இறுக்கலொடு இதழில் சுவை தேறி; மல்லிட்டாற் போல்-மற்போர் புரிவதைப் போன்று; எதிர்த்து-எதிரெதிராகி; இனிது ஒன்றுக்கு ஓர் நூறுவிதம்; நந்திக்கோன் நூல்-காம சாத்திரம்; நந்தியம் பகவனைக் காமநூலின் முதலாசிரியராகக் கூறுவது இந்திய மரபு.

"எல்லா உலகும் படைத்தவிதி இயற்றும் தருமம் பொருள்இன்பம்
வல்லோர் உணரச் சொன்னவற்றுள் மற்றை இரண்டும் பிறர் செய்தார்;
நல்லார் நந்தி இன்பநூல் ஞாலம் எடுக்க அதுசுருக்கிச்
சொல்லாரியத்தில் ஈர்ஐஞ்ஞூறு அத்யா யம்போற் சொன்னானே"

(கொக்கோகம் 9); துணைச்சரணம் என மாறுக; சண்டிக் கோமாளி - ரோஷமற்ற வேடிக்கைப் பயல்; எனா-என்று சொல்லி, இவ் வெச்சம் அணைத்தனன் என்னும் முற்றுவினையைக் கொண்டு முடிந்தது; திட்டம் - செம்மை அல்லது முழுமை, இங்கு ஆகுபெயராக முழுமையான கலவியை உணர்த்திற்று; இரு திட்டமும்- முதல் புணர்ச்சியும் உபரிசுரதமும்; தோணியது, பேச்சுவழக்கு; அநேரம் முந்திச் சோராது சரி ஓடியது என இயையும்; இனிதுஉறும் ஓர் சுகம் ஆர் உணர்ந்ததே; ஓர்-ஒப்பற்ற.



# 21. ஞானகிரி ஈசர் வண்ணம்

கருணையானந்த சுவாமிகளால் இயற்றப்பெற்ற இந்த வண்ணம் சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தின் டி378 ஆம் எண்ணிட்ட சுவடியில் உள்ளது. வண்ணத்தின் ஈற்றில் "கருணையானந்த சுவாமியார் அருளிச்செய்த ஞானகிரியீசர் வண்ணம் முற்றிற்று" என்னும் குறிப்பு உள்ளது. சுவடியில் ஒரு குழிப்பு எழுதப்பட்டுள்ளது. ஆனால் அது பிழையாக உள்ளது. அதில் துறைக்குறிப்பும் இல்லை. இச் சுவடியில் எழுத்துப்பிழைகள் ஏராளம்.

தமிழில் வண்ணப்பாடல்கள் நூல் இவ் வண்ணத்தின் பாட்டுடைத் தலைவராகிய ஞானகிரியீசரைக் கிளவித்தலைவனாக மயங்கிக் கூறுவதுடன் இது தலைவி தனக்குள் நினைத்துக் கொள்வது என்கிறது (பக். 90). இது தவறு என்பது வெளிப்படை. இந் நூல் எல்லா இடங்களிலும் பாட்டுடைத் தலைவனைக் கிளவித்தலைவனாக மயங்கிக் குழம்புகிறது. வண்ணம் என்பது அகத்திணையைச் சார்ந்த ஓர் இலக்கிய வடிவமே எனப் பரவலாக உணரப்படாமையால் நேரும் மயக்கமாகும் இது.

இவ்வண்ணத்தின் ஆண்கலை முழுவதும் நகர மோனை பெற்றும் பெண்கலை முழுவதும் மகரமோனை பெற்றும் விளங்குகின்றன. ஆனால் ஏழாவது கலைத் தொடக்கத்தில் எதுகை இல்லை. நதிஅக் (1), நதிகட் (3) மதிநற் (5) என்பதற்கு மடமைப் (7) எதுகை ஆகாது. இது சுவடி எழுத்தாளர் பிழையாகலாம். கலைகளுக்குள் வழியியைபு அழகாக உள்ளது.

நிகமத்தின் முடிமீதில் நடனத்தர் (1), வேதமுடி நாடர் (2) வேதாந்த மெயப்பொருளும் ஆகினார் (3) எனக் கூறிய கருத்தே மீட்டும் மீட்டும் கூறப்படுகிறது. உற்று(ப்) புவனத்தில் (4) துட்ட(ப்)பயலை (5) மற்றை(க்) குறிபுள் (6) மெத்த(ச்) சதிக்கொரு, பெற்று(க்)கொடியை, எதிருற்று(க்) கொடுமை, ஆகி(க்) கொடுமை (7) செப்பை(க்) கடிய, கப்ப(ற்) கதி, ஒக்க(த்) தடையற்ற எனப் பல இடங்களில் குழிப்பில் குத்தல் குற்றம் தோன்றுகிறது. ஏழாம் கலையின் பாடமே தெளிவாக இல்லை. பொதுவாக இது மிகச் சாதாரணமான ஒரு வண்ணம் என்பதுடன் நல்ல சுவடிப் பாடமும் தேவைப்படுகிறது.

முதல் மூன்று கலைகளில் சிவபிரான் பெருமையும் நான்கில் குலிசை மாநகர்ச் சிறப்பும் இடம்பெற்றுள்ளன. பெண்கலையில் சிறப்பாகக் கூறுமளவு ஒன்றும் இல்லை. வேறு நல்ல பாடம் கிடைத்தால் இன்னும் தெளிவுபெறலாம்.

# 21. ஞானகிரி ஈசர் வண்ணம்

## கருணையானந்த சுவாமிகள்

### கலவி மகிழ்தல்

தனனத் தனனதானன தானனதத்த
தனனத் தனனதானன தானனதத்த
தனதத்த தனதான தனதத்த தனதான
தனதத்த தனதான தானதனதான
(தொ) தானாந்த தத்ததன தானனா

நதிஅக் கறுகுகூவிளம் மாமதிவைத்த
நிதியொத் தடர்சடாடவி மாமகுடத்தர்;
நிகமத்தின் முடிமீதில் நடனத்தர்; தவநீதி
நிகதப்பொ ருள்; அநாதி; நீடவருசோதி;
மயலைப் பரவுமாமுது காடுயர்நித்தர்;
கயிலைக் கிறைவராகிய காரணகர்த்தர்;
கசடற்ற அருள்நேயர்; நிசநித்த பததூயர்;
கசடர்க்க ரிதுபாயர்; காசினிசகாயர்;
நளிரக் கரியின்மேல்உரி போர்வையர்; சுத்த
வெளிசிற் சபையில்மாதுடன் ஆடியஅத்தர்;
மதமுப்பு ரமும்வேக கதம்அற்ற நகைஏக
விதம்ஒப்பில் வடிவாக வீதிவருபோகர்
ஞானாம்பி கைக்குமண வாளனார் (1)

நரிநற் குதிரைஆகிஅ நேகரும்மெச்சு
பரிநற் றிரள்களாய்வர மீனவன்மெச்சு
பரிதத்த டிகள்போட திமிதித்தி எனஆட
பரிவுற்ற ஒலிகூடல் வாழ்வுகலியாணர்;
அயன்நற் சிரசுமாலையின் மேல்மிகஇட்டர்;
வியன்எப் பொருளுமாய்விரி வானவர்; சிட்டர்;
விதி, மற்ற பலகோடி துதிபெற்ற வரும்நாடு
விதையற்ற பொருள்; நீடு வேதமுடிநாடர்;
நயனத் திருவிதானம தோடுலகத்தை
மயமுற் றுயிரதாவடி வாய்நிறைசித்தை ;
மதம்உற்ற வர்கள்பேத பதம்உற்ற லையவேத
மதம்மற்றெ திர்இலாத மாதவவிநோதர்
ஞாலாந்த (கற்கும்ஒரு) காலனார் (2)

நதிகட் டழகுவார்முடி மேல்ஒருதட்டு,
துதிமட் டளவிலாதவர் தோள்ஒருகொட்டு,
துலைமொய்த்த திடர்கூலி விலைஒப்பி நகர்கோலி;
சொலின்நித்தி யவிசாலி; சூழ்கரகபாலி;
மதுரைப் பதியின்மீதொரு வாணிவிபிட்டை
அதிரப் பொடியதாய்நுகர் வோர்; இதுசொர்க்கர்
அமுதுக்க திகபாகம், குமர்உற்ற வளின்போகம்,
அமர்தற்க ரியமோக மாம்இதுவைபோகம்;
நகைமிக் கவருமாய்அரை கோல்கரை கட்ட,
பகைமற் றுறவிலார் (புறம் மாறனும்இட்ட
அடியிற்ப லரும்வாடும் ஒரு) சித்து (விளையாடும்
அடித)ப்ப ரியவேசர்; பாகுகவிவாணர்;
வேதாந்த மெய்ப்பொருளும் ஆகினோர் (3)

நவரத் தினமும்நீடிய கோபுரம்உற்று
புவனத் தில்அரிதாகிய மாமதில்சுற்று
புரி;சித்ரம் உளசோலை விரிசித்ர மொடுசாலை
புரிசித்ரம் மிகவான பூர்ணைநதிவேலை
வெதிர்இக் கதிகபூகமும் மாதுளைஅத்தி
கதலித் தருபலாமரம் மாமரம் (உற்ற)
கனிவிட்டொ முகுதேனும் ஒளிர்அப்பு னலின்மீனும்
கனம்மிக்கு யரும்வானும் கானின்எழில்ஈனும்;
நகரிற் குலிசைமாநகர் போல்இலை மிக்க
நகர்;மற் றனைவர்வாழ்வது தான்வளன்ஒக்க ;
நனவிற்பி ரியநேசர்; தினசத்தி யர்உலாசர்;
நனிசிற்சொ ருபர்; தேசர் ஞானகிரிஈசர்
வேள்ஆர்ந்தி ருக்கும்வரை மாதரார் (4)

மதிநற் றிலகமேனகை ; ஊர்வசி; மிக்க
ரதி;பத் மினியள்ஈடல வே;சொலின்ஒக்க
ரசிதக்கி ரியின்நீடு நிசிநத்தி யநல்நாடு
ரசனைக்கி னியசேடு; ராசகுலமாடு;
அமுதக் கடலின்ஆர்அமு தோ? திருவைக்கும்
அமுதக் கமலம்ஓர்இன மோ? திரளுற்ற
குமரிப்ப ருவமாது; தமரப்ப ழம்ஒவாது;
கவிபொற்பிரபைமாது; கூவிவிழியோது

மதன்இத் திசையிலேவரு வான்எனில்கிட்ட
விதனத் தொடும்உள்ஏர்முலை யானையள்; துட்டப்
பயலைத்தொ டர(வீறி) கயலைக்க டலை (மீறி)
(நயனத்தெ ழில்கொள்நாரி காமகலைவாரி
சூதார்ந்தி டைக்கதுவி சாரமே 5

மயிலைச் சொலினமோ? பயில் சாரிகைதத்தை
குயிலைச் சொலினமோ? எழில் ஓதிமம்மற்றை
குறிபுட்சி லதுசாடை ; வெறிநற்ச லவையாடை;
குறிபொற்கி ரியின்மேடை ; கூறரியவாடை
நிலவொத் தழகுபூரண மாம்இவள் நிற்க,
சிலசிற் றுடையமாமுனி வோர்களும் சொக்க,
சிவசித்தர் முதலான நவசித்தர் குருவான
சிவசித்தி வருஞான சீவன்இவள்ஆவள்;
மதனுக் கதிகம்ஓர்புரு டாதிபன்உற்று
வதனக் குளிரின்மாகளை யாறிடல்உற்று
மருவத்த மியை மேவி அருமைக்க விஉசாவி
மருவத்த மியன்ஆவி வாரிதிகழ் காவில்
தூய்தார்ந்த மெய்க்குதவி ஆகினாள் 6

மடமைப் பயலடீ!அடி பாதகி! சித்த
சலனப் படுவனோ? சல மோ? தினமொத்த
அசதிக்கொ ருவன்ஆக எதிருற்றிடுமெனாக
சதிர்உற்று ரிமையாக தாதுவிரிபூவில்[1]
அடியிற் சுவடுநேர்பிரி யாவிடைபெற்று[2]
கொடியைப் புணரமாதவ மோ? எதிருற்று
கொடுமைக்கு ரியன்ஆகி அடிமைப்ப யலும்ஆகி
கொடுமைக்கண் அயிலாகிக் கூடுநிருவாகி;
“மனதுக் கினிமையாவர வாஅடி! கிட்ட
தனதுக் கெனை அலர்தினி யாரடி? இட்ட
கலவிக்க திகன்நானும் கலவிக்க திகடேனும்;
தலைமைக்கொ ருவன்யானும்; தாலபுரிவானும்
வாதார்ந்த ணைக்குள்வர லாகினாள் 7

சுவடிப்பாடங்கள் வருமாறு:

1. சதிருற்றொருமையாகத்தாதவிழ்பூவாக
2. வடியிற் சுவடிதாயப் பிரியா விடைபெற்று

"மடியிற் படடிநீதய வாய்; தனசெப்பைக்
கடியக் கொடு; சலாமடி! கால்விடுகப்பற் -
கதியிட்டன் அடி! கோவை இதழ்மெத்த ருசி; தேவை;
கதலிக்கனி! உன்நாவைக் காதில்இடுபாவை!
துகிலைக் களையவோ?மணி தான்வருடிப்பின்
ஒயிலிற் சிலதுலாகுகள் போடுவன்; நுட்பம்
உவமைக்கு ளரிதாகும்; தவமுத்தி இதுவாகும்;
உவர்மற்றில் நளியாகும்; ஒவிலதுமாகும்;
மனம்மெச் சுறுதியாய்வரு தாடனம்புட்கள்
தனதுக் குரல்களாய்இரு போகமும்ஒக்கத்
தடையற்ற திகமாக இடைவிட்டி லதுபோகம்;
தடையற்ற பிரவாகம் தாடலையில்போகம்;
வானாந்தி ரைக்குள்வச மாகினாள் 8

(இவ்வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை)

# 21. ஞானகிரி ஈசர் வண்ணம்

## குறிப்புரை

1. நதி-கங்கை ; அக்கு-உருத்திராக்கமணி; கூவிளம்-வில்வம்; மா மதி-பெருமைக்குரிய பிறை; நிதியொத்து-பொன்னை நிகர்த்து; சடாடவி - சடைக்காடு; மாமகுடத்தர் - அழகிய முடியினை உடையவர்; சடாடவியாகிய மகுடம் என்க ; நிகமம்-வேதம்; தவநீதி நிகதப்பொருள் - தவநெறியால் பேசப்படும் பொருள், நெறிநிற்பவர்களின் செயல் நெறியின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. உபசார வழக்கு; அநாதி - தொடக்கம் இல்லாத பொருள்; மயலை - அச்சத்தை ; பரவு-பரப்புகின்ற, பிறவினைப் பொருளில் ஆட்சி ; மா முதுகாடு-பெரிய சுடுகாடு; உயர்நித்தர்-(சுடலையின்கண்) சிறந்துவிளங்கும் நிலையானவர்; நிச நித்த பத தூயர்-உண்மையானதும் அழிவற்றதும் ஆகிய வேதங்களின் பொருளாகிய பரிசுத்தர், பதம் ஆகுபெயராகச் சொற்களாலான வேதத்தை உணர்த்திற்று, நிசநித்த என்னும் அடைகளின் ஆற்றலான்; அரிது உபாயர்-திணைவழுவமைதி; காசினி சகாயர்-உலகிற்கு உதவி புரிபவர்; நளிர் அ கரி-பகையை உடைய அந்த யானை, பண்டறி சுட்டு, கயாசுரன் வரலாறு வெளிப்படை ; சுத்த வெளியாகிய சிற்சபை என்க ; மாது-சிவகாமி மத-ஆணவம் கொண்ட; வேகக்கதமற்ற எனற்பாலது வண்ணம் நோக்கி வல்லினமெய் தொகுக்கப் பெற்றது; கதம் அற்ற-சினம் இல்லாத ; நகை ஏக - சிரிப்பு செல்லும்படி; ஒப்பில்வித வடிவாக என மாறுக, புதுமையான தேர், வில் முதலிய அழகோடு; போகர்-உயிர்களுக்குப் புல இன்பத்தைத் தருபவர்; ஞானாம்பிகை-இத் தலத்து இறைவி திருப்பெயர்.

2. நற்பரித்திரள்கள் என மாறுக, நல்ல குதிரைத் தொகுதிகள் என்றபடி; மீனவன்-பாண்டியன்; பரி தத்து அடிகள் போட - குதிரைகள் சுதரிதகம், ஆக்கிரந்திகம், வல்கிதம், இரேகிதம், புலிதம் என்னும் ஐவகை நடைகளையும் காட்ட ; பரிவுற்ற - இரட்டுறமொழிதலாக முதலில் குதிரைகளைக் கண்டு மகிழ்ச்சி அடைந்ததையும் அடுத்து அவை நரிகளாகித் தீமை புரிந்ததால் துன்பம் அடைந்ததையும் கொள்க; ஒலி கூடல்-புகழ்மிக்க மதுரை, மன்னனின் பரிவு நகரத்தின்மேல் ஏற்றப்பட்டது. உபசார வழக்கு; கலியாணர் - மங்கள வடிவினர்; நரிபரியான திருவிளையாடல் உலகறிந்த ஒன்று; அயன்-பிரமன்; சிரசுமாலை-தலைமாலை ; இட்டர்-விருப்பம் உள்ளவர்; வியன் - வியப்பிற்குரிய ; சிட்டர்-மிகப்பெரியவர்; துதிபெற்றவர் - மக்களால் வணங்கப்படுபவர்; விதையற்ற - தனக்கு வேறொரு மூலமில்லாமல் தானே தோன்றிய, அநாதியான ; வேதமுடி நாடர் - வேதாந்தமாகிய இடத்தில் இருப்பவர்; நயனத்து இரு விதானம் அதோடு - கண்களால் காணப்படுகின்ற இரண்டு செல்வமாகிய சூரிய சந்திரர்களுடன், அது-பகுதிப்பொருள் விகுதி, பொருள் இரண்டு ஆயினும் செல்வம் என்பது பற்றி ஒருமையிற் கூறப்பட்டது; உலகத்து ஐ மயம் உற்று - உலகத்தில் நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்னும் ஐம்பூதமயமாக நிலவி; உயிர்அது ஆ வடிவாய்-ஆன்மாவின் வடிவமாகவும்; நிறை-எங்கும் நிறைந்துள்ள; சித்து ஐ-ஞானமயமான இறைவன்; இங்கு சிவபெருமானின் அட்ட மூர்த்தம் கூறப்பெற்றது; மதம் உற்றவர்கள்-சமயச் சழக்கர்; பேத பதம் உற்று அலைய-மாறுபாட்டுணர்வு மிகுந்து உழல;

எதிர் இலாத வேத மத மாதவ விநோதர் என இயையும்; எச் சமயத்தையும் பகைத்துக்கொள்ளாததாகிய வைதிகநெறியில் ஒழுகும் பெரிய தவசிகளை நேசிப்பவர் என்றபடி; இனி எதிர்இலா என்பதற்கு நிகரற்ற எனினுமாம்; மற்று மொழிமாற்றின்கண் வந்தது; ஞாலாந்தகர்-ஞால அந்தகர், வடமொழி தீர்க்க சந்தி, உலகத்தை முடிப்பவர், இயமன், பன்மை விகுதி இகழ்ச்சியின் பொருட்டு, காலகாலன் என்றபடி; மார்க்கண்டேயனுக்காக இயமனை உதைத்தழித்த வரலாறு வெளிப்படை.

3. நதிகட்டு அழகு வார் முடி-கங்கையை இணைத்துள்ள எழில்மிக்க நீண்ட சடா மகுடம்; தட்டு-மண் அள்ளும் தட்டுக்கூடை; மட்டு அளவு இலாத துதியர் என மாறுக; மட்டு அளவு-ஒருபொருட் பன்மொழி; கொட்டு-மண்வெட்டி;

"அழுக்கடைந்த பழம்துணிஒன் றரைக்கசைத்து விழுத்தொண்டர்
குழுக்கடந்த இண்டைநிகர் சுமை அடைமேல் கூடைகவிழ்த்து
எழுக்கடந்து திசைகடந்திட் டிணைகடந்த திருத்தோள்மேல்
மழுக்கடைந்து விளங்கிவாய் மண்தொடுதிண் படைஏந்தி"

(திருவிளையாடற் புராணம் 61-16)

துலை மொய்த்த-வெள்ளநீர் வெளியேறும் மடைமுகத்தில் ஏற்பட்ட; திடர்-மண்மேட்டை; கோலி கோலுபவன், உண்டாக்குபவன், அழிவிலிருந்து மீட்பவன் என்னும் பொருளில் ஆட்சி; நித்தியசொலின் விசாலி என மாறுக, அழிவற்ற மந்திரங்களின் பெரும்பரப்பை உடையவர்; கர கபாலி-கையில் பிரமனின் மண்டையோட்டை ஏந்தியவர்; வாணிவி -பிட்டுவாணிச்சி; சொர்க்கர் அமுதுக்கு-தேவர் உண்ணும் அமுதத்தைவிட ; அதிக பாகம் - சிறந்த பக்குவம், சுவை ; குமர்உற்றவளின் போகம்-கன்னிப்பெண்ணிடம் துய்க்கும் இன்பம்; அமர்தற்கு அரிய மோகம்-தீராத பேராவல்; இது வைபோகம் ஆம் என்க ; வைபோகம்-பெருமகிழ்ச்சி; இறைவன் உதிர்ந்த பிட்டை, "அதிகபாகம், போகம், மோகம், வைபோகம்" எனப் புகழ்கிறார்"; புறம்-முதுகில்; மாறன்-பாண்டியன்; விளையாடும் சேவர் என இயையும், அடி தப்பரிய என்பது சேவுக்குரிய அடை, திருவடியைவிட்டு நீங்காத எருது என்றபடி; பாகு கவிவாணர்-வெல்லப் பாகு போன்ற இனிய கவிதைகளை இயற்றியவர், சிவபிரான் வேதாகமங்களை அருளியதோடு தமிழ்க்கவிஞரும் ஆவார்.

"பாணனும் தருமியும் பெத்தானும் உய்யப்
பாடிய தன்றிப் பைந்தமிழ்க் கழகத்
தலைவனைப் பழித்தும் தனிக்கவி பகர்ந்த
பரமனும் புலவன் என்பது பண்பே" (அறுவகை இலக்கணம் 312)

4. புவனத்தில்-உலகில்; புரி-நகரம்; சித்ரம் உள சோலை-அழகிய பூங்கா; விரி சித்ரமொடு சாலை புரி-விரிவான அலங்காரங்களோடு தெருக்கள் அமைக்கப்பட்டுள்ள; சித்ரம் மிக ஆன - சிறப்புமிக்க ; சித்திர-சொல்பின் வருநிலையணி; பூர்ணை நதி - கேரளத்திலுள்ள பொன்னானியாறு இப்பெயரால் வழங்கப்படுகிறது. இந்த ஆற்றை இனங்காண இயலவில்லை; வேலை - கரையில் அமைந்துள்ள ; வெதிர் - மூங்கில்; இக்கு -கரும்பு; அதிக பூகம்-மிகுதியான கமுகு; கதலித்தரு-வாழை மரம்; அப் புனலின் - அந்த ஆற்றுநீரின்; கனம்-மேகம்; குலிசை

மாநகர்-தலத்தின் முழுப்பெயரும் இருப்பிடமும் விளங்கவில்லை; சிற் சொரூபர்-ஞானமே வடிவானவர்; தேசர் - ஒளிமயமானவர்; வேள் ஆர்ந்திருக்கும்-விருப்பம் பொருந்திய.

5. மதி-திங்களைப் போன்ற முகத்தில்; நல் திலக ; பத்மினியள்-மலர்மகள், இலக்குமி; ரசிதக்கிரி வெள்ளிமலை ; நிசி நத்திய - பொன்னைப் போல் விரும்பப்பெற்ற ; ரசனைக்கு-கண்டு மகிழ்வதற்கு, புலன்களால் உணர்ந்து உவப்பதற்கு; சேடு-இளமை மிக்கவள், அழகிய எனினுமாம்; ராச குல-அரசர் இல்லத்தைச் சேர்ந்த ; மாடு-இரத்தினம் போன்றவள்; வைக்கும்-வைகும் என்பதன் விரித்தல் விகாரம்; பொற்பிரபை கவி மாது-பொன்னின் ஒளி படர்ந்த பெண்; கிட்ட-நெருங்க ; விதனத்தொடும்-கவலை, இங்கு அச்சத்தோடு என்னும் கருத்தினது; வீறி, மீறி என்னும் எச்சங்கள் எழில்கொள் என முடிந்தன காமகலைவாரி - இன்பநூற்புலமையில் கடல் போன்றவள்; சூது ஆர்ந்து-சூதாடும் வல்லினை நிகர்த்து; அது-நகில், நெஞ்சறி சுட்டு; இடைக்கு விசாரமே.

6. சொலினமோ-சொல்லினமோ என்பதன் இடைக்குறை ; சாரிகை-நாகணவாய்ப் புள்; தத்தை-கிளி; ஓதிமம்-அன்னம்; குறிபுள்-இணையாகக் கருதப்படுகின்ற பறவை, வினைத்தொகை ; வெறி - நறுமணம்மிக்க ; குறி-காதலர் சந்திக்கத் தக்க இடம், இலக்கணத்தில் இது பகற்குறி, இரவுக்குறி எனப்படும்; பொற்கிளியின் மேடை-அழகிய கற்பாறையாகிய மேடு; கூறப்படுவதனைத்தும் தலைவியின்பாலுள்ளதாகவே இருப்பதால் இத் தொடருக்குப் பொன்மேடை போன்ற கடிதடம் எனினுமாம்; கூறரிய-இத்தன்மைத்து என்று விளக்கிச் சொல்ல முடியாத ; வாடை - நறுமணம் ; சிற்றுடைய - கீளொடு கோவணம் மட்டும் தரித்த, கந்தையும் மிகைஎனக் கருதும்; புருடாதிபன்-ஆண்களுள் தலைமை பெற்றவன்; வதனக் குளிரில் -முகத்தின் தண்மையில்; களையாறிடல்-இளைப்பாறுதல்; மருவ-பொருந்த; தமியை-தனியளாக; தமியன் ஆவி மருவ-எளியேனின் உயிருடன் கலக்க; தூய்தார்ந்த-தூய்மையைப் பொருந்திய; மெய்க்கு-உடலுக்கு.

7. சித்தசடன்-அறிவற்ற மூடனாகிய மன்மதன்; அப்பு அடுவனோ-அம்புளைச் செலுத்தி என்மேல் போர் செய்வானோ; இக் கலையின் வடிவம் சுவடியில் மிகப் பிழைபட்டும் குழிப்பிற்கு இசையாமலும் உள்ளது. பொருள் தெளிவாகவில்லை.

8. கடிய-விரைவில்; ஒயிலில்-அழகாக; வாகு-மிகுதி; உவர்இல் நளி-வெறுப்பில்லாத பெருமை; உவர்-முதனிலைத் தொழிற்பெயர்; மற்று மொழிமாற்றின்கண் வந்தது; ஓவிலது-எப்போதும் தீராதது, தெவிட்டாத இன்பம் என்றபடி; தமது எனற்பாலது தொடை நோக்கி ஒருமையாகத் தனது என நின்றது எண்வழுவமைதி; தனது குரல் தனதுக்குரல் ஆனது வண்ணம் நோக்கிய விரித்தல் விகாரம்; தாடலையில்-தாள்தலை இல், முதலும் முடிவும் இல்லாத, தாடலை என்ற சொற்றொடர் சைவ சித்தாந்த முத்தியை விளக்கப் பயன்படுத்தப்படும்.



# 22. திருமாகறல் வீற்றிருந்த பெருமாள் வண்ணம்

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இந்த வண்ணம் சென்னை அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தின் டி.371 ஆம் எண்ணிட்ட சுவடியில் உள்ளது. தமிழில் வண்ணப்பாடல்கள் நூலாசிரியராகிய சௌந்தரபாண்டியன் தம் நூலில் இதன் பெயரைமட்டும் (பெருமான் எனக்) குறிப்பிட்டு, இது கி.பி.17ஆம் நூற்றாண்டை ஒட்டிய காலகட்டத்தில் எழுந்தது என்கிறார் (பக்.43-44).

ஆனையானது (1) தாமரையான கோயில் (3) ஆவலானது தீர, ஈர்உடலான ஓர் உடல் (6), பார்வையானது சோர (7) மோகமாகிய தேறலானது பானமாகிய பேர்கள் (8) என்பது போல ஆன என்னும் சொல்லை இவர் பலமுறை பலவாறு பயன்படுத்துகிறார். ஐந்தாம் கலையில் எச்சங்கள் சிறப்பாக முடியவில்லை. ஆறாம் கலையில் மதராசர் ஓதிய சாத்திரம் என்பது தவறான கருத்து. மதனாகமம், மதனநூல் என்புழி மதனனை அதிதேவதையாகக் கொண்ட சாத்திரம் என்பது பொருளேயன்றி மதனனால் சொல்லப்பெற்ற நூல் என்பதல்ல. வேண்டுமானால் மன்மதக் கலையில் தேர்ச்சி பெற்றவர்கள் கூறிய நூல் என வலியப்பொருள் கொள்ளலாம்.

இதன் நடை மிகச் சாதாரணமானது. பெண்கலையில் இலக்கியச் சுவை மிகக் குறைவு. ஆனல் திருமாலைப் போற்றுகின்ற மூன்று கலைகளும் தலச்சிறப்பு கூறும் நான்காம் கலையும் நன்றாக உள்ளன.

மொத்தத்தில் அகத்துறைப் பாடல் என்ற அளவில் இதைப் பற்றிச் சிறப்பாகக் கூற ஒன்றும் இல்லை.

# 22. திருமாகறல் வீற்றிருந்த பெருமாள் வண்ணம்

## கலவி மகிழ்தல்

தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தனன தத்தன
தான தானன தான தானன
தான தானன தான தானன
(தொ) தாத்ததந்த தானதனனா

புலவ ருக்கமு தினைஅ ளித்தவர்;
புவிஅ னைத்தையொர் அடிஅ டக்கினர்;
பூவை மாமலர் போலும் நீடொளி -
யான மேனியர்; வேத வாயினர்;
அரவின் உச்சியில் நடன மிட்டவர்;
சகடு முற்பொடி படஉ தைத்தவர்;
ஆனை யானது மூல மேஎன-
வேக ராவிழ ஆழி ஏவிய
புனிதர்; அச்சுதர்;இடையர் பக்கலில்
உறிஇ றக்கி, நெய் தயிர்கு டித்தவர்;
பூச லால்உயர் வாலி தூள் எழ
வாளி ஏவிய ராமர்; (மாமலர்)
பூத்தலர்ந்த நாபிஉடையார் 1

புரம்எ ரித்தருள் பரமன் மைத்துனர்;
குகனை நட்பினில் இனித ளித்தவர்;
சோமு காசுர னாரை மீன்உரு-
வாகி யேஅடு மாய ரானவர்;
மழையி னிற்படும் நிரைபி ழைத்திட
மலையி னைக்குடை எனஎ டுத்தவர்;
வாம னாய்அவ தார மானவர்;
ஆளி யாய்ஒரு தூணில் மேவுவர்;
புனலில் உற்றது கழுவெ னக்குறி
தனைநி கழ்த்திஜ வரைஅ ளித்தவர்;
போர்பொ ராமல் "இ ராவ ணா! இனி
நாளை வா" என ஓதும் நாயகர்;
போற்றிஉம்பர் சூழ்இறைவனார் 2

அலகை செத்திட முலைசு வைத்தவர்;
அருளி னைப்பெறும் மருதி றுத்தவர்;
ஆமை யானவர்; பார்எ லாம்நுகர்
பால னாகி, ஓர் ஆலின் மேல்விழி
துயில்ப டைத்தவர்; அமர்வி ளைத்தெழு
கரிம ருப்பினை விழஓ டித்தவர்;
சோதி மாமறை ஆதி யானவர்;
தூய மோகினி யான காரணர்;
அலைக டற்கொதி கொதிகொ திக்தெழ
அயில்மு கக்கணை யதுவி டுத்தவர்;
வாச மானது ழாய்கு லாவிய
மார்பர்; தாமரை யான கோயிலின்
மேற்பொலிந்த மாதுவிழைவார் (3)

அமுதொ ழுக்கிய கதலி யிற்கனி
உகம டற்கமு கொடிய முற்றிய
வாளை தாவிய நீல ஓடையும்,
மாகம் மூடியும் நீடு சோலையும்,
மதுஒ ழுக்கிய குவளை யைக்களை
எனஉ ழத்தியர் களைவ யற்கழ-
கான சாலியும், ஆர வேழமும்,
மாக பூகமும், மாட கூடமும்,
அழகு சித்திரம் எழுது பொற்புள
ககனம் முட்டிய மதிலும், முத்தமிழ்
ஓதும் நீதியும், நாத கீதமும்,
யாழில் ஓசையும் மேவு மாகறல்
வீற்றிருந்த மாயர்வரைமேல் (4)

நிலவெ றித்திடு மணிமு கப்புள
மரக தத்தொளி பளப ளத்திடு
மேடைமேல், இள வாடை வீச, நி-
லாஉ லாவ, உ லாச மாய், மலர்
குலவு மெத்தையில் உடன்இ ருத்தி, மெய்
முழுதும் அப்பிய புழுகு கற்புரம்
வீர மானச வாது வாசனை
வீச, (மால)தி சாதி தாழையின்
நிறைம லர்தொடை யிவைமு டித்து,வெள்-

ளிலைக ளிப்பிள வினைஅ டக்கிவி-
டாமல் ஆர்அமு தூறல் ஊறிய
கோவை வாய்இதழ் கோதி யே,மிக
வாய்த்தஇன்பம் ஊறிஎழவே (5)

நிகழ்வி ளக்கொளி தரும்ம ணிக்கலை-
தனைநெ கிழ்த்திய கரத லத்தினில்
ஆவ லானது தீர, ஈர்உட-
லான ஓர்உடல் ஆக வே,பரி-
வுடன்அ ணைத்தினி கிளிம யிற்புற
வளிம டக்குயில் இனிய குக்குடம்
வாகு சேர்கவு தாரியாம்என
ஓகை சூழ்குரல் ஓசை மேவிட,
நிசிஎ னக்குழல் முகம்ம றைத்திட,
ஒருக ரத்தினில் மயிர்மு டித்தவி-
நோத லீலைகு லாவ வே,மத-
ராசர் தாம்மகிழ் வாக ஓதிய
சாத்திரஞ்சொல் வாய்மைபெறவே (6)

சலச மொக்கினில் அடிக னத்துரு
இலகி, வட்டுடை இறுகி, வட்டவி-
சாலமாய், அதிபார மாய், மத
யானையாய், மிகுமேரு வாய், இரு
புடைநெ ருக்கிய, புளகி தத்தொடு
களபம் அப்பிய முலைகள் தைத்திட,
நீடு வார்குழை யூடு மேவிட,
தோட ளாவிய கோர மாகிய
சரம்நெ ரித்தயி லினைஅ டர்த்திரு
கயலை ஒத்திளை ஞரைஉ ருக்கிய
பார்வை யானது சோர, மாகவி-
லான வாணுதல் வேர்வை யேதர,
பூப்பொலிந்த தார்அவிழவே (7)

தழுவ லுற்றகை வளைக லுக்கென
நெரிப டக்கொடி இடைச லித்திட
வாரி சாதக மான தாளில்உ-
லாவு நூபுர ஓசை கோஎன,
மணிஇ தழ்க்கடி பட, ந கக்குறி
மணிமி டற்றினில் இனித ழுத்திட,

மோக மாகிய தேற லானது
பான மாகிய பேர்கள் போல்மகிழ்
தனிம யக்கமும் மருவி (அற்புத
சுகம துற்று) மெய் அவச முற்றடை-
வாக வேஅநு போக லீலைஎ-
நாளும் நான்மற வேன்நி ராமய
மோட்சஇன்ப வாழ்வும் இதுவே
(இவ்வண்ணத்தில் தொங்கற்றாழிசை அமையவில்லை)

# ௨௨. திருமாகறல் வீற்றிருந்த பெருமாள் வண்ணம்

## குறிப்புரை

1. புலவருக்கு-தேவர்களுக்கு; அமுதினை-பாற்கடலைக் கடையத் தோன்றிய அமிர்தத்தை,

"ஓர்உரு வெற்பைத் தரித்தது; தானவர் உம்பர்உள்ளாய்
ஈர்உரு நின்று கடைந்தது வேலை ; இதனிடைஓர்
பேர்உரு இன்அமு தோடே பிறந்தது; பெண்மைகொண்டுஓர்
நார்உரு நின்றது; அரங்கா; இதுஎன்ன நல்தவமே!"

(திருவரங்கத்து மாலை 25)

புவி அனைத்தையும் என முற்றும்மை விரிக்க, ஓங்கி உலகளந்த வரலாறு வெளிப்படை; பூவைமா மலர்-காயாம்பூ; அரவு-காளிங்கன், வரலாறு வெளிப்படை ; சகடு-சகடாசுரன், கண்ணன் சிறுகுழவிப் பருவத்தே இவனை உதைத்து மாய்த்தார்; ஆனையானது-கசேந்திரன், ஆனது பகுதிப்பொருள் விகுதி; கரா-முதலை; விழ-இறக்க; ஆழி-சுதர்ஸன சக்கரம், வரலாறு வெளிப்படை; பூசலால் உயர் - பேராற்றல் மிக்க; வாளி-அம்பு; நாபி-கொப்பூழ், பதுமநாபன் என்றபடி.

2. புரம்-முப்புரம்; பரமன்-சிவபெருமான் குகன்-சிருங்கிபேர புரத்தலைவனாகிய கங்கை வேடன்; சோமுகாசுரன்-இவன் அயக்கிரீவன் எனவும் அழைக்கப்படுவான், ஒரு கற்பத்தின் நைமித்திகப் பிரளயத்தில் பிரமன் உறங்கிவிட இவ் வசுரன் வேதங்களைத் திருடிக்கொண்டு கடலில் ஒளிந்துகொண்டான். திருமால் மீன்வடிவில் தோன்றி (மச்சாவதாரம்) இவனைக் கொன்று வேதங்களை மீட்டார்; ஆர்விகுதி இழிவுக் குறிப்பு; படும் நிரை - துன்புறும் பசுக்கூட்டம்; மலை -கோவர்த்தன கிரி; வாமன்-குறளன், மூன்றடி நிலம் வேண்டி மாவலிபால் இரந்த வரலாறு வெளிப்படை ; ஆளி-நரசிங்க மூர்த்தி; ஐவர்-பாண்டவர், தொகைக் குறிப்புப்பெயர்; ஒருநாள் கங்கைத் துறையில் இரும்பினாலான கூரிய கழுக்களை நீருக்குள் நட்டுவைத்து துரியோதனன் விளையாட்டாக வீமனை அங்கு நீரில் குதிக்கச் சொன்னான். அப்போது கண்ணன் வண்டின் வடிவத்தில் கழுமுனைதோறும் உட்கார்ந்து கொண்டான். நீரோட்டத்தில் வண்டுகள் எப்படி நிலையாக உட்கார்ந்திருக்கும் எனச் சிந்தித்த வீமன் கழு இல்லாத இடத்தில் குதித்துத் தப்பினான். வீமன் ஒருவனே இந்த நிகழ்ச்சியில் காக்கப்பட்டவனெனினும், இவனால் பாண்டவர்கள் பாதுகாக்கப்படுகிறார்கள் ஆதலின் இவரை அளித்தவர் என்றார்.

"வேறொரு பகல்கழு நிரைத்து வீமனோடு
ஆறுபாய்ந்து இருவரும் ஆடும் வேளையில்
தேறலான் வஞ்சகம் தேறி வண்டினால்
ஏறினான் கடந்துஅரி ஏறு போன்றுளான்" (வில்லிபாரதம்-வாரணாவதச்.10)

இன்றுபோய் நாளைவா என இராவணனிடம் இராமபிரான் அருளியது வெளிப்படை; உம்பர்-தேவர்கள்.

3. அலகை-பேய், பூதனை, பேய்முலை நஞ்சுண்ட வரலாறு வெளிப்படை; மருது-ஆயர்பாடியில் மருதமரங்களாக நின்றிருந்த நளகூபரன், மணிக்கிரீவன் என்னும் இருவர், குபேரன் மக்களாகிய இவ்விருவரும் நாரதருடைய சாபத்தால் இரட்டை மருதமரமாயினர். யசோதையால் உரலோடு பிணிக்கப்பட்ட கண்ணன் இம்மரங்களுக்கு இடையே செல்ல அவன் தீண்டுதலால் அவர்கள் சாபம் தீர்ந்தனர்.

"உரலொ டும்தனித் தவழ்தருபு உயர்வெளி அளந்த
விரித டஞ்சினை புணர்மருது ஒசிந்துவேர்ப் பறியா
வரைவி ழுந்தென வீழ்ந்த; அம் மருதுஉரு எடுத்தோர்
பரவி ஏகினர் பசுந்துழாய்ப் பரன்அடி பணிந்தே"

(செவ்வைச் சூடுவார் பாகவதம் 2782)

ஆமை ஆனவர் - கூர்மாவதாரம், பாற்கடலைக் கடையும்போது மத்தாகிய மந்தரமலை சாயாமல் நிற்கத் திருமால் ஆமை வடிவெடுத்து அம் மலையைத் தாங்கினார்; "பார் எலாம் நுகர் பாலன் ஆகி ஓர் ஆலின் மேல் விழி துயில் படைத்தவர்;" அமர்விளைத்து-போரிட்டு; கரி-யானை, குவலயாபீடம்; கம்சன் கண்ணனை அழைத்தான். வாயிலில் கண்ணனை அழிக்கப் பெருவலியும் மிகுமதமும் கொண்ட குவலாயபீடம் என்னும் ஒரு யானையை நிறுத்தியிருந்தான். கண்ணபிரான் வந்த உடனே யானை தாக்கியது. பெருமான் அதன் கொம்பைப் பறித்துக் கொன்றதோடு பாகனையும் வீழ்த்தினான்; மாமறை ஆதி - வேத முதல்வர்.

"இயன்ற எல்லாம் பயின்று அகத்து அடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதுஅற விளங்கிய திகிரி யோனே" (நற்றிணை, கடவுள் வாழ்த்து)

தூய மோகினி-பாற்கடலில் தோன்றி அமுதத்தைப் பங்கிட்டு வழங்கிய மோகினி வரலாறு வெளிப்படை ; கடல் கொதித்தெழ எனற்பாலது வண்ணம் நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது; கொதி மும்முறை கூறியது மிகுதிப் பொருட்டு; அயில் முகக்கணை அது - கூர்மையான முற்பகுதியைஉடைய அம்பு, அது பகுதிப்பொருள் விகுதி; இராமபிரான் கடலைக் கடக்க வருணனின் அநுமதி வேண்டி நோன்பிருந்தான். கடலரசன் பராமுகமாய் இருந்தான் சினங்கொண்ட எம்பெருமான் தீக்கணை தொடுத்து அவனைப் பணியக் கொண்டான்; துழாய்-துளசி; மாது-திருமகள், மாதை விழைவார் என இரண்டனுருபு விரிக்க.

4. அமுது-தேன்; கதலி-வாழைமரம்; உக-உதிரும்படியும்; மடல்கமுகு-கமுகு மடல் என மாறுக; மடல் ஒடியும் படியும்; முற்றிய வாளை-நன்கு வளர்ந்த வாளை மீன்; வாளை உக(வும்), உரய(வும்) தாவிய நீல ஓடை என இயையும்; மாகம்-வானம்; மது-தேன்; குவளை-காவி மலர்; உழத்தியர் வயலில் முளைத்த குவளையைக் களை எனக் களைதல், "கார்செ யும்குழல் கடைசியர் கட்டபூங் காவி தார்செயும்கழைத் தலைப்பொலிவன"

(இரகுவம்மிசம்-நாட்டுப்.26); வயற்கு அழகான சாலியும்-வயலின்கண் நல்ல நெல்லும், ஆரவேழமும்-முத்துக்களை உடைய கரும்பும், இரண்டன் தொகை ; மாக பூகமும்-வானளாவிய பாக்கு மரமும்; மாட கூடம்-உப்பரிகைகளையுடைய மாளிகை ; பொற்பு உள- எழில்மிக்க ; ககனம்-ஆகாயம்; ஓடையும்முதல் ஓசையும்முடிய உள்ள பத்து உம்மைகளும் எண்ணும்மைகள்; திருமாகறல்-காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள ஊர், திருஞானசம்பந்தரால் பதிகம் பெற்ற சிவத்தலமும் ஆகும்.

5. நிலவு எறித்திடும்; முகப்பு-முன்பகுதி; மரகதத்து ஒளி; இள வாடை-மெல்லிய காற்று என்னுமளவில் நின்றது; வீரமான-உயர்ந்த; மாலதி-மல்லிகை; சாதி-சாதி மல்லிகை, பிச்சி; மலர்த்தொடை-பூச்சரம்; வெள்ளிலை -வெற்றிலை; களிப்பிளவு-பாக்குத்துண்டு; கோவை-கொவ்வைக் கனியைப் போன்ற; கோதியே-கொந்தி, ஏகாரம் எண்ணுப்பொருள்; இக் கலையில் வாடை வீச, நிலா உலாவ, உடன் இருத்தி, வாசனை வீச, முடித்து, அடக்கி, கோதியே என்னும் எச்சங்கள் சிறப்பாக முடிக்கப் பெறவில்லை.

6. விளக்கு ஒளிதரும்-விளக்கொளியில் மின்னும்; மணிக்கலைதனை-அழகிய சேலையை, தன் பகுதிப்பொருள் விகுதி; ஆன - ஆனவை என்றவாறு வந்த பகுதிப்பொருள் விகுதி; அனைத்து இனி; புறவு, அளி; அளி-வண்டு; குக்குடம்-கோழி; வாகு சேர்- அழகிய; நிசி என் அ குழல்-இரவைப் போன்ற அந்தக் கூந்தல்; மதராசர் தாம் ஓதிய-மன்மதனால் கூறப்பெற்ற, மாரன் காமத்திற்கு அதிதேவதையேயன்றி நூலாசிரியன் ஆகான், நந்தி, கொக்கோகர் ஆகியோரே ஆசிரியர்கள்.

7. சலச மொக்கினில்-தாமரை மொட்டைப் போன்று; உரு இலகி-அழகிய வடிவம் வாய்க்கப் பெற்று; வட்டுஉடை-மார்க்கச்சு; மேரு-மேருமலையை நிகர்த்து; நீடு வார் குழை-நீண்டதும் சீப்பிட்டு வாரப்படுவதுமாகிய கூந்தல், குழை கூழை என்பதன் குறுக்கல் விகாரம்; கோரம் ஆகிய-நஞ்சினைப் போன்ற ; சரம் நெரித்து-அம்பினை உடைத்து; அயிலினை அடர்த்து-வேலாயுதத்தைப் போரிட்டு அடக்கி; இரு கயலை ஒத்து இளைஞரை ; பார்வையானது-கண்கள்; மாக வில் ஆன வாள் நுதல்-வானவில்லைப் போன்ற ஒளிமிக்க நெற்றி; ஆதல் உவமைப் பொருட்டு; தார்-மாலை.

8. கலுக் என - ஒலிக்குறிப்பு; நெரிபட - உடைய ; வாரிசாதகம் ஆன தாளில் - தாமரை போன்ற காலில்; நூபுரம்-சிலம்பு; இனிது அழுத்திட ; தேறல் ஆனது - தேன்; பானமாகிய பேர்கள் போல் - (கள்) குடித்தவர்களைப் போன்று; அவசம் உற்று-பரவசமடைந்து; அடைவாகவே-நூல் முறைப்படி, முழுமையாக எனினுமாம்; நிராமய -துன்பம் இல்லாத.

# 23. திருவுருமாமலைக் குருபரன் வண்ணம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றபெற்ற இந்த வண்ணம் 1980 ஆம் ஆண்டு வெளியான வண்ணமஞ்சரியில் தொகுக்கப்பட்டுள்ளது (ப 28)

மிகச் சிறந்த ஓசை நயம் வாய்ந்த வண்ணங்களுள் சிறப்பிடம் பெறத்தக்கவற்றுள் இதுவும் ஒன்று. இந்த வண்ணத்தின் மோனை அமைப்பு மிக அருமையானது. ஒரு குழிப்பிற்குரிய நான்கு துள்ளல்களும் ஒரே மோனை பெற்று அமைகின்றன. அதாவது ஒரு கலைக்கு 1.3 குழிப்புகளுக்குரிய எட்டு துள்ளல்களும் ஒரு மோனையும், இரண்டாம் குழிப்புக்குரிய நான்கு துள்ளல்களும் ஒரு மோனையும் பெற்றுப் பொலிகின்றன. இரு கலைகள் ஓரடியைப் போன்றதால் இதில் 16 துள்ளல்கள் ஒரே மோனையில் அமைகின்றன. இத்தகைய மோனைத் தொடைக்காகத் திரிசொற்களைப் பெய்யாமல் மிகஎளிய வழக்குச் சொற்களே பயன்படுத்தப்பட்டிருப்பது சுவாமிகளின் சொல்லாற்றலுக்குப் பெருஞ்சான்றாகும்.

ஆண்கலையில் பாட்டுடைத் தலைவனாகிய முருகப்பெருமானின் புகழ் நாவினிக்கப் பாடப் பெறுகிறது. திருநெல்வேலியைச் சேர்ந்ததும் இப்போது குறுக்குத்துறை என வழங்கப்பெறுவதுமாகிய திருவுருமாமலையின் சிறப்பு நான்காம் கலையில் இடம் பெறுகிறது.

பெண்கலை சற்றும் விரசமே கலக்காமல் நல்ல இலக்கியச் சுவையுடன் அமைந்துள்ளது. இத்துறையில் மெய்யுறு புணர்ச்சியைப் பாட வேண்டியுள்ளதால் மிகச் சுருக்கமாகக் கூறப்பெற்றுள்ளது.

இந்த வண்ணத்தில் இடம்பெற்றுள்ள தலைவியைச் சுரதப்பரியா நாயகி என்னலாம் (காண்க : 17 ஆம் வண்ண அறிமுகம்).

# 23. திருவுருமாமலைக் குருபரன் வண்ணம்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

### கலவிமகிழ்தல்

தனன தந்தன தானதந்தனனா தனந்தன
தனன தந்தன தானதந்தனனா தனந்தன
தத்தனாதன தந்த தனதன
தத்தனாதன தந்த தனதன
தனன தனதன தனன தன
தனதன தனதனதனன தனதன
தான தத்தன தானன தானன
தான தத்தன தானன தானன
(தொ) தானான தனனதன தானனா

மலைதொ றுந்திரு நாடகம்புரிவோன்; அருந்தமிழ்
முனிவ ணங்கிய தாள்பெறுங்குகவேள்; நிதந்தொழும்
மக்கள்பால்வரு கின்ற குருபரன்;
அத்திமாமுக வன்தன் இளையவன்;
மதனன் அணிஉடல் பொடிய முனிபவர்
குருவும் மதலையும் எனமுன் இலகிய
வாழ்வு டைக்கரு ணாகர நாயகன்;
மூஇ ரட்டிய மாமுக வானவன்;
அருணை யம்பதி வாழ்பசுங்கிளியாம் அவன்பகர்
கவிக ளும்பனி நீபமும்புனைதோள் இலங்கிய
அற்புதாகர நம்பன்; இமையவர்
பெற்றபாவைபு ணர்ந்து வலிதினில்
அணையும் அழகிய முருகன்; ஒருபுன -
மதனில் உறைகுற வனிதை அருகினில்
ஆள்ள னக்கிழ மாமுனி வேடமொ
டேகி மெச்சிய காமுக வேடுவன்;

மயில்இ வர்ந்துல கேழினுந்திரிவோன்; மகம்தரு
தகர்மு ழங்கிய ஓசைகண்டதனால் நடுங்கிய
மற்றலோகமும் நெஞ்சம் மகிழ்வுற
மிக்கநாரதன் அன்று புரிதவம்
மகிமை பெறஅதன் முதுகில் இவர்பவன்;

வழுவை யதனினும் உலவு கெழுமுகில்;
வார ணக்கொடி நீடிய சேவகன்;
நான்மு கத்தயன் வாய்விட மோதினன்;
ஆனாத நலம்உதவு சீரினான் 1

மதுஉ மிழ்ந்தலர் கூதளங்குரவோ டிசைந்திட
லனைய தண்டமிழ் பாடிடும்புலவோர் புகழ்ந்திட
மச்சகேதனம் நிம்ப மலர்கொடு
கட்டுமாலிகை கொண்ட வழுதிதன்
மதுரை நகரினில் அளகை யதிபனை
அனைய ஒருமுது வணிகன் மனையினில்
வாய்அ டைத்துள ஊமைஇ தாம்என
வேஉ ருக்கொடு தோணிய பாவலன்;
அதிவி தம்படு மாயைவன்தொழிலோர் எனும்பல
தகுவ ரும்பட வேல்விடும்பெருமான்; சுதந்திர-
மற்றசீவனை முந்து பரம்என
மெச்சுநூல்கள்உ ணர்ந்த கொடியவர்
அறிவில் அமைவரும் நிலைமை உடையவன்;
அகிலம் முழுதிறனும் நிறையும் இயல்பினன்;
ஆர ணத்தொகை கோடியும் நாடிய
மோன நிச்சய ஞானத யாபரன்;
மகர வெண்டிரை நீரினும், பொதிய சலந்தரு
பொருநை யின்புது நீரினும், கழைசூழ் வனந்திகழ்
வட்டமாநகர் என்ற மகள்கலை -
யொத்தகாலினும், இந்த உடல்வரும்
மனையில் உளசிறு கிணறு, கருவையின்
அருகில் வரும்நதி, கழுகு மலைவள
வாவி முற்பகர் நீரோடுதீயினும்
மேய முத்தமிழ் ஈயும்அ வாவினன்;
ஆறான பொறிகளிலும் மேவுசேய் 2

இலைபொதிந்துள நீறுதந்தருள்வோன்; மடந்தையர்
வளையு டன்கலை சோர்வுறும்படியே தினம்தினம்
இட்டமோடுவ ரும்ப வனியினன்;
நச்சராமிசை நின்று நடம்நவில்
இறைவ னதுதிரு முருகன்; உமையுடன்
உடுவும் உதவிய அமுதம் நுகர்பவன்;

ஈர்இ ரட்டிய வீடும்ஓ ரேநிறை -
யாம்எ னத்தெரி வார்களை ஆள்பவன்;
முகுள கஞ்சப யோதரம்கொளும் ஓர் கருங்குயில்
அனைய பெண்கொடி கோஎனும்பொழுதே விரைந்தவள்
முத்தர்சேகரம் என்று திகழ்தர
முற்குலாவி, வி ழுந்த கரமொடு
முருகன் எனும்உயர் மொழியி னதுபயன்
அருளி, அருள்வலி அதுவும் உதவிய
மோக னக்கவு மாரகு ணாலய -
மான தற்பரன்; ஆறிரு காதினன்;
இகப ரம்பெறு வாழ்வில்இன்புறுவார் எனுஞ்சிலர்
எனையும் நம்பிடு மாறுகண்டு றைவோன்; இகழ்ந்திடும்
எச்சில்வாய்கொளும் என்ற னதுகவி -
தைக்கும் ஆசைமி குந்த செயலினன்;
எதிரில் அமர்செய நினையும் அவர்களும்
அவசம் உறமிளிர் வலிய கெலியினன்
ஈகை யற்றகு ரோதவி ரோதியர்
வாழ்வொ ழிப்பவன்; ஏனையர் தாய்நிகர்
சேனாதி பதிஅமரர் தேவன்நீள் 3

இமய முங்கயி லாயமும்பொருசீர் பெரும்பல
குவடு தந்திட நீடுபைம்பொழில்சேர் குரங்குகள்
இக்குவேள்எனும் வம்பன் விடுகணை
மொய்ப்பதால்மயல் கொண்டு தடையறும்
இனிய கலவியில் முழுகி, மலர்துணர் -
உதவு மதுவெறி பெருகி, உயர்பல -
வேறி, முட்கனி கீறி,ம னோரத
வாச நற்சுளை தீதுஎன வீசிடும்;
முனிவ ருங்,கவி வாணரும் பிணிதீர் நலம்பெற
எனவ ரும்பல பேர்களும்,திலநீர் சொரிந்துநல்
முத்திஈகிற மைந்தர் பெறுவது
நத்திவாடிவ ருந்தும் அவர்களும்,
முனைகொள் இகலவர் மடிய விடுபடை
கருதும் அரசரும் அனைய வகையினர்
மூல தத்துவ தேசிக வேலவ
னேஎ னத்துதி கூறொலி மேல்எழும்;

இடிஎ னுந்தொனி யானையின்திரள்போய் வருந்தெரு
வளம்ம லிந்தநெல் வேலியின்தவன் ஆம் உடம்பினர்
இச்சைபோல்உயர் துங்க மதிலுடை
சுற்றுகோபுரம் மிஞ்சு சினகரம்
இணையில் நவமணி குயிலும் அழகிய
கனக கொடிமரம் முதலி யவைதிகழ்
ஈடுபெற்றொடு சீவமகாநதி
யூடு முச்சுடர் வாழ்தலம் ஆகிய
சேண்ஆரும் உருமலையின் மாதராள் 4

கலையுணர்ந்துயர் வாணிஎன்றவளோ? நெடுங்கடல்
மிசைது யின்றவன் மார்புறும்திருவோ? சினங்கொடு
கற்றநூல்வழி வம்பு மகம்முயல்
பற்பலோர்கெட வந்த வனிதைகொல்?
ககன மகளினர் பரவும் அரசிகொல்?
அவுணர் இருவரும் மடிய எனமுதிர்
கான கத்தெழில் வீணையொ டேகிய
கோம ளக்குயி லோ?இனி யாவள்கொல்?
சினைமி கும்புயல் போல்உறுங்குழலாள்; மதன்குடை
எனவி ளங்கிய மாமுகந்தனிலே இளம்பிறை,
திக்கெலாம்விலை கொண்ட சிலை, கணை
ஒத்தசீர்சில தங்கும் இயல்பினள்;
சிறிய நகையினள்; இனிய மொழியினள்;
அசையும் இருகுழை உலவு செவியினள்;
சேலை கட்டிய நூல்இடை யாள்;முலை
யானை விட்டக லாமயில் போல்பவள்;
கபட நெஞ்சினள்; காமரஞ்சிதமான்; மனங்கவர்
குமரி; இந்திர சாரமுந்தெரிவாள்; மணங்கமழ்
கட்டுமாலைக ளும்,பல் பணிகளும்
இட்டகோலம் இசைந்த வடிவினள்;
கருதும் நினைவொடு கருணை அறியும்முன்
அணுகல் பிழைஎனும் நினைவொ டவள்மிசை
காத லுற்றது தோணிட நீதனி -
யாகி நிற்கிற காரணம் ஏதென
நானாக உரிமைமொழி கூறவே 5

களவ றிந்துளம் நாணி அஞ்சினள்போல் ஒதுங்கினள்;
அதுதெ ரிந்தரு கேகிநின்றடியே! இரங்கிடு;
கச்சைமீறிய கொங்கைநெருடிஅ-
ணைத்துவாய்இதழ் உண்டுமகிழ்வுறு
கலவி தரில்உன தடியை அநுதினம்
முடியில் அணிகுவன்; இதுமெய் மொழி; சிலர்
காரி யத்தினை நாடிஇ வாறுசொல்
வார்கள்; அத்தொழில் நான்அறி யேனடி;
தினமும் நின்பணி யாவும் அன்புடனே புரிந்துன
தடிமை என்றுல கோதவும் திரிவேன்; மதன்புகழ்
செப்பும்நூல்கள்உ ணர்ந்த வனிதைய -
ருக்கொவாதமு ரண்டை விடுவிடு;
திருகு மொழிசொலி உதறில் எனதுயிர்
உடலைவிடும்;ஒரு பழியும் உனதொடு
சேரும்; நிச்சயம்; ஆயிரம் வேள்பொரல்
போல்ம யற்பிணி மீறுது; பாதகி!
களவொ ழிந்தொரு வாசகம்பகராய்; மயங்கிய
கதியில் வஞ்சக மாகநின்றிடல்ஏன்? இரும்பொடு
கற்கள் ஆயினும் என்சொல் வினவில்இ -
ரக்கம் மீறி நெகிழ்ந்து விடும்; அடி!
கடின மனதொடு மறுக விடுவது
தருமம் அலஅடி!" எனவும் அவள்இரு
கால்க ளைத்தொட நாடினன்; மோகம்இ-
லாள்எ னச்சிறி தேகினள்; ஓடிலள்;
நாணாமல் எனைமிகவும் ஏசினாள். 6

"விலைம டந்தையர் போல்நினைந்தனையோ? இதுந்தலை
விதிய தன்குறை யோ? விளங்கிழையார் அறிந்திடில்
மெத்தமோசம்;இ தன்றி உறவி -
ருக்குமானம்அ ழிந்து விடும்;'' என
விசன முடன்அழு மவரில் அழுதனள்;
வனம தனில்மிக உனது சிரலமும்
வேத னைப்படு மாறொரு பாதகன்
நாடி டிற்சகி யாய்;'' என ஓதினள்;
"பலர்வ ளைந்திடு மாறுவந்திடுநான் இவண்தனி
வருவ துன்தவம் ஆகும் என்றனள்; யான் மகிழ்ந்துயிர்
பட்டபாடுத விர்ந்து துணிவொடு

தொட்டிடாதுநெ ருங்க உடன் அவள்
பதறு மவர்என, விரலை நெறிவுசெய்-
தகம தனில்மிகும் உவகை யுடன், அட
பாவி! தொட்டுவி டாதைள னாநட
மாடும் வித்தையி னால்மரு ளாதவள்
விழிகு விந்ததும், வேர்வரும்பலும், வாய் உலர்ந்ததும்,
வளையு டன்கலை சோர்வதுங்கொடுநான் விரைந்துடல்
விட்டிடாதுமு னைந்து கவுளைநெ-
ரித்துவாசம்மு கந்த பொழுதினில்
விரக வெறிகொடு தனது வசம்அற
எனது வசம்உறும் அவளொ டணைமிசை
மேவி டச்சம ராடுநர் போல்எதிர்
ஆடு தற்கிசை வாயினள், ஆதலின்
மேல்நாளின் மதன்இரதி போலவே 7

மிகவும் இங்கித மோடு கொஞ்சினள்;யான் உவந்திதழ்
பருகல் கண்டவள் மாறிஉண்டுடனே உரந்தனில்
வெற்றிமீறிய கொங்கை கொடுமிக
முட்டினாள்; மதி மிஞ்சி நயமொடு
விகடம் மொழிகுவள்; இருவர் கலையையும்
உரிவள்; இதுதுதி எனவும் முடுகுவள்;
வேசை அப்படி ஆடல்செ யாள்;அது-
வேள னக்கும்ம னோரதம் ஆனது;
படர்சு ணங்குறு கோடெனும்படிநீ டிடுந்தன -
மிசைந கம்பதி வாதல்கண்டொருதா டனஞ்செய்து;
பற்களாலும்இ யைந்த படிகுறி
வைத்துமாரன்இ ருந்த மணிதிகழ்
படிவு தனில்உயர் கரிக ரமும்முக -
ரதமும் முனிவரர் பனுவல் நடுஉள
பாட லிற்பகர் சீரிய தாம்விதி
போல்மு டித்துட லோடுயி ராம்என
விகசி தம்பெற வேஅணைந்திடலால், வரும்புனல்
கடலி னும்பெரி தாய்இலங்கியதால், அனங்கனும்
மெத்தையாதியும் முங்க லுற,வெகு
புட்கள் போல்ஒலி தந்த வனிதையும்

வெயர்வை யுடன்எனை யனைய தளர்வுற,
அமரர் மலர்மழை பொழிய உறுசுகம்
வேறெ வர்க்கும்எய் தாதிது வேகதி -
யாம்எ னச்சொல லாம்அறி வார்எவர்?
வீறாரும் அநுபவம்வெ றாததே 8

## தொங்கற்றாழிசை

ஆனாத நலம்உதவு சீரினான்;
ஆறான பொறிகளினும் மேவுசேய்;
சேனாதி பதிஅமரர் தேவன்நீள்
சேண்நாடும் உருமலையின் மாதராள்
நானாக உரிமைமொழி பேசவே
நாணாமல் எனைமிகவும் ஏசினாள்;
மேனாளின் மதன்இரதி போலவே
வீறாரும் அநுபவம்வெ றாததே.

# 23. திருவுருமாமலைக் குருபரன் வண்ணம்

## குறிப்புரை

1. தமிழ்முனி - அகத்தியர்; நிதம்தொழும் குருபரன், முடிமேலே அஞ்சலிசெய் வோர்கள் நேயக்கார (திருப்புகழ் 97) எங்கே நினைப்பினும் அங்கேஎன் முன்வந் தெதிர்நிற்பனே (கந்தர் அலங்காரம் 104); அத்தி மா முகவன்-யானைமுகன்; மதன்-காமன்; அணி - அழகிய ; முனிபவர் - சினப்பவர், சிவபெருமான்; குருவும் மதலையும் - மதலையும் குருவும் என வரிசைப்படுத்தாமல் சிறப்புநோக்கி முதலில் குருவை வைத்தார்; நாயகன்;மு இரட்டி-மூன்றிரண்டு, ஆறு; வானவன்-தெய்வம், அருணையம்பதிவாழ் பசுங்கிளி - அருணகிரிநாதர்; அவன் பகர் கவிகள் - திருப்புகழ், கந்தரலங்காரம் கந்தரநுபூதி; கந்தரந்தாதி, திருவகுப்பு, வேல் விருத்தம், மயில் விருத்தம் ஆகியன, சிலர் வள்ளிநாயக மாலை, ஞானாநுபூதி என்னும் இருநூல்களும் இவர் வாக்கென்பர், இது மேலாய்வுக்குரியது; கவிகளும் நீபமும் புனைதோள்; "பலபல பைம்பொற் பதக்கம் ஆரமும் அடிமைசொலுஞ்சொற்றமிழ்ப்ப னீரோடு பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும் அணிவோனே" (திருப்புகழ் 178) அற்புத ஆகர நம்பன் - வியப்பிற்கு இடமாகஉள்ள நம்பிரான்; இமையவர் பெற்ற பாவை-தெய்வயானை; வலிதினில் அணைந்து புணரும் என மாறுக; புனமதனில் - அது பகுதிப்பொருள் விகுதி; ஆள்என- என்னை ஆட்கொள்வாய் என்று வேண்டி; மயில் இவர்ந்து உலகு ஏழினும்; மகம்தரு தகர் - (நாரதரின்) வேள்வியில் தோன்றிய ஆட்டுக்கடா; மகழ்வுற மகிமைபெற என்னும் ஈரிடங்களிலும் எண்ணும்மை விரிக்க; வழுவை - யானை, வேழத்தில் உலவுதல்,

கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்டு (முருகு 82)

உவாவின் மாதுடன் உவாவினுக் கிளையவன்
உவாவில் திவாக ரன்மதி யாம்என வருதலும் (கந்தபுராணம் 5-3-2)

வன்னம்ஆ யிரமாக முன்னுதோ கையதாகும்
மஞ்ஞைஆடு அடல்வேழம் முன்னத்துரந்தவே (சென்னைக் கலம்பகம் 6)

வாரணக் கொடி - சேவற்பதாகை; சேவகன் - வீரன்; பிரமனைக் குட்டிச் சிறையிட்ட வரலாறு வெளிப்படை ; ஆனாத - குறையாத.

2. மது உமிழ்ந்து -தேன் சொரிந்து ; அலர் -மலர்கின்ற, அலர்ந்து மதுஉமிழ் கூதளம் என மாறுக ; மச்சகேதனம் - மீன்கொடி; நிம்ப மலர்கொடு கட்டு மாலிகை - வேப்பந்தார்; வழுதி - பாண்டியன் ; அளகையதிபன் - அளகாபுரிக்குத் தலைவனாகிய குபேரன்; பாவலன் - உருத்திரசன்மன், முருகப்பெருமான் ஊமைப் பிள்ளையாய்த் தோன்றி இறையனார் அகப்பொருள் உரைகளைக் கேட்டு, நக்கீரர் உரையை நயந்த வரலாறு வெளிப்படை, திருவிளையாடற்புராணம் சங்கத்தார் கலகம் தீர்த்த படலத்தில் விரிவாகக் காணலாம்; மாயை வன்தொழிலோர் - மாயையின் துணைகொண்டு வன்முறைச் செயல் செய்பவர்; தகுவர் - அசுரர்; சுதந்தரம் அற்ற சீவனை - தன் செயல்களைத் தானே அமைத்துக்கொள்ள இயலாதபடி

மும்மலங்களில் சிக்குண்ட உயிரை ; சீவனைப்பரம் என மெச்சும் நூல்கள் என்றது சமண சமய நூல்களை, என்னை? அவர்கட்கு இறைவன் இல்லை, வினையின் நீங்கிய சீவனை இறைவன் என்கின்றனர். முருகனின் கலையான ஞானசம்பந்தர் எதிர்த்ததும் சமணர்களையே, இவ் வண்ணத்தின் ஆசிரியர் திருமால் முதலிய அறுசமயக் கடவுளர்களைச் சீவகோடிகளைச் சேர்ந்தவர் என்று கூறமாட்டார்; அகிலம் - உலகம்; ஆரணத்தொகை கோடியும் - எண்ணற்ற வேதங்களும், முற்றும்மை : மகர - மீன்களுக்கு இடமாவதும் ; வெண்திரை நீரினும் - வெள்ளையான அலைகளை வீசுவதுமாகிய கடலிலும், இது திருச்செந்தூரில் உள்ள வதனாரவிந்தம் என்னும் கடற்றுறை.

"சொன்னபடி தருவான்ள னாநம்பி அவனெதிர் துலங்கும்வத னாரவிந்தம்
என்னமிளி ருங்கடற் றுறையினிற் சென்றிரந்து எய்த்தேன்; இரங்கவில்லை;
மின்அனைய வேலை, அம் மணிவடத் தைத்தண்டை, வெண்ணீற டைத்தபையைக்
கன்னலம் பாகனைய கவிகளைக் கீறிஅக் கடலிடை எறிந்தேனரோ"

(குருபர தத்துவம் - திருச்செந்தூர்ச். 25)

பொருநை - தாமிரவருணி; கழைசூழ்வனம் - திருநெல்வேலி; வட்டமாநகர் என்ற மகள் - குறுக்குத்துறைக்கு வட்டமாநகர் எனப் பெயருண்டு போலும், அந்த இடம் பெண்ணாக உருவகிக்கப்படுகிறது; கலை ஒத்த கால் - ஆடையைப் போன்ற வாய்க்கால்; இந்த இடம் சுவாமிகளின் தன்வரலாற்றில்,

"அங்கிருந்து நெல்வேலிக் கணுகிஉரு மலைக்கோயில்
தங்கியபாட் டத்தனையும்தண்பொருநைப் புனலாடி
நுங்கியது கண்டுமற்றும் நுவன்றகவியொடு சேர்த்து
மங்கிடுங்கொல் வருங்கொல் என வர்ய்க்காலிற் கிழித்தெறிந்தேன்"

(குருபரதத்துவம் - திருமலைச், 23)

எனக் கூறப்பட்டுள்ளது; இந்த உடல் வருமனை - சுவாமிகள் தோன்றிய வீடு, நெல்லை அனவரததான விநாயகர் தெருவில் இருந்தது; கருவை - கரிவலம்வந்த நல்லூர்; நதி-இது சேமநதி, பத்தியொடு திருக்கருவைக் களவுறைபால் வண்ணன்மலர்ப் பதத்தை உன்னிச் சுத்திதரும் இச்சேம நதித்தீர்த்தம் தனிற்படிந்தோர் (திருக்கருவைத் தலபுராணம் - தீர்த்த விசேடச். 5) கழுகுமலை வள வாவி - கழுகுமலையில் உள்ள அகிலாண்டப் பொய்கை, "என் கொடிய சினத்தால் ஆங்கியற்றும் பனுவற் குலஏட் டினைக்கிழித்தோர் விடியற் பொழுதில் அகிலாண்டப் பொய்கைப் புனலில் விடுத்தகன்றேன் (குருபரதத்துவம் - முற்பிறப்பு உணர்த்திய. 30) மேய முத்தமிழ் - (நீரிலும் நெருப்பிலும்) போடப்பெற்ற பாடல்கள் அடங்கிய ஏட்டுச்சுவடி; தம்மால் இயற்றப்பெற்ற பாடல்களுள் ஆயிரக்கணக்கானவற்றைத் தாமே நீரிலும் நெருப்பிலும் இட்டு அழித்தார், அவ்வாறு அழிக்கப்பெற்ற இலக்கியங்களை முருகப்பெருமான் மீளத் தோற்றுவிக்க வேண்டுமென்று இவர் மிகப் பல இடங்களில் வேண்டுகிறார். மாதிரிக்கு ஒன்று; "வீரை ஆறு குளம்கிணறு அக்கினியூடு எனால் இடு செந்தமிழ் முற்றும் ஓர் வேளை ஈகுவன் என்றும் உரைத்செவ் வாயானே (பேரொலியலந்தாதி - 13-59) ஆறான பொறிகள் - ஆறெழுத்து மந்திரம்.

3. இலைபொதிந்துள நீறு-பன்னீர் இலையில் வைத்த திருநீறு, இது சருவப்பிரசாதம் எனப்படும்,

"வந்துநின்று நின்விருப்புயா தெனக்கேட்டான் அதைக்குறித்தென் மனம்நாடாமுன்
செந்துவர்வாய் சருவபிர சாதம்எனச் செப்பியதச் செயல்என் னேயோ?
இந்துறழ்வாள் அருளோ? அன் னவன் அசைவோ? அந்தவிதம் இன்னும் தேரேன்;
தந்துமறைந் தான்; அதுதான், பன்னீர்ப்பச் சிலையில்வைத்த, தவள நீறே"

(குருபரதத்துவம் - வராற்றுச் 36)

பவனியினன் - திருஉலாவை உடையவன்; நச்சு அரா-விடப்பாம்பு; உடு; விண்மீன், இங்கு கார்த்திகை மாதர்; ஈர் இரட்டிய வீடு - நான்கு வகையான முக்திநலைகள், அவை சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்பன; முகுள கஞ்ச பயோதரம் - தாமரை அரும்பைப் போன்ற நகில்கள்; பெண்கொடி - முருகம்மையார், ஓர் அம்மையார் இறைவனை நினைந்து எப்போதும் முருகா முருகா எனச்சொல்லிக் கொண்டிருந்தார், அவருடைய கணவனுக்கு அவ் வம்மையார்மேல் ஐயமும் சினமும் ஏற்பட்டன. ஒருநாள் முருகா என்ற உடனே அரிவாளால் அவ் வம்மையாரை வெட்ட, அவருடைய கை துண்டித்து விழுந்தது. அப்போதும் அந்த அம்மையார் வலிபொறுக்காமல் முருகா என்று கதறினார். கீழே விழுந்த கை உடனே வந்து பொருந்தி அந்த அம்மையாரின் பக்தித் திறத்தை உணர்த்தியது. இதனால் அவருடைய இயற்பெயர் மறைந்து முருகம்மை என்ற பெயரே நிலைத்துவிட்டது. "வணிகமின்கை அற்றிடக் கேள்வன் முனியும் அன்றதைக் கொடுத்தாள மயில் இவர்ந்து பொட்டெனப் போய சித்தன் (ஒலியலந்தா - 630), விரைந்து, திகழ்தர என்னும் இரண்டு எச்சங்களும் முற்குலாவி என முடிந்தன; கரமொடு - அத்துச்சாரியை கெட்டது; முற்குலாவி, அருளி என்பன உதவிய என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது; உதவிய தற்பரன் என்க; குணாலயமான - சிறந்த பண்புகளுக்கு இருப்பிடமாகிய ; இகபரம் - உம்மைத்தொகை ; எனையும் - எளியேனாகிய, இழிவுசிறப்பு; எதிரில் அமர்செய - எதிர்த்துப் போர்புரிய; அவசம்உற - தயங்குமாறு; கெலி - வெற்றி, முதனிலைத் தொழிற்பெயர், கெலியினன் - வெற்றியை உடையவன்; குரோத - சினமிக்க ; ஏனையர் - மற்றவர், வள்ளன்மையும் அருளும் நிறைந்தவர்கள்.

4. பொரு - போன்ற, உவம உருபு; குவடு - சிகரம்; இக்குவேள் - கரும்பு (வில்லை) உடைய மாரன்; மலர்துணர் - அலர்கின்ற பூக்கள், வினைத்தொகை ; குரங்குகள் மயல்கொண்டு, கலவியில் முழுகி, மதுவெறி பெருகி, ஏறி, கீறி, நல்சுளை தீது என வீசிடும் என்பது முடிபு; இது எடுத்துக்கொண்ட துறைக்கேற்ற இயற்கை வருணனை; திலநீர் - எள்ளும் தண்ணீருமாகிய தருப்பணம், தென்புலத்தாருக்குரிய கடமைகளைத் தவறாது செய்தால் மகப்பேறு வாய்க்கும்; நத்தி - விரும்பி; முனைகொள் - போர்க் களத்தில் எதிர்க்கின்ற ; இகலவர் - பகைவர்; படை கருதும் - போர்க்கருவி அல்லது நல்ல வீரர்கள் அமைய வேண்டும் என வேண்டுகின்ற ; முனிவர்கள் மூலதத்துவனே எனவும், கவிவாணர் தேசிகனே எனவும், ஏனையோர் வேலவனே எனவும் துதிக்கின்றனர் என நிரனிறையாகக் கொள்க ; நெல்வேலியின் தவம் ஆர் உடம்பினர் - நெல்லையில் பிறந்தோர்; இச்சை போல் உயர்ந்த, (அவர்கள்உள்ளுவது எல்லாம் உயர்வுடையன ஆதலின்) அவர்களுடைய எண்ணம் போல் உயர்ந்த, சினகரம் -

கோவில்; கனக - பொன்னால் ஆகிய ; ஈடு - பெருமை ; சீவ மகாநதி - எப்போழுதும் தண்ணீர் வற்றாத பெரிய ஆறு. இங்கே பொருநை ; முச்சுடர் - சூரியன், சந்திரன், நெருப்பு; சேண் வாழ்தலம் ஆகிய உருமலை, சேண்ஆரும் உயர்ந்த ; குரங்குகள் விசீடும் உருமலை, ஒலிமேல்எழும் உருமலை, ஈடுபெற்று வாழ்தலம் ஆகிய உருமலை, சேண் ஆரும் உருமலை எனத் தனித்தனி இயையும்; மாதராள் (திரு உருமாமலையைச் சேர்ந்த) தலைவி.

5. வாணி - கலைமகள்; வம்பு மகம் - சிவபிரானுக்குத் தீமைபுரியத் தாருகாவன முனிவர்கள் இயற்றிய அபிசார வேள்வி ; வனிதை - மோகினி, திருமாலின் அவதாரம்; ககன மகளினர் - தேவலோகப் பெண்கள்; அரசி - இந்திராணி, சசிதேவி; அவுணர் இருவர் - சுந்தர், உபசுந்தர் என்ற இரு அரக்கர் ; கோமளக் குயிலோ - மென்மைமிக்க குயிலைப் போன்ற திலோத்தமையோ ; ஒரு சமயத்தில் விந்தியமலைச்சாரலில் சுந்தர் உபசுந்தர் என்ற சகோதர் இருவரும் திலோத்தமையைக் கண்டு மயங்கி அவளை அடையப் போரிட்டு மடிந்தனர்; சினைமிகும் புயல் - சூலுண்ட மேகம்; மதன் குடை - மன்மதனுக்குக் குடையாவது முழுமதி, "தூய திங்கள் வெண்குடைக் கருப்புவில்லி" (நைடதம் - கைக்கிளை.19); இளம்பிறை - இளமையான பிறைமதி, "மாக்கடல் நடுவண் எண்நாட் பக்கத்துப் பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக் கதுப்பயல் விளங்கும் சிறுநுதல் (குறுந்தொகை 129); சிலை - வில், புருவங்கள்", உருவிலாளன் ஒருபெருங் கருப்புவில். இருகரும் புருவம் ஆக ஈக்க" (சிலம்பு 41-4-44,45) கணை - அம்பு, கண்கள் கணைக்கவின் அழித்த உண்கண் (சிந்தாமணி 610) ; காமரஞ்சித மான் - ஆசையைத் தூண்டுமளவு பேரழகுள்ளவளாகிய மான் போன்றவள்; கட்டுமாலை - வினைத்தொகை; பணி - அணிகலன்; இட்டகோலம் - புனைந்த அழகு; இசைந்த - பொருந்திய; கருதும் நினைவு - (தலைவி) எண்ணும் எண்ணம்; கருணை - (தலைவன் மாட்டுள்ள) அன்பு; நினைவொடு - கருத்தோடு; வெளியாகும்படி; எது என - என்ன என்று; (தலைவியின்) நினைவொடு கருணை அறியும்முன் அணுகல் பிழைஎனும் நினைவொடு அவள்மிசை காதல் உற்றது தோணிட காரணம்ஏது என நானாக உரிமைமொழி கூற என்பது முடிபு; கூற என்னும் எச்சம் ஒதுங்கினள் என்னும் முற்றைக் கொண்டு முடிந்தது; ஏகாரம் அசை.

6. களவு - தலைவியின் காதல்; அஞ்சினள்போல் ஒதுங்கினள் என்றதால் அவள் உண்மையாகப் பயப்படவில்லை என்பதும், காதல் வேட்கையும் வெளியாகிறது; நின்று, அடியே! இரங்கு ; இரங்கு - என் காமத்துன்பத்தை நீக்கக் கருணைசெய்; கச்சு - வார்; தரில் - தந்தால்; புரிந்து உனது அடிமை என்று உலகு ஓதவும்; களவை நீட்டிக்க மாட்டேன், விரைவில் திருமணம் புரிந்து கொள்வேன் என்பது குறிப்பு; மதன்புகழ் செப்பும் நூல்கள் என்றது அகப்பொருள் நூல்களை, விளக்கம் அறுவகை இலக்கணம் 280 ஆம் நூற்பா உரையில் காண்க; வனிதையருக்கு ஓவாத - பெண்களுக்குப் பொருத்தமற்ற ; முரண்டை - பிடிவாதத்தை ; திருகுமொழி - வஞ்சகம் நிறைந்த சொற்கள், உள்ளத்தே வேட்கை இருக்கவும் வெளியே கோபம் காட்டுவதால் வஞ்சனை என்றார்; பொரல் - போரிடுதல்; வாசகம் - வார்த்தை ; மறுக விடுவது - மனக்கலக்கமடையச் செய்வது; தலைவி அங்கிருந்து போய்விட முயலாததாலும் தலைவனோடு எதிர்மொழி கூறிப் பேசியதாலும் அவளும் தலைவன்மாட்டு வேட்கை

உடையவளே என்பது தெளிவாகிறது; அடியே இரங்குமுதல் தருமம் அலஅடி என்பதுவரை தலைவன் கூற்று.

7. விளங்கிழையார் - ஒளி வீசுகின்ற அணிகலன்களை அணிந்தவர், இங்கே தோழியர்; இதன்றி - இதுவும் அல்லாமல்; அழுமவரில் - அழுபவர்களைப் போல, இல் உவம உருபு; உண்மையான அழுகை அன்று என்பது குறிப்பு; வனமதனில் - காட்டில்; சிரலமும் - தலையும், அம்சாரியை ; வளைந்திடுமாறு - சூழ ; தனி வருவது உன் தவம் ஆகும் எனத் தன் தனிமையையும் சுட்டிக் காட்டுகிறாள்; மகிழ்ந்து - தலைவி, நான் தனியே இருப்பது உன் தவம் என்ற உடனே அவளுடைய விருப்பம் தெரிந்துவிடுவதால் ஏற்பட்ட உவகை ; பதறுவர் என - திடுக்கிட்டவரைப் போல ; நெறிவு செய்து - முறித்து; அகமதனில் -உள்ளத்தில்; எனா - என்று, செய்யா வாய்பாட்டு எச்சம் நடமாடும் என்னும் எச்சத்தைக் கொண்டு முடிந்தது; வித்தையினால் மருளாது; விழிகுவிதல் முதலியன காமங்கொண்ட பெண்களின் மெய்ப்பாடுகள்; கவுளை நெரித்து - கன்னத்தை நிமிண்டி; அவளொடு அணைமிசைமேலிட - தலைவியோடு படுக்கையின்கண் அடைய ; சமராடுநர் - போரிடுபவர்; மேல்நாளின் - முற்காலத்து.

8. யான் உவந்து இதழ் பருகல் கண்டு, அவள் மாறி உண்டு, உடனே உரந்தனில்; உரம் - மார்பு; கலை - ஆடை; இது ததி - இதுவே சரியான தருணம்; முடுகுவள் விரைவு படுத்துவள்; மனோரதம் - விருப்பம்; படர்சுணங்கு - பரவிய தேமல், வினைத்தொகை; கோடு எனும்படி நீடிடும் - மலைச்சிகரம் போல் உயர்ந்திடும்; நகம் பதிவாதல் கண்டு ஒரு; தாடனம் - கைகளைக் குவித்துக் கொண்டு உச்சி முதலிய உறுப்புகளில் அடித்தல், இது கலவியின் புறத்தொழில்களுள் ஒன்று; மாரன் இருந்த மணிதிகழ் படிவு - மன்மதனின் இருக்கையாகியதும் மணியைப் போன்றதுமாகிய உறுப்பு,இது நிதம்பம்; கரிகரம் - கலவி விளையாடல்களுள் ஒன்று, விரிவைக் கொக்கோகம் ஆறாம் அத்தியாயத்திற் காண்க ; முகரதம் - இதுவும் ஒரு விளையாட்டு; முனிவரர் பனுவல்நடு - நந்தி, வாத்ஸ்யாயனர், கொக்கோகர் ஆகிய தவசிகளால் கூறப்பெற்ற காம சாத்திரங்களில்; விதிபோல் முடித்து உடலோடு உயிராம் என; விகசிதம் பெறவே - மலர; இதுவே கதி ஆம் - இந்த அநுபவமே மோட்சம் ஆகும்; அறிவார் எவர் - வேறு இருப்பதை உணர்ந்து கூறியவர்கள் யார்? யாருமில்லை என்றபடி. வீறு ஆரும் - பெருமிதமிக்க; வெறாதது - சலிப்பு ஏற்படுத்தாதது.

# 24. திருவரங்கப்பெருமாள் வண்ணம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்ற இந்த வண்ணம் திருவரங்கத் திருவாயிரத்தின் ஒரு பிரபந்தம் ஆகும். சித்தார்த்தி வருடம் (1919) திருவரங்கத் திருவாயிரம் பதிப்பிக்கப் பெற்றது. 1980 ஆம் ஆண்டின் வண்ணமஞ்சரியிலும் தொகுக்கப் பெற்றுள்ளது (ப59). இந்த இரண்டு பதிப்பிலும் இவ் வண்ணத்திற்குரிய துறை கலவி மகிழ்தல் என்றே உள்ளது. அந்த இரண்டும் உரையிடப்படாததாலும் ஆய்வுப் பதிப்பில்லாததாலும் நுட்பமாகக் கவனிக்கப்படாமல் பெரும்பான்மை நோக்கித் துறை கொடுக்கப்பட்டு விட்டது. ஏழாம் கலையில் தோள் என்று அவிர் தோழ! தெரி எனப் பாங்கனிடம் கூறுவதையும், பொருளமைதியையும் நோக்க இதற்குரிய துறை கழற்றெதிர்மறை என்பது புலப்படும்.

இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு அடுத்த நாள் தலைவன் தானே சென்று தலைவியைச் சந்திப்பான். அகத்திணையில் இது இடந்தலைப்பாடு எனப் பெயர் பெறும். அதற்குப் பிறகு தலைவன் தன் உயிர் நண்பனிடம் செய்தியைத் தெரிவித்து அவன்வழித் தலைவியோடு தொடர்பு கொள்வான். இது பாங்கற்கூட்டம் எனப்படும். இதனுள் பாங்கன் வினாவத் தலைவன் தன் காதலைக் கூறிய உடனே பாங்கன், அறிவிற்சிறந்த நீ இவ்வாறு ஒரு பெண்ணின் காதலில் சிக்கலாமா என இடித்துரைப்பான். தலைவன் அதற்குப் பதில் கூறுதலே கழற்றெதிர்மறை; யாகும்; சங்க இலக்கியத்தில்,

"கவவுக் கடுங்குரையள்; காமர் வனப்பினள்;
குவவுமென் முலையள்; கொடிக்கூந் தலளே ;
யாங்குமறந் தமைகோ யானே? ஞாங்கர்க்
கடுங்கரை நல்ஆன் நடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பின் அன்ன
சாஅய் நோக்கினள் மாஅ யோளே" ( குறுந்தொகை 132)

என இருந்த இத்துறை கோவை நூல்களில்

"மண்கொண்டு வாழ வலித்துவந் தார்தம் மதன் அழித்து
புண்கொண்ட நீர்மூழ்கப் பூலந்தை வென்றான் புகார் அனைய
பண் கொண்ட சொல் அம் மடந்தை முகத்தபைம் பூங்குவளைக்
கண்கண்ட பின்னை உரையீர் உரைத்த இக் கட்டுரையே."

(பாண்டிக் கோவை. 34)

எனவந்து, வண்ணத்தில் ஏறக்குறைய கலவிமகிழ்தலே ஆகிவிட்டது.

இந்த வண்ணம் மிகச் சிறந்த ஒன்று. ஆண்கலையில் பாட்டுடைத் தலைவராகிய திருமாலின் பெருமையும் திருவரங்கத்தின் சிறப்பும் இலக்கிய நயம் பொதுளக் கூறப்படுகிறது.

பெண்கலையில் கிளவித்தலைவன் பாங்கனை, தோள் என்று அவர் தோழ என விளித்துத் தான் கூறுவதைத் தேர் என்கிறான் (கலை 7) ஆனால் தலைவன் பாங்கனிடம் காட்சி தலைவன்

வேண்டல், புணர்தல் ஆகிய துறைப்பொருள்களை விரித்துக் கூறித் தவசிகளும் காதல் வயப்படுவது இயற்கையே என முடிக்கிறான். துறை அமைதிக்குச் சற்றுக் குறை வருவதாக இருப்பினும் திருவாய்மொழியை உணர்ந்தவர் காமத்தை வெல்வர் எனக் கூறுமுகத்தான் அம்மறையின் பெருமையைச் சிறப்பிக்கிறான்.

இவ் வண்ணத்தில் தலைவி பற்றிய செய்திகள் நிறைய இருப்பதைக் கொண்டு அவளை நவோடா நாயகி என்று கூறலாம்(காண்க 16 ஆம் வண்ணத்தின் அறிமுகம்).

# 24. திருவரங்கப் பெருமாள் வண்ணம்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

## கழற்றெதிர் மறை

தனன தத்தன தனன தத்தனனா தனத்தன
தனன தத்தன தனன தத்தனனா தனத்தன
தந்தனாதன தத்த தனதன
தந்தனாதன் தத்த தனதன
தந்தனாதன தத்த தனதன
தந்தனாதன தத்த தனதன
தனன தந்தன தனன தந்தன
தனன தந்தன தனன தந்தன
தனன தந்தன தனன தந்தன தானந்தனதான
(தொ) தனதான தாத்ததன தய்யனா

அருள்வ ளக்கடல் அனைய கட்பெருமாள்; கரத்தில் ஓர்
பெரிய சக்கரம் வளைபி டித்தபிரான்; நினைப்பவர்
அந்தணாளரின் மிக்கர் எனினும்இ -
றந்துபோனபி ணத்தின் நிணம்நுகர் -
கின்றபான்மைகொள் புத்தர் எனினும்வி -
ழைந்தபேறுகொ டுக்கும் முரகரி;
அகிலம் உண்டுமிழ் தரும்மு குந்தன்; எண் -
ணரும்வி ரிஞ்சரை உதவும் உந்தியன்;
அகள மும்பல சகள மும்தன தாநின்றகுணாளன்;
விழிமி கப்பெறு மகப திக்கிகலே எனத்தகு
தகுவ ரைக்கிளை யொடுகெ டுத்திடும்மால்; சகத்திர
விஞ்சைமா தவருக்கும் அமுதிட
என்றுநாடிவ னத்தில் மறுகிய
ஐந்துபேரும்ஓர் பத்தி னியும்மகிழ்
வொன்றுமாறொரு வித்தை புரிபவன்;
விரகம் விஞ்சிய பொதுவ மங்கையர்
கலைக வர்ந்தலர் சொரிகு ருந்தையின்
மிசைஇ வர்ந்துகொள் கரியகொண்டல்; பல் வேதம்புகழ்மீளி,
அதிந யத்தமிழ் கொடுது திக்கடுவான் உரைப்பாடி
உடன்ந டப்பது சொலில்உ வப்புறுவான்; அருச்சுனன்
அஞ்சினான்நிகர் சிற்சில் மொழிசொலும்

அங்குதேவர்மு தற்சொல் அனைவரும்
நங்குபேசிந கைத்தும் உமியும்முன்
முந்துஞானவி ளக்கம் அருள்பவன்;
அசலம்ஒன் றொரு குடைஎ னும்படி
கையினி டங்கொடு பசுஇ னம்களி
அடைய அன்றுசெய் நெடியவன்; துள வாரங்கமழ்மார்பன்
அடியார்கள் கேட்டபடி செய்குவோன்; (1)

அணில்அ ளித்தொரு பதிகம் முற்புனைமா சரித்திர
நினைவு கெட்டுளம் மறுகெ னைத்தொடர்வோன்; மலர்க்கணை
ஐந்தினோடுக ருப்பு வரிசிலை
கொண்டமாரன்உ தித்த வயிறுறு
செம்பொன்மேனியொ ருத்தி மருவிய
நெஞ்சில்சுடில்இ ரத்தி னமும்அணி
அதுல சுந்தரன்; விபுதர் வந்தினி -
தடிப ணிந்தெழு மகிமை துன்றினர்;
அசுரர் என்பவர் பலரும் அஞ்சுற ஆடுஞ்சமராளி
விதர ணக்குண புனித ருக்கெளியான்; இரக்கம்இல்
கயவ ருக்கெமன் அனைய ரைப்பிரியான்; அழற்புரை
வெங்கண்வானரர் சுற்ற உததிக -
டந்துபோய்ஒரு பத்து முடிபுனை;
துங்கராவண னைப்பல் கிளையொடு
கொன்றுமேன்மைப டைத்த ரகுபதி;
அமல மங்கள கவுரி பங்குறை
சிவன்வி ரும்பிய படிசெய் கின்றவன்;
விதிம கம்தனில் வருபெ ருஞ்சினை மேகம்பொருமாயன்;
அதிர தத்திரள் அறமு றுக்குனரே தொழத்தகு
கழல்ப டச்சிலை மகள்உ ருப்பெறுசீர் உரைப்பவர்
அங்கண்நேர்ஒரு பட்சி முதுகினும்
வந்துபோகும்ம கிழ்ச்சி உடையவன்;
அம்புராசிவ றப்ப மலிகணை
சிந்துசாபம்வ ளைத்த புயபலன்;
அதிர்பெ ருந்தொனி யொடுந யம்பெறு
தமிழ்மொ ழிந்திடு பதின்மர் தங்குரு;
அபலை என்றும்ஓர் உருகொண்டவன்; ஆலின்தழைவாசன்;
அழியாத கீர்த்திபல மல்குகோ; (2)

தெருள்உ டைத்தவர் துதிமி கப்புனைவோன்; அடிக்கடி
கபட வித்தைகள் உலகு யப்புரிவோன்; மலர்த்திரள்
சிந்துதாருவி னைப்பொன் நகரினர்
கண்டு நாணநி லத்தில் நடுபவன்;
வஞ்சமாமன்வி டுத்த சகடம்மு -
றிந்துவீழஉ தைத்த கழல்பெறு
சிறுவன்; அஞ்சனை மகன்அ றிந்துசொல்
ஒருபெ ரும்பெயர் உடைய வன்; சில
சிகித ருங்கவின் இறகணிந்தவிர் சீர்தங்கும் ஓயாரன்;
மரக தக்னிரி அனைய பொற்புடையான்; மிகத்தினம்
வழிப டத்தகும் அடியர் பிற்றிரிவோன்; மறைப்பொருள்
வம்பெனாஒரு வித்த னதுபெயர்
எங்கும்ஆரும்உ ரைப்ப அரசுசெய்
துண்டரீகன்இ ரத்த முடன்உயிர்
உண்டுலாவிஉ வக்கும் நரகரி;
மலைகொ டன்றொரு கடல்க டைந்தவன்;
மறுவில் அங்கதன் மகிழ்பெ ருந்தகை ;
மதிகொளுந்திரு மதிகொளுங்கன வான்; ஐம்படையாளி;
திரிகி டத்திமி எனஓர் கட்செவிமேல் நடிப்பவன்;
முதலை யைக்களி றுயவ தைத்தருள்வோன்; இனிப்புறு
செஞ்சொல்வாணன்ஒ ருத்தன் உயிரொடு -
டம்பும்வாய்கொடு முத்தி அருள்அரி;
பந்தபாசம்ஒ ழித்த முனிவரர்
தங்கள்மா தவ சிற்கொர் கடிமதில்;
செவிலி யென்றுவல் விடமு றுந்தனம்
உதவ வந்தஓர் அலகை கொன்றமை
தினம்வி ளம்புநர் மனதிடம்குடி சேர்எண்குணவாரி;
செடிநாறு மேற்பொதுவர் வெளவுதாய்; (3)

செழிபொ ழிற்றலை முகில்வ ரக்களியால் வனப்புயர்
கலபம் முற்றிய மயில்ந டித்திடுமே ; அளித்திரள்
தெந்தனாஎன மிக்க இசைபயி -
லும்; பல்வானரம் முட்க னிகளைவ -
கிர்ந்துசேயநி றத்த சுளைகள்எ -
றிந்தும்ஊடிம ணக்கும்; முனிவரர்
சிறிதும் அங்கசை வறவ ரைந்துள

பொறிகள் என்றறு தினமி ருந்துஉயர்
செபத வம்புரி குவர்; நெ ருங்கிய சேண்விஞ்சையர் சூழ்வர்;

மறைமு ழக்கிடை யறமி கப்பெறுமே; உயிர்க்கொலை
தவிர்ம கத்தழ லினர்கள் பற்பலரே ; மறுக்கரும்
வஞ்சலோபர்த மக்கொர் எமன்நிகர்
துங்கவீரரும், மற்றை யவர்களும்
நெஞ்சில்நாடிய இச்சை முடிவுற
என்றுவேணத வத்தில் முடுகுவர்;
வயலி னும்,பல தெருவி னும்குளிர்
மனையின் முன்றில்க ளினும்மி குஞ்சினை
வளையி ரைந்துவெண் மணிஉ மிழ்ந்திடும்; மாதம்தொறும் ஈடில்
சிலவி தப்படு விழவு தித்திடுமே ; அரக்கர்கள்
அனைய வர்க்கெம புரம திற்கொடிதே எனப்பலர்
சிந்துபாடுவர்; பற்பல் அடியவர்
அந்தநாள்குரு கைப்பு ளியில்நுழை
யும்த போநிதி செப்பு தமிழ்மறை
தந்தஞானஅ ளக்கர் முழுகுவர்;
செழியன் முன்பொரு கிழிஅ றும்படி
கவிப கர்ந்தவர் அனையர் தம்கழல்
சிரம்அ ணிந்தவர் உணரும் வண்பெறு சீரங்கம தான
திருநாடு போற்குலவு தையலாள்

மருள்உ றப்பல ரையும்ம யக்கிடும்வேல் விழித்துணை -
யுடைய சித்திரம் அனைய பொற்கொடியாள்; முழுச்சினை
மஞ்சுபோலும்நி றத்த குழலினள்;
வென்றி வாளினை ஒத்த நுதலினள்;
கண்டுபோலும்இ னித்த மொழியினள்;
கும்பமேநிகர் குத்து முலையினள்;
வகுள மென்தொடை அணித ரும்புய -
மிசைக ரும்பொடு மலர்நெ டுங்கணை
மருவும் அங்கச னதுபெ ரும்படை வாய்முந்தும்விசேடி ;
இருள்எ னப்பகர் கரிவெ ருக்கொளவே வெளுத்தபல்
நிரைவ னப்பவிர் நகைந கைத்திடுவாள்; அலைக்கட -
லின்க ணேவரு பற்பல் மகளிரும்,
இந்தி ராணியும், வித்தை முழுதுணர்
துங்கவாணியும், வெற்பில் அறலில்ம -

கிழ்ந்துவாழ்பல பொற்பு மகளிரும்
இணைத விர்ந்தவிர் தருபெ ருந்தகை -
யுடையள்; இங்கித மயில்ள னும்படி
இதந டம்பயில் குமரி; மின்கொடி யேஎன்றிடுதேகி;
மலர்ப றித்தொரு வனம்அ திற்றனியே நிலைத்தனள்;
இதுத வப்பயன் எனநி னைத்தருகே அடுத்தனன்;
மந்தமாருத வெற்றி இரதம்இ-
வர்ந்தமாரன்எ திர்த்து மலர்கணை
சிந்தி னான்;அவ சத்தின் முழுகிநி
மிர்ந்து மோகம்ம ணக்கும் நயமொழி
வகைப கர்ந்தனன்; அவள்அ றிந்துமெல் -
லெனந டந்தனள்; ஓடுதொ டர்ந்தனன்;
வதனம் என்றதில் வெயர்வ ரும்பியும் மால்கொண்டிலள்போல
மடிவாளின் வார்த்தைசில சொல்லினாள்; 5

மனம யக்கள வறமி குத்தலினால் அடிக்கடி
இனிதி ரப்பதொர் துணிவு பெற்றனனே ; என் இச்சையில்
வம்பியாம்அவள் இச்சை சதபது
பங்குமேலிடல் உற்றும், அதை அவள்
சிந்தையூடும றைத்து நயம்அறு
வெஞ்சொல் ஓதிவெ றுப்பில் முடுகினள்;
வனச புங்கவ னதுக ரங்கள்எம்
இருவர் தொந்தமும் வரைதல் கொண்டற
மறுகி நொந்தடி தொழுதல் இன்றிஅ வாறங் கயர்போதுள்
இசையும் அப்பெரு மயலி னைக்கனைபோல் எழிற்பெறு
கடைவி ழித்துணை சிறிது ணர்த்திடலால், உவப்புடன்
"இன்றுன் ஆசைஇ டத்தில் முழுகிய
என்றன் ஆருயிர் தப்பி உயஅருள்
வம்பில் ஆண்வதை சுற்றி நரகில்அ -
ழுந்திடேல் என நட்பொ டணுகினன் ;
இதயம் என்றதில் அவளை மிஞ்சிய
கனிவு வந்தொரு நகைது லங்கலும்
"இடர்தொ லைந்தது; சுகமு றுந்ததி யே!; என்றுறவாடி
மதன னுக்கணி முடிஎ னத்தகுபூண் முலைத்துணை
தொடநி னைத்தும்ஓர் சிறிதுள் அச்சுறுவேன், முருக்கிதழ்
வஞ்சியாமல்அ ளித்தி டெனவும்வி -

ளம்பினேன்; அவள் சற்றுள் இசைவுடன்
ஓஞ்சினாள்; சக சத்தில் வரும்அள -
வும்பொறாதவர் அற்பர் எனும்விதி
மதன தந்திரம் அதனில் நந்தியும்
அனைய ரும்பகர் வகைதெ ரிந்தஎன் -
வயின்உ றுந்துயர் இவள வென்றறி வார்இங்கிலரே!என்
வழிபாடு நோக்கிமி வெஃகினாள் 6

சுருள்ம லர்க்குழல் சரிவு றக்கையினால் அணைத்திதழ்
பருகி முத்தினன்; அவளும் அப்படியே நடத்தினள்;
சொந்தமாமிம கட்கும் அவளவு
தொந்தமானந டக்கை வரல்அரி -
தந்துமாதுசெய் திட்ட கலவியின்
விந்தையாவும்உ ரைப்ப தரிது;ப -
சுபதி முன்பொரு முனிம கன்சொல
வழுவை என்றுள வதனன் அங்கவிர்
சுவன மந்தர மிசைவ ரைந்தது தோதென்றிடலாகும்;
விரகம் இப்படி ஒருவ ருக்குறுமோ? முலைத்துணை
எனஉ ரைத்திடு மதக ளிற்றமரால் இளைத்தனன்;
வெங்கண் வாள்அர வொத்த கடிதடம்
ஒன்றின் ஆவல்க ளுக்கும் இசைவொடு
கொஞ்சி னாள்; எனை ஒத்த செயல்அவ-
ளுஞ்செய் தாள்;அவள் ஒக்கும் வனிதையர்
விபுதர் தம்திரு நகரி னும்பெறல்
அரித ணைந்தஎன் உளம்அ றிந்தது;
வெளிறும் நெஞ்சுடை யவரிடம்சொலில் வீண்என்று இகழ்வார்கள்
சுபக ரத்தன கரணம் எத்தனையோ? அவற்றினை
முழுது ரைப்பது முறைஎ னத்தகுமோ? மணத்துயர்
தொங்கல் சூடுவள்; வெற்றி லையைநனி
மென்று வாயினி டத்தில் உதவுவள்
கொஞ்ச மேனும்உள் வெட்கம் இலள்;அதை
எங்கு போகவி டுத்து மருவினள்?
சுரத இங்கிதம் முழுத றிந்தவள்;
அவளு டன்புணர் விதிபெ றும்தலை
சுகிர்தம் ஒன்றிய திதுநி சம்;தெரி, தோள்என் றவிர்தோழ ;
துடியானராத்திரிய தல்லவோ? 7

துடைக ளைக்கொடு மிகநெ ருக்கிடுவாள்; அடிக்கடி
இனிய புட்குரல் இசைஎ ழுப்பிடுவாள்; விழித்துணை
துஞ்சல் போலநெ ருக்கம் உறவும்ம
யங்கு வாள்;தெளி வுற்றுன் வலிஅள-
வுஞ்செய்; சோர்வுறல்; கெட்டி எனவும்வி
ளம்பு வாள்;உப ரிச்சு ரதவகை
தொடர்வள்; சந்தன களப குங்கும
முலைம தம்பெரி திறுகும் வன்பிடி
சுகம்;இ ளம்பிடி தவிர்ந்தி; எசுறணி துரசும்புறம்ஆக
வெகுவி தப்படு தொழில்ந டத்திடவே முறைப்படி
இருவ ருக்கும்ஓர் கணந டுக்கமதோ டுதித்திடு
விந்து நாதஒ ழுக்கம் எழுகட -
லும்ச மானமஎ னப்பெ ருகியது;
பஞ்ச பாணம்எ டுத்த மதனன்உள்
ஒஞ்சி யேமுழு குற்று வெருவினன்;
விநய மங்கள புனித ரஞ்சித
வனிதை யுந்தளர் வெனில்அ டைந்தனள்;
விடியல் என்றிட மிகமு ழங்கின வீரம்பொலிகோழி;
சுரக ணத்தினர் மிகும்வி யப்புடனே துதித்தனர்;
எவர்இ தற்குரு கிடும்ம யக்கம்இலார்? நிலத்தினர்
துன்ப வாரிதி வற்ற வயமலி
வொன்று காரித வத்தின் மகவென
வந்து நீடுபு ளிக்குள் நுழைதரு
செஞ்சொல் மாறன்வ குத்த தமிழ்மறை
சொலும் அரும்பொருள் உணர்பெ ருந்தகை -
யினர்கள் அன்றிய தவரும் மிஞ்சிய
சுகிர்தம் என்பதி தலதெ தென்றதி சோரம்புரிவார்கள்;
சுகம்ஈது கூட்டுவது தெய்வமே 8

## தொங்கற்றாழிசை

அடியார்கள் கேட்டபடி செய்குவோன்;
அழியாத கீர்த்திபல மல்குகோ;
செடிநாறும் மேற்பொதுவர் வெளவுதாய்
திருநாடு போற்குலவு தையலாள்
மடிவாளில் வார்த்தைசில சொல்லினாள்;
வழிபாடு நோக்கிமிக வெஃகினாள்;
துடியான ராத்திரிஅ தல்லவோ?
சுகம்ஈது கூட்டுவது தெய்வமே.

# 24. திருவரங்கப் பெருமாள் வண்ணம்

## குறிப்புரை

1. கட்பெருமாள் - கண்களை உடைய திருமால்; வளை - சங்கு; நிணம் - தசை ; முரகரி - நரகாசுரனின் தமையன் ஆகிய முரன் எனும் அசுரனைக் கொன்றவர். கண்ணன்; எண்; அரும்ப-பல; விரிஞ்சரை - பிரம தேவர்களை, ஒவ்வொரு கற்பத்திற்கும் ஒவ்வொரு பிரமன் ஆதலின் கற்ப பேதத்தால் விதிகள் பலர்; உந்தி - கொப்பூழ்; அகளம் - அருவநிலை; சகளம்-உருவநிலை; குணாளன் - நற்பண்புகளை உடையவன், சகத்திர - ஆயிர, பல ; மாதவர் - துருவாசமுனிவரும் அவருடன் வந்தோரும்; ஐந்து பேர் - பாண்டவர், தொகைக்குறிப்புப் பெயர்; பத்தினி - ஐந்து பேருக்குமுரிய ஒரே மனைவியாக இருந்தபோதிலும் ஒப்பற்ற கற்புடையாள் என இரட்டுற மொழிதலாகக் கொள்க ; மகிழ்வு ஒன்றுமாறு - களிப்புறும்படி; வனவாசத்தில் இருந்த பாண்டவரிடம் துரியோதனன் ஏவலால் துர்வாசர் ஒரு நாள் பல முனிவர்களுடன் பிற்பகலில் சென்று உணவு வேண்டினார். பாண்டவரிடமிருந்த அட்சய பாத்திரம் பயன்படாதநிலையில் கண்ணன் ஒரு பருக்கையை உண்டு முனிவர்கள் அனைவரின் பசியையும் ஆற்றினார்; விரகம் விஞ்சிய - உற்சாகம் மிக்க, "வனஞ்சென்று விரகில் புக்கான்" (மேருமந்தர புராணம் 324) பொதுவ மங்கையர் - ஆயர் மகளிர்; கலை - ஆடை : குருந்தை - குருந்த மரம்; கரிய கொண்டல் - கருத்த மேகம் போன்றவர். அடையடுத்த உவமஆகுபெயர்; மீளி - பெருமை உடையவன்; துதித்திடுவான் - திருமழிசையாழ்வார்; கணிகண்ணன்பொருட்டு ஆழ்வார் காஞ்சியை விட்டுப் போனபோது பெருமாள் நீங்கியும். அவர் திரும்பும்போது மீண்டும் வந்த வரலாறு குறிக்கப்படுகிறது; அங்கு - குரு;சசேத்திரப் போர்க்களத்தே ; நங்கு பேசி - ஏளனம் செய்தும், எண்ணும்மை தொக்கது; முந்து ஞான விளக்கம் - ஸ்ரீமத் பகவத்கீதை; அசலம் - கோவர்த்தனம் என்னும் மலை; அன்று - தனக்குரிய வழிபாடு நின்றுவிட்டதால் சினங்கொண்ட இந்திரன் பெருமழை பெய்யச் செய்தபோது.

"இந்திர னுக்கென் றாயர்கள் எடுத்த எழில்விழ வில்பழ நடைசெய்
மந்திரவிதியில் பூசனைபெறாது மழைபொழிந் திடத்தளர்ந் தாயர்
எந்தமோடு இனஆ நிரைதள ராமல் எம்பெரு மான்அருள் என்ன
அந்தமில் வரையால் மழைதடுத் தானை" (பெரிய திருமொழி 2-3-4)

துளவு ஆரம் - திருத்துழாய் மாலை ; அடியார்கள் கேட்டபடி செய்குவோன் -

"தமர்உகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமர்உகந்த தெப்பேர்மற் றப்பேர் - தமர் உகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ணம் ஆழியான் ஆம்" (முதல் திருவந்தாதி 44)

2. அளித்து - காப்பாற்றி; இவ் வரலாறு : பாண்டிச்சேரி யருகில் உள்ளது வளவனூர்க் குமாரபுரி என்னும் ஊர். அங்கு சண்முக சுவாமிகள் அமைத்த திருமடத்தில் ஒரு திருக்குடமுழுக்கு நடைபெற்றது. வண்ணச்சரபம் சுவாமிகளும் பங்கேற்றிருந்தார்.

மண்டலாபிடேகம் முடிந்தபிறகு விழாப்பந்தல்கள் பிரிக்கப்பெற்றன. அதில் அணில்கள் கூடி கட்டி இரு குஞ்சுகளைவைத்திருந்தன. தாய் அணில் காணப்படவில்லை. பணியாளர் கூட்டுடன் அக் குஞ்சுகளை எடுத்துக் கீழே வைத்துவிட்டுத் தம் பணியில் ஈடுப்பட்டனர். அவ்விடத்தில் இவரோடு அந்த மடத்தின் தலைவர் சண்முக சுவாமிகளும் சோழவந்தான் கந்தசாமி சுவாமிகளும் இருந்தனர். மிகச் சிறு குஞ்சுகளை எப்படிக் காப்பாற்றுவது என விளங்கவில்லை. சுற்றிலும் நிறையக் காகங்கள் சுற்றிக் கொண்டிருந்தன, வண்ணச்சரபம் சுவாமிகள் அக் குஞ்சுகளின்மேல் கொஞ்சம் திருநீற்றை இட்டுத் திருமாலைத் தியானித்து, இந் நீற்றால் சிலர் வீடுபேறடைந்து உண்மையானால் தம் தாய் அணில்பால் இவை சேரட்டும்; அவ்வாறு நிகழ்ந்தால் நான் ஒரு பதிகம் பாடுவேன் என வேண்டிக் கொண்டார், உடனே காக்கைக் கூட்டம்

விலக. தாய் அணில்வந்து குஞ்சுகளைப் பத்திரமாக எடுத்தேகியது. இருவரும் திருமாலுக்கு ஒரு பதிகம் பாடினார். அது அணில்காத்த பதிகம் என வழங்குகிறது. இந் நிகழ்ச்சி இவர்தம் சுயசரிதையாகிய குருபரதத்துவத்துள் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

"மண்டல பூசை யான பின்னர்அவ் வகைகா முன் செய்
ஒண்டகைக் காவ ணத்தை உலைத்தனர்; முகட்டி ரண்டு
குண்டலம் போல் வளைந்து குலவணிற் குஞ்சும் கூண்டும்
கண்டனர் எடுத்து வந்தெம் கண்ணெதிர் வைத்திட் டாரே
காண்டலும் சண்மு கப்பேர்க் கருணையங் கடலும் யானும்
ஆண்டகைக் கந்தசாமி அடிகளும் சிலரும் நொந்தேம்;
கூண்டயக் குறடு நேர்வாய்க் காக்கைகள் கூச்ச லிட்ட ;
வேண்டணில் இரண்டும் எங்கோ மேவின வரக்கண் டில்லேம்
வாலிய துணியிற் சின்ன வத்தியொன் றமைத்திட டானின்
பாலிடை நனைத்து வாயில் ஊட்டினம் பருக வில்லை ;
வெண்பொடி எடுத்திந் நீற்றால் வீடுபெற் றவர்உண் டென்னில்
நண்பொடு வளர்க்கும் தாய்பால் இன்னவை நணுக என்றிட்
எண்பொறி முகிலை நாடி இப்புரம் பிசைத்தியாயின்
டெண்பொலி பதிகம் ஒன்று பாடுவேன் என்னச் சொன்னேன்
அக்கணம் காக்கைக் கூட்டம் அகன்றன ; அணில்வந் தன்பால்
தக்க சொல் மாலை மாயற் கணிந்தனன்; அவை தம் தாயோ
மக்களை எடுத்துப் போய்ஓர் வயினமைத் திட்ட தன்றோ
டொக்கஆம் அளவும் பார்த்தோம்; அப்புறம் உணர்ந்தி லேமால்"

(குருபரதத்துவம் - குமாரபுரிச், 42-46)

நினைவு கெட (திருமால் எப்படியும் காப்பாற்றுவார் என்னும்) உறுதி தளர்ந்து ; மறுகு - கலங்கும்; வரி சிலை - கட்டப்பெற்ற வில். வினைத்தொகை ; செம்பொன் மேனி ஒருத்தி - தங்கநிறம் கொண்டவளும் ஒப்பற்றவளுமாகிய திருமகள்; நெஞ்சில் - மார்பில்; இரத்தினம் -

கௌஸ்துப அணி; அதுல - இணையற்ற ; விபுதர் - தேவர்; இனிது அடி பணிந்து எழு; சமராடும் ஆளி என மாறுக, ஆளி - சிங்கம்; விதரணக்குணம் - ஈகைப்பண்பு; உததி - கடல்; துங்க - வெற்றியை உடைய; அமல மங்கள கவுரி - மலங்கள் இல்லாதவளும், நன்மைகளின் நிறைவை உடையவளுமாகிய உமை ; திருமால், " வாச வார்குழலாள் மலைமங்கைதன் பங்கனைப் பங்கில்வவைத்து உகந்தான்'' (பெரிய திருமொழி 7-10-3) ஆதலின் சிவன் விரும்பியபடி செய்கின்றவன் என்றார்; விதி-பிரமன்; மகம் -வேள்வி; பிரமன் காஞ்சியில் ஒரு வேள்வி செய்ய முனைந்தார், ஊடலால் கலைமகள் அதைத் தடுக்க வந்தாள், பிரமன் திருமாலை வேண்டிச் சரசுவதியைத் தடுப்பித்து வேள்வியை முடித்தார்; யாகத்தில் வரதராஜப்பெருமாள் காட்சி வழங்கினார், இதன் விரிவைக் காஞ்சிப்புராணம் முதல் காண்டத்தில் காண்க. "இருங்கமலத் தவிசுறைவோன் முந்திமகம் புரிவதனை முனிந்து கலைமான் நதியாய் அளக்கர்எனப் பெருநிசியில் அணைவதனைக் கண்ணுறும்மால் விளக்கொளியாய் எழுந்ததனை விலக்குவதற்கு இடையூற்றின் துளக்கம்அற'' என்று கம்பர்புராணம் என்னும் பழைய காஞ்சிப்புராணம் கூறும் (சிவாலயச். 177,178); முறுக்குனர் - சினப்பவர்; கழற்படச் சிலை மகள் உருப்பெறுசீர் - அகலிகை வரலாறு ; ஒரு பட்சி - ஒப்பற்ற பறவையாகிய கருடன், அம்புராசி - கடல்; சாபம் - வில்; வளைத்தது இராமாவதாரத்தில் அணைகட்ட வழிவேண்டியபோது; பதின்மர் - பத்து ஆழ்வார்கள்; அபலை - பெண், மோகினியை நினைந்தது; தழை - இலை.

3. தெருள் - ஞானம்; தாரு - மரம், இங்கு பாரிஜாதம்; நிலத்தில் நட்டது சத்தியபாமைக்காக, விரிவு பாகவதத்தில் காண்க ; மாமன் - கம்சன்; சகடம் - சகடாசுரன்; அஞ்சனை மகன் - ஆஞ்சநேயர்; அறிந்துசொல் ஒரு பெரும்பெயர் - அநுபூதியால் உணர்ந்து, எப்போதும் தியானித்துக் கொண்டே இருப்பதாகிய தாரகமந்திரம்,

"மும்மைசால் உலகுக் கெல்லாம் மூலமந்திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமந் தன்னை'' (கம்பர், வாலிவதைப் 79)

என்பார் கவிச்சக்கரவர்த்தி சிகி - மயில்; ஒயாரன் - ஒப்பனையை உடையவன், இது கண்ணன் மறைப்பொருள் - வேதங்களின் முடிந்த முடிபான இறைவனின திருப்பெயர்; வம்பு எனா - நிலையற்றது என, பொய்யானது என்று கூறி; ஒருவி - நீத்து; துண்டரீகன் - கொடுரமானவன், இரணியன்; நரகரி - நரசிங்கப்பெருமாள்; மலைகொடு கடல் கடைந்தது - வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக் கடல்வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு கலக்கிய வரலாறு; அங்கதன் - வாலியின் மைந்தன் கடல்வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு கலக்கிய வரலாறு; அங்கதன் - வாலியின் மைந்தன், இராமபிரானுக்காக இராவணனிடம் தூது சென்றவன், பெருவீரன்; மதிகொள்ளும் பணியின் மைந்தன் (இராகுவால் பற்றப்பட்ட) சந்திரனை மீட்கும்; திரு மதி கொளும் - தெய்வீகமான அறிவைப் பெற்றுள்ள, இங்கு, மதி செயல்திறமையைக் குறித்தது, பனிசேர் விசும்பில் பால்மதி கோள்விடுத்தான் (பெரிய திருமொழி 4-6-9) ஐம்படையாளி - சுதர்சனம் என்னும் சக்கரம், பாஞ்சஜன்யம் என்னும் சங்கு, கௌமோதகீ என்னும் தண்டு, நந்தகம் என்னும் வாள், சார்ங்கம் என்னும் வில் ஆகிய ஐந்து

ஆயுதங்களை உடையவர்; கட்செவி - பாம்பு, இங்கு காளிங்கன்; களிறு - யானை, இங்கு கஜேந்திரன்; செஞ்சொல்வாணன் - திருப்பாணாழ்வார்; வாய்கொடு - ஆழ்வார் உடலுடன் திருவரங்கப்பெருமாளில் ஒன்றிவிட்டதால் விழுங்கி விட்டதாகக் கூறுகிறார், இவர் தம் புலவர் புராணத்தும் இவ்வாறே கூறுவார்;

"உய்வண்ணப் பாணாழ்வான் ஒருபதுபாட் டுரைத்திடலும்
மைவண்ண மால்அவனை வாய்மலரால் உட்கொண்டான்"

(புலவர் புராணம் - திருப்பாணழ்வார். 17)

தவசிற்கு ஓர் கடிமதில் - தவத்தைக் காப்பவன் என்பது கருத்து; செவிலி என்று - செவிலியைப் போல, என்று உவம உருபு; அலகை -பேய், இங்கு பூதனை ; எண்குணவாரி - சைவாகமத்துட் கண்ட எட்டுக் குணங்கள் அல்ல, அடியார்களால் எண்ணப்படுகின்ற நற்பண்புக்கடல், குணவாரி ஒரு சொல்நீர்மைத்தாக நின்று வினைத்தொகை ஆயிற்று, அனந்த கல்யாண குணசம்பன்னன் என்பது வைணவ மரபு; செடி நாறும் மேல் - ஒருவிதமான நாற்றத்தை உடைய மேனியராகிய, ஆயர் எப்போதும் கால்நடைகளுடன் பழகுதலாலும் பால், நெய் போன்றவற்றைத் தீண்டுதலாலும் அவர் உடலில் ஒருவிதமான மணம் நிலைத்திருக்கும் என்க, முடை ; பொதுவர் - இடையர்; "வார்ஆரும் இளமுலை முடைத்துகிற் பொதுவியர்" (திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் - சிறுதேர்ப்.2) வெளவு - விரும்புகின்ற ; தாய் - அன்னையைப் போன்றவர்.

4. வனப்பு - அழகு; கலபம் - தோகை; அளித்திரள் - வண்டுகள்; முட்கனி - பலாப்பழம்; எறிந்தும் ஊடியும் மணக்கும் என்க ; மணக்கும் - புணரும்; ஒப்பு;

"பனிவரை நிவந்த பாசிலைப் பலவின்
கனிகவர்ந் துண்ட கருவிரற் கடுவன்
செம்முக மந்தியொடு .... துஞ்சும்" (புறம்.200)

பொறிகள் - சித்திரங்கள்; என்று - உவம உருபு; மறைமுழுக்கு இடையற ; மகத்து அழலினர்கள் - யாகத்தீயினராகியி அந்தணர் எனவும் உயிர்க் கொலையின்மையால் பெருமை உடையதாகிய (மகத்து) தீயினை வழிபடுவோர் எனவும் இரட்டுற மொழிதலாகக் கொள்க, இது இவருடைய தலைமையான கொள்கை ; முடிவுறு என்று - முடிவுறுவதற்காக ; வேண - வேண்டிய அளவு, நிறைய ; வளை - சங்கு; குருகைப் புளி - ஆழ்வார் திருநகரியின் புளியமரம்; தபோநிதி - தவத்தையே செல்வமாக உடைய நம்மாழ்வார்; தமிழ்மறை - இங்கு திருவாய்மொழி ; அளக்கர் - கடல்; செழியன் - பாண்டியன், இங்கு வல்லப தேவன்; கவி பகர்ந்தவன் - பெரியாழ்வார் ; அனையர் என்றது பெரியாழ்வார் முதலிய பிற ஆழ்வார்களை; ஆழ்வார்களின் திருவடிகளைச் சிரத்தில் சூடியவர்களே திருவரங்கத்தின் பெருமையை உணர முடியும் என்க ; திருநாடு - இங்கு அழகிய நகரம் என்ற பொருளில் வந்தது, அல்லதூம் வைகுந்தம் எனினும் ஆம்; சிறந்த ஊர் ஒன்றைத் தலைவிக்கு உவமையாக்கல் மிகப் பழைய தமிழ் மரபு;

"அரியல்அம் கழனி ஆர்க்காடு அன்ன" (நற்றிணை.190)

"முண்டக நறுமலர் கமழும் தொண்டி யன்னோள்" (ஐங்குறு.177)

5. மஞ்சு - மேகம்; நுதல் - நெற்றி; வகுளமென் தொடை - மெல்லிய மகிழம்பூக்களாலாகிய மாலை, "தொடை இலஞ்சி மஞ்சள்" இளஞ் சோலை படைவீடு (இரத்தினச் சுருக்கம்.8); பெரும்படைவாய் - பெரிய சேனையின்கண், வாய் - ஏழன் உருபு; விசேடி - சிறப்பானவள்; இருள் எனப்பகர் கரி-காமனுக்கு இருட்டே யானையாம், "வேலை கடிமுரசம் கங்குல் களிறுகுயில் காளம்" (இரத்தினச் சுருக்கம் 9); வெருக்கொள - அஞ்ச; வனப்புஅவிர்; கடலின் கணே வரு மகளிர் - பாற்கடலைக்கடைந்த போது அதனின்றும் தோன்றிய பல அரம்பையர்; அறல் - தண்ணீர்; பொற்பு மகளிர் என்றது மலையரமகளிர், நீர மகளிர் போன்றோரை ; இணைதவிர்ந்து அவிர்தரு - ஒப்பற்று விளங்கும்; தேகி - மேனியை உடையவள்; மந்தமாருத வெற்றி இரதம் - தென்றலாகிய செயம்பொருந்திய தேர், வடக்கோடு தேருடையான் என்பார் சிவப்பிரகாசர் (தனிப்பாடல்); அவசம் - மயக்கம்; ஒடு - அவளோடு; வதனம் - முகம்; மால் - விருப்பம்; மடிவாளின் - இறந்துவிடுபவளைப் போல், இன்-உவம உருபு,

6. மயக்கு அளவு அற ; இனிது இரப்பது ஓர்; சதபது பங்கு- நூறு பத்து மடங்கு, ஆயிரம் மடங்கு; மறைத்து - சிதைவு பிறர்கின்மை, களவியலில் தலைவி தன்மனன் அழிவு பிறர்க்குப் புலனாகாமை நிற்றல் நன்பர் இளம்பூரணர் (தொல் மெய்ப்பாட்.13) வனச புங்கவன் - பிரமன்; தொந்தம் - பிணைப்பு; அற - மிகுதியாக ; அடிதொழுதல் இன்றி - நெருங்கி (அணைவாய் எனப்) பணிந்து வேண்டாமல்; அவாறு அங்கு அயர்போது உள் இசையும்; கடைவிழித்துணை மயலினைச் சிறிது உணர்த்திடலால் என்க, இது துணிவு; ஆசையிடத்தில் - ஆசையில்; ஆண் வதை - ஆணுக்குத் தீமை செய்வதால் நேரும் ஆண்பாவம்; அவளை மிஞ்சிய கனிவு - தலைவியாலும் மறைக்க முடியாத விருப்பம்,

"கட்டழ கமைந்த கண்ணாள் நிறைஎனும் சிறையைக் கைபோய்"

(சிந்தாமணி.710)

என்றதும் இது. மதனுக்கு அணி முடி - காமனின் கிரீடம் "வீரமதன் வண்ணமுடி என்று மதிக்கலாம் (வருணகுலாதித்தன் மடல் 82) அச்சுறுவேன் - பயப்பட்டவனாகிய யான், வினையாலணையும் பெயர், விளம்பினேன் எனும் வினைகொண்டது; முருக்கு இதழ் -முருக்கம்பூவைப் போன்று சிவந்த, உவமைத்தொகை ; இதழை அளித்திடு என்க ; ஒஞ்சினாள் - நாணினாள்; சகசத்தில் வரும்அளவும் பொறாதவர் அற்பர் - ஒரு பெண் தானே இயல்பாக விரும்பி அணுகும் வரையிலும் பொறுக்காமல் வலிதில் நுகர நினைவோர் கீழோர், அச் செயலில் உண்மையான இன்பம் இராது என்பது காமநூற் கொள்கை ;

"வண்டா னதுமெள்ளப் பூமணங் கொள்ளும் வகையதுபோற்
பெண்டாசை உள்ளவர் காமசம் போகம் பெறுவதல்லால்
கண்டா தரவின் மலர்எடுத் தேகசக் கிமுகர்ந்து
கொண்டால் மணந்தருமோ"

(கோவிந்த சதகம் . 49)

மதன தந்திரம் - காம சாத்திரம்; சடைதாரி பொடி செய்தருள் மதன்தந்த்ரப் பந்தி (திருப்புகழ்.59) நந்தி - காமசாத்திரத்தின் முதல் ஆசிரியர் நந்தியம் பெருமான், அதிவீரராம பாண்டியன்,

"நல்லார் நந்தி இன்பநூல் ஞாலம் எடுக்க அதுசுருக்கிச்
சொல்லா ரியத்தில் ஈரைஞ்ஞூறு அத்யா யம்போற் சொன்னானே"
(கொக்கோகம்.9)

என்பார்; அனையர் என்றது வாத்ஸ்யாயனர் முதலிய பிற காமநூல் பிற ஆசிரியரை ; இவ்வளவு என்று அறிவர் இங்கு இலரே ; வழிபாடு - தாழ்மை; வெஃகினாள் - விரும்பினாள்.

7. சுருள்குழல், மலர்க்குழல் எனத் தனித்தனி இயையும்; முனிமகன் - பராசர முனிவரின் மைந்தராகிய வியாசர்; வழுவை - யானை ; முனி என்ற சொல் யானைக் கன்றையும் குறித்தலின் முனி (யானை) மகன் சொல்ல வழுவைமுகன் எழுதியது என்று ஒரு தொனி தோன்றுதல் நயம்; சுவனம் - பொன்; மந்தரம் - மலை ; மிசை ஏழன் உருபு; பொன்மலை - மேருவரை ; மிக விரித்துக் கூற வேண்டுவதை அது ஒரு பாரதம் எனல் உலக வழக்கு, "அத்தூது சென்ற கதை செப்பில் ஒரு பாரதம்என (தனிப்பாடல்) என்று இதைத் தொனிக்க வைத்தார் சிவப்பிரகாசரும்; விந்தை உரைப்பரிது மிக விரிந்த பாரதம் போன்றது என்பது கருத்து; களிற்று அமரால் - யானைப் போரால்; வெளிறும் நெஞ்சு - அறியாமை உடையோர் நெஞ்சு, மனம் என்னும் பொருளில் ஆட்சி, அறியாமையை வெண்மை எனல் மரபு, "வெளியார்முன் வான் சுதை வண்ணம் கொளல் வெண்மை எனப்படுவது (குறள் 714,844) சுபகரத்தன - மங்கலத்தன்மையையுடைய ; கரணம் - கலவி பேதம்; தொங்கல் - மாலை ; சுரத இங்கிதம் - கலவியில் கைக்கொள்ள வேண்டிய சமயோசித நடை ; விதி பெறும் தலை - தலையெழுத்தைப் பெற்ற சிரம், இது சினையாகுபெயராகத் தலையை உடைய மனிதனைச் சுட்டியது; சுகிர்தம் - நல்வினைப்பயன், அதிருஷ்டம்; ஒன்றியது இது; தோள் என்று அவர் தோழ தெரி என இயையும், எனக்குத் தோள் போன்ற பாங்கனே அறிவாயாக, இதனால் இவ் வண்ணப்பா பாங்கனிடம் தலைவன் கூறியதாக ஆகிறது; துடியாக மேன்மைமிக்க.

8. துஞ்சல் - தூங்குதல்; தெளிவுற்று - மயக்கந் தெளிந்து; உன் வலி அளவும் செய்; வலி அளவும் - முழுவலிமையோடு சோர்வுறல் - சோர்வடையாதீர், அல்லீற்று வியங்கோள் எதிர்மறையில் வந்தது. நோதக்க செய்தாள் என்று எள்ளல் எனபுழிப்போல (சிலம்பு. ஊர்சூழ்வரி.14) உபரிச்சுரதம் - கலவி வகையுள் ஒன்று; சந்தன குங்கும முலைக்களப மதம் பெரிது என்க, முலையாகிய யானையின் மதம் மிக்கது என்றவாறு, உருவகம்; அல்லது சந்தனத்தாலாகிய கலவைச் சாந்தையும் குங்குமப்பூவையும் பூசப்பெற்றுள்ள நகில்களின் மதம் என ஆற்றொழுக்காக எளியபொருள் கொள்ளினுமாம்; வன்பிடி - இறுக அணைத்தல்; இளம்பிடி - அழுத்தமின்றி அணைத்தல்; தவிர்தி - விலக்குவாயாக ; என்று - எனக்கூறி; அணிதூசும் - உடுத்த உடையும், வினைத்தொகை, இறந்தது தழுவிய எச்ச உம்மை முன்பே களையப்பெற்ற பெரிய அணிகலன்களைக் குறித்தது, அல்லது உயர்வு சிறப்பும்மை எனினுமாம்; நடுக்கமதோடு உதித்திடு; ஒஞ்சியே - வெட்கமுற்று; முழுகுற்று (அச் சுரத நீரில்) மூழ்குற்று; விநய - நல்ஒழுக்கமுள்ள ; ரஞ்சித - இன்பத்தைத் தரும், அன்பிற்குரிய எனினுமாம்; எனில்-என்னைக் காட்டிலும்; எனில் வனிதை தளர்வடைந்தனள் என இயையும்; விடியல் என்றிட - பொழுது விடிந்தவுடன்; கோழி முழுங்கின, "கூவின பூங்குயில் கூவின கோழி

என்புழிப் போல'' (திருவாசகம், திருப்பள்ளி 3) பன்மைப்பொருள்; சுரகணத்தினர் - தேவர்கள்; இதற்கு - காமத்திற்கு;

"ஒருமுதற் கடவுள்என் றுலகம் ஏத்தும்அப்
பெருகறி வார்மலர்ப் பிராற்கும் பெண்மயல்
ஒருவல்கூ டாதெனில் உலகர் யாவரே
அரிமத நெடுங்கணார் ஆசை மாற்றுவார்'' (சீகாளத்திப்புராணம்-நான்முகச்.31)

வாரிதி - கடல்; வயமலிவு ஒன்று - (ஞானத்தின்) வெற்றிமிகுதி பொருந்திய ; காரி - நம்மாழ்வாரின் தந்தையார் பெயர்; செஞ்சொல் மாறன் - சிறந்த புகழை உடைய நம்மாழ்வார்; தமிழ்மறை - இங்குத் திருவாய்மொழி; மலிவொன்று மாறன், தவத்தில் வந்து நுழைதரு மாறன், செஞ்சொல்மாறன் எனத் தனித்தனி இயையும், அன்றிய - அல்லாத ; தவரும்-(மற்ற) தவசிகளும்; சுகிர்தம் - அதிருஷ்டம், என்பது இது அலது எது என்று அதிசோரம் புரிவார்கள்; இது - இந்தக் காம இன்பம்; அதி - மிகுதியாக ; சோரம் - திருட்டுத்தனமாக, கூறப்படுவது தவசிகளைப் பற்றியதாதலின் ஈது அகப்பொருட் களவன்று,

"புறம்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து'' (குறள் 277)

என்பதனை நினைந்து கூறியது இது; ஈது சுகம் என மாறுக ;

திருவாய்மொழியை உணர்ந்தவர்கள் மட்டுமே காமத்தை வெல்வர்; உணராவிடில் தவசியரும் காமத்துக்கு அடிமையாவர் என்பது ஈற்றுப்பகுதியின் கருத்து, இதனால் தான் காதல்வயப்பட்டது இயற்கையானதே எனத் தலைவன் பாங்கனின் கூற்றை மறுத்துரைக்கிறான். அதனால் இதன் துறை கழற்றெதிர்மறை ஆகிறது.

# 25. திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் வண்ணம்

மயிலை மகாவித்வான் சண்முகம் பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்ற இவ் வண்ணம் எதிராஜ முதலியாரின் விஜய வருட (1893) வண்ணத்திரட்டு (ப.49), மாறன் அச்சுக்கூடத்தின் 1926 ஆம் ஆண்டின் வண்ணத்திரட்டு (ப.75) ஆகிய இரு பதிப்புகளிலும் உள்ளது. இரண்டிலும் வண்ணக்குழிப்பும் துறையும் தரப்பெற்றுள்ளன. முதலியார் பதிப்பில் இராகம் கல்யாணி எனவும், மாறன் பதிப்பில் இராகத்துடன் தாளம் ஆதி எனவும் இசைக்குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

தலைவனின் கழற்றெதிர்மறையைக் கேட்ட பாங்கன் அவன் காதல் மிகுதியை அறிந்துகொண்டபின் தலைவியின் இடம் எது எனத் தெரிந்துகொண்டு அங்கு சென்று அவளைக் காண்பான். கண்ட பாங்கன் இவள் பேரெழிலைக் கண்டபிறகும் தலைவன் மீட்டும் நம்மிடம் திரும்பி வந்திருக்கிறான் என்றால் அவன் மனவலிதான் என்னே என்று அதிசயிப்பான், இவ்வாறு பாங்கனின் அதிசயத்தைக் கூறும் துறை தலைவனை வியத்தல் எனப்படும்.

ஏழு, எட்டாம் கலைகளில் கிளவித்தலைவனின் சிறப்பாகக் கூறப்பட்டுள்ள பல பண்புகள் - அவனை யார் எனக் கூறக்கூடாத நிலையில் - இங்கு தேவையற்றன, தலைவன் ஒருவனைக் குறிப்பிட்டு அவனுடைய புறப்பண்புகளைப் பாராட்டலே பயன் உடையதாம், கிளவித் தலைவனின் அறிவு, மனஉறுதி என்னும் இரண்டே இங்கு கூறப்பட வேண்டுவன. வண்ணத்தில் நிறைய இடம் இருப்பதால் இவ்வாறு நெருங்கிய பொருத்தமற்ற சில கருத்துக்களையும் கூறி இடத்தை நிரப்ப நேர்கிறது (அறுவகை இலக்கணம் 330 ஆவது நூற்பாவையும் உரையையும் காண்க).

மிக்க பெருமிதம் வாய்ந்த, ஓசை நயமிக்க, சிறந்த வண்ணம் இது. ஆண்கலையில் சிவபிரானைப்பற்றிய பல வரலாறுகளோடு மூன்றாம் கலை ஒன்றிலேயே ஐம்பத்துமூன்று சிவத்தலங்களை அடுக்குகிறார், ஆசிரியரின் சொல்லாட்சித் திறம் வியப்பிற்குரியது. பெண்கலையில் தலைவியின் ஈடற்ற அழகு இரண்டிற்கு மேற்பட்ட கலைகளில் புனைந்துரைக்கப்படுகிறது. இறுதியில் "வெகு மயலினில் வாடினான் ஆயினும் இது சொலவே ஆயினன்; இனி எவன் ஏகாய் என ஓதி நின்றதே" என அதிசயப்படுகிறான். இந்தப் பகுதிதான் இத் துறையின் மையக்கருத்து.

தமிழில் உள்ள தலைசிறந்த வண்ணங்களுள் இதுவும ஒன்று என்றாலும் இரண்டாம் கலையின் தொங்கல் பொருள் முடிவு பெறாது. விண்டுதாழ் என எச்சமாக நின்று தொடர்வது வண்ணயாப்பின் கட்டுக்கோப்புக்கு ஏற்புடையது அன்று.

# 25. திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் வண்ணம்

## திருமயிலை, மகாவித்வான் சண்முகம் பிள்ளை

### பாங்கன் தலைவனை வியத்தல்

காப்பு

(வஞ்சித்துறை)

வண்டுவ னக்கரி புண்டரி கத்தாள்
கொண்டணை நெஞ்சமே விண்டது வினையே

-----

தானானந் தனத்த தந்தன தனந்தனந்தன
தனதன தனதன தனதனதான
தானானந் தனத்த தந்தன தனந்தனந்தன
தனதன தனதன தனதனதான
தானாதன தனதன தானாதன தனதன
(தொ) தானாதன தான தந்தனா

-----

ஞானானந் தனுக்கி டந்தரு நகந்தருங்கொடி;
உமை ; பயி ரவி; கவு ரியன் அருள்பாலை ;
சூதாகுந் தனத்தில் அன்பொடு கறந்தரும்பர -
சுகநிலை தரும்அமு தருமறைநாடு
சீகாழியின் மறையவர் கோமான்வயின் உதவிய
கான்ஏயுங் குழற்ப ரம்பரை ; சினந்தஅம்பன
விழிஅலை மகள்கலை மகள்எனலாகி,
வானோருங் கடற்பெ ரும்புவி யொடும்படங்கிளர்
அரவர சரும்உரை செயும் அபிராமி;
நூலால்நுவல் வரியதொர் மேலாம்நிலை யதுதர
நாலாஇங் கினித்த நன்கவி வனைந்திடுந்தமி -
ழுரையணு கியதொரு பரமகல்யாணி;
தேசாருங் கடத்த ஐங்கர வனுங்குறிஞ்சியின்
இறையும்அ னைஎனமுன் அடைதர,நாடி,
ஆர்வோடவ ருடன்இனி தாநீடருள் புரிபவள்;
போதார்விழி யார்ம டந்தையார் (1)

நாவேயுங் குழற்சொல் அந்தரி; நெடுந்திகம்பரி;
திரிபுரை ; நிருமலை ; ஒருசுகபாணி
பாவாருந் தனிப்பெ ருந்தகை ; நவின்றிடும்பர
துரியமு டியதனில் இவர்தரு,பேத -
மாயேஇல கியநல மேஆகிய முழுமுதல்;
மாமேவுந் திலைத்த லந்தனில் அரும்பொனம்பல
நடனம்உ டையபரி புரபதமேமுன்
ஏர்மேவும் புலிப்ப தன்கலை சொலும்பதஞ்சலி
முனிகவு டர்கள்இறை மனம் நனிநாட
ஓயாதருள் புரிபவன்; வேய்ஆர்தரும் அரியவன்;
நார்மேவுந் தவத்தர் இன்புற மடங்கல்என்றனை -
வரும்இசை செயவட தருநிழல்மேவி
நீடாருந் தனித்த சம்ப்ரம நலந்தருஞ்சுக
நிலைதரும் அதிநய விதரணசீலன்;
ஆறாறகல் பவன்;முழு நீறாடிய குருபரன்;
போதாசன னோடு விண்டுதாழ் 2

ஆனேறுந் துசப்ப ரங்கிரி[1], புறம்பியம், தகு
மதுரை,வ டவனம்,அ ருணை, முலைவாயில்
ஆரூர்,மஞ் சிணர்த்தி டும்பொழில் நெடுங்களம், துறை -
சை, விளமர், தருமபு ரமொடுநளாறு,
காறாயில்,ந ணிலம், நெலை, மாயூரம், ம ருகல், பெரு
வேளூர், வெண் டுறைப்பெ ருந்துறை, வலம்புரம், பரி -
தியமம், மறைசை,பு கலி, மழபாடி
காரோணம், குறுக்கை, மண்டளி இலங்கிடும்சிறு -
குடி, முது கிரி, இடை மருதொடுகூவம்,
ஆடானை,அ திகை, விய லூர், கோளிலி, தினைநகர்,
மாகாளம், திருக்கு டந்தை, பு ளமங்கை, கண்டி, ம-
யிலை, வலி வலம், மதில் செறிகுடவாயில்,
பேரூர் அந் தரத்த ரும்புகழ் எறும்பி, தென்சிர -
கிரி, கொடு முடி, கயி லையொடவிநாசி,
ஆரூர்அர ; நெறி, கரு வூர் ஆனிலை நகர், அமர்
வேதாசலம் மேவு பண்பினான்; (3)

1. ஆனேறெந்துறைப்பரங்கிரி

ஆமூர்என் றுரைத்தி டும்பதி வரும்பெருந்திரு
உடையர்த மையணுகி நலபொதி சோறு
தானேகொண் டளித்த சங்கரன்; அருங்கலம்புனை
மணிமுலை பரவையி னிடையொருதூத -
னாஊரன்இ சைகஎன வேஏகிய குணநிதி;
பூபாரந் தொலைப்ப அன்றொரு தனஞ்சயன் பெற
இகல்அறு கணைஉத வியவனவேடன்
மாலேகொண் டடுத்தோர் பஞ்சவன் எதிர்ந்துந்திடும்
எழில்துகில் புரிகய றதுகொடுநீவி
யேஆடல்செய் தனிமுதல்; நாள் ஆதிரை உடையவன்;
மாமூலந் தனிற்ப ரிந்தினி தடைந்து, சங்கரி
முலையொடு வளைநணி படமகிழ்சாமி;
தேனாருஞ் சடைக்கண் அம்புலி கலங்கவந்திழி
புனல்தனை நிலவிட நிறுவியசோதி;
மீபூதர இலன்; விடை யேஊர்தரும் இமையவன்
மேதாவியர் நாடு குன்றிலே (4)

வானார்கந் தரத்த ரம்பெறும் அருங்கருங்குழல்;
மதிநுதல்; இருபுரு வமும்இணைசாப -
மேஆகும்; திரைப்பெ ருங்கடல், விடம், தரம்புகழ்
அமுது,வ டுவின்வகிர், குவளையதாக -
வேகூறிட வும்அடரு கூர்வாள்பொரும் இணைவிழி;
மாவாழுந் தளத்த செங்கம லம், இந்திலங் கிய
முகம்; இல விதழ்; குமிழ் நிகர் தருநாசி
வாய்ஆம்இங் கினித்த செங்கனி; சுமங்கலம்பெறு
மிடறிசை குலவிய வளைஎனநாளும்
நாவால்இவண் உரைசெய மேவா ; வளை குழைபுனை
காதாகும்; கடத்த குஞ்சரம், மதன்றன்நன்பொலன்
முடி. கல சஇணை, பொரு திடும்ஓர்சூது
தானாகும் புடைத்து விஞ்சிய குரும்பைவென்றிடு
தனம்அணி அகலமும் முதும்உறலாகி;
யாராயினும் இணைசொல லாமோமகி தலமிசை ;
போதோவிய மாதர் என்றுநேர் (5)

மாமோகம் பெறத்தெ ரிந்தணை தரும்பசுங்கொடி
எனஇறு துவள்இடை ; விணினிடைஆரும்
மாமாதின் பெயர்ப்பு னைந்துறு குறங்கு; நன்கமை
தனைஎதிர் புயஇணை; ஒரு கரம், மேனி
யாழ், மாமலர் குலவிய தேமாவினின் நறுதளிர்
ஆம்;ஆம்!நன் கனத்து மின்புரை மடந்தை தன்கவின்
அரவென அகல்தரும் ஓர்அல்குல்எவாறு
நாமேயுங் குறிப்ப திங்குளம்அயர்ந்துயர்ந்தவர்
இணைநவில் தரஅரு சிகிஅன சாயல்
ஏயாஒரு பிடிஎகின் ஆமேநடை தனில்; இவண்
ஆசாரந் தனைக்கொ டன்பொடு பரன்பதந்தனை
நினைபவர், அருவினை களைபவர்,சால
மாமேவுஞ் சிறப்பின் அந்தணர் பரிந்தநெஞ்சினர் -
தமைமயல் கொடுசெல அகலிடமீதி -
லேகோடிய செயல்புரி வார்;நாளணி மலர்ஒரு
போதேமன நாடல் இன்றியே (6)

தேனேயுஞ் சொலைச்சொ லுங்கிளி, அருந்தவஞ்செய
வரும்ஒரு திருஎன எவரும்உசாவ -
வேகாமன் தனுக்க ரும்பென நலம்பெறும்பெடை,
கரிசறு பதவியல் அறுபதமான
சீகாரமர இசைபயில் காரார்குழல் வனிதையர்
மாமாயந் தவிர்த்த விஞ்சையன்; நிவந்திணங்கிய
புலவர்உ ளமகிழ்அ தியகுணாளன்;
நாடாளும் திறத்தர் அன்புறு ப்ரசங்கன்;இங்கிதன்;
அமலன்அ டிபரவு நரை அடைசீலன்;
ஆனாமையில் நிலமிசை யேசீர்பொது ளியகதி;
தேசாருஞ் செழித்த திண்புயன்; அகண்ட சம்ப்ரம
சரசவித ரண சகல குணமேரு;
மாமாகங் கணித்த புங்கவன் இரும்புரந்தரன்;
அருணகி ரணநவ மணிமயக்ரீட
மானாபரணன்; அதிவிவேகானுகுலன்; இதயன்;
யாதாய் நமைமேவி இன்று நீ (7)

சீர்மேவும் குணத்து நந்தல்இல் அனந்தசொன்மறை
முடிபுசொ லரியதொர் பொருடகலூரும்
மீதாநன் கணக்க றுங்கலை விதரிதெருந்திடு
குசைநுனி யனையதொர் அறிவினன்;நீதி
தான்ஒவரு நிலைமையின் மாமேருவை அனையைவன்;
ஆசேகுந் துரைத்த னம்செயும் மனங்கொளும்புரை-
யறுநெறி யினன்; அணி பெறுநிருவாகன்;
ஈர்ஏழ்என் றெடுத்தி யம்புல கினும்செலும்புகழ்
கிளரிய உரை உடையவன்;அசைசாரும்
நூல்ஓதிய நடைமிக வேதேறிய அணிமையன்;
கூர்வாய்வெஞ் சினத்த கங்கணை தருஞ்செழுஞ்சுடர்
மருவயி லுறுகரன்; நறுமலர்மாலை
யால்வேயுந் திணித்த திண்புயன்; மருந்தெனுந்தகை -
மையைஇயை பவன்;வெகு மயலினில்வாடி -
னான்ஆயினும் இதுசொல வேயாயினன்;இனிஎவன்
ஏகாய்என ஓதி நின்றதே. (8)

## தொங்கற்றாழிசை

போதார்விழி ஆர்ம டந்தையர்
போதாசன னோடு விண்டுதாழ்
வேதாசலம் மேவு பண்பினான்
மேதாவியர் நாடு குன்றிலே
போதோவிய மாதர் என்று நேர்
போதேமனம் நாடல் இன்றியே
யாதாய்நமை மேவி இன்றுநீ
ஏகாய்என ஓதி நின்றதே.

# 25. திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் வண்ணம்

## குறிப்புரை

### காப்பு

வண்டு வனக்கரி - வண்டுவனப் பிள்ளையார், தலவிநாயகர் திருநாமம், மாவேழம் படைத்தவண்டு வனவேழம் புரக்களன்று வணக்கம் செய்வாம் (திருக்கழுக்குன்றப் புராணம் - பாயிரம் 3); புண்டரிகத் தாள்-தாமரை போன்ற திருவடிகளை, உவமைத் தொகை ; நெஞ்சே-விளி; நீ கொண்டு அணை, வினை விண்டது என்பது முடிபு;

"கணங்கொண்ட வல்வினைகள் கண்கொண்ட நெற்றிப்
பணங்கொண்ட பாந்தட் சடைமேல்-மணங்கொண்ட
தாதகத்த தேன்முரலும் கொன்றையான் தந்தளித்த
போதகத்தின் தாள்பணியப் போம்"

(மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை - 9)

என்னும் தெளிவினால் வினை விண்டது என எதிர்காலத்தை இறந்தகாலமாக கூறினார்.

1. ஞானானந்தனுக்கு -(ஞான ஆனந்தம் தீர்க்கசந்தி) அறிவையும் பேருவகையையும் தன் வடிவமாகக் கொண்ட இறைவனுக்கு, சித்தையும் ஆனந்தத்தையும் கூறியதால் சத்து உபலட்சணமாகப் பெறப்பட்டுச் சச்சிதானந்தன் என முடிகிறது; "பேசரும்அ னந்தபத ஞான ஆனந்தமாம் பெரியபொருளைப் பணிகுவாம்" (தாயுமானவர், பரிபூரணானந்தம் 2) இடம்தரு - தன் திருமேனியின் வலதுபாகத்தை இருப்பிடமாக வழங்குகின்ற, "மதனை அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டம்எல்லாம் பழிக்கும்படி ஒரு பாகங்கொண்டு ஆளும் பராபரையே (அபிராமி அந்தாதி 87) வரைராஜனுக்கு இருகண் மணியாய் உதித்த மலைவளர் காதலி (தாயுமானவர், மலைவளர் காதலி - மகுடம்); இமவானால் வளர்க்கப்பெற்ற வரலாறு வெளிப்படை ; கவுரியன் - மலயத்துவச பாண்டியன், பாலை-மகள், அங்கயற்கண்ணி, மலயத்துவசன் பெற்ற பெரு வாழ்வே (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - வருகைப்); சூது ஆகும் - வல்லுக்காயைப் போன்ற, ஆதல் உவமப்பொருட்டு; கறந்து அரும்; பரசுகநிலை - பேரின்பம்; அமுது அரும்மறை நாடு; கான் ஏயும் குழல்-நறுமணம் பொருந்திய கூந்தல்; பரம்பரை - எல்லாப் பொருள்களையும் கடந்து நின்றவள்; மலைக்கொடி திருஞானசம்பந்தருக்குப் பரசுகநிலைதரும் அமுது கறந்து உதவியது. "வார் இணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி, எண்ணரிய சிவஞானத் தின்னமுதம் குழைத்தருளி, உண்அடிசில் எனஊட்ட" (பெரியபுராணம் - திருஞான.67.68); சினந்த அம்பு அனவிழி - கோபம் மிக்க கணைகளைப் போன்ற கண்கள், சினந்த - சாதியடை ; அலைமகள் - பாற்கடலில் பிறந்த இலக்குமி, கலைமகள் - சரசுவதி; தண்ணார் கமலத் துணைமாதரைத் தன் இரண்டு கண்ணா உடைய உமையாள் (கந்த புராணம் 1-14-46), வானோர் - தேவர்கள், கடற்பெரும் புவி - கடலால் சூழப்பெற்ற பெரிய உலகம், இடவாகு பெயராக உலகிலுள்ளளோரைச் சுட்டியது : படம் கிளர் அரவரசரும் - தலையில் படத்தைப் பெற்றுள்ள நாகலோகத் தலைவர்க்கும், விண் மண் பாதலம் என்ற மூவுலகும் என்றபடி, இவற்றுள்

மண்ணுலகத்தோர் வழிபடுதல் நூலுரை மாத்திரத்தாலன்றிக் கண்கூடாகவும் காணப்பெறுதலால் ஒடுக்கொடுத்துச் பிரித்தார்; உரைசெயும் - புகழும்; அபிராமி - சொற்பொருள் அழகுடையவள், உமாதேவியாரின் சிறப்புப் பெயர்களுள் ஒன்று; நூலால் நுவல்வரியது ஓர் மேலாம் நிலை அது தர - நூற்கல்வியால் பெறமுடியாததாகிய ஒப்பற்றதும் மிக உயர்ந்ததுமாகிய அநுபூதியை அருள, அது பகுதிப்பொருள் விகுதி, இறையருள் தன்மையை வாசித்துக் காணொணாதது என்னும் அருணகிரிநாதர் அதனைக் "கண்டுநாயேன் யோகத்தைச் சேருமாறு மெய்ஞானத்தைப் போதியாய்" (திருப்புகழ் 342) என்பார். அதுவே இங்கு மேலாம்நிலை எனப்படுகிறது. நால்ஆ - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நான்குவகையாகக் கூறப்படும்; இனித்த நன்கவி - சுவையிற் சிறந்ததும் இலக்கணப் பிழைகளற்றதுமாகிய கவிதைகள்;

வளைத்திடும் தமிழரை அணுகிய - இயற்றிய தமிழ்ப் புலவராகிய அபிராமி பட்டரிடத்து எழுந்தருளிய, திருக்கடவூரில் அபிராமிபட்டருக்காக - அவர் அந்தாதி பாடிய உடனே - அமாவாசையன்று முழுநிலவைத் தோற்றுவித்த வரலாறு வெளிப்படை ; தமிழரை என்பதைப் பலர்பாலாகவே கொண்டு காளமேகப் புலவர், ஒட்டக்கூத்தர், குகை நமசிவாயர், கவிராச பண்டிதர், குமாரதேவர் முதலிய தேவிஉபாசகர்களைக் குறித்ததாகவும் கொள்ளலாம். இவர்களின் வரலாற்றைப் புலவர்புராணத்துட் காண்க பரம கல்யாணி-மிக மேலான நன்மையைப் புரிபவள்; தமிழரைத் தர அணுகிய கல்யாணி என்பது முடிபு; தமிழர் - தமிழ்ப்புலவர், "கூழைத்தண் டமிழர்க்கேன் கொடியும்கா ளமுமே (தனிப்பாடல்); தேசு ஆரும் கடத்த - அழகிய மத்தகத்தை உடைய, வேறு வகையாகக் கூறினுமாம்; ஐங்கரவனும் - ஐந்து கைகளைஉடைய விநாயகரும், குறிஞ்சியின் இறையும் - மலைகளுக்குத் தலைவனாகிய முருகப்பெருமானும், சேயோன் மேய மைவரை உலகமும் (தொல்காப்பியம் அகத்திணை.5) சூர் அழ விம்மி அழும் குருந்தைக் குறிஞ்சிக் கிழவன்என் றோதும்குவலயமே (கந்தரலங்காரம்5); அனை - அன்னை, இடைக்குறை ; ஆர்வோடு - மனநிறைவுடன்; இனிதா-இனிது ஆக ; போது ஆர் - மலர்களைப் போன்ற, ஆர் உவம உருபு; மடந்தையார் - பருவம் சுட்டாமல் பெண் எனப் பொதுவாக நின்றது.

2. நா ஏயும் சொல், குழல் சொல் எனத் தனித்தனி இயையும்; நாவிற் பொருந்தியதும் புல்லாங்குழலைப்போல்இன்பம் தரத்தக்கனவுமாகிய மொழிகளை உடைய ; அந்தரி - முடிந்த முடிபாக உள்ளவர், உமாதேவி; நெடும்திகம்பரி - நீண்ட திசைகளை ஆடையாக உள்ளவள்; திரிபுரை - தூலம், நுட்பம், காரணம் என்னும் மூன்று உடல்களாகிய புரங்களிலும் வசிப்பவள், உமாதேவி, நிருமலை - மலங்கள் அற்றவள், தூயவள்; ஒரு சுக பாணி - ஒரு கிளியைக் கையில் ஏந்தியவள், "பைங்கிளியை அங்கைகொடு பண்உரை பயிற்றும் குங்கும சவுந்தரி (பூவாளூர்ப் புராணம் - கடவுள் வாழ்த்து 4) பால்ஆரும் தனிப்பெருந்தகை - தன் இடப்பாதியிலே பெற்ற ஒப்பற்ற பெருமான், நகந்தருகொடி என்பது முதல் சுகபாணி என்பது வரை கூறப்பெற்ற உமாதேவியைப் பாகத்திலுடையவன்; நவின்றிடும் - ஞான நூல்களில் சிறப்பித்துச் சொல்லப்படும்; பரதுரிய முடி அதனில் - துரியாதீதமாம் மிகத் தூயநிலையில், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என அவத்தைகள் ஐந்து, இவற்றின் விரிவைத் தத்துவ

நூல்களிற் காண்க ; முடியதனில் - அது பகுதிப்பொருள் விகுதி, இன்-சாரியை ; இவர்தரு - உலவுகின்ற ; போதமாயே - ஞானமே வடிவாக, ஞானத்திரளாய் நின்ற பெருமான் (தேவாரம் 1-69-3) திலைத்தலம் - தில்லைப் பதி, இடைக்குறை ; பரிபுர பதம் - சிலம்பணிந்த திருவடிகள்; முன் - முற்காலத்தில்; ஏர் மேவும் - அழகிய; புலிப்பதன்- வியாக்கிரபாத முனிவர்; கலை சொலும் - வடமொழிப் பாணினீய இலக்கணத்திற்குப் பேருரை, யோக சூத்திரம் முதலிய அறிவு நூல்களை வழங்கிய ; கவுடர்கள் இறை-கௌட தேசத்தின் அரசனாகிய சிங்கவன்மன், கௌட தேசம் என்பது இன்றைய வங்க தேசமும் மேற்கு வங்காளமும் இணைந்த திலைத்தலந்தனில் முன் பதமே புலிப்பதன் (உம்) பதஞ்சலி(யும்) இறை(யும்) நனிமனம் நாட ஓயாது அருள்புரிவன் எனப் பொருள்முடிபு காண்க ; புலிக்கால் முனிவர், பதஞ்சலி வரலாறு வெளிப்படை; சிங்கவன்மன்-கௌட தேசத்து மன்னன், பிறவியில் உடல்முழுவதும் சிங்க நிறத்தைஉடையவன். இவ் வுடற்குற்றத்தால் அரசாட்சி ஏற்காமல் இறைநெறி ஒழுகி வந்தான், தலப்பயணமாகச் சிதம்பரம் வந்து பதஞ்சலி வியாக்கிரபாதர்களைத் தரிசித்தான். சிவகங்கையில் நீராடியதும் பொன்வண்ணத்தைப் பெற்றதால் இரணியவன்மன் எனப்பட்டான். சிவபெருமானின் ஆடற்காட்சியைத் தரிசித்தான், சிதம்பரத்தில் பல திருப்பணிகளைச் செய்தான், இந்த வரலாற்றின் விரிவை உமாபதி சிவாசாரியார் இயற்றிய கோயிற்புராணத்தில் இரணியவன்மச் சருக்கத்தில் காண்க ; வேய் ஆர்தரும் அரியவன் - மூங்கில் மரத்தின் கீழ் அமர்ந்துள்ள கிடைத்தற்கரிய இறைவன்; திருநெல்வேலியில் திருக்கோயில் கொண்டவர் என்றவாறு, "விண்தோய் தருக்குலங்கள் வெட்கவளர் வேய்அடிவாழ் எண்தோட் பரமர்நெல்லை யே (தில்லைபாதி நெல்லைபாதி 18); நார்மேவும் தவத்தர் இன்புற - இறையன்பு மிக்க தவசிகளாகிய சநகாதியர் மனமகிழ்ச்சி கொள்ளவும், சநகன், சநந்தனன், சனாதனன், சனற்குமாரன் ஆகிய நால்வரும் யோக சமாதியிலிருந்து, மனம் அடங்க வேண்டிய போது இறைவர் கல்லால மரத்தினடியில் தென்முகக் கடவுளாய் எழுந்தருளி, வாய் பேசாமல் சின்முத்திரை காட்டி அவர்களை ஆட்கொண்ட வரலாறு வெளிப்படை ; அனைவரும் மடம் கல் என்று இசைசெய - எல்லோரும் தம் அறியாமையை நீக்குமாறு வேண்டிப் போற்றுமாறு, தட்சிணாமூர்த்தி குருமூர்த்தமாதலின் ஞானமே சிறப்பாக வேண்டப்படும். உரியதுற வுடன்தானம் உதவுவதும் நீர்அன்றி ஒரு தெய்வம் வேறில்லையே! ஒன்றாகி ஆனந்த உருவாகி என்உயிர்க் குயிரான பரமசிவமே (தட்சிணாமூர்த்தி திருவருட்பா 6); வடதரு-ஆலமரம், சிறப்பாகக் கல்லால மரம்; நீ - ஆரும் - நிலையானதும்; தனித்த - ஒப்பற்றதும்; சம்ப்ரம் நலம்-நிறைவானதுமாகிய நன்மை, நன்மை என்றது இங்கே சிவஞானத்தை ; சுகநிலை - ஆனந்தமயமாகிய முக்திநிலையை ; தரும்-வழங்கியருளும்; அதிநய - மிக்க நன்மையைத் தருவதாகிய; விதரண-விவேகத்தை உடைய ; சீலன் - நற்பண்புகளை உடையவன், சீலம் என்பது சிறப்பாக, நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டும் சீலம் (திருவாசகம் 7-5) எனவே கொள்ளப்பெறும்; தவத்தவர் இன்புற(வும்), அனைவரும் இசை செய(வும்), நிழல்மேவி, சுகநிலைதரும் சீலன் என்பது முடிபு; ஆறாறு-முப்பத்தாறு தத்துவங்கள், பூதங்கள் ஐந்து, புலன்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, கருமேந்திரியங்கள் ஐந்து, அந்தக்கரணங்கள் நான்கு ஆக ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கு, வித்தியா தத்துவங்கள் ஏழு, சிவதத்துவங்கள் ஐந்து ஆகமொத்தத் தத்துவங்கள் முப்பத்தாறு;

ஆறாறு அகல்பவன்; ஆறா றையும்நீத் ததன்மேல் நிலையைப் பேறா அடியேன் பெறுமா றுளதோ (கந்தரநுபூதி 47); போதாசனன்-போது ஆசனன், தாமரைப் பூவைஇருக்கையாக உடைய பிரமன்; விண்டு - திருமால்.

3. ஆன் ஏறும் துச-ஏறும் ஆன்துச என மாறுக, ஏற்றப்படும் ரிஷபக் கொடியை உடைய, தான் இவரும் காளையாகிய கொடி எனலும் ஆம்; இது இக் கலையில் கூறப்படும் தலங்கள் அனைத்திற்கும் பொது, முதல்நிலைத் தீபகம், பரங்கிரி - திருப்பரங்குன்றம்; வடவனம் - திருவாலங்காடு; அருணை - திருவண்ணாமலை ; முலைவாயில் - திருமுல்லைவாயில்; மஞ்சு இணர்த்திடும் பொழில் - மேகங்கள் கூடுகின்ற சோலைகளைப் பெற்ற, இணர்த்தல் என்பது இப்பொருள் பயப்பதை, இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும் என்பதற்கு மணக்குடவர், தொடர்புபட்ட நெருப்பு மேன்மேலும் வந்துற்றாற்போல ஒருவன் தனக்கு இன்னாதவற்றைப் பலகாற் செய்யினும்(திருக்குறள் 203 - மணக்குடவர்) என உரை கூறுவதால் அறியலாம்; நெடுங்களம்-திருநெடுங்களம், சோழநாட்டைச் சேர்ந்த காவிரித் தென்கரைத்தலம், திருச்சி துவாக்குடிக்கு வடக்கே உள்ளது; துறைசை-திருவாவடுதுறை ; விளமர் - சோழநாட்டிற்குரிய காவிரித் தென்கரைத்தலம், திருவாரூருக்கு அருகே உள்ளது; தருமபுரம் - சோழ நாட்டுத் தென்கரைத்தலம், புதுவை மாநிலம் திருநள்ளாற்றுக்கு அருகே உள்ளது. தருமபுர ஆதீனம் உள்ள ஊர் வேறு. நளாறு - திருநள்ளாறு; காறாயில் - திருக்காறாயில், இன்று காரவாசன் என வழங்கப்படுகிறது. சோழ நாட்டுத் தென் கரைத்தலம் திருவாரூருக்கு அருகே உள்ளது. நனிலம் - நன்னிலம் சோழநாட்டுத் தென்கரைத் தலம், நெலை- நெல்லை, திருநெல்வேலி; மாயூரம் - மயிலாடுதுறை : மருகல் - திருமருகல், சோழநாட்டுத் தென்கரைத் தலம், பெருவேளூர்-இன்று மணக்கால் ஐயம்பேட்டை என வழங்கப்படுகிறது சோழநாட்டுத் தென்கரைத்தலம், கும்பகோணம் - திருவாரூர்ப் பேருந்துச் சாலையில் உள்ளது; வெண்துறை - வண்டுதுறை என வழங்கப்படுகிறது, சோழ நாட்டுத் தென்கரைத் தலம், மன்னார்குடி அருகே உள்ளது; பெருந்துறை - தேவாரத்தில் இத்தலம் பேணுபெருந்துறை எனவும், இன்றைய உலகவழக்கில் திருப்பந்துறை எனவும் வழங்கப்படுகிறது. கும்பகோணம் - காரைக்கால் பாதையில் உள்ள சோழநாட்டுத் தென்கரைத்தலம்; வெண்டுறைப் பெருந்துறை என வல்லினமெய் மிக்கது வண்ணம் நோக்கிய விரித்தல் விகாரம் ; வலம்புரம் - இன்று மேலப் பெரும்பள்ளம் என வழங்கப்பெறும் சோழ நாட்டுத் தென்கரைத்தலம், பூம்புகார் அருகே உள்ளது; பரிதி நியமம் - சோழநாட்டுத் தென்கரைத்தலம், பருத்தியப்பர் கோயில் என வழங்குகிறது, தஞ்சை - பட்டுக்கோட்டைப் பேருந்துச் சாலையில் உள்ளது; மறைசை - வேதாரணியம்; புகலி - சீகாழி; மழபாடி - திருமழபாடி, சோழநாட்டு வடகரைத் தலம், அரியலூருக்கு அருகே உள்ளது; காரோணம் - நாகைக் காரோணம், நாகபட்டினம், இனிக் குடந்தைக் காரோணம் எனினும் ஆம் இது கும்பகோணத்திலுள்ள சோமேசர் கோயில்; குறுக்கை - இன்று கொருக்கை என வழங்கப்படும் சோழநாட்டு வடகரைத்தலம், மயிலாடுதுறை அருகில் உள்ளது, காமதகனம் நிகழ்ந்த அட்டவீரட்டப்பதி; மண்டளி - திருவாரூர்ப் பரவையுண் மண்டளி, திருவாரூரில் கீழவீதியில் உள்ள தூவா நாயனார் கோயில்; சிறுகுடி - சோழ நாட்டுத் தென்கரைத் தலம், குடவாசல் அருகே உள்ளது; முதுகிரி -

விருத்தாசலம்; இடைமருது - திருவிடைமருதூர்; கூவம் - திருவிற்கோலம் என்னும் தொண்டை, நாட்டுத்தலம், செங்கற்பட்டு மாவட்டம் கடம்பத்தூர் அருகே உள்ளது; ஆடானை - திருவாடானை, பாண்டிநாட்டுத் தலம்; அதிகை - திருவதிகை, நடுநாட்டுத்தலம், பண்ருட்டிக்கு அருகே உள்ளது. திரிபுரத்தை எரித்த அட்ட வீராட்டத்தலம்; வியலூர் - திருவிசநல்லூர் என வழங்குகிறது. கும்பகோணத்திற்கு அருகிலுள்ளது; கோளிலி - திருக்குவளை என வழங்கப்படும் சோழநாட்டுத் தென்கரைத்தலம், திருவாரூர் - எட்டிக்குடிச் சாலையில் உள்ளது. சப்த விடங்கத் தலங்களுள் ஒன்று; தினைநகர் - தீர்த்தனகிரி என வழங்கும் நடுநாட்டுத் தலம் கடலூர் அருகே உள்ளது; மாகாளம் - இரும்பை என வழங்கும் தொண்டை நாட்டுத் தலம், தென் ஆர்க்காடு மாவட்டம் வானூர் வட்டத்தில் உள்ளது. திருக்குடந்தை - கும்பகோணம், புளமங்கை - திருப்புள்ளமங்கை, பசுபதிகோவில் என வழங்கப்படுகிறது, தஞ்சை - கும்பகோணம் சாலையில் உள்ளது. கண்டி - திருக்கண்டியூர், தஞ்சைக்கு அருகே உள்ளது. அட்டவீரட்டத்தில் பிரமன் தலையைக் கிள்ளிய பதி; மயிலை-மயிலாப்பூர், சென்னையின் ஒரு பகுதி; வலிவலம் - திருவாரூக்கு அருகே உள்ளது; குடவாயில் - குடவாசல் என வழங்கப்படுகிறது, பேரூர் - கோயம்புத்தூருக்கு அருகே உள்ளது. பிறவாநெறி எனவும் மேலைச் சிதம்பரம் எனவும் பெயர்பெறும் இப் பதி ஒரு வைப்புத்தலம்; அந்தரத்தரும் - தேவர்களும், உயர்வு சிறப்பும்மை ; எறும்பி திருவரம்பூர் என வழங்கப்படும் திருஎறும்பியூர், திருச்சிக்குக் கிழக்கே உள்ளது; தென்சிரகிரி-அழகிய திருச்சிராப்பள்ளி ; கொடுமுடி - திருப்பாண்டிக் கொடுமுடி, கொங்குநாட்டு ஏழ்தலத்துள் ஒன்று; அவிநாசி - கொங்கு நாட்டில் திருப்பூருக்கு அருகில் உள்ளது. ஆரூர் அறநெறி - திருவாரூர்ப் பூங்கோயிலுக்குள் உள்ள ஒரு தனிச் சந்நிதி; கருவூர் ஆனிலை - கரூரில் உள்ள பசுபதீசுவரர் கோயில், ஆனிலை என்பது கோயிலின் பெயர், கொங்கேழ் தலத்துள் ஒன்று; வேதாசலம் - திருக்கழுக்குன்றம், அனக்கிளை யாத நடைபாகர் வேதவெற்பார் (திருக்கழுக்குன்றக்கோவை 419); இந்தக் கலையில் ஐம்பத்து மூன்று திருத்தலங்கள் கூறப்பெற்ற அருமைப்பாடு ஆசிரியரின் சொல்லாட்சித் திறத்திற்குச் சான்று; இவற்றுள் பேரூர் வைப்புத்தலம். மற்றவை அனைத்தும் தேவாரப் பாடல் பெற்றவை.

4. ஆமூர் என்று உரைத்திடும் பதிவரும் பெரும் திருஉடையர் தமை - திருஆமூரில் அவதரித்த மிகுந்த தெய்வத்தன்மை பொருந்திய திருநாவுக்கரசரை, தம்-பகுதிப் பொருள் விகுதி; பொதிசோறு - கட்டுச்சாதம், அப்பர் பெருமானுக்கு இறைவன் பொதிசோறு அளித்தது திருப்பைஞ்ஞீலியில்; தானே கொண்டளித்த - வாகீசர் கேட்காமல் இறைவராகவே வலியச்சென்று கொடுத்த பேரருட்டிறத்தை நினைந்து கூறியது; அரும்கலம்புனை - அருமையான நகைகளை அணிந்த; பரவையினிடை - பரவை நாச்சியாரிடத்து ஒரு தூதனா ; ஊரன்- சுந்தரமூர்த்தி நாயனார்; ஊரன் பரவையினிடை தூதனா இசைக எனவே ஏகிய குணநிதி என்பது முடிபு, வரலாறு வெளிப்படை ; பூபாரம் தொலைப்ப-பாரதப் பெரும்போர் நிலமகளின் சுமையைக் குறைப்பதற்காகத் திருமாலால் திட்டமிடப்பெற்றது என்பதை, நீபாரத அமரில் யாவரையும் நீறாக்கிப் பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா (வில்லிபாரதம் - கிருட்டிணன் தூதர் 32) என்னும் சகாதேவன் வாக்கால் உணரலாம்; தனஞ்சயன், அருச்சுனன் கணை - பாசுபதாஸ்திரம்; வனவேடன் - காட்டில் வேட்டையாடுபவன், கிராத மூர்த்தி,

அருச்சுனன்; கணை-பாசுபதக்கணை வேண்டித் தவம் புரிந்து கொண்டிருந்தபோது சிவபிரான் ஒரு வேடனின் வடிவில் தோன்ற, மூகாசுரன் என்னும் பன்றியை ஓரே சமயத்தில் அருச்சுனனோடு அம்பெய்து வீழ்த்தி, அதனால் விளைந்தசினத்தால் அருச்சுனனால் விலலடிபட்டு, இறுதியில் தரிசனமளித்துப் படைக்கலமும் அருளினார், ஒரு கானவன்ஆகி, அருச்சுனன் அருந்தவம் அழித்து, பொன்னுடை ஆவம் தொலையாது சுரக்கப் பாசுபதக்கணை பரிந்தருள் செய்தோன் (கல்லாடம் 50-3-7); மாலே கொண்டு அடுத்து - இரட்டுறமொழிதல் 1. நல்ல குதிரைகளைக்கொண்டு வருகிறான் என்னும் விருப்பத்தோடு நெருங்கி 2. வந்திருப்பவன் இறைவன் என உணராமல் மயக்கத்தோடு வந்து; ஓர் பஞ்சவன் - ஒப்பற்ற அரிமர்த்தன பாண்டியன்; எழில் துகில் - அழகிய பீதாம்பரத்தை ; புரிகயிறதுகொடு, குதிரைவாணிகனாக வந்த இறைவன் தன் கையிலிருந்த சாட்டையால் வாங்கிக்கொண்டு, அது ஆறன்உருபு மூன்றாவது பொருளில் வந்த உருபுமயக்கம்; தனி முதல்-பரம்பொருள்;

"இந்நெறி மன்னர் மன்னன் இனிமைகூர் இராவுத் தற்கு
நன்மைகூர் வரிசைத் தூசு நல்குவம் என்று நல்கக்
கொன்னுறு கரஞ்சேர் செண்டில் ஏற்றுமுற் கொம்பில் சேர்த்துத்
தன்னடி யாரை வேண்டிச் சடைமிசைப் புனைந்து கொண்டான்"

(திருவலாவாயுடையார் திருவிளையாடல். நரி. குதிரையான. 86)

"வெம்பரியின் அண்ணலைவி யந்துதமிழ் மாறன்
கம்பமுடி எய்தவொரு கைவிரல் சுழற்றா
அம்பொன்விலை இல்லதோர் அருங்கலைஅ ளித்தான்;
எம்பரமர் செண்டின்மிசை ஏற்றுநகை செய்தார்"

(திருவாதவூரடிகள் புராணம், குதிரையிட்ட, 210)

இந்நிகழ்ச்சி பரஞ்சோதியாரின் திருவிளையாடலில் வேறு வகையாக உள்ளது.

வாசிவா ணிகர்க்குத் தென்னன் வெண்துகில் வரிசை யாக
வீசினான்; பாணற் கேவல் செய்தவர் வெள்கு வாரோ?
கூசிலா நேசர்க் காப்பான் குதிரையின் இழிந்தேற் றந்தத்
தூசினை இரண்டாங் கங்கை எனமுடி சூடி நின்றார்"

(திருவிளையாடல். நரி பரியாக்கிய.123)

இதனைப்பற்றிக் குறிப்பிடும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்,

அன்னவற் பொருபீ தாம்பரம் அளித்திட்
டதைக்கசை யால்அவன் கொளலால்
மன்னவன் சினந்தான்; வஞ்சக வேட
மந்திரி வழக்கம்என் றிசைத்தான்
என்னவும் புகல்வார்; யானதற் கிசையேன்;"

(புலவர் புராணம் - திருவாதவூரடிகள். 35)

ஆதிரை நாள் என மாறுக ; மா மூலம்தனில் - மாமரத்தடியில், இது காஞ்சிபுரம்; பரிந்து இனிது அடைந்து; முலையொடு வளை நனிபட-நகிற்றழும்பும், வளைத்தழும்பும் தம் திருமேனியில் நன்றாக அழுந்த, காஞ்சிபுரத்தில் அம்மையார் மணலால் சிவலிங்கம் அமைத்து வழிபட்டுவந்தபோது கம்பையாற்றில் பெருவெள்ளம் வந்தது. சிவலிங்கத்தை நீர்ப்பெருக்கிலிருந்து பாதுகாப்பதற்காக உமாதேவி ஆரத்தழுவிக் கொண்டார். அப்போது இறைவனின் திருமேனியில் அம்பிகையின் தனத்தழும்பும் வளைத்தழும்பும் பதிந்தன.

"மணிமுலைக் குவட்டி னோடு வளைக்கையால் நெருக்கிப் புல்லித்
தணிவரும் காதல் விம்மக் காதலி தழுவ லோடும்
திணிஇருள் அறுக்கும் சோதித் திருஉருக் குழைந்து காட்டி
அணிவளைத் தழும்பி னோடும் முலைச்சுவ டணிந்தார் ஐயர்"

(காஞ்சிப்புராணம் - தழுவக் குழைந்த. 380)

தேன் ஆரும் சடை-பல மலர்கள் இருப்பதால் தேன் உள்ளது, வண்டுகள் பொருந்துகின்றன எனினும் ஆம்; அம்புலி - பிறைமதி; கலங்க-அஞ்சும்படி; வந்து இழிபுனல்தனை - ஆகாயத்திலிருந்து வேகமாக வந்திறங்கிய கங்கையை ; நிலவிட நிறுவிய-ஓரிடத்தில் தங்கியிருக்குமாறு தேக்கி நிறுத்திய, பகீரதனுக்காக மிகச் செருக்கோடு வந்த கங்கை சடையில் அடைபட்டு விட்ட வரலாறும் பகீரதப் பிரயத்தனம் என்னும் உலகமொழியும் வெளிப்படை.

உந்தி அம்புயத் துதித்தவன் உறைதரும் உலகும்
இந்தி ராதியர் உலகமும் நடுக்குற இரைத்து
வந்து தோன்றினள் வரநதி; மலைமகள் கொழுநன்
சிந்தி டாதொரு சடையினில் கரந்தனன் சேர (கம்பர் - பால. அகலிகைப்.55)

* பூதர இலன்- உயர்ந்த மலையாகிய கயிலாயத்தை இருப்பிடமாகக் கொண்டவர்; விடையே - இடபவாகனத்தை, ஏகாரம் அசை ; மேதாவியர் - அறிஞர்கள்; குன்றிலே - திருக்கழுக்குன்றத்தின்கண்.

5. வான் ஆர்; கந்தரத் தரம் பெறும் - மேகத்தை நிகர்க்கும் ; இணை சாபமே-சாப இணையே என மாறுக, இரண்டு விற்கள்தாம், புருவமும் இணை சாபமே எனத் தேற்றேகாரம் புணர்த்துக் கூறியதால் இது நியம உவமையணி ஆகும்; திரை - அலைகளை உடைய ; விடம் - நஞ்சு ; தலம் - உலகத்தார், இடவாகுபெயர்; வடுவின் வகிர் - மாவடுவின் துண்டம்; குவளையதாகவே என்பதிலுள்ள எண்ணேகாரத்தைக் கடல் முதலிய நான்கொடும் கூட்டுக,

எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித்து இயலும் என்மனார் புலவர் (தொல்காப்பியம் - இடை 40)

கூறிடவும்-(கடல் முதலியன உவமானம் ஆகும் என்று புகழ்ந்து) கூறினாலும்; அடரு-இல்லை என மறுத்துப் போர்புரிகின்ற; ஒரு கண்ணிற்குப் பலபொருள்களை உவமை கூறியதால் இது பலபொருளுவமை.

வேலும் கருவிளையும் மென்மானும் காவியும்
சேலும் வடுவகிரும் செஞ்சரமும் - போலுமால்
தேமருவி உண்டு சிறைவன் டறைகூந்தற்
காமருவு பூங்கோதை கண் (தண்டியலங்காரம்- 32, உரைமேற்கோள்)

கூர்வாள்பொரும் இணவிழி என்பது புகழுவமையின் பாற்படும்; மா-திருமகள்; தளத்த - இதழ்களை உடைய ; இந்து - சந்திரனும்; இலங்கிய - ஒளி வீசுகின்ற ; இலவு - இலவம் பூ; குமிழ்-குமிழமலர்; இனித்த செங்கனி இங்குவாய் ஆம்- ஆதல் உவமைப் பொருட்டு; சுமங்கலம் பெறு - மங்கலநாணாகிய தாலியைப் புனைவதற்குரிய ; மிடறு - கழுத்தை ; இசை குலவிய 1.ஊதி இன்னிசை எழுப்பப்பெறும் 2. புகழ்மிக்க ; வளை- சங்கு; கழுத்து சங்கினைவிட எழில்மிக்கது என்றபடி; வளை - வள்ளைக்கொடி, இடைக்குறை ; கடத்த-மதம் பொழிகின்ற; குஞ்சரம்-யானை ; பொலன் முடியும் கலச இணையும் சூதும் ஆகும்; மகிதலமிசை யாராயினும் இணைசொலல் ஆமோ என்பது முடிபு; சொலல் ஆகா என்பது கருத்து; போது ஒவிய மாதர் - தாமரை மலரை நீத்து (இச்சோலைக்குள்) வந்துள்ள திருமகள்; என்று உவம உருபு; நேர் - வாய்த்த.

6. தெரிந்து அணைதரும்; இறு இடை, துவள் இடைஎனத் தனித்தனி இயையும், ஒடிகின்றதும் ஒசிகின்றதுமான இடுப்பு, வினைத்தொகைகள்; விணினிடை ஆகும்விண்ணினிடை ; தேவலோகத்தில் உள்ள ; மாமாதின் பெயர் - அணங்கின் நாமம், இது அரம்பை, பரியாயமாக வாழையையும் குறிக்கும்; குறங்கு-துடை ; அமைதனை நன்கு எதிர் என இயையும், மூங்கிலைச் சிறப்பாக நிகர்க்கும்; ஒரு கரம் - ஒப்பற்ற முன்கைளும்; மேனி-உடலும்; யாழ்-கைகளை வீணையாகக் கூறல் மரபு, "காம்பு கழை தோள்இணை ; முன்கைமகர யாழ் ஆகும்" (இரத்தினச்சுருக்கும் 6); தேமாவினின் என்புழி முதல் இன்சரியை; கரம் மேனி-யாழ் மாந்தளிர், நிரனிறை ; நன்கனத்து - நல்ல கார்மேகங்களுக்கிடையே தோன்றுகின்ற ; மின் புரை-மின்னல் அனைய ; அரவு என ; நாமேயும் - கல்வி கேள்விகளில் சிறந்துள்ளவனாகிய நானே, உயர்வு சிறப்பும்மை, பாங்கன் அறிவுமிக்கவன், கற்றறி பாங்கன் என்றே கழறப்படுவான்; நாமேயும் இங்கு உளம் அயர்ந்து அல்குல் அரவு என எவாறு குறிப்பது என்பது முடிபு; உவமை சொல்ல முடியாது என்பது கருத்து; உயர்ந்தவர் - கல்வியில் மேம்பட்டவர்; சிகி-மயில்; ஏயா - செய்யா எனும் வாய்பாடு; ஒரு பிடி-ஒப்பற்ற பெண் யானை; எகின் - அன்னப்பறவை ; நடைதனில் பிடியும் எகினும் ஆம்; இவண் - இவ்வுலகில் ஆசாரம்தனைக்கொடு-அன்றாட வாழ்வில் உணவு, உடைஒழுக்கம் முதலியவற்றில் தள்ள வேண்டுவனவற்றை முற்றிலும் நீக்கிக் கொள்ளத்தக்கனவாக ஆன்றோர் கூறியவற்றை மட்டிலும் ஏற்று ஒழுகுதல் ஆசாரம் எனப்படும், தன்-பகுதிப் பொருள்விகுதி, கொடு-கைக்கொண்டு; பரன் - இறைவன்; நினைபவர்(தமை) - தியானிப்பவர்களை, இது உலகியல் தொழில்களில் ஈடுபட்டிருந்தபோதும் இறையன்பை மறக்காத இல்லறத்தாரைக் குறித்து நின்றது; அருவினை களைபவர்(தமை) - நல்வினை தீவினை இரண்டையும் நீக்குவதற்காகத் துறவுபூண்ட வர்களும்; அந்தணர் பரிந்த நெஞ்சினர்தமை - அந்தனர்தமையும் என எண்ணும்மை விரிக்க ; அகல்இடம் மீதிலே மயல்கொடு செல கொடிய செயல்புரிவார்

என்க ; இது "அன்ன நடையும் அன்னம்இலா அய்யர் நடையும் நடையும் தளர்வெய்தக் கன்னி நடக்கும் நடைகற்றாள்'' (பிரபுலிங்க லீலை, மாயை உற்பத்தி கதி. 57) என்பதை நினைவூட்டுகிறது; தாள் அணி மலர் - பாதங்களாகிய அழகிய தாமரை, ஒருபோது-ஒருவேளை, ஏகாரம் அசை ; ஈற்றேகாரமும் அசை.

7. தேன்ஏயும் - தேனினை நிகர்க்கும்; சொலை - சொல்லை ; அரும்தவம்செய (எதிர்) வரும் ஒரு திரு என ; உசாவவே-கருதி; தனுக்கரும்பு - வில்லாகிய கரும்பு; பெடை-அன்னப்பேடு; கரிசுஅறு பதஇயல் அறுபதம் ஆன-குற்றமற்ற உணவாகிய தேனை உண்ணும் வழக்கத்தையுடைய வண்டுகள், முதல் அறுபதம் வினைத்தொகை ; இயல் அறுபதம் - இரண்டன் உருபும் பொருளும் உடன்தொக்க தொகை ; ஆன-பகுதிப்பொருள் விகுதி, ஆனவை : சீகாமர இசை-ஒரு பண்; வண்டு சீகாமரம் பயில் ஆரூரர் (திருவாரூர்க் கோவை 46); கார் ஆர் குழல்-மேகம்போன்ற கூந்தலை உடைய ; விஞ்சையன் - கல்வியிற் சிறந்தவன்; கிளியையும் பெடையையும் (போன்ற) குழல்வனிதையர் மாயம் தவிர்த்த விஞ்சையன் என முடிக்க, "எம்பிறை நன்னுதல்பைங் கனியான தைக்கண்டு மீண்டத னால்திறம் கற்றவனே (குற்றாலக்கோவை 54); நிவந்து - கல்வித் தகுதியால் உயர்ந்து; இணங்கிய - தன்பால் வந்தடைந்த ; அதி நய-மிக்க சிறப்பினை உடைய ; குணாளன் - பண்பாளன்; நாடு ஆளும்; திறத்தர்-வலிமையுடைய மன்னர்; ப்ரசங்கன் - தெளிவாக உரையாடுபவன்; இங்கிதன் - எல்லாச் செய்திகளிலும் இடமும் காலமும் அறிந்தவன்; அமலன் அடி பரவுநரை - இறையடிபார்களை; ஆனாமையில்-(இப்பேரழகியைப் பிரிந்தும்) உள்ளம் உடையாததால்; சீர் பொதுளிய - சிறப்புமிக்க ; கதி-செல்வத்தைப் போன்றவன், புகலிடமாக அடையத்தக்கவன் எனினுமாம்; தேசு ஆரும், செழித்த, திண் ஆகிய மூன்றும் தனித்தனிப் புயத்தோடு இயையும்; அகண்ட - இடையீடற்ற, நிலையான என்பது கருத்து; சம்ப்ரம - பழகுபவர்களுக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற ; சரச -இனிமையான ; விதரண-அறிவுடைய ; சகல குண-எல்லா நற்பண்புகளும் நிறைந்த ; மேரு-மேருமலையைப் போன்றவன், உவம ஆகுபெயர்; மா மாகம் - பெரிய வானுலக வாசியர், அடையடுத்த ; ஆகுபெயர் கணித்த - போற்றுகின்ற ; புங்கவன்-கடவுள் ஆகிய; இரும் - பெருமை மிக்க ; புரந்தரன் - இந்திரனைப் போன்றவன்; அருண - பொன்னாலான ; கிரண நவமணிமய - ஒளிவீசும் ஒன்பது வகையானஇரத்தினங்கள் இழைக்கப்பெற்ற ; க்ரீட - முடியினை அணிந்த ; மானாபரணன் - மான ஆபரணன், தீர்க்க சந்தி, தன்மானத்தையே அணிகலனாகக் கொண்டவன், "திருமால் வடிவாகிப் புவிகைக்கொண்டருள்மானா பரணா (தனிப்பாடல்) அதி விவேக அனுகுலன்; உதவுபவன், அனுகூலன் என்பதன் குறுக்கல் விகாரம்; இதயன்-என் உள்ளத்தே இடம்பெற்றவன்; குணாளன், பிரசங்கன், இங்கிதன், சீலன், கதி, புயன், மேரு, புரந்தரன், மானாபுரணன், அனுகுலன், இதயன் ஆகிய அனைத்தும் விளிகள், அண்மைவிளி இயல்பாயிற்று என்க ; (இச்சொற்களில் எல்லாம் ஈற்று னகரமெய் சுவடிகளில் இருந்ததா எனத் தெரியவில்லை ; இப் பதிப்பாசிரியருக்கு இரண்டு அச்சு நூல்களே மூலம்; னகர மெய்ப் இல்லாவிட்டால் மிகப் பொருந்தும் என்பது இப் பதிப்பாசிரியர் கருத்து) யாதாய் - எவ்வாறு; நமை - (பாங்கனாகிய) எம்மை.

8. சீர் மேவும் குணத்து - (அறிவு நூல்களுக்கு இருக்கவேண்டிய) சிறப்புடைய பண்புகளை உடையதும்; நந்தல்இல் - என்றும் அழியாததும்; அனந்த - மிகப்பலவாக இருப்பனவும்; சொல் - சொற்களாலாகியனவுமாகிய ; மறைமுடிபு - வேதாந்தத்தின் முடிந்த கொள்கையாகிய ; சொலரியதொர்பொருள் - வாக்கிற்கு எட்டாத, ஒப்பற்ற பரம்பொருளை; தக ஒரும் - தக்கவாறு உணரும்; அறிவினன் என முடிக்க ; அனந்தாவை வேதா என்னும் பழமொழி பற்றி அனந்த என்றார்; சொலவரிய என்பதில் அகரம் தொக்கது ; மீது ஆ-தகுதியால் உயர்வானவைும் ; நன் - பயில்பவருக்கு நன்மையைச் செய்யக்கூடியனவும் ; கணக்கு அறும் - மிகப்பலவாக விரிந்துள்ளனவும் ஆகிய ; இம்மூன்றும் கலைக்கு அடை ; குசைநுனி - தருப்பைப் புல்லின் முனை, இது புத்திக்கூர்மைக்கு உவமை ; ஒவரு-நீங்காத ; ஆசு ஏகும் - குற்றங்கள் நீங்கும்படி; துரைத்தனம் செயும் - அதிகாரம் செலுத்தும்; புரையறு - தீமைகள் இல்லாத ; அணிபெறு-அழகிய, சிறப்புடைய என்பது கருத்து; ஈர்ஏழ் என்று எடுத்து இயம்புஉலகினும் - சொல்லப்படுகின்ற பதினான்கு உலகங்களிலும்; கிளரிய உரை - ஒளி வீசும் சொற்கள், புகழாகிய கிளரிய உரை என்க; இசை சாரும் - புகழ் மிக்க; நடை- ஒழுக்கம்; அணிமையன்- நுட்பமான அறிவுடையவன்; கூர்வாய் - கூர்மையான நுனியினை உடையதும்; வெஞ் சினத்த - மிக்க கோபத்தை உடையதும்; உடையவனின் பண்பு கருவியின்மேல் ஏற்றப்பெற்றது, உபசார வழக்கு ; கங்கு அணைதரும் - பருந்துகள் நெருங்கி வட்டமிடுவதும், "ஓங்கும்வெம் போரில் வந்து பருந்து ஆரும் வேல்செழியன் தாகந்தீர்த்தவன்" (செழியதரையன் கோவை 12); செஞ்சுடர் மருவு - நன்கு ஒளிவீசுவதுமாகிய ; அயில் உறு கரன் - வேலாயுதத்தை ஏந்திய கையை உடையவன்; வேயும் - அலங்கரிக்கப்படுகின்ற ; திணித்த திண்புயன் - நெருக்கி அடைக்கப்பெற்ற வலிமையை உடைய தோளன், மிக அதிகமான வலிமையுடையவன் என்பது கருத்து; மருந்துஎனும் தகைமையை - அமுதாம் எனத்தக்க பண்பை ; இது சொலவே -(இத்தகைய இயலைக் கொண்டவளும் இன்ன இடத்தில் இருப்பவளுமாகிய தலைவி தன் உள்ளத்தைக் கொள்ளைகொண்டுவிட்டாள் என்னும்) இந்தச் செய்தியை என்பால் வந்து சொல்ல, இது என்பது அகப்பொருளமைதியால் உள்ளத்தே உணரப்பெறும் நெஞ்சறி சுட்டு, மாணிக்கவாசகர்.

"இவளைக்கண் டிங்குநின் றங்குவந் தத்து ணையும்பாகரந்த
கவளக் களிற்றண்ண லேதிண்ணி யானிக் கடலிடத்தே"

(திருக்கோவையார் 33)

என்பழி அத்துணை எனச் சேய்மைச் சுட்டாகச் சொன்னதை இவ்வாசிரியர் இது என அண்மைச்சுட்டால் உணர்த்தினார்; இனி எவன்-இவனைத்தவிர வேறு யார்; ஏகாய் என ஓதி - (பாங்கனாகிய என்னிடம்) நீ அங்கே சென்றுவா எனச் சொல்லி; நின்றதே - பொறுமையாக அவ்விடத்திலேயே காத்திருந்தவன், யாராலும் பொறுமையோடு இருத்தல் இயலாது என்பது கருத்து; ஒப்பு;

"அல்லார் குழல்இவ் வணங்கைவிட் டிங்குநின் றங்குவந்தது
எல்லாங் கிடக்க இகழ்ந்ததென் பாவம் இறைவனையே"

(கப்பற்கோவை 46)

**இருபத்தைந்தாவது வண்ணம் நிறைவு**